# ஜோதிடம்

**Hariram Thejus** B.Sc (Agriculture) , Software Developer , Astrologer.
Head Of The Departments,
www.facebook.com/groups/vedicastroservice

**ஜோதிடம் என்றால என்ன?**

ஜோதிடம் என்பது, வானமண்டலத்தில் உள்ள கிரகங்களின் கதிர்கள் மனித வாழ்வை எப்படி நிர்ணயிக்கிறது என்பது பற்றிய அறிவியலே ஜோதிடம்.அவரவர் முற்பிறவியில் செய்த நல் தீவினைகளால் அவரவர்க்கு ஏற்படும் நன்மை, தீமைகளை அறிந்து நன்மையால் மகிழ்ச்சியும், தீமை என்றால் பரிகாரங்கள் செய்தும் பிரயோசனம் அடைதல் பொருட்டு உருவானதே ஜோதிடம் ஆகும்

இனி ஜோதிடத்தின் அடிப்படை விஷயங்களை தெரிந்து கொள்வோம்.

## 1.1 வாய்பாடுகள்

1 நாள் = 60 நாழிகை = 24 மணி
1 நாழிகை = 60 விநாழிகை = 24 நிமிடம்
1 விநாழிகை = 60 தற்பரை = 24 வினாடி

ராசி மண்டலம் = 360 பாகைகள் = 12 ராசிகள்
1 ராசி = 30 பாகைகள்= 2 ¼ நட்சத்திரங்கள்
1 நட்சத்திரம் = 13 பாகை 20 கலை = 4 பாதங்கள்
1 பாதம் = 3 பாகை 20 கலை

1 பாகை = 60 கலை
1 கலை = 60 விகலை

## 1.2 கிரகங்கள் 9

1. சூரியன்
2 சந்திரன்
3. செவ்வாய்
4. புதன்
5. குரு
6. சுக்கிரன்
7. சனி
8. ராகு
9. கேது

## 1.3 ராசிகள் 12

1. மேஷம்
2. ரிஷபம்
3. மிதுனம்
4. கடகம்
5. சிம்மம்
6. கன்னி
7. துலாம்
8. விருச்சிகம்
9. தனுசு
10. மகரம்
11. கும்பம்
12. மீனம்

## 1.4 நட்சத்திரங்கள் 27

1 அசுவனி
2. பரணி
3. கார்த்திகை
4. ரோகினி
5. மிருகசீரிஷம்
6. திருவாதிரை
7. புனர்பூசம்
8. பூசம்
9. ஆயில்யம்
10. மகம்
11. பூரம்
12. உத்திரம்
13. அஸ்த்தம்
14. சித்திரை
15. சுவாதி
16. விசாகம்
17. அனுஷம்
18. கேட்டை
19. மூலம்
20. பூராடம்
21. உத்திராடம்
22. திருவோணம்
23. அவிட்டம்
24. சதயம்
25. பூரட்டாதி
26. உத்திரட்டாதி
27. ரேவதி.

## 1.5 ராசிகளும் அவற்றின் அதிபதிகளும்

| மீனம்<br>குரு | மேஷம்<br>செவ்வாய் | ரிஷபம்<br>சுக்கிரன் | மிதுனம்<br>புதன் |
|---|---|---|---|
| கும்பம்<br>சனி | ராசி மண்டலம் | | கடகம்<br>சந்திரன் |
| மகரம்<br>சனி | ராசிகளும் அவற்றின் அதிபதிகளும் | | சிம்மம்<br>சூரியன் |
| தனுசு<br>குரு | விருச்சிகம்<br>செவ்வாய் | துலாம்<br>சுக்கிரன் | கன்னி<br>புதன் |

மேஷத்தின் அதிபதி செவ்வாய்
ரிஷபத்தின் அதிபதி சுக்கிரன்
மிதுனத்தின் அதிபதி புதன்
கடகத்தின் அதிபதி சந்திரன்
சிம்மத்தின் அதிபதி சூரியன்
கன்னியின் அதிபதி புதன்
துலாத்தின் அதிபதி சுக்கிரன்
விருசிகத்தின் அதிபதி செவ்வாய்
தனுசுவின் அதிபதி குரு
மகரம் மற்றும் கும்பத்தின் அதிபதி சனி
மீனத்தின் அதிபதி குரு.

## 1.6. கிரகங்களும் அவற்றின் நட்சத்திரங்களும்

| கிரகங்கள் | நட்சத்திரங்கள் | | |
|---|---|---|---|
| கேது | அசுவனி | மகம் | மூலம் |
| சுக்கிரன் | பரணி | பூரம் | பூராடம் |
| சூரியன் | கார்த்திகை | உத்திரம் | உத்திராடம் |
| சந்திரன் | ரோகிணி | அஸ்தம் | திருவோணம் |
| செவ்வாய் | மிருகசீரிஷம் | சித்திரை | அவிட்டம் |
| ராகு | திருவாதிரை | சுவாதி | சதயம் |
| குரு | புனர்பூசம் | விசாகம் | பூரட்டாதி |
| சனி | பூசம் | அனுஷம் | உத்திரட்டாதி |
| புதன் | ஆயில்யம் | கேட்டை | ரேவதி |

## 1.7. நட்சத்திரத்தின் உட்பிரிவு

ஒவ்வொரு நட்சத்திரமும் நான்கு சம பாகங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.ஒவ்வரு பாகத்த ையும் “பாதம்” என்று குறிப்பிடுவது வழக்கம். அதாவதுஒவ்வொரு நட்சத்திரமும் நான்கு ப ாதங்களாகப்பிரிக்கப் பட்டிருக்கிறது.

அதாவது அசுவனியின் நான்கு பாகங்களில் முதல் பாகம் அசுவனி முதல்பாதம் என்றும், இர ண்டாம் பாகம் அசுவனி இரண்டாம் பாதம் என்றும்,மூன்றாம் பாகம் அசுவனி மூன்றாம் பாத ம் என்றும், நான்காம் பாகம்அசுவனி நான்காம் பாதம் என்றும் அழைக்கப்படுகிறது.

அதாவது பரணியின் நான்கு பாகங்களில் முதல் பாகம் பரணி முதல் பாதம்என்றும், இரண்ட ாம் பாகம் பரணி இரண்டாம் பாதம் என்றும், மூன்றாம்பாகம் பரணி மூன்றாம் பாதம் என்று ம், நான்காம் பாகம் பரணி நான்காம்பாதம் என்றும் அழைக்கப்படுகிறது.

இதே போல மற்ற நட்சத்திரங்களுக்கும் தெரிந்து கொள்க.

## 1.8 ராசிகளும் அவற்றில் அடங்கும் நட்சத்திரங்களும்

ஒரு ராசிக்கு உ ¼ நட்சத்திரங்கள் என்று முன்னமே தலைப்பு 1.1
- ல்பார்த்ததை நினைவு கொள்ளவும். அதாவது ஒரு ராசிக்கு (2 x 4) + 1 = 9பாதங்கள்

<table>
<tr><td>மீனம்<br>ரேவதி 1,2,3,4<br>உத்திரட்டாதி 1,2,3,4<br>பூரட்டாதி 4</td><td>மேஷம்<br>அசுவினி 1,2,3,4<br>பரணி 1,2,3,4<br>கார்த்திகை 1</td><td>ரிஷபம்<br>கார்த்திகை 2,3,4<br>ரோகிணி 1,2,3,4<br>மிருகசீரிடம் 1,2</td><td>மிதுனம்<br>மிருகசீரிடம் 3,4<br>திருவாதிரை 1,2,3,4<br>புனர்பூசம் 1,2,3</td></tr>
<tr><td>கும்பம்<br>பூரட்டாதி 1,2,3<br>சதயம் 1,2,3,4<br>அவிட்டம் 3,4</td><td colspan="2" rowspan="2">ராசிகளும்<br>அவற்றில் அடங்கும்<br>நட்சத்திரங்களும்</td><td>கடகம்<br>புனர்பூசம் 4<br>பூசம் 1,2,3,4<br>ஆயில்யம் 1,2,3,4</td></tr>
<tr><td>மகரம்<br>அவிட்டம் 1,2<br>திருவோணம் 1,2,3,4<br>உத்திராடம் 2,3,4</td><td>சிம்மம்<br>மகம் 1,2,3,4<br>பூரம் 1,2,3,4<br>உத்திரம் 1</td></tr>
<tr><td>தனுசு<br>உத்திராடம் 1<br>பூராடம் 1,2,3,4<br>மூலம் 1,2,3,4</td><td>விருச்சிகம்<br>கேட்டை 1,2,3,4<br>அனுஷம் 1,2,3,4<br>விசாகம் 4</td><td>துலாம்<br>விசாகம் 1,2,3<br>சுவாதி 1,2,3,4<br>சித்திரை 3,4</td><td>கன்னி<br>உத்திரம் 2,3,4<br>அஸ்தம் 1,2,3,4<br>சித்திரை 1,2</td></tr>
</table>

மேஷ ராசியில் அசுவனியின் 4 பாதங்களும், பரணியின் 4 பாதங்களும்,கார்த்திகையின் முதல் பாதமும் அடங்கும். (4 + 4 + 1 = 9)

ரிஷப ராசியில் கார்த்திகையின் மீதம் 3 பாதங்களும், ரோகினியின் 4பாதங்களும், மிருகசீரிடத்தின் முதல் 2 பாதங்களும் அடங்கும். (3 + 4 + 2 = 9)

மிதுன ராசியில் மிருகசீரிடத்தின் கடைசி 2 பாதங்களும், திருவாதிரையின் 4பாதங்களும், புனர்பூசதின் முதல் 3 பாதங்களும் அடங்கும். (2 + 4 + 3 = 9)

கடக ராசியில் புனபூசத்தின் கடைசி 1 பாதமும், பூசத்தின் 4 பாதங்களும்,ஆயில்யத்தின் 4 பாதங்களும் அடங்கும். (1 + 4 + 4 = 9)

சிம்ம ராசியில் மகத்தின் 4 பாதங்களும், பூரத்தின் 4 பாதங்களும்,உத்திரத்தின் முதல் பாதமும் அடங்கும். (4 + 4 + 1 = 9)

கன்னி ராசியில் உத்திரத்தின் மீதம் 3 பாதங்களும், அஸ்தத்தின் 4பாதங்களும், சித்திரையின் முதல் 2 பாதங்களும் அடங்கும். (3 + 4 + 2 = 9)

துலா ராசியில் சித்திரையின் கடைசி 2 பாதங்களும், சுவாதியின் 4பாதங்களும், விசாகத்தின் முதல் 3 பாதங்களும் அடங்கும். (2 + 4 + 3 = 9)

விருச்சிக ராசியில் விசாகத்தின் கடைசி 3 பாதங்களும், அனுஷத்தின் 4பாதங்களும், கேட்டையின் 4 பாதங்களும் அடங்கும். (1 + 4 + 4 = 9)

தனுசு ராசியில் மூலத்தின் 4 பாதங்களும், பூராடத்தின் 4 பாதங்களும்,உத்திராடத்தின் முதல் பாதமும் அடங்கும். (4 + 4 + 1 = 9)

மகர ராசியில் உத்திராடத்தின் கடைசி 3 பாதங்களும், திருவோனத்தின் 4பாதங்களும், அவிட்டத்தின் முதல் 2 பாதங்களும் அடங்கும். (3 + 4 + 2 = 9)

கும்ப ராசியில் அவிட்டத்தின் கடைசி 2 பாதங்களும், சதயத்தின் 4பாதங்களும், பூரட்டாதியின் முதல் 3 பாதங்களும் அடங்கும். (2 + 4 + 3 = 9)

மீன ராசியில் பூரட்டாதியின் கடைசி 3 பாதங்களும், உத்திரட்டாதியின் 4பாதங்களும், ரேவதியின் 4 பாதங்களும்ம் அடங்கும். (1 + 4 + 4 = 9)

**1.9 ராசிகளின் வகைகள்**

<table>
<tr><td>மீனம்<br>இரட்டை, பெண்<br>நீர், வடக்கு<br>உபயம்</td><td>மேஷம்<br>ஒற்றை, ஆண்<br>நெருப்பு, கிழக்கு<br>சரம்</td><td>ரிஷபம்<br>இரட்டை, பெண்<br>நிலம், தெற்கு<br>ஸ்திரம்</td><td>மிதுனம்<br>ஒற்றை, ஆண்<br>காற்று, மேற்கு<br>உபயம்</td></tr>
<tr><td>கும்பம்<br>ஒற்றை, ஆண்<br>காற்று, மேற்கு<br>ஸ்திரம்</td><td colspan="2" rowspan="2">ராசிகளும்<br>அவற்றின்<br>வகைகளும்</td><td>கடகம்<br>இரட்டை, பெண்<br>நீர், வடக்கு<br>சரம்</td></tr>
<tr><td>மகரம்<br>இரட்டை, பெண்<br>நிலம், தெற்கு<br>சரம்</td><td>சிம்மம்<br>ஒற்றை, ஆண்<br>நெருப்பு, கிழக்கு<br>ஸ்திரம்</td></tr>
<tr><td>தனுசு<br>ஒற்றை, ஆண்<br>நெருப்பு, கிழக்கு<br>உபயம்</td><td>விருச்சிகம்<br>இரட்டை, பெண்<br>நீர், வடக்கு<br>ஸ்திரம்</td><td>துலாம்<br>ஒற்றை, ஆண்<br>காற்று, மேற்கு<br>சரம்</td><td>கன்னி<br>இரட்டை, பெண்<br>நிலம், தெற்கு<br>உபயம்</td></tr>
</table>

1.9.1. சரம், ஸ்திரம், உபயம் என்ற அடிப்படையில் மூன்று வகையாகப்பிரித்திருக்கிறார்கள். அதாவது...

மேஷம், கடகம், துலாம், மகரம் இந்நான்கும் சர ராசிகள்
ரிஷபம், சிம்மம், விருச்சிகம் கும்பம் இந்நான்கும் ஸ்திர ராசிகள்
மிதுனம், கன்னி, தனுசு மீனம் இந்நான்கும் உபய ராசிகள்.

1.9.2 &
3. ஒற்றை (ஆண்) ராசி, இரட்டை (பெண்) ராசி என்ற அடிப்படையில்இரண்டு வகையாகப் பிரி

த்திருக்கிறார்கள். அதாவது...

மேஷம், மிதுனம், சிம்மம், துலாம், தனுசு, கும்பம் இந்த ஆறு ராசிகளும்ஆண் ராசிகள் அல்லது ஒற்றை ராசிகள்.
ரிஷபம், கடகம், கன்னி, விருச்சிகம், மகரம், மீனம் இந்த ஆறு ராசிகளும்பெண் ராசிகள் அல்லது இரட்டை ராசிகள்.

1.9.4 &
5 மேலும் நெருப்பு, நிலம், காற்று, நீர் என்ற அடிப்படையிலும்,கிழக்கு, மேற்கு வடக்கு தெற்கு என்ற அடிப்படையிலும் நான்கு வகையாகபிரித்திருக்கிறார்கள்

மேஷம், சிம்மம், தனுசு இம்மூன்றும் கிழக்கு ராசிகள், நெருப்பு ராசிகள்.
ரிஷபம், கன்னி, மகரம், இம்மூன்றும் தெற்கு ராசிகள், நிலம் ராசிகள்.
மிதுனம், துலாம், கும்பம் இம்மூன்றும் மேற்கு ராசிகள், காற்று ராசிகள்.
கடகம், விருச்சிகம், மீனம் இம்மூன்றும் வடக்கு ராசிகள், நீர் ராசிகள்

## 1.10. ராசிகளில் கிரக பலம்.

### 1.10.1. உச்சம், நீச்சம்

| சுக்கிரன் புதன் | சூரியன் சனி | சந்திரன் | |
|---|---|---|---|
| | உச்சம் | | குரு செவ்வாய் |
| செவ்வாய் குரு | நீச்சம் | | |
| | சந்திரன் | சனி சூரியன் | புதன் சுக்கிரன் |

சூரியன் மேஷத்தில் உச்சம், துலாத்தில் நீச்சம்
சந்திரன் ரிஷபத்தில் உச்சம், விருச்சிகத்தில் நீச்சம்
செவ்வாய் மகரத்தில் உச்சம், கடகத்தில் நீச்சம்

புதன் கண்ணியில் உச்சம், மீனத்தில் நீச்சம்
குரு கடகத்தில் உச்சம், மகரத்தில் நீச்சம்
சுக்கிரன் மீனத்தில் உச்சம், கண்ணியில் நீச்சம்
சனி துலாதில் உச்சம், மேஷத்தில் நீச்சம்

## 1.10.2. ராசிகளில் பகை பெரும் கிரகங்கள்

| வ எண் | ராசி | சூரியன் | சந்திரன் | செவ்வாய் | புதன் | குரு | சுக்கிரன் | சனி | ராகு/கேது |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | மேஷம் | உச்சம் | சமம் | ஆட்சி | சமம் | நட்பு | சமம் | நீசம் | பகை |
| 2 | ரிஷபம் | பகை | உச்சம் | சமம் | நட்பு | பகை | ஆட்சி | நட்பு | நீசம் |
| 3 | மிதுனம் | சமம் | நட்பு | பகை | ஆட்சி | பகை | நட்பு | நட்பு | நட்பு |
| 4 | கடகம் | சமம் | ஆட்சி | நீசம் | பகை | உச்சம் | பகை | பகை | பகை |
| 5 | சிம்மம் | ஆட்சி | நட்பு | நட்பு | நட்பு | நட்பு | பகை | பகை | பகை |
| 6 | கன்னி | சமம் | நட்பு | பகை | ஆட்சி, உச்சம் | நட்பு | நீசம் | நட்பு | நட்பு |
| 7 | துலாம் | நீசம் | சமம் | சமம் | நட்பு | பகை | ஆட்சி | உச்சம் | நட்பு |
| 8 | விருச்சிகம் | நட்பு | நீசம் | ஆட்சி | சமம் | நட்பு | சமம் | பகை | உச்சம் |
| 9 | தனுசு | நட்பு | சமம் | நட்பு | சமம் | ஆட்சி | நட்பு | சமம் | நட்பு |
| 10 | மகரம் | பகை | சமம் | உச்சம் | சமம் | நீசம் | நட்பு | ஆட்சி | நட்பு |
| 11 | கும்பம் | பகை | சமம் | சமம் | சமம் | சமம் | நட்பு | ஆட்சி | பகை |
| 12 | மீனம் | நட்பு | சமம் | நட்பு | நீசம் | ஆட்சி | உச்சம் | சமம் | நட்பு |

கிரகங்களின் உச்சம், நீசம் மற்றும் ஆட்சி போன்ற நிலைகள் அனைவருக்கும் எளிதாக தெரியும். ஆனால் நட்பு, சமம், பகை போன்ற நிலைகளை தெரிந்து வைத்திருப்பது என்பது ஆரம்ப நிலை ஜோதிடர்களுக்கு சற்று தடுமாற்றத்தை தரும்.

அதற்கான ஒரு சூத்திரம் கீழே தந்திருக்கிறேன் பாருங்கள்.
1. கிரகங்கள் தாங்கள் மூலத்திரிகோணம் அடையும் ராசிகளுக்கு 2,12, 4, 5, 8, 9 ஆகிய வீடுகள் நட்பு வீடுகளாகும்.
2. ஏனைய வீடுகள் (3,6,7,10,11) பகை வீடுகளாகும். இவற்றில் ஒரு வீடு நட்பாகவும் மற்றது பகையாகவும் இருந்தால் அது சம வீடாகும்.
3. கிரகங்கள் உச்சம் அடையும் வீட்டிற்கு அதிபதியான கிரகத்தின் மற்றொரு வீடு பகையாக வந்தாலும் சமம் என்று கொள்ள வேண்டும்.
இதற்கு உதாரணம் தருகிறேன் பாருங்கள்.
சூரியன் உச்சம் அடைவது மேஷ ராசி
நீசம் அடைவது அதற்கு 7-ம் வீடான துலா ராசி
ஆட்சி பெறுவது சிம்ம ராசி

மூலத்திரிகோணம் பெறுவதும் சிம்ம ராசி

எனவே சிம்மத்திலிருந்து 2, 12, 4, 5, 8, 9-ம் வீடுகள் நட்பு ராசிகளாகும் சூரியனுக்கு 2ம் வீடாக கன்னி ராசி வருவதால் புதன் முதலில் நட்பாக வருகிறார். பின்பு 11ம் வீடாக மிதுனம் வருவதால் அது பகை என வருகிறது. எனவே ஒரு நட்பும், பகையும் கலந்து வருவதால் சூரியனுக்கு புதன் சமம் என்ற நிலையைப் பெறும்.
எனவே சூரியன் மிதுன, கன்னி ராசிகளில் சமம் என்ற நிலையை அடைகிறார்.
செவ்வாய் உச்சம் பெறும் ராசி மகரம். அதன் மூலத்திரிகோண ராசி மேஷம் எனவே சூத்திரத்தின் படி மேஷத்திலிருந்து 10, 11ம் வீடுகளாக வரும் மகரம் மற்றும் கும்ப ராசிகளில் செவ்வாய் பகை பெற வேண்டும். ஆனால் மகரம் உச்ச வீடாக வருவதால் மற்றொரு வீடான கும்பம் பகை என்ற நிலை பெறாமல் சமம் என்ற நிலையைப் பெறுகிறது.
இதே முறையில் மற்ற கிரகங்களுக்கும் நட்பு, பகை, சமம் ஆகிய நிலைகளை எளிதாக அறிந்துகொள்ளலாம்.

**மூலத்திரிகோண ராசிகள்**
சூரியன் - சிம்மம்
சந்திரன் - ரிஷபம்
செவ்வாய் - மேஷம்
புதன் - கன்னி
குரு - தனுசு
சுக்கிரன் - துலாம்
சனி - கும்பம்.

இதில் சூரியன், மற்றும் புதன் தங்களது ஆட்சி வீட்டிலேயே மூலத்திரிகோணம் அடைகின்றன.
சந்திரன் உச்ச வீடான ரிஷபத்தில் மூலத்திரிகோணம் அடைகிறார்.
மற்ற கிரகங்கள் தங்களது இரண்டு வீடுகளில் ஆண் ராசிகளில் மூலத்திரிகோணம் அடைகின்றனர்.

### 1.11 திதி
ஞாயிற்றுக்கிழமை முதல் சனிக்கிழமை வரை உள்ள ஏழு நாட்கள்தான் வாரம் ஆகும். திதி என்பது வளர்பிறைப் பிரதமை முதல் பௌர்ணமி வரை உள்ள பதினைந்து நாட்களும், தேய்பிறைப் பிரதமை முதல் அமாவாசை வரை உள்ள பதினைந்து நாட்களும், அதாவது அந்த முப்பது நாட்களும் திதியாகும்.

| 30 திதிகள | | | |
|---|---|---|---|
| வளர்பிறைத் திதிகள் | | தேய்பிறைத் திதிகள் | |
| 1 | பிரதமை | 16 | பிரதமை |
| 2 | துதியை | 17 | துதியை |
| 3 | திருதியை | 18 | திருதியை |
| 4 | சதுர்த்தி | 19 | சதுர்த்தி |
| 5 | பஞ்சமி | 20 | பஞ்சமி |
| 6 | சஷ்டி | 21 | சஷ்டி |
| 7 | சப்தமி | 22 | சப்தமி |
| 8 | அஷ்டமி | 23 | அஷ்டமி |
| 9 | நவமி | 24 | நவமி |
| 10 | தசமி | 25 | தசமி |
| 11 | ஏகாதேசி | 26 | ஏகாதேசி |
| 12 | துவாதசி | 27 | துவாதசி |
| 13 | திரயோதசி | 28 | திரயோதசி |
| 14 | சதுர்த்தசி | 29 | சதுர்த்தசி |
| 15 | பௌர்ணமி | 30 | அமாவாசை |

### 1.12 ராசிகளின் வகைகள்

#### 1.12.1 வறண்ட ராசிகள்

மேஷம்,மிதுனம்,சிம்மம்,கன்னி ஆகிய ராசிகள் வறண்ட ராசிகள்.

#### 1.12.2 முரட்டு ராசிகள்

மேஷம்,விருச்சிகம் ஆகிய ராசிகள் முரட்டு ராசிகள் ஆகும்.

#### 1.12.3 ஊமை ராசிகள்

கடகம்,விருச்சிகம்,மீனம் ஆகிய ராசிகள் ஊமை ராசிகள் ஆகும்.

#### 1.12.4 நான்கு கால் ராசிகள்

மேஷம்,ரிஷபம்,சிம்மம்,மகரம் ஆகிய ராசிகள் நான்கு கால் ராசிகள் ஆகும்.

#### 1.12.5 இரட்டை ராசிகள்

மிதுனம்,தனுசு,மீனம் ஆகிய ராசிகள் இரட்டை ராசிகள் ஆகும்.

### 1.13 லக்னம்

ஒரு ஜாதகத்தில் இடம் பெறும் ராசிக் கட்டத்தில் 'ல' என்றோ, அல்லது 'லக்'என்றோ, அல்லது ' லக்னம்' என்றோ குறிப்பிட்டிருக்கும் ராசியே முதல்வீடாகும். இங்கே கொடுத்திருக்கும் ராசிக் கட்டத்தைப் பாருங்கள். இங்கே'லக்னம்' என்று குறிப்பிட்டிருக்கும் ராசி மேஷ ராசி. எனவே இ துவே முதல்வீடு. இதிலிருந்து வரிசைக் கிரமமாக எண்ணினோம் என்றால் ரிஷபம் 2வதுவீடு.

மிதுனம் 3வது வீடு. கடகம் 4வது வீடு. சிம்மம் 5வது வீடு. கன்னி 6வதுவீடு. துலாம் 7வது வீடு. விருச்சிகம் 8வது வீடு. தனுசு 9வது வீடு. மகரம்10வது வீடு. கும்பம் 11வது வீடு. மீனம் 12வது வீடு

| மீனம் 12 | மேஷம் 1 (லக்னம்) | ரிஷபம் 2 | மிதுனம் 3 |
| --- | --- | --- | --- |
| கும்பம் 11 | | | கடகம் 4 |
| மகரம் 10 | | | சிம்மம் 5 |
| தனுசு 9 | விருச்சிகம் 8 | துலாம் 7 | கன்னி 6 |

லக்னம் என்றால் முதலாவது என்று பொருள் கொள்ளலாம். லக்னம் என்பது உயிர் ஸ்தானம் என்று ஜோதிடம் கூறுகிறது. அதனால் இந்த ஜென்மத்து லக்னம் - ஜென்ம லக்னம் என்று
லக்னம் என்றால் முதலாவது என்று பொருள் கொள்ளலாம். லக்னம் என்பது உயிர் ஸ்தானம் என்று ஜோதிடம் கூறுகிறது. அதனால் இந்த ஜென்மத்து லக்னம் - ஜென்ம லக்னம் என்று லக்னம் என்றால் முதலாவது என்று பொருள் கொள்ளலாம். லக்னம் என்பது உயிர் ஸ்தானம் என்று ஜோதிடம் கூறுகிறது. அதனால் இந்த ஜென்மத்து லக்னம் - ஜென்ம லக்னம் என்று
லக்னம் என்றால் முதலாவது என்று பொருள் கொள்ளலாம். லக்னம் என்பது உயிர் ஸ்தானம் என்று ஜோதிடம் கூறுகிறது. அதனால் இந்த ஜென்மத்து லக்னம் – ஜென்ம லக்னம் என்று சொல்கிறார்கள்

**1.14 கேந்திர, திரி கோண, மறைவு வீடுகள்**

ஜோதிடர்கள் ஜாதகத்தின் ஒவ்வொரு கட்டத்தையும் வீடு
என்பார்கள்.உங்களுடைய லக்கினம் எதுவோ -அதுவே பிரதானமானது.
அதிலிருந்து துவங்குவதுதான் எல்லா பலாபலன்களும்.
லக்கினத்தை - முதல் வீடு என்று எடுத்துக் கொள்ளுங்கள்.
- 1 , 5 , 9 - ஆகிய வீடுகள் - திரி கோண ஸ்தானம். (லக்ஷ்மிஸ்தானம்)
- 1 , 4 , 7 ,10 - கேந்திர வீடுகள் என்பர். ( விஷ்ணு ஸ்தானம் )
- 3, 6 , 8 , 12
- மறைவு வீடுகள் என்று கூறுவர். அதாவது , இந்தவீட்டில் இருக்கும் கிரகங்கள் - பலம் இழந்து இருக்கும்..
- 2 , 11 - உப , ஜெய ஸ்தானங்கள் என்பர்.

1 ஆம் வீடு - திரி கோணமும் , கேந்திரமும் ஆகிறது...
எந்த ஒரு கிரகமும் - திரி கோணத்திலோ , கேந்திரத்திலோ - நின்றால்- அது பலத்துடன் நிற்கிறது என்று அர்த்தம்.
2 , 11 - வீடுகளில் நின்றால் - பரவா இல்லை , நல்லது.
3 ஆம் வீடு - சுமார்.
6 ,8 ,12
- ஆம் வீடுகள் - நல்லதுக்கு இல்லை. அப்படினா என்ன, ஒருசுப கிரகம் , இந்த வீடுகள் லே இருந்தா, அதுனாலே ஏதும் , பெருசாநல்லது பண்ண முடியாது.

**1.15 ஒரு கிரகம் கெட்டு விட்டது , பலம் இல்லை என்று எப்படிகூறுவது?**

ஒரு கிரகம் , நீசம் ஆகி இருந்தால்.... மறைவு வீடுகளில் இருந்தால்...பகை வீட்டில் இருந்தால்... பகை கிரகங்களுடன் சேர்ந்து இருந்தால்...
,அந்த கிரகம் சரியான நிலைமையில் இல்லை என்று பொருள்.

**1.16 கிரகங்களின் பார்வைகள் :**

எல்லா கிரகத்துக்கும் ஏழாம் பார்வை - பொது.
சனி க்கு - 3 , 10 ஆம் பார்வைகள் உண்டு.
செவ்வாய்க்கு - 4 , 8 ஆம் பார்வைகளும் உண்டு.
குருவுக்கு - 5 , 9 ஆம் பார்வைகளும் உண்டு.

**1.17 காரகன்:(authority)**
தந்தைக்குக் காரகன் சூரியன்
உடல் காரகன் சூரியன்
மனம், தாய்க்குக் காரகன் சந்திரன்
ஆயுள், தொழில் காரகன் சனி
களத்திர காரகன் சுக்கிரன்
தனம், புத்திர காரகன் குரு
கல்வி, புத்தி காரகன் புதன்
நிலம், ஆற்றல், திறமைகளுக்குக் காரகன் செவ்வாய்

**1.18 சந்திர ராசி என்றால் என்ன? அது எதை ஆதாரமாகக்கொண்டது?**
ஒரு ஜாதகத்தில் சந்திரன் இருக்கும் ராசி, சந்திர ராசி எனப்படும். அதுஜாதகன் பிறந்த நட்சத்திரத்தை ஆதாரமாகக் கொண்டது.

**1.19 . லக்கினம் எதற்குப் பயன்படும்? சந்திர ராசி எதற்குப்பயன்படும்?**
பிறந்த ஜாதகம் (Birth
Chart) என்பது வாகனம்,தசாபுத்தி என்பதுரோடு,கோள்சாரம் என்பது டிரைவர்.லக்கினத்தையும்

அதை அடுத்துள்ளபன்னிரெண்டு வீடுகளையும் வைத்து ஜாதகனுடைய வாழ்க்கையையும்,த சாபுத்தியைவைத்து அந்த ஜாதகன் பயனடையப் போகும்காலத்தையும் கோள்சாரத்தைவைத் து அந்தப் பலன்கள் கையில்கிடைக்கும் காலத்தையும் அறியலாம்.

**1.20. கோச்சாரம் (கோள் சாரம் - Transit of planets) என்பது என்ன?**

ஒவ்வொரு கோளும் வானவெளியில் சுழன்று ஒரு ராசியில் இருந்துமற்றொரு ராசியில் இட ம் பெயர்ந்து அமருவதே கோள்சாரம்எனப்படும்.

**1.21. தசா / புத்தி என்பது என்ன? அதன் பயன் என்ன?**

ஜாதகன் பிறந்த நட்சத்திரத்திற்கு அதிபதியான கிரகம் எதுவோஅதற்குரிய தசாதான் ஜாதகனி ன் ஆரம்ப தசா, அதை அடுத்துஒவ்வொரு தசாவாக மாறிக் கொண்டே வரும் மொத்த தசா கா லம் 120ஆண்டுகள். ஒவ்வொரு தசாவையும் மற்ற கோள்கள் பங்குபோட்டுக்கொள்ளும். அதற் கு புத்தி என்று பெயர் (Sub period). ஒவ்வொருகிரகமும்அதன் தசாவில் அல்லது புத்தியில்தான் தனக்குரிய நல்ல அல்லது தீயபலன்களைக் கொடுக்கும்

**ஒரு தசையை ஒன்பது பகுதிகளாக பகுப்பதுதான் புக்தி:**

அதாவது ஒன்பது கிரகங்களும் ஒவ்வொரு தசையின் காலத்தில் புக்தியாக பங்கெடுத்து பரிபாலனம் செய்யும். ஒரு தசை 10 வருடம் என்றல் அதில் ஒன்பது சமம் இல்லாத காலமாக புக்திகள் பிரிக்கபடுகிறது. அதில் எந்த ஒரு தசையும் தனது புக்தி கொண்டு ஆரம்பிக்கும். அதாவது ராகு தசை என்றால் அதில் ராகு புக்தி முதலில் தொடங்கும் (தனது புக்தி ). அதாவது தனது கிரகத்தின் பங்களிப்பை முதலில் செய்து விடும். அதன் பின்பு மேலே உள்ள வரிசை படி, குரு புக்தி, சனி புக்தி, புதன் புக்தி, கேது புக்தி, சுக்கிர புக்தி என தொடரும். அதேபோல் புதன் தசை என்றால் முதலில் புதன் புக்தி, (தனது புக்தி ) அதன் பின்பு வரிசையாக கேது புக்தி, சுக்கிர புக்தி, சூரிய புக்தி என ஒன்பது புக்திகளும் நடந்து வரும்.

ஜோதிட துறையில் வழமையாக சொல்லுவது என்னவென்றால் எந்த ஒரு தசையில் தனது புக்தி ஒருவருக்கு நல்லதை செய்கிறதோ அந்த தசையில் மற்ற புக்திகள் கெடுதல் செய்யும். அதாவது கொடுத்து கெடுப்பது. ஆக ஒரு தசையின் தனது புக்தி காலமானது பலருக்கு நல்லது செய்யாமல் கெட்டதும் செய்யாமல் மந்தமாக அல்லது நடுத்தரமாக நடந்தால் மற்ற புக்திகள் விசேஷமாக இருக்கும் என்று சொல்லுகின்றனர்.

**ஒரு புக்தியை ஒன்பது பகுதி காலங்களாக பிரிப்பது தான் அந்தரம்.**

எப்படி தசையில் ஒன்பது பகுதி புக்தியோ அதுபோல் புக்தியில் ஒன்பது பகுதிதான் அந்தரம். அதாவது ஒரு தசை நடந்தால் ஒன்பது கிரகங்கள் புக்தியாக பங்கு கொள்கிறதோ அதேபோல் ஒரு புக்தியில் ஒன்பது பகுதிகளாக அந்தரம் என்ற காலம் பங்கேடுக்கிறது.

உதாரணமாக ஒருவருக்கு குரு தசை நடக்கிறது என்றால் முதலில் குரு புக்தி, சனி புக்தி, புதன் புக்தி, என ஒன்பது கிரகங்கள் தொடரும். அதுபோல் அந்த குருதசையின் குரு புக்தி எடுத்துக்கொண்டால் குரு அந்தரம், சனி அந்தரம், புதன் அந்தரம் என ஒன்பது கிரகங்களும் அந்தரம் காலமாக செயல்படும்.

ஆக ஒரு மனிதனின் ஆயுள் =9 தசையாக பிரிக்கப்பட்டு ஒவ்வொரு தசைக்கும் ஒன்பது புத்திகளாக பிரிக்கப்பட்டு ஒன்பது புத்திகளுக்கும் ஒன்பது அந்தரங்களாக பிரிக்கப்படும் கால புருஷன் ஒருவரின் வாழ்வை நிர்ணயிக்கின்றான்.
இதில் பெரும்பாலும் யாரும் அனைத்து தசைகளை நிறைவு செய்வது இல்லை. 70 வயது ஆயுள் என்றால் 3 அல்லது 4 தசைகள் நடக்காமலே ஆயுள் முடிந்து விடும்.
மேலும் ஒரு கிரகம் ஒரு ஜாதகத்தில் நல்ல பலம் பெற்றால் அந்த தசை முழுவதும் நல்லதே நடக்கும் என்றும் சொல்ல இயலாது. என் என்றால் புக்தி என்ற பங்களிப்பு ஓவ்வொரு தசையிலும் அனைத்து கிரகங்களுக்கும் உள்ளது. அதைவிட அந்தரம் என்ற பங்களிப்பும் அனைத்து கிரகங்களுக்கும் உள்ளது.
எனக்கு குரு தசை நடக்கிறது எனக்கு ஜாதகத்தில் குரு உட்சமாக இருக்கிறது நல்ல பலன் நடக்கும் என்று நினைக்ககூடாது. குரு தசையில் சனி புக்தி சேவை புக்தி கேது அந்தரம் என்று வரும் அல்லவா அப்போது நம்மை போட்டு பார்த்து விடும்.
சனி எனக்கு ஜாதகத்தில் கெட்டு போய் உள்ளது சனி தசை முழுவதும் கேடுதலே நடக்கும் என்று கலங்க வேண்டாம். அதில் நல்ல கிரகங்கள் புக்தி மற்றும் அந்தரம் நடக்கும்போது மூச்சு விட வாய்ப்பு வரும்.

### 1.22. தசா புத்திகள்

ஒரு ஜாதகரின் பிறந்த நட்சத்திரத்தின் அதிபதியின் தசைதான் துவக்கதசை.
தசா புத்திகளின் கால அளவு, மற்றும் வரிசை என்ன?

சூரிய தசை - 6 ஆண்டுகள்
சந்திர தசை - 10 ஆண்டுகள்
செவ்வாய் தசை - 7 ஆண்டுகள்
ராகு தசை - 18 ஆண்டுகள்
குரு தசை - 16 ஆண்டுகள்
சனி தசை - 19 ஆண்டுகள்
புதன் தசை - 17 ஆண்டுகள்
கேது தசை - 7 ஆண்டுகள்
சுக்கிர தசை - 20 ஆண்டுகள்

மொத்தம் 120 ஆண்டுகள்

### 1.23 அஸ்தமனம்

ஒரு கிரகம் வலிமை இழந்து போவதுதான் அஸ்தமனம் இரண்டுகிரகங்கள் 5 டிகிரிக்குள் அமர்ந்திருந்தால், 2-
வதாக இருக்கும் கிரகம்வலிமை இழக்கும். இந்த விதிப்படி சூரியனுடன் ஒரு கிரகம் 10பாகைக்குள் இருக்கும்போது வலிமை இழந்துவிடும்

### 1.24 அஷ்டகவர்கம்

அஷ்டவர்க்கம் என்பது ஒரு கிரகத்தின் வலிமையையும், ஒரு வீட்டின்தன்மையையும் மதிப்பெண்கள் கொடுத்துக் கணிப்பது.ஒரு வீட்டில்

ஒருகிரகத்தின் அதிகபட்ச மதிப்பெண் 8, ஒரு ஜாதகத்தின் மொத்தமதிப்பெண் 337
(யாராக இருந்தாலும் 337 மட்டுமே)
ஒரு வீட்டின் சராசரி மதிப்பெண் - 28 (337/12)
இந்த மதிப்பெண்களை வைத்து ஒரு ஜாதகத்தில் உள்ள நன்மைதீமைகளை சுலபமாக அறிய லாம்.

**1.25 .நவாம்சம்**

Navamsam is the magnified version of a Rasi Chart

ஒரு ராசியை ஒன்பது சமபாகங்களாகப் பிரித்து, ராசியில் உள்ள கிரகம்அதன் எந்தப் பகுதியில் உள்ளது என்பதைக்
காட்டுவதுதான் நவாம்சம்.(குறிப்பாக கணவன் அல்லது மனைவியைப்பற்றி அறிய உதவும்)

**1.26 சுற்றும் காலம்**

ஜோதிடப்பலன்கள் அறிய முதலில் ஒவ்வொரு கிரஹமும் ஒவ்வொருராசியில்எவ்வளவு க ாலம் நிலைத்திருக்கும் என அறிந்துக்கொளவது அவசியம்
முதலாவதாக சந்திரன் ஒன்றுதான் 12 ராசிகளை முப்பதுநாட்களில் சுற்றி வருகிறான் அதாவ து ஒவ்வொரு ராசியிலும் அவன் 2 ½ நாடகள் தான் தங்குவான்
அடுத்தபடியாக நாம் சூரியனைச்சொல்லலாம் .சூரியன், சுக்கிரன், புதன்12 ராசிகளை ஒரு ஆ ண்டில் சுற்றிவருகிறான்
செவ்வாய் கிரகம் 1 ½ ஆண்டுகளில் 12 ராசிகளைக் கடக்கின்றன.இவை ஒவ்வொரு ராசியிலும் சுமாராக 45 நாட்க ள் தங்கி இருக்கும்ஆனால் சில சம்யம் செவ்வாய் ஒரு ராசியில் அதிக மாதங்கள் தங்கவாய்ப்புண்டு. சிலசமயம் ஆறு மாதங்கள் கூ ட அந்த இடத்திலேயேஇருக்கும்
பின் வருவது குரு ,இந்தக்கிரகம் 12 ராசிகளை 12 ஆண்டுகளில்கடக்கிறது ஒரு ராசியில் ஒரு வருடம் தங்கி இருக்கும் சில சம்யம்வக்ரமாகி ஒரு சில மாறுதல் ஏற்பட வாய்ப்பு உண்டு
மந்தன் என்ற பெயரிலேயே தெரிகிறது சனி மிகவும் மெதுவாக 12ராசிகளைக் கட்க்கும் என்று ,, ,சனி 12 ரசிகளைக்கடக்க முப்பதுஆண்டுகள் பிடிக்கின்றன இவர் ஒரு ராசியில் 2 1/2 வருடங்கள்தங்குகிறார்
ராகு கேது 18 ஆண்டுகளில் 12 ராசிகளைக் கடக்கின்றன இவை ஒருராசியில் 1 1/2 வருடம்தங்கி இருக்கும் .எல்லா கிரகங்களும் முறைப்படிராசிகளை வலம் வர இந்த ராகு கேது மட்டும் ராசிகளை இடதுபக்கமாக எதிர்திசையில் செல்கின்றன மேலும் இர ண்டும் ஒரே நேரத்தில் ஒரு ராசியிலிருந்து மற்றொரு ராசிக்கு செல்கின்றன மற்றஎல்லா கிரகங்களும் தனித்தனியே நகர ராகு கேது மட்டும் சேர்ந்தேநகருகின்றன ராகு கேது பெயர்ச்சி என்று இரண்டையும் சேர்த்தே தான்சொல்லுவார்கள் ராகு கேது ஒருவர்க்கொருவர் பார்த்த வண்ணம் ஒருவர்க்கொருவர் 7 ம் இடத்தில் சஞ்சரிப்பார்கள் உம்... மேஷ்த்தில்ராகு இருந்தால் அதற்கு 7 ம் இடமான துலாத்தில்
கேது இருக்கும் ரிஷ்பத்தில் ராகு இருந்தால் விருச்ச்சிகத்தில் கேது இருக்கும்

**1.27 வக்ரகதி ..**

ராகு கேது எப்போதுமே இடமிலிருந்து வல்மாக் எல்லா ராசிகளையும் வளைய வரும் anticlockwise .எல்லா கிரகங்களும் மேஷ்த்திலிருந்து ஆரம்பித்து ரிஷபம் மிதுனம் என்று சுற்ற ராகு கேது கடகத்திலிருந்து ஆரம்பித்து மிதுனம் ரிஷபம் மேஷம் என்று பின்னுக்கு வந்து சுற்றும் இதே போல் தான் நட்சத்திர நிலை.யும் .எல்லா கிரகங்களும் அசுவனி பரணி கிருத்திகை ரோஹிணி என்றுசுற்றி வர ராகு கேது ரோகிணி கிருத்திகை பரணி அஸ்வினி என்று சஞ்சரிக்கும் ஆனால் சில சந்தர்ப்பங்க்ளில் செவ்வாய் புதன் குரு சுக்கிரன் சனி என்ற ஐந்து கிரகங்க்ளும் திடீரென்று பின்னுக்கு வருவதுண்டு இதைத் தான் வக்கிரகதி என்கிறார்கள் இந்த வக்கிரகதி தன்மை சில சமயம் வரைதான் நீடிக்கும் பின் வழக்கம் போல் சுற்ற ஆரம்பித்துவிடும் உதாரணமாக குரு தனுர் ராசியிலிருந்து மகர ராசிக்குப்போனபின் சில சம்யங்க்ளுக்கு திரும்பவும் தனுர் ராசிக்கே வந்துவிட்டு பின் திரும்ப மகர ராசிக்கு செல்லும் ,இதையே குரு வக்கிரகதியில் சஞ்சரிக்கிறார் என்பார்கள் சூரிய சந்திரனுக்கு இதுபோல் வக்ரகதி கிடையாது

1.28 **கிரஹங்கள் பலன் தரும் காலங்கள்**

சூரியன், செவ்வாய், கிரஹங்கள் ஆரம்ப காலத்திலேயே பலன்களைக் கொடுப்பார்கள்.

சந்திரன், புதன் கிரஹங்கள் அவர்கள் காலம் முழுவதும் பலன்களைக் கொடுப்பார்கள்.

குருவும், சுக்ரனும் அவர்கள் காலத்தின் மத்தியில் பலன்களைக் கொடுப்பார்கள்.

சனி, ராகு, கேது பிற்காலத்திலேயே பலனைக் கொடுப்பார்கள்.

**1.29 கிரஹங்கள் அடுத்த ராசிகளின் பார்வை**

ஒரு ராசியில் சஞ்சரித்துக்கொண்டிருக்கும்போது, அதை விட்டுப் போவதற்குமுன்பே அடுத்த ராசிகளைப் பார்ப்பார்கள். கிரஹங்கள்,தாங்கள் இருக்கும் ராசியிலிருந்து அடுத்த ராசிக்கு மாறுமுன், அந்தந்த அடுத்த ராசியின் குண விசேஷங்களை முன்னதாகவேஅடையப்பெற்று, அதற்குத் தகுந்தவாறு அடுத்த ராசியின் பலாபலன்களை ஜாதகருக்கு கொடுக்க ஆரம்பித்துவிடுவார்கள். அதாவது,

சூரியன் -5 நாள்
புதன்,சுக்ரன் -7 நாள்
செவ்வாய் -8 நாள்
குரு -2 மாதம்
ராகு,கேது -3 மாதம்
சனி - 6 மாதம்

**1.30 கிரஹங்கள் வலிமை**

உச்சம் - 100% வலிமை
மூலத்திரிகோணம் - 90% வலிமை
சொந்த வீடு - 80% வலிமை
நட்பு வீடுகள் - 60% வலிமை
சம வீடுகள் - 50% வலிமை
பகை வீடுகள் - 40% வலிமை
நீச வீடுகள் - 10% வலிமை
இந்த அளவுகள் எல்லாம் எடைபார்க்கும் இயந்திரத்தை வைத்துச் சொல்லப் பட்டதல்ல! அனுபவத்தில் பெற்ற உத்தேச அளவுகள்

1.31 **ஷட்பலம்**

ஷட்பலம் என்பது ஆறுவகை பலமாகும். அவை **ஸ்தானபலம்**, **திக் பலம்**, **சேஷ்ட பலம்**, **கால பலம்**, **திருக் பலம்**, **நைசர்கிக பலம்**என்பனவாகும்.

**திக் பலம்** :
லக்னத்தில் குருவும் புதனும்,
நான்கில் சந்திரன் சுக்கிரன்,
ஏழில் சனி, பத்தில்
சூரியன் செவ்வாய் இருப்பது

ஷட்பலம் அறிவதன் மூலமே கிரகத்தின் உண்மையான வலிமையை அறிய முடியும். மேலும் பாவ பலத்தையும் அறிய வேண்டும். இதன் பிறகே ஜாதகத்தின் பலாபலன்களை சரியாக கணிக்க முடியும். இதை கணிக்க விரிவான ஜோதிட அறிவும் ஓரளவு கணித அறிவும் அவசியம்.

**1.32**

| எண் | கிரகம் | ஜாதி | குணம் | சமூகநிலை | பாலினம் | உறுப்பு | திசை |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | சூரியன் | க்ஷத்ரியர் | சாத்விக | அரச | ஆண் | எலும்பு | கிழக்கு |
| 2 | சந்திரன் | வைசிய | சாத்விக | அரச | பெண் | இரத்தம் | வடமேற்கு |
| 3 | செவ்வாய் | க்ஷத்ரிய | தாமச | இராணுவ தளபதி | ஆண் | மஜ்ஜை | தெற்கு |
| 4 | புதன் | வைசிய | ரஜஸ் | இளவரசர் | அலி | தோல் | வடக்கு |
| 5 | வியாழன் | பிராமணர் | சாத்விகம் | அமைச்சர் | ஆண் | கொழுப்பு | வடகிழக்கு |
| 6 | சுக்கிரன் | பிராமணர் | ரஜஸ் | அமைச்சர் | பெண் | சுக்கிலம் | தென்கிழக்கு |
| 7 | சனி | சூத்திரர் | தமஸ் | வேலைக்காரர் | அலி | நரம்பு | மேற்கு |

1.33 **பஞ்சாங்கம் என்றால் என்ன?**

**பஞ்சாங்கம்னா ஐந்து அங்கங்கள்னு அர்த்தம்.**

அந்த ஐந்து அங்கங்கள்:

**1.வாரம் / நாள்**

**2 திதி**

**3. நட்சத்திரம்**

**4. யோகம்**

**5. கரணம்**

ஞாயிற்றுக்கிழமை முதல் சனிக்கிழமை வரை உள்ள ஏழு நாட்கள்தான் வாரம்.

திதி என்பது வளர்பிறைப் பிரதமை முதல் பௌர்ணமி வரை உள்ள பதினைந்து நாட்களும், தேய்பிறைப் பிரதமை முதல் அமாவாசை வரை உள்ள பதினைந்து நாட்களும், அதாவது அந்த முப்பது நாட்களும் திதியாகும்

1. பவுர்ணமி, அமாவசைக்கு அடுத்த நாள் பிரதமை பிரதமர் என்றால் முதல்வர் என்று பொருள். அதுபோல் பிரதமை என்றால் முதல் நாள்.

2. துவிதை என்றால் இரண்டாம் நாள் தோ என்றால் இரண்டு. துவிச் சகர வண்டி என்று சைக்கிளைக் கூறுவது தங்களுக்கு தெரியும்.

3. திரிதியை என்றால் மூன்றாம் நாள் திரி என்றால் மூன்று அல்லவா?

4. சதுர்த்தி என்றால் நான்காம் நாள் சதுரம் நான்கு பக்கங்கள் கொண் டது.

5. பஞ்சமி என்றால் அய்ந்தாம் நாள் பாஞ்ச் என்றால் அய்ந்து எனப் பொருள்.

6. சஷ்டி என்றால் ஆறாம் நாள்.

7. சப்தமி என்றால் ஏழாம் நாள். சப்த ஸ்வரங்கள் என ஏழு ஸ்வரங்களைக் கூறுவதில்லையா?

8. அஷ்டமி என்றால் எட்டாம் நாள். அஷ்டவக்கிரம் என்று எட்டு கோணல்களைக் கூறுவதையும் அஷ்ட லட்சுமி என்றெல்லாம் கூறக் கேட்டிருக்கிறோம்.

9. நவமி என்றால் ஒன்பதாம் நாள் நவ என்றால் ஒன்பது என்றும் நவ கிரகங்கள் என்பதும் தங்களுக்குத் தெரியும்.

10. தசமி என்றால் பத்தாம் நாள் தஸ் என்றால் பத்து அல்லவா? தாரம் என்று கடவுளின் அவதாரங்களைக் கூறக் கேட்டிருக்கிறோம்.

11. ஏகாதசி என்றால் பதினொன்றாம் நாள் ஏக் என்றால் ஒன்று தஸ் என்றால் பத்து இரண்டின் கூட்டுத் தொகை பதினொன்று.

12. துவாதசி என்றால் பன்னிரண்டாம் நாள் தோ/துவி என்றால் இரண்டு தஸ் என்றால் பத்து எனவே இதன் கூட்டுத்தொகை பன்னிரண்டு ஆகும்.

13. திரியோதசி என்றால் பதிமூன்றாம் நாள் திரி என்றால் மூன்று + தஸ் என்றால் பத்து ஆகப் பதிமூன்று.

14. சதுர்த்தசி என்றால் பதினான்காம் நாள் சதுர் (சதுரம்) என்றால் நான்கு அத்தோடு தஸ் என்ற பத்து சேர்த்தால் பதினான்கு என ஆகும்.

பிரதம திதியில்:- அதிபதி :- அக்னி பகவான்
துதியை திதியில்:-அதிபதி :- துவஷ்டா தேவதை
திருதியை திதி:- அதிபதி :- பார்வதி
சதுர்த்தி திதி:- அதிபதி :- கஜநாதன் [விநாயகர்]
பஞ்சமி திதி:- அதிபதி :- சர்ப்பம்
சஷ்டி திதி:- அதிபதி :-முருகன்
சப்தமி திதி:- அதிபதி :- சூரியன்
அஷ்டமி திதி:- அதிபதி :- சிவபெருமான்
நவமி திதி:- அதிபதி :-பாராசக்தி
தசமி திதி:- அதிபதி :- ஆதிசேஷன்
ஏகாதசி திதி:- அதிபதி :- தர்ம தேவதை
துவாதசி திதி:- அதிபதி :- விஷ்ணு
திரயோதசி திதி:- அதிபதி :- மன்மதன்
சதுர்தசி திதி:- அதிபதி :- கலிபுருஷன்

திதியில் இருந்து பிறந்ததுதான் தேதி

வானவெளியில் சூரியனுக்கும், சந்திரனுக்கும் உள்ள தூரத்தைச் சொல்வதுதான் திதி

விரதங்கள் இருப்பவர்கள், இறைவனுக்கு அபிஷேகம் செய்பவர்கள் இந்தத் திதி பார்த்துத்தான் செய்வார்கள்

அதேபோல் புதுக் கணக்குப் போடுபவர்கள் அதிகம் விரும்புவது தசமித் திதி

3. திருமணம், இடம் வாங்குவது போனற சுப காரியங்களைச் செய்பவர்கள்

அஷ்டமி, நவமி திதியில் செய்வதில்லை.

4. ஒரு மனிதனின் மரணத்தை திதியை வைத்துதான் குறிப்பிடுவார்கள்.
ஒருவன் ஐப்பசி மாதம் வளர்பிறை நவமி திதியில் காலமானால், ஒரு ஆண்டு கழித்து அல்லது வருடா வருடம் அவனது சந்ததியினர்அதே ஐப்பசி மாதம் வளர்பிறை நவமி திதியில் தான் அவனுக்கு நினைவுச் சடங்குகளைச் செய்வார்கள்.கிராமங்களில் தங்கள் வீட்டில் படையல் போடுவார்கள். இதுபோன்று இன்னும் பல பழக்கங்கள் இந்தத் திதியை வைத்துப் பல சமூகங்களில் பலவிதமாக உள்ளது.

நட்சத்திரம் என்பது அஸ்வினி முதல் ரேவதி வரையுள்ள 27 நட்சத்திரங்கள். பூமியை சுற்றி சந்திரன் செல்லும் பாதையில் எந்த நட்சத்திரம் உள்ளதோ அதுதான் அன்றைய நட்சத்திரம். 27 நாட்களில் சந்திரன் வானவெளியில் ஒரு சுற்றை முடித்துவிட்டு அடுத்த சுற்றை அரம்பித்துவிடும்

தினசரி ஒரு நட்சத்திரம் என்பதால் ஒவ்வொரு நாளும் சந்திரனை வைத்துப் பிறந்த நட்சத்திரம் மாறும், அதேபோல 2.25 நாட்களுக்கு ஒருமுறை பிறந்த ராசியும் மாறும்.
மொத்தம் இருக்கிற 27 நட்சத்திரங்களைப் பற்றி நாம் ஏற்கனவே பார்த்து இருக்கிறோம்.. இல்லையா?

கரணம் - என்பது திதியில் பாதி தூரத்தைக் குறிக்கும்.
கரணங்கள் மொத்தம் 11-ஆகும். அவையாவன:

1. பவ,
2. பாலவ,
3. கெலவ,
4. தைதூலை,
5. கரசை,
6. வணிசை,
7. பத்தரை,
8. சகுனி,
9. சதுஷ்பாதம்,
10. நாகவம்,
11. கிம்ஸ்துக்னம்.

வானவெளியில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் இருந்து சூரியனும், சந்திரனும் செல்கிற மொத்த தூரத்தைக் குறிப்பது யோகம்.

### 1.34 காரகோ பாவ நாஸ்தி

நாம் ஏற்கனவே - பன்னிரண்டு வீடுகளைப் பற்றி , பாடம் பார்த்தோமே, ...அந்த , அந்த வீடுகளுக்கு காரகத்துவம் பெரும் கிரகங்களைப் பற்றி கூறி இருந்தேன்... ஞாபகம் இருக்கிறதா?

உதாரணத்திற்கு - ஏழாம் வீடு - களத்திர ஸ்தானம் - காரகம் பெறுவது -சுக்கிரன்.
ஐந்தாம் வீடு - குழந்தைகள் ஸ்தானம் - காரகம் பெறுவது - குரு .

கரெக்டா ? இந்த ஏழு கிரகங்களுமே, தனது காரகம் பெறும் இடங்களில்நின்றால் - சொதப்பி விடுகிறார்கள். அவர்கள் வேலை பார்ப்பதே இல்லை.
தனியாக நின்றால் , வெகு நிச்சயமாக சொதப்பல். மற்ற கிரகங்களுடன் இணைந்து இருப்பது - பரவா இல்லை.

அதாவது - எந்த லக்கினமாக இருந்தாலும், ஏழில் - சுக்கிரன் தனித்து இருந்தால், அவர்களுக்கு திருமண விஷயம் , அவ்வளவு எளிதாக இருப்பது இல்லை.
நிறைய பேருக்கு திருமணமே நடப்பது இல்லை. அல்லது வெகு தாமத திருமணம்...
முறைப்படி திருமணம் செய்து குடித்தனம் நடத்த முடியாத நிலை
இப்படி..தவறி, விதி விலக்காய் நடந்தாலும் - கல்யாணம் பண்ணியும் பிரயோஜனம் இல்லாத நிலைமை. இப்படி....

அதைப் போலவே , ஐந்தாம் வீட்டில் - குரு தனித்து நின்றால் - அவர்களுக்கு -குழந்தை பாக்கியம் இருப்பது இல்லை. ஆகா , பிரமாதம், ஐந்தில் குரு - நல்லாபக்காவா - திரிகோண ஸ்தானத்தில் இருக்கிறார் என அவசரப் பட்டு விடாதீர்கள்..

இதற்க்கு பெயர் தான் காரகோ பாவ நாஸ்தி ....

இதைக் கூட நிறைய ஜோதிடர்கள் தெரிந்து வைத்து இருக்கிறார்கள்..
ஆனால் ,நாம் அடுத்து பார்க்க விருக்கும் விஷயம் - நிறைய பேருக்கு தெரிஞ்சு இருக்கவாய்ப்பு இல்லை என்பது என் அனுபவம்...

எந்த ஒரு விஷயமும் தெரிஞ்சுக்கிட ரெண்டு வகை இருக்கு. -- ஒன்னு உங்களுக்கு சொல்லிக் கொடுக்கிற குரு - பக்காவா , வெளிப்படையா சொல்லிக் கொடுக்கிறவரா இருக்கணும். ... இல்லையா , உங்களுக்கு இயல்பா இருக்கிற ஆர்வம் , உங்க தேடுதல் ... உங்களுக்கு நிறைய விஷய ஞானத்தைக் கொடுக்கும்.

1.35 **கேந்திராதிபத்திய தோஷம்** பற்றி :

சுப கிரகங்கள் - கேந்திர அதிபதிகளாக இருந்து , கேந்திரங்களிலேயே நிற்க -அவராலும் ஒன்றும் பிரயோஜனம் இல்லை என்கிறது விதி.. இது எல்லாகிரகங்களுக்கும் இல்லை. முழுக்க , முழுக்க சுப கிரகங்களுக்கு மட்டுமே.

இயல்பிலேயே - அசுப கிரகங்களான - செவ்வாய் , சனி, சூரியன் , தேய்பிறைசந்திரன், தீய கிரகங்களுடன் சேர்ந்தால் அசுப கிரகமான புதன் , ராகு , கேது -ஆகியோர் கேந்திரங்களில் நின்றால் - தோஷமில்லை.

எனவே , கேந்திராதிபத்திய தோஷம் பெறும் கிரகங்கள் - குரு, சுக்கிரன் ,வளர்பிறை சந்திரன், தனியாக நிற்கும் புதன்.
இவர்கள் , வேறு கிரகங்களுடன் இணைந்து - கேந்திரத்தில் இருந்தால் , பரவா இல்லை. தனியே நிற்க கூடாது.

1.36 **பாதகாதிபத்யம், பாதகாதிபதி - விளக்கம்.**

மேஷம் , கடகம் , துலாம் , மகரம் ஆகிய லக்னங்களுக்கு - 11 ஆம் வீடு மற்றும் அதன் அதிபதி பாதகாதிபதி ஆகும்.

ரிஷபம் , சிம்மம் , விருச்சிகம் , கும்பம் ஆகிய லக்னங்களுக்கு -
9ஆம் வீடு மற்றும் அதன் அதிபதி பாதகாதிபதி ஆகும்.

மிதுனம் , கன்னி , தனுசு , மீனம் ஆகிய லக்னங்களுக்கு -
7 ஆம் வீடுமற்றும் அதன் அதிபதி பாதகாதிபதி ஆகும்.

பாதகாதிபதி பலம் வாய்ந்த எந்த பாவங்களில் இருக்கிறாரோ அந்த பாவங்களில் உருவாகும் பலன்களில் பாதகத்தை செய்வர் .மேலும் பாதகாதிபதி எந்த இடத்தை பார்க்கிறாரோ அந்த இடத்தின் பலன்களும் பாதிக்கப்படும் இந்த பாதகாதிபதி தீமையான பலன்களை தமது தசா புக்தி காலங்களில் தருவார். பாதகாதிபதியை விட பாதக ஸ்தானத்தில் அமரும் கிரகம் அதிக பாதகத்தை தரும் என்பது ஜோதிட விதி.

1.37 **பாதகாதிபதி/ மாரகாதிபதி/ யோகாதிபதி தசை**

பாதகாதிபதி தசை நடகின்றது அப்பொழுது அவனுக்கு பாதகமான செயல்கள் நடக்கும். அவனை அதிகம் துன்பபட வைக்கும்.

இதே போல் பார்த்தால் மாரகாதிபதி தசை எப்படி இருக்கும்?
இந்த காலங்களில் மரணம் அல்லது மரணத்திற்கு ஒப்பான கண்டங்கள்வரும்.

அதே போல் தான், ஒருவனுக்கு யோகாதிபதி தசை நடக்கும் போது,அனைத்து வசதிகளும் வந்து சேரும்.

1.38 **போதகன்/ வேதகன்/ பாசகன்/ காரகன்**

தசையின் காரக பலன்கள்

| தசை | போதகன் | வேதகன் | பாசகன் | காரகன் |
|---|---|---|---|---|
| 1சூரியதசை | செவ்வாய் | சுக்கிரன் | சனி | குரு |
| 2சந்திரதசை | செவ்வாய் | சூரியன் | சுக்கிரன் | சனி |
| 3செவ்வாய் தசை | சந்திரன் | புதன் | சூரியன் | சனி |
| 4குரு தசை | செவ்வாய் | சூரியன் | சனி | சந்திரன் |
| 5சுக்கிரன் தசை | குரு | சனி | புதன் | சூரியன் |
| 6சனி தசை | சந்திரன் | செவ்வாய் | சுக்கிரன் | குரு |
| 7புதன் தசை | குரு | செவ்வாய் | சுக்கிரன் | சுக்கிரன் |

போதகன் : தனது தசைகளில் வரும் புத்திகளில் தனது பலனைக் கொடுக்கும்.
வேதகன் : பாவத்தின் பலனை மாறுபடச் செய்யும். [ நன்மை தருவதில்லை]
பாசகன் : பாவத்தின் பலன் கிடைக்க உதவி செய்யும்.
காரகன்: சம்பாதித்த பொருளை கிடைக்க உதவி செய்யும்.

1.39 **சந்திராஷ்டமம்**

சந்திரன் இருக்கும் நட்சத்திரத்தை வைத்துத்தான் பிறந்தநாள் கொண்டாடுகிறோம்.
சந்திரன் இருக்கும் நட்சத்திரம் மூலம்தான் திருமணப் பொருத்தம் பார்க்கிறோம்.
சந்திரன் இருக்கும் நட்சத்திரத்தை வைத்துத்தான் ஒருவருக்கு முதல் தசை எது என்று கணிக்கிறோம்.
சந்திரன் இருக்கும் ராசிப்படிதான் கோச்சார பலன்களைப் பார்க்கிறோம்.
சந்திரன் இருக்கும் நட்சத்திரத்தை சொல்லித்தான் கோயிலில் அர்ச்சனை, வழிபாடுகள் செய்கிறோம்.
இத்தகைய முக்கியத்துவம் பெற்ற சந்திரன் மூலம் நமக்கு யோகங்கள், அவயோகங்கள், தடைகள் ஏற்படுகின்றன. அந்த வகையான இடையூறுகளில் ஒவ்வொரு மாதமும் சந்திரனால் ஏற்படும் தோஷங்களில் ‘சந்திராஷ்டமம்’ ஒன்று.

நீங்கள் பிறந்த ராசிக்கு எட்டாமிடமான அஷ்டமஸ்தானத்தில் சந்திரன் வருமானால், அதையே சந்திராஷ்டமம் என்கிறோம். சந்திரன்+அஷ்டமம்= சந்திராஷ்டமம். சந்திரன் உங்கள் ராசிக்கு எட்டாம் இடத்தில் இருக்கும் இரண்டேகால்
நாட்களைத்தான் ‘சந்திராஷ்டம’ காலம் என்கிறோம். அதிலும் குறிப்பாக நீங்கள் பிறந்த நட்சத்திரத்திற்கு 17வது நட்சத்திரத்தில் சந்திரன் சஞ் சாரம் செய்யும் காலம்தான் சந்திராஷ்டமம் ஆகும். பொதுவாக எட்டாம் இடம் என்பது சில தடைகள், மனச்சங்கடங்கள், இடையூறுகள் போன்றவற்றை ஏற்படுத்தும் இடமாகும். மேலும் சந்திரன் எட்டாம் இடத்தில் இருந்து நேர் பார்வையாக தனம், குடும்பம், வாக்குஸ்தானமான இரண்டாம் இடத்தை பார்ப்பதால் அந்த ஸ்தான அமைப்புகளும்

பாதிப்படைகின்றன.

ஆகையால் இந்த சந்திராஷ்டம தினத்தன்று முக்கிய சுபகாரியங்களை செய்ய மாட்டார்கள். மணமகன், மணமகள் ஆகிய இருவருக்கும் சந்திராஷ்டம் இல்லாத நாளில்தான் திருமண முகூர்த்தம் வைப்பார்கள். பால் காய்ச்சுதல், கிரகப் பிரவேசம், வளைகாப்பு போன்ற நிகழ்ச்சிகளுக்கும் சந்திராஷ்டமத்தை தவிர்த்து விடுவார்கள். புதிய முயற்சிகள் செய்ய மாட்டார்கள், புதிய ஒப்பந்தங்களை தவிர்த்து விடுவார்கள். முக்கிய பேச்சுவார்த்தைகளிலும் ஈடுபட மாட்டார்கள். குடும்ப விஷயங்களை யும் பேச மாட்டார்கள். ஏனென்றால் சந்திராஷ்டம தினத்தன்று சந்திரனால் நம் மனதில் சில மாற்றங்கள் உண்டாகின்றன.

எதிர்மறையான எண்ணங்கள் தோன்றுகின்றன ஏனென்றால் சந்திரன் மனோகாரகன், மனதை ஆள்பவன். ஆகையால் நம் எண்ணங்களிலும் கருத்துகளிலும் நிதானமற்ற நிலை உண்டாகும் என ஜோதிட சாஸ்திரம் கூறுகிறது. சந்திரன் ஜெனன ஜாதகத்தில் லக்னத்திற்கு 6, 8, 12 ஆகிய இடங்களில் மறைந்து இருந்தாலும் உச்சம், ஆட்சி, நீச்சம் போன்ற அமைப்புகளில் இருந்தாலும் சந்திராஷ்டமத்தால் கெடு பலன்கள் ஏற்படுவதில்லை என சில ஜோதிட நூல்களில் தெரிவிக்கப்பட்டுள்ளது.
சந்திரன் இருக்கும் இடம் சந்திரன் தினக்கோள் ஆகும்.

வேகமாக சுற்றும் இந்த கிரகம் முப்பது நாட்களில் (ஒரு மாதத்தில்) 12 ராசிகளை கடந்துவிடும். இப்படி கடக்கும்போது தினசரி சந்திரன் இருக்கும் இடத்தை பொறுத்து நம் குணாதிசயங்கள் வேறுபடுகிறது, அதே நேரத்தில் லாப-நஷ்டங்கள், நிறை-குறைகள் ஏற்படுகின்றன. நம் ராசிக்கு சந்திரன் எங்கெங்கு வரும்போது என்னென்ன பலன்கள் ஏற்படும்?
சந்திரன் நாம் பிறந்த ராசியில் இருக்கும்போது: மனம் அலை பாயும், சிந்தனை அதிகரிக்கும். ஞாபக மறதி உண்டாகலாம். இரண்டாம் இடத்தில் இருக்கும்போது: பணவரவுக்கு வாய்ப்புண்டு. பேச்சில் நளினமிருக்கும். கவிஞர்களுக்கு கற்பனை வளம் மிகும்.

மூன்றாம் இடத்தில் இருக்கும்போது: சமயோசிதமாக செயல்படுதல், சகோதர ஆதரவு, அவசிய செலவுகள். நான்காம் இடத்தில் இருக்கும்போது: பயணங்கள், மனமகிழ்ச்சி, உற்சாகம், தாய்வழி ஆதரவு.

ஐந்தாம் இடத்தில் இருக்கும்போது: ஆன்மிக பயணங்கள், தெய்வ பக்தி, நல்ல எண்ணங்கள், தெளிந்த மனம். தாய் மாமன் ஆதரவு.

ஆறாம் இடத்தில் இருக்கும்போது: கோபதாபங்கள், எரிச்சல், டென்ஷன். வீண் விரயங்கள். மறதி, நஷ்டங்கள்.

ஏழாம் இடத்தில் இருக்கும்போது: காதல் நளினங்கள், பயணங்கள், சுற்றுலாக்கள், குதூகலம். பெண்களால் லாபம், மகிழ்ச்சி.

எட்டாம் இடத்தில் இருக்கும்போது: இதைத்தான் சந்திராஷ்டமம் என்று சொல்கிறோம். இந்நாளில் மௌனம் காத்தல் நல்லது. தியானம் மேற்கொள்ளலாம். கோயிலுக்குச் சென்று வரலாம்.

ஒன்பதாம் இடத்தில் இருக்கும்போது: காரிய வெற்றி, சுபசெய்தி, ஆலய தரிசனம்.

பத்தாம் இடத்தில் இருக்கும்போது: பயணங்கள், நிறை-குறைகள், பண வரவு, அலைச்சல், உடல் உபாதைகள்.

பதினொன்றாம் இடத்தில் இருக்கும்போது: தொட்டது துலங்கும், பொருள் சேர்க்கை, மூத்த சகோதரரால் உதவி, மன அமைதி, தரும சிந்தனை.

பன்னிரண்டாம் இடத்தில் இருக்கும்போது: வீண் விரயங்கள், டென்ஷன், மறதி, கைப்பொருள் இழப்பு, உடல் உபாதைகள்.

**17ம் நட்சத்திரத்துக்கு வரும் சந்திரன்**

உங்களுக்குரிய சந்திராஷ்டம நாட்களை எளிதில் அறிந்துகொள்ள உதவும் பட்டியல் கீழே கொடுக்கப்பட்டுள்ளது. உங்கள் நட்சத்திரத்திற்கு 17வது நட்சத்திரத்தில் சந்திரன் வரும் நாளே, சந்திராஷ்டம தினமாகும். உங்கள் பிறந்த நட்சத்திரத்திற்கு சந்திராஷ்டம நட்சத்திரம் தரப்பட்டுள்ளது. அந்தக் குறிப்பிட்ட நட்சத்திர நாளில் நிதானமாகவும் கவனமாகவும் இருப்பது நலம் தரும்.

**பிறந்த நட்சத்திரம் சந்திராஷ்டம நட்சத்திரம்**

அஸ்வினி - அனுஷம்
பரணி - கேட்டை
கிருத்திகை - மூலம்
ரோகிணி - பூராடம்
மிருகசீரிஷம்-உத்திராடம்
திருவாதிரை -திருவோணம்
புனர்பூசம் - அவிட்டம்
பூசம் - சதயம்
ஆயில்யம் - பூரட்டாதி
மகம் - உத்திரட்டாதி
பூரம் - ரேவதி
உத்திரம் - அஸ்வினி
அஸ்தம் - பரணி
சித்திரை - கிருத்திகை
சுவாதி - ரோகிணி

விசாகம்   - மிருகசீரிஷம்
அனுஷம்   - திருவாதிரை
கேட்டை    - புனர்பூசம்
மூலம்      - பூசம்
பூராடம்     - ஆயில்யம்
உத்திராடம்  - மகம்
திருவோணம்- பூரம்
அவிட்டம்   - உத்திரம்
சதயம்      - அஸ்தம்
பூரட்டாதி    - சித்திரை
உத்திரட்டாதி -சுவாதி
ரேவதி      - விசாகம்

1.40 **ஜோதிடத்தில் விதி, மதி, கதி**

விதி என்பது இலக்கினம். மதி என்பது சந்திரன் நிற்கும் ராசி. கதி என்பது சூரியன் நிற்கும் ராசி என்று எடுத்துக்கொள்ளப்படுகிறது. மேலும் இலக்கினம் சந்திரன் சூரியன் இம்மூன்றில் எது வலுவாக இருக்கிறதோ அதை அடிப்படையாக வைத்துத்தான் பலன்கள் நிர்ணயம் செய்யயப்பட வேண்டும் என்று கூறப்படுகிறது.

****************************************************************************************************

எல்லோருடைய ஜாதகத்திலேயும், லக்கினம் , ( ல) , அப்படின்னு போட்டிருப்பாங்க. அதுதான் அந்த ஜாதகருக்கு - முதல் வீடு. எந்த வீட்டில் சந்திரன் இருக்கிறதோ, அது அவரது ராசி.

இன்னைக்கு நடைமுறைலே யாருக்கும் அவங்க லக்கினம் என்ன னு தெரியாது. ராசி ஓரளவுக்கு எல்லாருக்கும் தெரிஞ்சு இருக்கும். லக்கினம் அப்படின்னு பேச்சு எடுத்தாலே, அவருக்கு ஓரளவு ஜாதகம் பத்தி தெரிஞ்சு இருக்கும் னு நம்பலாம்.

எந்த ஒரு ஜாதகருக்கும், அவரது லக்கினம் தான் , முதல் முக்கியமான புள்ளி. லக்கினம் தெரியலை , இல்லை தப்பு னா, மொத்த பலன்களுமே தப்பா தான் போகும். அதைப் பற்றி , நாம் அப்புறமா பார்க்கலாம்.

ராசி அதிபதிகள்

-------------------------

கீழே கொடுக்கப் பட்டுள்ள வீடுகளைப் பாருங்கள்.

மேஷம், விருச்சிகம் - செவ்வாய்க்கு சொந்த வீடுகள்.
ரிஷபம் , துலாம் - அதிபதி - சுக்கிரன்.
மிதுனம், கன்னி - அதிபதி - புதன்
கடகம் - அதிபதி - சந்திரன்
சிம்மம் - அதிபதி - சூரியன்
தனுசு , மீனம் - அதிபதி - குரு
மகரம் , கும்பம் - அதிபதி - சனி

ராகு, கேதுக்கு சொந்த வீடுகள் இல்லை. எந்த கட்டத்தில் இருக்கிறார்களோ , அதுவே அவர்களுக்கு வீடுகள் .

சரி, எதற்கு இந்த சொந்த வீடுகள். நீங்கள் உங்கள் வீட்டில் இருந்தால் என்ன செய்வீர்கள்? நீங்க தானே ராஜா.. முழு பலத்துடன் இந்த கிரகங்கள் - சொந்த வீட்டில் இருக்கும்போது இயங்கும். இந்த வீடுகளுக்கு ஆட்சி வீடுகள் என்று பெயர்.

சாதரணமா ஒரு கிரகத்துக்கு - சக்தி ஒரு மடங்கு னா, ஆட்சி ஸ்தானங்களில் மூன்று மடங்கு சக்தியுடன் இருக்கும்.

அதைப் போல , சில வீடுகள் - அந்த கிரகங்களுக்கு - உச்ச பலம் , நீச பலம் என்றும் இருக்கிறது. உச்ச வீடுகளில் அந்த கிரகங்கள் - ஐந்து மடங்கு பலத்துடன் இருக்கும். நீச வீடுகளில் , பலம் இழந்து பரிதாபமாக இருக்கும்.

இதைப் போல, ஒவ்வொரு இடமும் , ஒவ்வொரு கிரகத்திற்கு , நட்பு, பகை, சமம் என்று மூன்று பண்புகளுடன் இருக்கும். நம்ம வீட்டுக்கு பக்கத்து வீட்டுக்காரங்க கிட்டே , நாம இருப்போம் இல்லே.. ஒருத்தரைப் பிடிக்கும். ஒருத்தரை பிடிக்காது.. அந்த மாதிரி..
அவை எப்படி னு பார்க்க கீழே உள்ள அட்டவணையைப் பாருங்க.

இதை நீங்கள் கண்டிப்பாக , உங்கள் மனதில் நன்றாக பதிய வைத்துக் கொள்ளுங்கள்.

சூரியன் - மேஷத்தில் உச்சம் எனில், அதற்கு நேர் ஏழாம் வீட்டில் நீசம் ஆகும்.
இதைப் போல ஒவ்வொரு கிரகத்திற்கும் பொருந்தும். கீழே பாருங்க.

நல்லா புரியுதுங்களா? இதெல்லாம் அடிப்படை பாடங்கள். இது எல்லாம் உங்களுக்கு எப்பவும் finger tips லெ இருக்கணும். இது பின்னாலே உங்களுக்கு ரொம்ப உபயோகமா இருக்கும்.

| வீடு எண் | ராசி | சூரியன் | சந்திரன் | செவ்வாய் | புதன் | குரு | சுக்கிரன் | சனி | ராகு-கேது |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | மேஷம் | உச்சம் | சமம் | ஆட்சி | சமம் | நட்பு | சமம் | நீசம் | பகை |
| 2 | ரிஷபம் | பகை | உச்சம் | சமம் | நட்பு | பகை | ஆட்சி | நட்பு | நீசம் |
| 3 | மிதுனம் | சமம் | நட்பு | பகை | ஆட்சி | பகை | நட்பு | நட்பு | நட்பு |
| 4 | கடகம் | சமம் | ஆட்சி | நீசம் | பகை | உச்சம் | பகை | பகை | பகை |
| 5 | சிம்மம் | ஆட்சி | நட்பு | நட்பு | நட்பு | நட்பு | பகை | பகை | பகை |
| 6 | கன்னி | சமம் | நட்பு | பகை | ஆட்சி, உச்சம் | நட்பு | நீசம் | நட்பு | நட்பு |
| 7 | துலாம் | நீசம் | சமம் | சமம் | நட்பு | பகை | ஆட்சி | உச்சம் | நட்பு |
| 8 | விருச்சிகம் | நட்பு | நீசம் | ஆட்சி | சமம் | நட்பு | சமம் | பகை | உச்சம் |
| 9 | தனுசு | நட்பு | சமம் | நட்பு | சமம் | ஆட்சி | நட்பு | சமம் | நட்பு |
| 10 | மகரம் | பகை | சமம் | உச்சம் | சமம் | நீசம் | நட்பு | ஆட்சி | நட்பு |
| 11 | கும்பம் | பகை | சமம் | சமம் | சமம் | சமம் | நட்பு | ஆட்சி | பகை |
| 12 | மீனம் | நட்பு | சமம் | நட்பு | நீசம் | ஆட்சி | உச்சம் | சமம் | நட்பு |

எந்த ஒரு ஜாதக கட்டத்திலும் - 12 கட்டங்கள் இருக்கும். இவை 12 வீடுகள் என்பர். 12 ராசிகள்என்று எடுத்துக் கொள்ளுங்கள்.

மேலிருந்து இடதுகைப் பக்கத்திலிருந்து - இரண்டாம் கட்டத்தை பாருங்கள். அதை முதல் வீடு என்று கொள்ளுங்கள். இப்போது கடிகாரச் சுற்றுப்படி 1 , 2 , 3 என்று குறியுங்கள். மொத்தம் 12 வீடுகள் வரும். ஒவ்வொரு வீட்டிற்கும் 30 டிகிரி . மொத்தம் 360 டிகிரி. இதனுடன் ஒரு சுற்று முடியும். ஒரு பாதம் 3,20 டிகிரி ஒருநட்சத்திரம் 13,20டிகிரி.

மொத்தம் 27 நட்சத்திரங்கள் உள்ளன. ஒவ்வொரு நட்சத்திரத்திற்கும் - 4 பாதங்கள் உள்ளன. ஆக மொத்தம் 27 x 4 = 108 நட்சத்திர பாதங்கள் . ஒவ்வொரு வீட்டிற்க்கும் 9 பாதங்கள் என , 108 நட்சத்திரக் கால்கள் - 12 வீட்டில் அமர்ந்திருக்கும்.

முதல் வீடான - மேஷத்தில் - அஸ்வினி ( 4 பாதங்கள் ) , பரணி ( 4 பாதங்கள் ), கார்த்திகை (1 பாதம் மட்டும் ) , ஆக மொத்தம் - 9 பாதங்கள் இருக்கும்.

கார்த்திகை நட்சத்திரத்தில் இருக்கும் , மீதி 3 பாதங்கள் - ரிஷபத்தில் இருக்கும். ரோஹிணி ( 4 பாதங்கள் ) , மிருக சீரிஷத்தில் 2 பாதங்கள் மட்டும் வரும்.
மிருக சீரிஷத்தில் வரும் மீதி 2 பாதங்கள் - அடுத்த ராசியான மிதுனத்தில் வரும். இதைப் போல - மொத்தம் உள்ள 27 நட்சத்திரங்களையும் வகைப் படுத்த வேண்டும்..

ராசிகள் & நட்சத்திரங்கள்

------------ ------------------------

மேஷம் - அசுவினி, பரணி, கார்த்தி கை 1-ஆம் பாதம் முடிய
ரிஷபம் - கார்த்திகை 2-ஆம் பாதம் முதல், ரோகிணி, மிருகசிரிஷம் 2-ஆம் பாதம் முடிய
மிதுனம் - மிருகசிரிஷம் 3-ஆம் பாதம் முதல், திருவாதிரை, புனர்பூசம் 3-ஆம் பாதம் முடிய
கடகம் - புனர்பூசம் 4-ஆம் பாதம், பூசம், ஆயில்யம் முடிய
சிம்மம் - மகம், பூரம் உத்திரம் 1-ஆம் பாதம் முடிய
கன்னி - உத்திரம் 2-ஆம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ஆம் பாதம் முடிய
துலாம் - சித்திரை 3-ஆம் பாதம் முதல், சுவாதி, விசாகம் 3-ஆம் பாதம் முடிய

விருச்சிகம் - விசாகம் 4-ஆம் பாதம் முதல், அனுஷம், கேட்டை முடிய
தனுசு - மூலம், பூராடம், உத்திரம் 1-ஆம் பாதம் முடிய
மகரம் - உத்திராடம் 2-ஆம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ஆம் பாதம் முடிய
கும்பம் - அவிட்டம் 3-ஆம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ஆம் பாதம் முடிய
மீனம் - பூரட்டாதி 4-ஆம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய

எல்லா நட்சத்திரங்களுக்கும் யார் யார் நட்சத்திர நாயகர்கள் னு பார்ப்போம்.

கேது - அஸ்வினி, மகம், மூலம்
சுக்கிரன் - பரணி, பூரம், பூராடம்,
சூரியன் - கார்த்திகை , உத்திரம், உத்திராடம்.
சந்திரன் - ரோகிணி, ஹஸ்தம், திருவோணம்,
செவ்வாய் - மிருக சீரிஷம் , சித்திரை, அவிட்டம்
ராகு - திருவாதிரை, சுவாதி , சதயம்
குரு - புனர்பூசம், விசாகம் , பூரட்டாதி
சனி - பூசம் , அனுஷம் , உத்திரட்டாதி
புதன் - ஆயில்யம் , கேட்டை, ரேவதி

இது எதுக்காக இந்த வரிசைனு கேளுங்க ..?

நீங்க எந்த நட்சத்திரத்திலே பிறந்தாலும் - அந்த நட்சத்திர அதிபரோட தசை தான் - உங்களுக்கு முதல்லெ வரும்... அதன்பிறகு, அடுத்த அதிபர், .. இப்படி வரிசையா வந்து , திரும்ப முதல் தசை கேது, அப்புறம் சுக்கிரன், .. இப்படியே போகும்..

நீங்க பிறந்த நட்சத்திரம் - சித்திரைனு வச்சுக்கோங்களேன் - நீங்க , பிறந்ததும் - முதல்ல வரும் தசை - செவ்வாய் தசை. அதன் பிறகு , ராகு தசை , அப்புறம் - குரு , சனி , புதன் தசை வரும். அதுக்கு அப்புறம் - மேலே போகணும் - கேது தசை , சுக்கிரன், சூரியன்... இப்படியே வரணும்.

ஒவ்வொரு தசையும் எத்தனை வருஷம்னு பார்ப்போம்.

கேது - 7 வருடங்கள்
சுக்கிரன் - 20 வருடங்கள்
சூரியன் - 6 வருடங்கள்
சந்திரன் - 10 வருடங்கள்
செவ்வாய் - 7 வருடங்கள்
ராகு - 18 வருடங்கள்
குரு - 16 வருடங்கள்
சனி - 19 வருடங்கள்
புதன் - 17 வருடங்கள்

ஒரு சுற்று முடிய - 120 வருஷங்கள் ஆகும். So , எல்லாருக்கும் , எல்லா திசையும் வருவது இல்லை. ... உதாரணத்துக்கு , ஒருத்தருக்கு ஜாதகத்திலே சுக்கிரன் - நல்ல நிலை லெ இருக்கும் னு வைச்சுக்குவோம். ஆனா , அவர் பிறந்தது கார்த்திகை நட்சத்திரம் னு வைச்சுக்கோங்களேன். அவரு, கிட்டதட்ட் - நூறு வருஷம் முடிச்ச பிறகு தான், சுக்கிர தசையை பார்க்க முடியும். நல்லா இருந்தும், பிரயோஜனம் இல்லை.

மனுஷன் செஞ்ச பாவ, புண்ணியத்துக்கு ஏற்ப , சரியாய் இந்த தசை நடக்கும். ..எப்படி எல்லாம் "செக்" வைக்கிறாங்க பாருங்க...

ஒவ்வொரு நட்சத்திரத்திற்க்கும் , நான்கு பாதங்கள் இருக்கும். இல்லையா?
உதாரணத்திற்கு பிறந்த நட்சத்திரம் = = = திருவோணம் 3 ஆம் பாதம் னு வைச்சுக்கோங்களேன். அதனாலே, முதல்ல சந்திர தசை வரும் இல்லையா. மொத்த வருஷம் - 10 . கரெக்டா?

So , ஒவ்வொரு பாதத்திற்கும் - 2 1 /2 வருடங்கள் வரும். so , மீதி இருப்பது, ( 3 ஆம் பாதம், 4 ஆம் பாதம் மட்டுமே ) 5 வருஷங்கள் இருக்கும். இதிலே , கர்ப்ப செல் போக கழிவு இருப்பு பார்க்கணும். அதை எப்படி பார்க்கிறது னு, நாம மெதுவா பார்க்கலாம். இப்போவே சொன்னா, ரொம்ப கஷ்டமா பீல் பண்ணுவீங்க.. ஒரு உதாரணத்திற்கு - கர்ப்ப செல் இருப்பு. 6 மாதங்கள் னு எடுத்துக்கலாம்.

அதனாலே , அவர் ஜாதகத்திலே - சந்திர தசை இருப்பு - 4 வரு , 6 மாதங்கள், 0 நாட்கள் அப்படின்னு எழுதி இருப்பாங்க.

இப்போ இன்னொரு விஷயம் ஞாபகம் வைச்சுக்கோங்க. மொத்தம் - 10 வருடம் , சந்திரா தசை வருது இல்லையா. ஒவ்வொரு கிரகத்திற்கும் - புத்தி இருப்பு மாறுபடும்.
மொத்தம் 9 கிரகம் இருக்கு. இல்லையா..

சந்திர தசை , வந்ததுனா - முதல்லே - சந்திர புத்தி வரும் (10 மாதங்கள் ) . அப்புறம் செவ்வாய் புத்தி( 7 மாதங்கள் ) , அப்புறம் ராகு புத்தி (18 மாதங்கள்) . ... மொத்தமா எல்லாம் கூட்டினா 10 வருடங்கள் வரும்.

புத்தி இருப்பு எப்படி பார்க்கணும் னு ஒரு பார்முலா இருக்கு.
புத்தி
( B x C / A ) = வருடங்கள்

மொத்த தசை இருப்பு : (A ) - 120 வருடங்கள்
தசா கிரகத்தோட மொத்த வருடங்கள் : (B)
புத்தி பார்க்க வேண்டிய கிரகத்தோட இயல்பான தசை வருடங்கள் : (C )

---

சனி தசை - கேது புத்தி எவ்வளவு னு பார்க்கலாம்.? ( சிறிய டெஸ்ட் ..)

சனி தசை மொத்தம் எவ்வளவு - 19 வருஷம். B = 19 ;
கேது வோட இயல்பான தசை = 7 வருஷம் ; C = 7

( 19 * 7 / 120 ) = 1 .108333 வருதா...? அதை அப்படியே , மாதம் நாளா மாத்திக்கோங்க.
நீங்க இதை 360 ஆலே பெருக்கிக்கோங்க. = 399 வருதா. 13 மாதம் , 9 நாள் வரும்.

(ஜோதிடப்படி, கணக்கு பண்ண ஈஸியா , 1 வரு = 360 நாட்கள் ; 1 மாதம் - 30 நாட்கள் னு எடுத்துக்கோங்க.. )

பிறக்கும் போது , எந்த தசை , எந்த புத்தி இருப்பு னு தெளிவா எழுதி இருப்பாங்க..
அந்த டிடைல் தெளிவா இருந்தாத் தான், உங்களுக்கு இப்போ நடப்பு தசை , புக்தி என்னனு தெளிவா கண்டு பிடிக்க இயலும். .... அது கண்டு பிடிச்சாத்தான் , உங்களுக்கு என்ன பலன்கள் இப்போ ஏற்படும் னு கண்டு பிடிக்க இயலும்.....

நவகிரகங்களில் - சுப கிரகங்கள் , பாவ கிரகங்கள் என்று இரண்டு வகை உள்ளனர்.

* குரு, சுக்கிரன், புதன் , சந்திரன் - சுப கிரகங்கள்

* சூரியன், செவ்வாய், சனி, ராகு, கேது - அசுப கிரகங்கள்.

சந்திரனைப் பொறுத்தவரை - வளர் பிறை சந்திரன் மட்டுமே , முழு சுபர் ஆவார். தேய் பிறையில் இருந்தால் , அவர் அவ்வளவு நல்ல பலன்களை தருவது இல்லை.

சரி, இப்போது இன்னொரு விஷயமும் தெரிந்து கொள்ளுங்கள். மேல சொன்னது பொதுவான விதி. செவ்வாய் , சனி எல்லாம் பாவ கிரகங்கள் தான். அதுவே உங்களுக்கு அவர்கள் இலக்கின அதிபதிகளாய் இருந்தால் , என்ன செய்வது..? உயிர் கொடுப்பவர்கள் ஆயிற்றே. அவர்களுக்கு நல்லது தான். ஆனால் இந்த தீய கிரகங்களின் பார்வை படும் இடங்கள், நல்ல பலன்களை தராது..

---

வளர் பிறை சந்திரன் , தேய் பிறை சந்திரன் என்று - ஒருவர் ஜாதகத்தைப் பார்த்தாலே தெரிந்து கொள்ள முடியும்.. எப்படி?

மொத்தம் இருப்பது - 12 ராசிகள். நம் தமிழ் மாதங்களும் - 12 . எதாவது லிங்க் இருப்பது போல தெரிகிறதா? எஸ்.. யு ஆர் ரைட் .
சித்திரை மாதம் பொறந்தாலே - சூரியன் , மேஷம் ராசிக்குள்ளே வர்றார் னு அர்த்தம். வைகாசி லெ - ரிஷபம். ஆனி யில் - மிதுனம் ... இப்படியே ... பங்குனி - மாதத்தில் , மீனம் ராசியில் சூரியன் இருப்பார்.

ஜாதகத்தில், சூரியன் இருக்கிற ராசி இலிருந்து 1 முதல் ஏழு இடங்களில் இருந்தால் வளர்பிறை. ... எட்டில் இருந்து - 12 வரை - தேய் பிறை.. இப்போ இன்னொரு விஷயம் பிடிபடணுமே...!! அதே தான்... சூரியனுக்கு 1 ஆம் இடத்தில் - அதாவது சூரியனும், சந்திரனும் - சேர்ந்து ஒரே வீட்டில் இருந்தால் , அவர் அமாவாசையிலோ , அமாவாசையை ஒட்டியோ பிறந்து இருப்பார். அதே போல - சூரியனுக்கு நேர் எதிரில் - ஏழாம் வீட்டில் இருந்தால் - பௌர்ணமியை ஒட்டி பிறந்து இருப்பார்.

சித்திரை மாசம் - சூரியன் மேஷத்திலே ; அதுக்கு ஏழாம் வீடு என்ன..? துலாம் - அங்கே சந்திரன் சித்திரை நட்சத்திரத் தில் இருக்கும்போது , பௌர்ணமி யா இருக்கும்.

நம்ம மனசிலே பதிஞ்ச சில நாட்களைப் பாருங்க :
வைகாசி - விசாகம் ; ஆவணி - அவிட்டம் ; திருக் கார்த்திகை ; மார்கழி - திருவாதிரை ; தைப் பூசம் ; மாசி -மகம் ..... இது எல்லாமே பௌர்ணமி தினங்கள். இந்த தினங்களில் சந்திரனும், சூரியனும் - ஒன்றை யொன்று நேர் எதிர் நோக்கி தழுவிக் கொண்டு இருப்பார்கள்.

ஒவ்வொரு கிரகமும் - ஒவ்வொரு வீட்டில் எத்தனை நாட்கள் இருக்கும் - ? எப்படி கணக்கு பார்க்கிறது..? கீழே உள்ள அட்டவணையைப் பாருங்க..

சூரியன் - ஒரு மாதம் - ஒரு ராசி னு பார்த்தோம்.. மொத்தம் 12 வீட்டுக்கும் , ஒரு வருடம் ஆகுது. கீழே பூமி னு போட்டு இருக்கோம் பாருங்க...
அதை பன்னி ரெண்டாலே வகுத்தால் - ஒரு வீட்டுக்கு வரும்..
சந்திரன் - ஒரு நாளைக்கு ஒரு நட்சத்திரம் - so , இரெண்டே கால் நாளிலிருந்து - மூன்று நாள்கள் - ஒரு ராசிக்கு.
புதன் -( 88 / 12 ) - சுமார் 7 நாள்கள் / ஒரு ராசிக்கு
செவ்வாய் - (687 /12 ) - சுமார் 57 நாட்கள்
குரு - ஒரு ராசிக்கு சுமார் - ஒரு வருடம்
சுக்கிரன் - சுமார் - 20 நாட்கள்
சனி - ராசிக்கு - சுமார் இரண்டரை வருடங்கள்
ராகு - கேது - சுமார் - ஒன்றரை வருடங்கள்..

வக்கிரம் (வ)

------------------------
ஜாதகம் பார்க்கிறப்போ , சில கிரகங்களுக்கு (வ) அப்படின்னு போட்டு இருப்பாங்க. அப்படினா வக்கிரம் னு அர்த்தம். அதாவது முன்னாலேயே போக வேண்டிய கிரகம் , கொஞ்சம் பின்னாலே சுத்த ஆரம்பிக்குதுன்னு பொருள். பலன் அளிக்கும்
சூரியனுக்கு 6 , 7 , 8 ஆம் இடங்களில் வரும்போது - கிரகங்கள் (பொதுவா) வக்கிரம் அடையும். ராகு, கேது, சந்திரன் தவிர எல்லா கிரகங்களும் - வக்கிரம் அடையும்.

அதிசாரம் னு ஒன்னு இருக்கு. வக்கிரத்துக்கு நேர் எதிர். அதாவது ஒரு இடத்திலே நிக்க வேண்டிய கிரகம் , இன்னும் ஸ்டெப் தாண்டி முன்னாலே போகிறது. போன தடவை , கும்பத்திலே நிற்க வேண்டிய குரு - மீனத்துக்கு அதி சாரம் ஆனார். திரும்ப கும்பத்துக்கு - சிறிது நாட்கள் வக்கிரமானார். ... அப்போ சூரியனுக்கு 6 ,7 ,8 இடங்களில் இருந்திருப்பார்.

எந்த ஒரு ஜாதகத்திலும் வக்கிரமடைந்த கிரகங்கள் முக்கித்துவம் பெறுகின்றன. அவை நேர் சஞ்சாரத்தில் இருப்பதை விட வக்கிர கதியில் பலம் பெற்று விளங்குகின்றன. அந்த பலம் என்பது அபரிமிதமான சுப பலன்களைக் கொடுப்பதாகவும் இருக்கலாம், பாப பலன்களைக் கொடுப்பதாகவும் இருக்கலாம்.

இன்னொன்று, எந்தவொரு கிரகமும் தான் நேர் சஞ்சாரத்தில் கொடுக்கும் பலன்களுக்கு மாறான பலன்களை வக்கிர கதியில் இருக்கும் போது கொடுக்கும். இதன் மூலம் சுபர் அவருடைய இயல்பை மாற்றி பாப பலன்கள் கொடுப்பார்கள் என்றோ அல்லது பாபர் சுப பலன்களைக் கொடுப்பார்கள் என்றோ அர்த்தமாகாது. சுபர் சுபராகவேதான் இருப்பார். பாபர் பாபராகவேதான் இருப்பார். ஆனால் அவர்கள் கொடுக்கக் கூடிய காரகத்துவ பலன்களில் மாறுதல் ஏற்படும்.

உதாரணமாக, ஒருவர் ஜாதகத்தில் வித்யாகாரகன் புதன் 7 அல்லது 8 சுய பரல்களுடன் சுபர் பார்வை/சேர்க்கை பெற்று வக்கிரமடைந்தால் புதன் அந்த ஜாதகருக்கு அதீத புத்திசாலித்தனத்தைக் கொடுப்பார். அந்த புத்தியை அவர் நல்ல காரியங்களுக்குப் பயன்படுத்துவார். இந்த நிலையில் புதன் பாப கிரக சேர்க்கை பெற்றால் அதீத புத்திசாலித்தனம் இருக்கும். ஆனால் அவர் அதை தீய காரியங்களுக்கு பயன்படுத்துவார்.

அதே நேரத்தில் 3 (சுய) பரல்களுக்கும் குறைவாக இருந்து வக்கிரமடைந்தால் மக்காகவோ, சலன புத்திக்காரராகவோ, குழப்பமான சிந்தனை உடையவராகவோ இருப்பார். பரல்களில் நிலை மேலே சொல்லப்பட்ட எதுவாக இருந்தாலும் அதனுடைய பலன் unusual என்போமே, அந்த நிலையில்தான் இருக்கும்.

புதன் ஜாதகத்தில் வக்கிரமடைந்தவர்களில் வேறு வகையினரும் இருக்கிறார்கள். அவர்கள் வித்தியாசமாக சிந்திக்கக் கூடியவர்களாக இருப்பார்கள். நல்ல சிந்தனைகள் மனதில் தோன்றும். ஆனால் அதை சரியான முறையில் எப்படி வெளிப்படுத்துவது என்பது தெரியாது. இடம், பொருள், ஏவல் அறிந்து பேச வேண்டும் என்ற எண்ணம் தோன்றாது அல்லது அப்படி பேசத் தெரியாது. தன்னை அதிபுத்திசாலி என்று நினைத்துக் கொள்வார்கள். தன் பேச்சாலேயே தனக்குத் தானே வீண் பிரச்சினைகளைத் தேடிக் கொள்பவர்களாக இருப்பார்கள். மற்ற கிரக நிலைகளைப் பொருத்து அதிகம் பேசக் கூடியவர்களாக இருப்பார்கள். அல்லது வாயைத் திறந்து பேசவே அஞ்சுபவர்களாக இருப்பார்கள்.

ஜோதிடம் பார்க்கிற எல்லோரும், பஞ்சாங்கம் ஒன்னு வச்சு இருப்பாங்க.. இல்லையா? பஞ்சாங்கம்னா என்ன? பஞ்சாங்கம்னா ஐந்து அங்கங்கள்னு அர்த்தம்.

அந்த ஐந்து அங்கங்கள்:

1. வாரம் / நாள்
2. திதி
3. நட்சத்திரம்
4. யோகம்
5. கரணம்

ஞாயிற்றுக்கிழமை முதல் சனிக்கிழமை வரை உள்ள ஏழு நாட்கள்தான் வாரம்.

--------------------------------------------------------------------------------------------

திதி என்பது வளர்பிறைப் பிரதமை முதல் பௌர்ணமி
வரை உள்ள பதினைந்து நாட்களும், தேய்பிறைப்
பிரதமை முதல் அமாவாசை வரை உள்ள பதினைந்து
நாட்களும், அதாவது அந்த முப்பது நாட்களும் திதியாகும்
திதியில் இருந்து பிறந்ததுதான் தேதி

வானவெளியில் சூரியனுக்கும், சந்திரனுக்கும் உள்ள தூரத்தைச் சொல்வதுதான் திதி

விரதங்கள் இருப்பவர்கள், இறைவனுக்கு அபிஷேகம் செய்பவர்கள் இந்தத் திதி பார்த்துத்தான் செய்வார்கள்

அதேபோல் புதுக் கணக்குப் போடுபவர்கள் அதிகம் விரும்புவது தசமித் திதி

3. திருமணம், இடம் வாங்குவது போனற சுப காரியங்களைச் செய்பவர்கள் அஷ்டமி, நவமி திதியில் செய்வதில்லை.

4. ஒரு மனிதனின் மரணத்தை திதியை வைத்துதான் குறிப்பிடுவார்கள். ஒருவன் ஐப்பசி மாதம் வளர்பிறை நவமி திதியில் காலமானால், ஒரு ஆண்டு கழித்து அல்லது வருடா வருடம் அவனது சந்ததியினர்அதே ஐப்பசி மாதம் வளர்பிறை நவமி திதியில் தான் அவனுக்கு நினைவுச் சடங்குகளைச் செய்வார்கள்.கிராமங்களில் தங்கள் வீட்டில் படையல் போடுவார்கள். இதுபோன்று இன்னும் பல பழக்கங்கள் இந்தத் திதியை வைத்துப் பல சமூகங்களில் பலவிதமாக உள்ளது.

-----------------------------------------------------------------------------------------------

நட்சத்திரம் என்பது அஸ்வினி முதல் ரேவதி வரையுள்ள 27 நட்சத்திரங்கள். பூமியை சுற்றி சந்திரன் செல்லும் பாதையில் எந்த நட்சத்திரம் உள்ளதோ அதுதான் அன்றைய ந்ட்சத்திரம். 27 நாட்களில் சந்திரன் வானவெளியில் ஒரு சுற்றை முடித்துவிட்டு அடுத்த சுற்றை அரம்பித்துவிடும்

தினசரி ஒரு நட்சத்திரம் என்பதால் ஒவ்வொரு நாளும் சந்திரனை வைத்துப் பிறந்த நட்சத்திரம் மாறும், அதேபோல 2.25 நாட்களுக்கு ஒருமுறை பிறந்த ராசியும் மாறும்.
மொத்தம் இருக்கிற 27 நட்சத்திரங்களைப் பற்றி நாம் ஏற்கனவே பார்த்து இருக்கிறோம்.. இல்லையா?

-----------------------------------------------------------------------------------------------

கரணம் - என்பது திதியில் பாதி தூரத்தைக் குறிக்கும்.
கரணங்கள் மொத்தம் 11-ஆகும். அவையாவன:1. பவ, 2. பாலவ, 3. கெலவ, 4. தைதூலை, 5. கரசை, 6. வணிசை, 7. பத்தரை, 8. சகுனி, 9. சதுஷ்பாதம், 10. நாகவம், 11. கிம்ஸ்துக்னம்.

-----------------------------------------------------------------------------------------------

வானவெளியில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் இருந்து சூரியனும், சந்திரனும் செல்கிற மொத்த தூரத்தைக் குறிப்பது யோகம்.

நல்ல நாளா , இல்லையா? னு ஜோசியரைப் பார்த்து நாள் குறிக்கிறப்போ, இதை எல்லாம் பார்த்துத் தாங்க சொல்லணும்.

யார் வர்றாங்களோ, அவருக்கு லக்கினத்தில் இருந்து 9 ஆம் வீட்டுக்கு அதிபதி யாரோ, அவருக்கு உரிய கிழமை தேர்ந்து எடுத்து , நல்ல நேரம் பார்த்து சொன்னா, சிறப்பா இருக்கும்.

சில நாட்களை காலண்டரில் பார்த்தாலே போட்டு இருப்பார்கள் - சித்த யோகம், மரண யோகம், அமிர்த யோகம் என்று...

-----------------------------------------------------------------------------------------------

சில கிழமைகளுடன் சில நட்சத்திரங்கள் சேரும்போது, அது ஒவ்வாத நாளாகிவிடும்.

ஞாயிறு: அவிட்டம், கார்த்திகை
திங்கள் : அஸ்விணி, உத்திராடம்
செவ்வாய்: பூரட்டாதி, ரோகிணி, விசாகம், திருவாதிரை
புதன் கிழமை: ஹஸ்தம்
வியாழக்கிழமை: கார்த்திகை, திருவாதிரை, உத்திரம், சதயம், அனுஷம்
வெள்ளிக்கிழமை: ரோகிணி , ஆயில்யம், மகம்,திருவோணம்,
சனிக்கிழமை: ஆயில்யம், பூரட்டாதி, சித்திரை, உத்திரம்

மேற்கண்ட கிழமைகளில், குறிப்பிட்டுள்ள இந்த நட்சத்திரங்கள் சேர்ந்துவந்தால் அன்று மரணயோகம். மரணயோகத்தன்று சுப காரியங்களைச் செய்ய மாட்டார்கள்.
அன்று செய்யும் முக்கியமான செயல்கள் விருத்தி அடையாது.

உதாரணத்திற்கு, மரணயோகத்தன்று நீங்கள் ஒரு இடத்தை வாங்குகிறீர்கள் என்று வைத்துக்கொள்ளுங்கள். நிலம் உங்களிடம் தங்காது. கையை விட்டுப் போய்விடும். அல்லது சிக்கல் மிகுந்த இடமாகி உங்கள் பணம் மாட்டிக் கொண்டுவிடும். மரண யோகத்தன்று ஒருவர் புதிதாக ஒரு வியாபாரத்தைத் தொடங்கினால், அது அபிவிருத்தியாகாது. வியாபாரம் செழிப்படையாது. அன்றையத் தேதியில், திருமணம் செய்து கொண்டால், மண வாழ்க்கை கசப்பில் முடிந்துவிடும். பிரிவில் முடிந்துவிடலாம்.
பணி மாற்றத்தில் வேறு ஒரு ஊருக்குச் செல்கிறீர்கள். சென்று அங்கு பணியில் சேரும் நாள், மரண

யோக நாளாக இருந்தால், அங்கே நீங்கள் பல பிரச்சினை களைச் சந்திக்க நேரிடும். மரணயோகத்தன்று யாருக்கும் கடன் கொடுக்காதீர்கள். கொடுத்தால் அது வராக் கடனாகிவிடும். ( நம்ம ஏங்க சார் கடன் கொடுக்கிற நிலைமை லெ இருக்கோம் னு கேக்கிறீங்களா ? ஒன்னு பண்ணலாம்.. ... நீங்க வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுப்பதற்கு அந்த நாளைப் பயன்படுத்தலாம். கடன் தீர்ந்துவிடும். அந்த நபரிடமோ, அல்லது அந்த வங்கியிலோ மீண்டும் கடன் ஏற்படாது.. ட்ரை பண்ணித்தான் பாருங்களேன்.. .)

இதுபோல முடிவிற்குக் கொண்டுவர , கழட்டி விட வேண்டும் என்று நினைக்கும் செயல்களை, அன்று செய்யலாம்.

இதற்கு எதிரிடையாக , சில கிழமைகளுடன் சில நட்சத்திரங்கள் சேரும்போது, அது அமிர்தயோக நாளாகிவிடும்.

ஞாயிறு: உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி, திருவோணம், பூசம், மூலம்
திங்கள் : சுவாதி, புனர்பூசம்,ரோகிணி, மிருகசீரிடம்
செவ்வாய்: உத்திரம், மூலம்
புதன் : உத்திராடம், பூரம், பூராடம், பூரட்டாதி, உத்திரம்
வியாழன் : சுவாதி, மூலம்
வெள்ளி : அஸ்விணி, பூசம், ஹஸ்தம், மூலம்
சனி: மகம், சதயம், கார்த்திகை, சுவாதி

அமிர்தயோகத்தன்று சுப காரியங்களைச் செய்யலாம். நமக்குச் சாதகமான விளைவுகளை ஏற்படுத்தக்கூடிய பணிகளைச் செய்யலாம். சுருக்கமாகச் சொன்னால், மரண யோக தினங்களில் எது எதைச் செய்யக்கூடாது என்று சொன்னேனோ, அதையெல்லாம் இந்த நாட்களில் செய்யலாம்......

மேல சொன்ன ரெண்டும் முக்கியமான யோகங்கள்.முக்கியமா மனசிலே ஞாபகம் இருக்கட்டும். மற்றது , இல்லேன்னா கூட பரவா இல்லை.

சுபா சுப யோகம்; சித்த யோகமும் அமிர்த யோகமும் சுபகருமங்களுக்கு உரிய சுப யோகங்களாகும்.

மரண யோகம், நாச யோகம், உற்பாத யோகம், பிரபலா நிஷ்ட யோகம், திரிபுஷ்கர யோகம் எனபன சுப கருமங்களுக்கு விலக்கப்படும் அசுப யோகங்களாகும்.

## நவ கிரகங்கள் - காரகத்துவம்

---

### 1 . சூரியன்

-------------------

உலகில் அசையும் பொருட்கள், அசையாப் பொருட்கள் ஆகிய எல்லாவற்றுக்குமே ஆத்மாவாக விளங்குவது சூரியனே . சூரியனே நவக்கிரகங்களுள் முதன்மையாகும்.

ஒருவனாக எப்போதும் சஞ்சரிப்பவன் யார் என்று மகாபாரதத்தில் யட்ச பிரச்னத்தில் கேள்வி எழுகிறது. அவன் சூரியனே என்றும் விடை கிடைக்கிறது.

ஒற்றைச் சக்கரம் கொண்ட தேரில் வேதத்தின் ஏழு சந்தங்களை ஏழு குதிரைகளாகக் கொண்டு பூட்டி பவனி வருகிறான் சூரியன்.

ஜோதிடப்படி சூரியனே பிதுர் காரகன். சுய நிலை, சுய உணர்வு, செல்வாக்கு, கௌரவம், அந்தஸ்து, வீரம், பராக்ரமம், சரீர சுகம், நன்னடத்தை ஆகியவற்றிற்குக் காரகத்துவம் சூரியனுக்கே உண்டு. கண், ஒளி, உஷ்ணம், அரசு, ஆதரவு இவற்றின் அதிபதியும் சூரியனே!

கிழக்குத் திசை சூரியனுக்கு உரியது. சூரியனின் அருளால் வடமொழி அறிவு ஏற்படும். உஷா தேவி, சாயா தேவி ஆகிய இரு தேவிகளுடன் சூரியனார் கோவிலில் சூரியன் விளங்குகிறார். அக்னி

இவருக்கு அதி தேவதை. ருத்ரன் இவருக்கு பிரத்யதி தேவதை. மாணிக்கம் உகந்த ரத்தினம். ஏழு குதிரைகள் பூட்டிய ரதமே சூரியனின் வாகனம்!

2. சந்திரன்

------------------

'சந்த்ரமா மனஸோ ஜா' என்று புருஷ சூக்தம் போற்றும் சந்திரனே மனதிற்கு அதிபதி. இவனே உடலுக்கு காரகன். சரீர பலம், மனோ பலம் இரண்டுமே உலக வாழ்க்கையின் வெற்றிக்கு மூல பலம் ஆகும்.

ஜனன லக்னத்தின்படி நல்ல பலன்களை ஒரு ஜாதகத்தில் காண முடியவில்லை எனில், சந்திரனை லக்னமாகக் கொண்டு பலன்களைச் சொல்ல வேண்டும் என்று விதி இருக்கிறது. இதையே 'விதி கெட்டால் மதியைப் பாரு' ; விதியை மதியால் வெல்லலாம் என்ற பழமொழி உணர்த்துகிறுது!

ஜோதிடப்படி மாத்ரு காரகன் சந்திரன். கடற்பயணம், ரசனை, அறிவு, ஆனந்தம், புகழ், அழகு, நடு நிலைமை, சுக போகம் இவற்றிற்கு காரகன் சந்திரனே! முகூர்த்தங்களை நிச்சயம் செய்வது, ஜாதக தசா இருப்பு, திருமணப் பொருத்தம் ஆகிய முக்கியமானவை அனைத்துமே சந்திரனை அடிப்படையாகக் கொண்டே நிர்ணயிக்கப்படுகின்றன.

தென் கிழக்குத் திசை சந்திரனுக்குரியது. உகந்த நிறம் வெள்ளை. சந்திரனுக்கு உரிய தலம் திங்களூர்.

விஷ்ணுவின் அம்சமான சந்திரனின் நற்பலன்களைப் பெற பௌர்ணமியன்று திருப்பதி சென்று தரிசனம் செய்து தங்கி வழிபடுவது நலம் பயக்கும்.

மூலிகைக்கு அதிபதி சந்திரன். செல்வத்தை தருபவன் என யஜுர் வேதம் சந்திரனைப் புகழ்கிறது. சந்திரன் நிற்கும் வீட்டை ராசி வீடாகக் கொண்டு இதன் முன் பின் வீடுகளை சனி கடக்கும் போது ஏற்படும் ஏழரை ஆண்டுகள் 'ஏழரை நாட்டுச் சனி' என்று கூறப்படுகிறது.

முத்து சந்திரனுக்கு உகந்த ரத்தினம். வெள்ளைக்குதிரை சந்திரனின் வாகனம்!

3. செவ்வாய்

---------------------

அங்காரகன், குஜன், மங்களன், பௌமன், உக்கிரன் என்று பல பெயர்களால் அழைக்கப்படும் செவ்வாய் நவக்கிரகங்களுள் மூன்றாவது இடத்தைப் பெறுபவன்.

சகோதர காரகன் இவனே. ரத்தத்திற்கு காரகன் செவ்வாய். உடல் உறுதி, மன உறுதி தருபவன் செவ்வாய். உஷ்ணம், கோபம், எரிபொருள் ஆகியவற்றிற்கு உரியவன் செவ்வாய்.

கண்டிப்பதும் இவனே, தண்டிப்பதும் இவனே. மாபெரும் போர் வீரர்களை வழி நடுத்துபவன். பெரும் விளையாட்டு வீரர்களுக்கு அருள்பாலிப்பவன். செந்நிறத்தோல் அழகன், கடும் பார்வை உடையவன், பொறுமை அற்றவன். தெற்கு திசை செவ்வாய்க்கு உரியது.

வழிபடுவோரின் விருப்பத்தை பூர்த்தி செய்பவன் இவன். தேசத்தை வழி நடத்தும் தலைவர்கள், படை தளகர்த்தர்கள், தீ போல சுட்டெரித்து தூய்மையை விரும்புவோர் ஆகியோரின்
நாயகன் செவ்வாய். பவளமே செவ்வாய்க்கு உகந்த ரத்தினம். ஆட்டுக்கிடா செவ்வாயின் வாகனம்.

4. புதன்

--------------

வித்யா காரகன் புதன். கணிதம், லாஜிக், வைத்தியம், ஜோதிடம் ஆகிய அனைத்திற்கும் நாயகன் புதனே. நாடகம், நடனம், புத்தக பிரசுரம் ஆகியவற்றிற்கு புதனின் பலமே வேண்டும். உடலில் நரம்பு இவன். நரம்பு மண்டலத்தின் ஆதாரமும் இவனே.

வடகிழக்கு புதனுக்கு உரிய திசை. புதன் ஜாதகத்தில் வலுப்பெற்றிருந்தால் ஜோதிடக்கலை சித்திக்கும். புதனால் பிரதிஷ்டை செய்யப்பட்ட லிங்கம் காசியில் உள்ளது. திருவெண்காடு புதனுக்குரிய தலம்.

விஷ்ணு இவருக்கு அதி தேவதை. நாராயணன் பிரத்யதி தேவதை. மரகதம் புதனுக்கு உகந்த ரத்தினம்.

5. குரு

------------

பிரஹஸ்பதி, வியாழன், பீதாம்பர், பொன்னன் ஆகிய பெயர்களால் அழைக்கப்படும் வியாழன் தெய்வீக அறிவுக்கும், ஞானத்திற்கும் அதிபதி ஆவார்.

குரு பார்த்தால் கோடி நன்மை என்ற பழமொழி ஒன்றே குருவின் பெருமையை விளக்கப் போதுமானது. தலைமை தாங்குவது குரு பலத்தால் ஏற்படும். அந்தணர், பசுக்களுக்கு அதிபதி. குரு மஞ்சள் நிறத்தோன். சாத்வீகன். உடலில் சதை இவர். புத்திர காரகன், தன காரகன் இவரே. திருமணம் ஒருவருக்கு செய்ய குரு பலம் , குரு பார்வை அவசியம்.
ஒருவர் நல்லவரா ? கெட்டவரா? என்று குருவின் நிலையை வைத்து கூறிட முடியும்.

வடக்குத் திசை குருவிற்கு உரியது. குருவிற்கு உரிய தலம் ஆலங்குடி. பிரம்மன் இவருக்கு அதி தேவதை. இந்திரன் பிரத்யதி தேவதை. புஷ்பராகம் குருவிற்கு உகந்த ரத்தினம்.

6. சுக்கிரன்

-------------------

அறுபத்தி நான்கு கலைகளுக்கும் அதிபதி சுக்ரன். காதல், சுக போகம் இவற்றிற்கு அதிபதி சுக்ரனே. ஜோதிடப்படி களத்திரகாரகள் சுக்கிரன். இவனே வாகனங்களுக்கும் அதிபதி. ஜனன உறுப்புகளைக் காப்பவன் இவனே. சிற்றின்பத்தை நுகர வைப்பவனும் இவனே. உடலில் வீரயம் இவன். அணிமணி, ஆபரணம் சுக்கிரன் அருள் இருந்தாலே சேரும்.

கிழக்குத் திசை சுக்ரனுக்கு உரிய திசை. இந்திராணி இவருக்கு அதி தேவதை. இந்திர மருத்துவன் பிரத்யதி தேவதை. வைரம் சுக்ரனுக்கு உகந்த ரத்தினம். கருடனே சுக்கிரனின் வாகனம்.

7. சனி

-------------

சூரியனுக்கும் சாயாதேவிக்கும் பிறந்த சூரிய குமரனே சனி. யமனின் தமயன் இவன். நீண்ட ஆயுளுக்கும், மரணத்திற்கும் அதிபதி சனியே. சனி ஜாதகத்தில் அசுபனாக இருந்தால் ஒருவன் எல்லாவித துன்பங்களையும் அனுபவிக்க நேரிடும்.

சனி நல்ல பலம் பெற்றிருந்தால் சர்வ நலன்களையும் அடைய வாய்ப்பு உண்டு. ஏழரை நாட்டு சனி என்றழைக்கப்படும் எழரை ஆண்டுகளில் இவனைத் துதித்து வழிபட்டால் நலம் பெறலாம்.

எண்ணெய், கறுப்பு தானியங்களுக்கு சனியே அதிபதி. கருமை இவனுக்கு உகந்த நிறம்.

இயந்திரம் சம்பந்தபட்ட அனைத்திற்கும் ஆதிபத்யம் சனிக்கே உண்டு. உடலில் நரம்பு இவன். தாமச குணத்தோன். ஒற்றைக் கால் சற்று குட்டையாக இருப்பதால் மந்த நடையை உடையவன். ஆகவே மந்தன் என்றும் அழைக்கப்படுவான்.

மேற்குத்திசை சனிக்கு உரியது. திருநள்ளாறு சனிக்கு உரிய தலம். சனிக்கு அதி தேவதை யமன். பிரத்யதி தேவதை பிரஜாபதி. நீலம் இவருக்கு உகந்த ரத்தினம். காகமே சனியின் வாகனம்.

8. ராகு

------------

சாயா கிரகம் என்று அழைக்கப்படும் ராகு, பாற்கடல் கடையப்பட்டு அமுதம் எடுத்து அமரர்களுக்கு படைக்கப்பட்டபோது தேவனாக உருமாறி சூரியனுக்கும் மதியவனுக்கும் இடையே அமர்ந்து அமுதம் உண்ண ஆரம்பித்தான். மோகினி உருவில் அமுதம் பரிமாறி வந்த திருமாலிடம் சூரியனும் மதியவனும் ராகுவைக் காட்டிக் கொடுக்கவே தன் சக்கரம் கொண்டு ராகுவின் தலையை சீவினார் திருமால். அமுதம் உண்டதால் சாகாத் தன்மையைப் பெற்ற ராகு உடல் வேறு தலை வேறாகி விழுந்தான். பாம்பின் உடலைப் பெற்று விஷ்ணுவின் அருள் வேண்டி தவம் இயற்றி கிரக நிலையை அடைந்தான்.

அரசாங்கத்தில் பதவி, புகழ் இவற்றைப் பெற ராகுவின் அருள் வேண்டும். ஜாதகத்தில் ராகு பலம் பொருந்தி இருந்தால் நல்ல முன்னேற்றம் ஏற்படும். ஸ்பெகுலேஷன், சூதாட்டம் என்ற

இவற்றிற்கெல்லாம் அதிபதி ராகுவே. மிலேச்சருக்கு அதிபதி. கலப்பு இனத்திற்கு வழி வகுப்பவன். வெளிநாட்டுக் கலப்புக்கு அதிபதி.

தென்மேற்கு திசைக்கு அதிபதி ராகு. திருநாகேஸ்வரம் ராகுவிற்கு உரிய தலம். பசு ராகுவின் அதி தேவதை, பாம்பு பிரத்யதி தேவதை. கோமேதகம் ராகுவிற்கு உரிய ரத்தினம்.

9. கேது

--------------

ஞான காரகன் என்ற புகழைப் பெறுபவன் கேது. மோட்ச காரகனும் இவனே. மோகினியால் துண்டிக்கப்பட்ட ராகுவின் உடம்பே கேது. விஷ்ணுவை நோக்கித் தவம் இருந்ததால் பாம்பு உடலைப் பெற்றான்.

விஞ்ஞானம், மெய்ஞானம் ஆகிய அனைத்துத் துறைகளையும் தன் வசத்தில் வைத்திருப்பவன். நீச பாஷைகளில் தேர்ச்சியைத் தருவான். தாய் வழிப் பாட்டனுக்கு காரகன். கீழ்ப்பெரும்பள்ளம் கேதுவிற்கு உரிய தலம்.

சித்திரகுப்தன் இவருக்கு அதி தேவதை, பிரம்மன் பிரத்யதி தேவதை. வடமேற்கு கேதுவிற்கு உரிய திசை. வைடூர்யம் கேதுவிற்கு உகந்த ரத்தினம்.

இனி வரும் பாடங்களில், நாம் 12 வீடுகளைப் பற்றிப் பார்க்க இருக்கிறோம்... அந்த பாடங்கள் - சற்று விரிவாக பார்க்க வேண்டியவை. கிரகங்களின் காரகம் பார்த்தது போல, முதலில் சுருக்கமாக பார்த்து விட்டு - கொஞ்சம் , கொஞ்சமாக விரிவாக பார்க்கலாம்..

ஓம் நமசிவாய ;குரு தட்சணாமூர்த்தியாய நமக

இன்னைக்கு நாம பார்க்கப் போகிற பாடம் , ரொம்ப இரத்தின சுருக்கமா இருக்கும். இதிலே வர்ற ஒவ்வொரு விஷயங்களையும், , நாம விரிவா - பின்னாலே பார்க்கப் போகிறோம்.. அதனாலே , கீழே கொடுக்கப் பட்டுள்ள விஷயங்களை நல்லா புரிஞ்சுக்கோங்க. ... பின்னாலே உங்களுக்கு ஈஸியா இருக்கும்.

ஜோதிடர்கள் ஜாதகத்தின் ஒவ்வொரு கட்டத்தையும் வீடு
என்பார்கள்.உங்களுடைய லக்கினம் எதுவோ -அதுவே பிரதானமானது.

அதிலிருந்து துவங்குவதுதான் எல்லா பலாபலன்களும்.

லக்கினத்தை - முதல் வீடு என்று எடுத்துக் கொள்ளுங்கள்.

- 1 , 5 , 9 - ஆகிய வீடுகள் - திரி கோண ஸ்தானம். (லக்ஷ்மி ஸ்தானம்)

- 1 , 4 , 7 ,10 - கேந்திர வீடுகள் என்பர். ( விஷ்ணு ஸ்தானம் )

- 3, 6 , 8 , 12 - மறைவு வீடுகள் என்று கூறுவர். அதாவது , இந்த வீட்டில் இருக்கும் கிரகங்கள் - பலம் இழந்து இருக்கும்..

===================

1 ஆம் வீடு - திரி கோணமும் , கேந்திரமும் ஆகிறது...
எந்த ஒரு கிரகமும் - திரி கோணத்திலோ , கேந்திரத்திலோ - நின்றால் - அது மிக்க பலத்துடன் நிற்கிறது என்று அர்த்தம்.

2 , 11 - வீடுகளில் நின்றால் - பரவா இல்லை , நல்லது.

3 ஆம் வீடு - சுமார்.

6 ,8 ,12 - ஆம் வீடுகள் - நல்லதுக்கு இல்லை. அப்படினா என்ன, ஒரு சுப கிரகம் , இந்த வீடுகள் லே இருந்தா, அதுனாலே ஏதும் , பெருசா நல்லது பண்ண முடியாது.

=================================================

ஒரு கிரகம் கெட்டு விட்டது , பலம் இல்லை என்று எப்படி கூறுவது?

ஒரு கிரகம் , நீசம் ஆகி இருந்தால்.... மறைவு வீடுகளில் இருந்தால்... பகை வீட்டில் இருந்தால்... பகை கிரகங்களுடன் சேர்ந்து இருந்தால்... , அந்த கிரகம் சரியான நிலைமையில் இல்லை என்று பொருள்.

====================================

ஒவ்வொரு லக்கினத்தையும் - நெருப்பு, நிலம், காற்று , நீர் - ராசிகள் என்று கூறுவர்.

மேஷம், சிம்மம் , தனுசு - நெருப்பு ராசிகள்
ரிஷபம், கன்னி , மகரம் - நிலம் ராசிகள்
மிதுனம், துலாம் , கும்பம் - காற்று ராசிகள்
கடகம் , விருச்சிகம் , மீனம் - நீர் ராசிகள்.

இதை ஈஸியா நீங்க ஞாபகம் வைக்கிறதுக்கு ஒரு ஐடியா இருக்கு,.

இங்கிலீஷ் லே - FIRE , LAND , AIR , WATER ---------- முதல் எழுத்துகளை மட்டும் ஞாபகம் வைச்சுக்கோங்க.. FLAW ...... (எப்பூடி....? )

==========================

லக்கினங்களை - சரம் , ஸ்திரம் , உபயம் னு மூணு வகைப் படுத்தலாம்.

மேஷம் , கடகம் , துலாம், மகரம் - சர ராசிகள்
ரிஷபம், சிம்மம் , விருச்சிகம் , கும்பம் - ஸ்திர ராசிகள்
மிதுனம் , கன்னி , தனுசு , மீனம் - உபய ராசிகள் .

இதனோட , அமைப்பு என்ன , ஏதுங்கிறது - பின்னாலே நாம விரிவா , அலசி ஆராயப் போறோம்.. இப்போதைக்கு , இத தெரிஞ்சுக்கோங்க...

==========================================

கிரகங்களின் பார்வைகள் :

எல்லா கிரகங்களுக்கும் - பொதுவா ஏழாம் பார்வை உண்டு. அதாவது , எந்த ஒரு கிரகமும் , நேர எதிர இருக்கிற ஏழாம் வீட்டைப் பார்க்கும். ....

சரி பார்க்கட்டும்... அதுக்கு என்ன?

உங்க வீட்டுக்கு எதிரிலே நல்ல ஒரு வாத்தியார் இருக்கிறார்.. .. எப்படி இருக்கும்..? அதுவே ஒரு பேட்டை ரவுடி இருந்தா..?

சுப கிரகம் , பார்த்தா அந்த வீடு வளம் பெறும். பாவ கிரகம் பார்த்தா , நல்லது இல்லை.

எல்லா கிரகத்துக்கும் ஏழாம் பார்வை - பொது.
சனி க்கு - 3 , 10 ஆம் பார்வைகள் உண்டு.
செவ்வாய்க்கு - 4 , 8 ஆம் பார்வைகளும் உண்டு.
குருவுக்கு - 5 , 9 ஆம் பார்வைகளும் உண்டு.

இதை நல்லா ஞாபகம் வைத்துக் கொள்ளவும்.

இது போக - சூரியனுக்கு - 3 , 10 ஆம் பார்வைகளும் சுக்கிரனுக்கு - 4 , 8 - ஆம் பார்வைகளும் உண்டு

===================================================

இதை எல்லாம் எதுக்காக இப்போ உங்களுக்கு சொல்லி இருக்கிறேன்னா, நாம் அடுத்த பாடத்திலேயே , ஜாதகம் வைச்சு , ஆராயப் போறோம்.. நான் பாட்டுக்கு குரு இங்கே பார்க்கிறாரு, சனி இங்கே பார்க்கிறாரு னு சொன்னா புரியணும் இல்லியா..?

=====================================

சரி இப்போ --- ஓரிரு வார்த்தைகளில், 12 வீடுகளைப் பத்தி பார்ப்போம்..
இது ஒன்னொன்னும் - ஒவ்வொரு கட்டுரை எழுதுற அளவுக்கு - விரிவா பார்க்க வேண்டிய விஷயம்... இப்போதைக்கு , short & Sweet

லக்கினம் - முதல் வீடு - ஜாதகரைப் பத்தி சொல்லும். ஆளு பார்க்கிறதுக்கு எப்படி ...தோற்றம்? குண நலன்கள் ........ ஒவ்வொரு லக்கினத்துக்கும் , சில அடிப்படை பண்புகள் இருக்கு...

இரண்டாம் வீடு - தனம் , குடும்பம், வாக்கு , ஆரம்ப கால கல்வி

மூன்றாம் வீடு - தைரியம், வீரியம், இளைய சகோதரம்,,,

நான்காம் வீடு - கல்வி , மாதுர் ஸ்தானம் (தாய்), வாழும் வீடு, வாகனம், சுகம் .....

ஐந்தாம் வீடு - பூர்வ புண்ணியம், குழந்தைகள், குல தெய்வம், முற் பிறவி , காதல் , புத்தி/நுண்ணறிவு

ஆறாம் வீடு - கடன், நோய், எதிரிகள்

ஏழாம் வீடு - நண்பர்கள் , கணவன் / மனைவி , வியாபாரம்

எட்டாம் வீடு - ஆயுள் , (பெண்களுக்கு - மாங்கல்ய ஸ்தானம் ), திடீர் எழுச்சி , வீழ்ச்சி , வில்லங்கம், சிறை, மான பங்கம், அவமானம்

ஒன்பதாம் வீடு - பாக்கிய ஸ்தானம் , பிதுர் (தந்தை) ஸ்தானம் ...

பத்தாம் வீடு - கர்ம ஸ்தானம் , தொழில் , கௌரவம்

பதினொன்றாம் ஸ்தானம் - லாபம், இரண்டாம் திருமணம் , மூத்த சகோதரம்

பன்னிரண்டாம் ஸ்தானம் - விரயம் , அயன , சயன போகம்.. அப்படினா? ஒழுங்கா தூங்குறது..... படுக்கை சுகம்...

இதெல்லாம் சில முக்கிய பலன்கள் பார்க்கிறதுக்கு ... இதை தவிர நிறைய விஷயங்கள் இருக்கு... அதை எல்லாம்... கொஞ்சம் கொஞ்சமா ...அப்புறம் பார்ப்போம்..

=========================

நவ கிரகங்களில் - ஒவ்வொரு வீட்டுக்கும் - ஒருவர் காரகம் பெறுகிறார்....
நாம் ஏற்கனவே கொடுத்துள்ள நவ கிரகங்களின் காரகத் துவங்களை [வேத ஜோதிட பாடங்கள் - 6 (ASTROLOGY) ] , ஒரு தடவை திரும்ப பாருங்க...

===========================

சரி, இப்போ உதாரணத்துக்கு - ஒரு ஜாதகர் அவரோட அம்மாவை பத்தி பார்க்கணும்... னு நினைக்கிறார்...

என்ன , என்ன விஷயம் பார்க்கணும்.... சொல்லுங்க பார்ப்போம்...

First ---- ஜாதகர் - லக்கினத்தில் இருந்து - 4 ஆம் வீடு .... என்ன னு பார்க்கணும்..
அந்த வீட்டு அதிபதி யார்? அவரு எங்கே இருக்கிறார்..? நல்ல வீட்டிலே இருக்கிறாரா..? உச்சம் , ஆட்சி , நட்பு வீடு..? மறைவு வீடு இல்லாம இருக்கிறாரா? சுப கிரகசேர்க்கை இல்லை பார்வை உண்டா..? நீசம் இல்லாம , பகை இல்லாம? அவர் கூட எதாவது பாவ கிரகம் இருக்கா...? ஏதாவது பாவ கிரகம் அவரை பார்க்குதா ?

4 ஆம் வீட்டிலே ஏதாவது - சுப கிரகம் இருக்கா..? பாவ கிரகம் இருக்கா..?

4 ஆம் வீட்டின் அதிபதி - எந்த நட்சத்திர சாரம் வாங்கி இருக்கிறார்..? அவர் நிலைமை யை யும்.. கவனிக்கணும்....

அது மட்டும் இல்லை... சந்திரன் நிலைமை என்ன னு பார்க்கணும்.. எதுக்கு சந்திரன்... ???

சந்திரன் தானே மாதுர் காரகன்,...?? மறந்துட்டீங்களா ...? மேலே சொன்ன எல்லாக் கேள்விக்கும் , சந்திரனை வைச்சும் பார்க்கணும்... ..

இப்போ கோச்சார ரீதியா... கோள்கள் எங்கே இருக்கு... அதனோட பார்வைகள் எங்கே .. எல்லாம் பார்த்துக்கிடனும்..?

==================

சரி , அம்மாவோட ஆயுள்.. பார்க்கணும்... So , 4 ஆம் வீட்டில் இருந்து - 8 ஆம் வீடு .. பார்க்கணும்.. கரெக்டா..? அப்படினா..? லக்கினத்தில் இருந்து.. 11 ஆம் வீடு.. திரும்ப மேலே சொன்ன எல்லாக் கேள்விக்கும்.. பாருங்க..

ஜோதிடம் பார்க்க வருகிறவர்களில், பெரும்பாலோனோர் கேள்வி கேட்பது - திருமண வாழ்க்கை சம்பந்தமாக....

நாம் இன்று பார்க்க விருப்பது , அது சம்பந்தமான சில அடிப்படை விதிகளைப் பற்றி.....

ஒருவருக்கு திருமணம் எப்போது நடக்கும்? யார் யாரது இல்வாழ்க்கை மகிழ்ச்சிகரமாக இருக்கும் ? யாருக்கு சோபிப்பதில்லை?

நீங்க இதைத் தெரிஞ்சுக்கிட - மூணு விஷயங்கள் பார்க்கணும்.

முதலாவதாக - லக்கினத்துக்கு - ஏழாம் இடம். இதை களத்திர ஸ்தானம் னு சொல்லி இருந்தோம்.. ஞாபகம் இருக்கா?

இந்த வீடு எப்படி இருக்குதுன்னு பாருங்க . சுப கிரகம் இருக்கா? சுப கிரக பார்வை இருக்கா? அந்த வீட்டு அதிபதி எந்த வீட்டுலே இருக்கிறார்? அவரது நிலைமை எப்படி? ஆட்சி, உச்சம், வலிவு.. அவரோட சேர்ந்து இருக்கிற கிரகங்கள், அவரைப் பார்க்கும் கிரகங்கள்..

இதே விதியை , சுக்கிரனுக்கும் பொருத்திப் பார்த்து - கண்டுபிடிக்கணும்.

மூன்றவதா - இரண்டாம் வீடு, இரண்டாம் வீடு அதிபர். இது குடும்ப ஸ்தானம்.

பெண்களுக்கு - எட்டாம் இடமும் பார்க்கணும் . இது மாங்கல்ய ஸ்தானம்.

செவ்வாய் தோஷம், சர்ப்ப தோஷம், திருமணப் பொருத்தம் பார்க்கிறது எல்லாம் - இனி வர விருக்கும் பதிவுகளில் , விளக்கமா பார்க்கலாம்.

இப்போதைக்கு, சில Basic விதிகள் மட்டும்,

ஏழாம் வீட்டு அதிபர் கூட எத்தனை கிரகம் இருக்கோ, சுக்கிரன் கூட எத்தனை கிரகம் இருக்கோ - அத்தனை பெண்களிடம் அவருக்கு தொடர்பு ஏற்படும் னு சாஸ்திரங்கள் சொல்லுது. இதில் குரு பார்வை இருந்தா , தப்பிக்கலாம். இல்லைனா இது நடந்து விடுகிறது.

இதே போலே - ஏழாம் அதிபரோ, சுக்கிரனோ - ஆட்சி என்றால் - மூன்று மடங்கு பலம், உச்சம் னா - ஐந்து மடங்கு பலம். அப்படினா? அத்தனை மனைவிகள் அல்லது மனைவி மாதிரி..தொடர்பு ஏற்படுகிறது.

இந்த விதி வந்து - பொதுவான விதி. இது எல்லா ஸ்தானங்களுக்கும் பொருந்தும். பன்னிரண்டு வீடுகள் பத்தி , நாம ஏற்கனவே சொல்லி இருந்தோம் பாருங்க. .. எந்த பலன் க்கு எந்த வீடு னு நோட் பண்ணிக்கோங்க. அந்த வீடு, அந்த அதிபர் நிலை எல்லாம் பாருங்க..

உங்க ஜாதகம் எடுத்துக்கோங்க... அதில் இருக்கிற நிலைமைய முதல்ல புரிஞ்சுக்கோங்க.. உங்களுக்கு ஏற்கனவே நடந்த விஷயங்களை compare பண்ணுங்க.. ஓரளவுக்கு உங்களுக்கு விஷயம் பிடிபடும்.

திருமண யோகம் ஒருவருக்கு எப்போ கிடைக்கிறது..?

குரு பகவான் ஆசி இருந்தால் திருமணம் நடந்து விடும். அதை வியாழ நோக்கம் என்பார்கள். குரு பகவான் லக்கினத்தையோ அல்லது லக்கினத்திற்கு அடுத்துள்ள இரண்டாம் வீட்டையோ அல்லது சந்திர ராசியையோ அல்லது சந்திர ராசிக்கு அடுத்துள்ள இரண்டாம் வீட்டையோ கோச்சாரத்தில் சுற்றிவரும் போது, 5, 7, 9 ஆம் பார்வையாகப் பார்க்கும் நிலையை வியாழ நோக்கம் என்பார்கள்.

ஜெனன கால குருவை, கோச்சார குரு பார்க்கிறப்போவும் - திருமணம் நடக்கிறது.

சுக்கிரனின் தசா புத்தி நடைபெறும் பொழுதும் திருமண யோகம் உண்டு. அதுபோல தனிப்பட்ட சில ஜாதகங்களில் ஏழாம் வீட்டதிபரின் தசா புத்தி நடைபெறும்போதும் திருமண யோகம் உண்டு.

தலை எழுத்துப்படிதான் - விதித்தபடிதான் எல்லாம் நடக்கும். ஒவ்வொருவருக்கும் அவர்களின் தலை எழுத்துப்படிதான் திருமண வாழ்வு!

சில விதி முறைகள்.

1. காதலுக்கு மென்மையான உணர்வும், நல்ல உள்ளமும் வேண்டும்.
அதற்குரிய கிரகங்கள் சுக்கிரனும், சந்திரனும் ஆகும். இந்த இரண்டு
கிரகங்களும் வலுவாக இருந்தால் காதல் உண்டாகும்.

2. சுக்கிரனும், சந்திரனும் சமபலத்தோடு இருப்பவர்களுக்குக் காதலில்
வெற்றி உண்டாகும்!

3. ஜாதகத்தில் சுப யோகங்கள் இருந்தால், அது எந்த வழிக்கல்யாணம் ( Arranged / love marriage )
என்றாலும் தம்பதிகள் மனம் ஒத்து மகிழ்வோடு வாழ்வார்கள்.

4. அதே சுக்கிரனும், சந்திரனும், சொந்த வீட்டில் இருந்தாலும் அல்லது
நட்பு வீட்டில் இருந்தாலும், குருவின் பார்வை பெற்றால் அல்லது சேர்க்கை
பெற்றால் பலமுடையவர்கள் ஆவார்கள். அவர்களின் இந்த நிலைப்பாட்டைக்

கொண்ட ஜாதகன் அல்லது ஜாதகியின் மண வாழ்வும் சிறக்கும்.
மகிழ்வுடையதாக இருக்கும்!

5. ஏழாம் வீட்டின் அதிபதியும், லக்கின அதிபதியும் பலமாக இருந்தால்
திருமண வாழ்வு மகிழ்ச்சிக்கு உரியதாக இருக்கும்.

6. குரு, சந்திரன்,சுக்கிரன் ஆகிய மூன்றும் சுபக்கிரகங்கள். அவைகள்
ஜாதகத்தில் கெட்டுப்போயிருக்கக்கூடாது ( நீசம் அடையாமல் இருக்க வேண்டும் )

7. அதே போல லக்கினாதிபதியும், ஏழாம் வீட்டு அதிபதியும் நீசம்
அடையாமல் இருக்க வேண்டும். அவர்கள் இருவரும் நீசம் அடைந்
திருந்தால் மண வாழ்க்கை சிறக்காது.

8. அதுபோல அந்த மூன்று சுபக்கிரகங்கள் , லக்கின அதிபதி,
ஏழாம் அதிபதி ஆகியவர்கள், மறைவிடங்களில் - அதாவது 6,8,12ஆம் வீடுகளில் போய்
அமர்ந்திருக்கக்கூடாது.

9. இரண்டாம் வீடு பலமுள்ளதாக இருக்க வேண்டும்.
திருமணத்திற்குப் பிறகு சேர்ந்து குடும்பம் நடத்த வேண்டாமா?
அதற்கு இந்த வீடு முக்கியம். திருமணத்திற்குப் பிறகு மனனவியை
இங்கே விட்டு விட்டு வேலையின் பொருட்டு பிற தேசங்களில்
போய் உட்கார்ந்து கொள்வது எப்படி நல்ல குடும்ப வாழ்க்கையாகும்?

10 செவ்வாய், ராகு, கேது, சனி போன்ற கிரகங்களின் தோஷம் அல்லது
சேர்க்கை அல்லது பார்வை இல்லாமல் இருக்க வேண்டும்.

11. ராஜ யோகம் உள்ள பெண்ணின் ஜாதகத்தில், லக்கினத்தில் குருவும்,
ஏழில் சந்திரனும், பத்தில் சுக்கிரனும் இருக்கும். அவளை மணந்து
கொள்கிறவன் பாக்கியசாலி!.

12. 1,4,7,10ஆம் வீடுகளில் சுபக்கிரகங்கள் அமையப் பெற்ற பெண்
அதிர்ஷ்டம் உடையவளாகவும் நற்குணம் உடையவளாகவும் இருப்பாள்.

13. 7ல் புதனும், சுக்கிரனும் இருந்து, 11ல் சந்திரனும் இருந்து, குருவினுடைய
பார்வை பெறுவதும் ஒருவகையில் ராஜ யோகமே. அந்தப் பெண்ணை
மணந்து கொள்பவன் மகிழ்ச்சியில் திளைப்பான்.

14. கன்னி லக்கினத்தில் பிறந்த பெண்ணின் ஜாதகத்தில் லக்கினத்தில்
புதன் இருந்து, 11ல் (கடகத்தில்) குரு இருந்தால் அவளுக்கு ராஜ யோகம்தான்.

15. மிதுனம், சிம்மம், கன்னி, துலாம், விருச்சிகம்,கும்பம் ஆகிய ஒன்று
பெண்ணின் லக்கினமாகி, அதில் சந்திரன் இருந்து, அவளுடைய நான்கு
கேந்திர வீடுகளிலும் பாவ கிரகங்கள் இல்லாமல் இருந்ததாலும் அவள்
யோகமான பெண்தான்.

16. கும்ப லக்கினத்தில் பிறந்து, 4ஆம் வீட்டில் உச்ச சந்திரனும் இருந்து,
அந்தச் சந்திரன் குருவின் பார்வை பெற்றால், அந்தப் பெண் நாடாள்வோனின்
மனைவியாவாள். அதாவது அரசனின் மனைவியாவாள்.
அந்த நிலைக்கு அவளை மணந்து கொண்டவன் உயர்வான்.

17. எந்த யோகத்திற்கும் லக்கினாதிபதி பலமாக இருக்கவேண்டும்.
லக்கினதிபதி 6, 8 12ஆம் வீடுகளில் அமையப் பெற்ற ஜாதகர்கள்
யோகங்கள் எதையும் அவர்கள் அடைய முடியாது. அவர்களால்,
அவர்களைச் சுற்றியுள்ள மற்றவர்கள் பயன் அடைவார்கள்.

18. திருமண யோகத்திற்கு, அதாவது மகிழ்ச்சியான திருமணத்திற்கு, லக்கினாதிபதி, 2ஆம் வீட்டுக்காரன், 7ஆம் வீட்டுக்காரன் ஆகிய மூவரும் பலமாக இருக்க வேண்டும்.

19. பெண்களுக்குப் பாக்கியஸ்தானமும், ஆண்களுக்கு லக்கினமும் சிறப்பாக இருப்பது முக்கியம்

திருமண யோகத்திற்கு எதிரான சில அமைப்புக்கள்:

1. லக்கினாதிபதியும், இரண்டாம் வீட்டுக்குரியவனும் பலம் குறைந்து இருப்பதும், பாபக் கிரகங்களின் சேர்க்கை அல்லது பார்வை பெற்று இருப்பதும் கூடாது.

2. ஏழாம் வீட்டிற்கு இரு பக்கத்திலும், அல்லது லக்கினத்திர்கு இருபக்கத் திலும் தீயகிரகங்கள் அமர்ந்திருப்பது கூடாது.அதற்குத் தனிப் பெயர் உண்டு. அது பாபகர்த்தாரி யோகம் எனப்படும். இதையும், பின்னால் பார்க்கலாம். ..

3. சுக்கிரன் நீசமடைந்து ஏழாம் வீட்டில் இருப்பதும், அல்லது தீய கிரகங்களுடன் சேர்ந்து ஏழாம் வீட்டில் இருப்பதும் கூடாது.

4. சுபக்கிரங்கள் மூன்றுமே, 3,6.8,12 ஆகிய மறைவிடங்களில் இருப்பது கூடாது.

5. குரு பலவீனமாகி ஆறாம் வீட்டில் குடியிருப்பது கூடாது. உடன் பாபக் கிரகங்கள் அந்த இடத்தில் அவருடன் சேர்ந்து இருப்பதும் கூடாது.

6. சுபக்கிரகங்கள் மூன்றும் நீசம் பெற்றிருத்தல் கூடாது

7. ஏழாம் வீட்டு அதிபதி அம்சத்தில் நீசம் பெற்றிருப்பதும் நல்லதல்ல!

8 . ஏழாம் வீட்டு அதிபதி லக்கினத்திற்குப் பன்னிரெண்டில் அமர்வது நல்லதல்ல!

9. எட்டாம் வீட்டுக்காரன் ஏழில் குடியிருப்பது நல்லதல்ல!

10. ஏழில் சந்திரனுடன் சனி கூட்டணி போட்டு அமர்ந்திருப்பது நல்லதல்ல!

11. ஜாதகத்தில் சுக்கிரனுக்கு எதிர் வீட்டில் செவ்வாயும், சந்திரனுக்கு எதிர் வீட்டில் செவ்வாயும் இருப்பது நல்லதல்ல!

12 . ஏழில் சந்திரன், புதன், குரு, சுக்கிரன் ஆகியோர்கள் நல்ல நிலைமையில் அமர்ந்திருப்பது நல்லது. செவ்வாயும், சனியும் சேர்ந்து எந்த நிலையில் அமர்ந்திருந்தாலும் நல்லதல்ல!

13 . இன்னொரு ஆச்சரியத்தக்க விதி இருக்கிறது. ஏழாம் வீட்டில் - குரு தனித்து இருந்தால், அது எந்த நிலைமை ஆனாலும் சரி, அவருக்கு - திருமணம் நடப்பது அபூர்வம் . குரு பரிவர்த்தனை ஆகியிருந்தால், இலக்கின அதிபதி பார்வை இருந்தால் - திருமணம் நடக்கிறது. ஆனால், ஒரு வித்தியாசமான திருமண அனுபவம் , அந்த ஜாதகர்களுக்கு ஏற்படுகிறது.
ஆனால் , இவர்கள் அனைவருக்கும், திருமணத்திற்குப் பிறகு தான், வாழ்க்கை நல்லவிதமாக இருக்கும்.

Go To http://www.vedicfastro.blogspot.com/2015/…/blog-post_54.html
For More Info Regarding This

பரிவர்த்தனை யோகம்

-----------------------------------

ஒரு கிரகத்தின் வீட்டில், இன்னொரு கிரகம் இருந்து - அவரோட வீட்டில் முதல் கிரகம் இருப்பது. உதாரணத்திற்கு ,மேஷம் செவ்வாய் வீடு. ரிஷபம் - சுக்கிரன் வீடு. மேஷத்தில் சுக்கிரனும், ரிஷபத்தில் செவ்வாயும் இருந்தால் - ஒருவருக்கொருவர் பரிவர்த்தனை ஆகி இருக்கிறார் என்று அர்த்தம். புரிகிறதா?

இந்த இரண்டு கிரகங்களுமே - ஆட்சியில் இருந்தால் என்ன பலனோ, அந்த பலன்களை கொடுப்பார்கள்..

உதாரணத்திற்கு - ஏழாம் வீட்டு அதிபதி , ஆட்சியோ , உச்சமோ இருக்கிற பெண்ணை ஒருத்தர் மனம் முடிக்கிறார்னு வைச்சுப்போம், அவருக்கு திருமணத்திற்கு பிறகு , ஓகோ னு வாழ்க்கை இருக்கும்..

இன்னைக்கு நாம பார்க்கவிருக்கிற ஜோதிட பாடம் - இரண்டு விஷயங்களைப் பற்றி....முதல்லே - வர்கோத்தமம், இரண்டாவது - பாப கர்த்தரி .

நம்முடைய வாசக அன்பர் ஒருவர் கேள்வி கேட்டு இருந்தார். ராசி , அம்சம் ரெண்டுக்கும் என்ன வேறுபாடு சார் ? என்று.

அம்சமங்கிறது நவாம்சம் . நிறைய ஜோதிடர்கள் ராசி மட்டும் வைச்சு , பார்த்து பலன் சொல்றாங்க. அது அவ்வளவு துல்லியமா வராது. ஏன்னா , கிரகங்களோட உண்மையான வலிமையை பார்க்கிறதுக்கு - அம்ச கட்டத்தையும் பார்க்கணும்.

ராசிக் கட்டத்தை, இன்னும் கொஞ்சம் லென்சை வைச்சு , துல்லியமா பார்த்து குறிக்கிறது அம்சக் கட்டம். லக்கினத்தின் உள் விரிவாக்கம் னு எடுத்துக்கிடலாம். திருமண வாழ்க்கை பார்க்கிறதுக்கு - அம்சம் அவசியம் தேவை.

ராசியை மேலோட்டமா பார்த்தா - ஒரு கிரகம் நல்ல நிலைமைலே இருக்கிற மாதிரி தெரியலாம். ஆனால், அம்சத்திலே அந்த கிரகம் வலிமை இல்லாமல் இருந்தால், பலன் முழுவதுமா கிடைக்கிறதில்லை.

நவாம்சம் என்பது ராசியின் 1/9தாவது பகுதி. அதுக்குத்தான், லென்சை வைச்சுப் பார்க்கிற மாதிரின்னு சொன்னேன்.

ராசிச் சக்கரம்தான் பிரதானமானது. நவாம்சச் சக்கரம் உபரியானது. டாக்டர் நம்மை சட்டையோடும் பரிசோதனை செய்வார். சட்டையைக் கழற்றிவிட்டும் பரிசோதனை செய்வார். அதுபோல ஜாதகத்தை சட்டையோடு பரிசோதனை செய்வதற்கு ராசிச் சக்கரம். ஜாதகத்தின் சட்டையைக் கழற்றிவிட்டுப் பரிசோதனை செய்வதற்கு நவாம்சச் சக்கரம்.

சட்டையைக் கழற்றிவிட்டுப் பரிசோதனை செய்யும்போது பல விஷயங்கள் எளிதில் புலப்படும். ஆனால், அதற்காக ஒவ்வொரு முறையும் சட்டையைக் கழற்றிவிட்டுப் பரிசோதனை செய்வது விவகாரமாக இருக்கும். ஆகவே எப்போது சட்டையோடு பரிசோதனை செய்ய வேண்டும், எப்போது சட்டையைக் கழற்றிவிட்டுப் பரிசோதனை செய்ய வேண்டும் என்பதை ஜோதிடர்கள் புரிந்துகொண்டு செயல் படுத்த வேண்டும்.

சரி, இப்போ பாடம் பார்க்கலாம்.

வர்கோத்தம யோகம் என்றால் என்ன?

ஒருவர் ஜாதகத்தில் குறிப்பிட்ட ஒரு கிரகம் அவர்களது ராசியிலும், நவாம்சத்திலும் ஒரே வீட்டில் இருந்தால் அதனை வர்கோத்தமம் அல்லது வர்கோத்தம யோகம் என்று ஜோதிட நூல்கள் கூறுகின்றன.

உதாரணமாக ஒருவரது ஜனன (ராசி) ஜாதகத்தில், குரு சிம்மத்தில் அமர்ந்துள்ளார் என்றால், அவரது நவாம்சத்திலும் குரு சிம்மத்தில் அமர்ந்திருந்தால் வர்கோத்தமம் என்று கொள்ளலாம்.

ஒருவரது ஜாதகத்தில் ஆட்சி/உச்சம் பெற்ற கிரகங்களை போலேவே வர்கோத்தமம் பெற்ற கிரகம் பல ராஜ யோகங்களைத் தர வல்லது. ஒருவருக்கு 2 அல்லது 3 கிரகங்கள் வர்கோத்தமம் பெற்றிருந்தால் அவருக்கு அதிக அளவிலான ராஜயோகம் கிடைக்கும்.

அதேவேளையில் எந்த கிரகம் வர்கோத்தமம் பெற்றுள்ளது என்பதையும் பார்க்க வேண்டும். லக்கினாதிபதி (1 ), பாக்கியாதிபதி (9 ), ஜீவனாதிபதி (10 ), சுகாதிபதி (4 ) ஆகிய கிரகங்கள் வர்கோத்தமம் அடைந்தால் ஆயுள் முழுவதும் சிறப்பான பலன்களை அந்த ஜாதகர் அனுபவிப்பார்.

ஒரு சில பாவ கிரகங்கள் வர்கோத்தமம் பெற்றாலும் அவை சுபத்தன்மை அடைந்து, சிறப்பான பலன்களைத் தரும் என்பதால் கவலை கொள்ளத் தேவையில்லை.

இன்னும் ஒரு சிலருக்கு, ராசிக் கட்டத்தில் - லக்கினத்தில் எந்த கிரகமும் இல்லை என்றாலோ, அல்லது - எந்த கிரகமும், உச்சம், நீசம் ஆட்சி அமைப்பில் இல்லை என்றாலோ, அம்சம் பார்த்து பலன் சொல்வது - மிக முக்கியம்.

பாவ கத்திரி யோகம்
இரண்டு கத்திகளை ஒன்று சேர்த்தால் அது கத்திரிக்கோல் ஆகிவிடும்.
பாப கத்திரி யோகம் என்பது, கத்தரிக்குள் மாட்டிக்கொண்ட
யோகம் என்று வைத்துக்கொள்ளுங்கள். கத்திரிக்குள் மாட்டிக் கொண்டால் என்ன ஆகும்?
வெட்டுப்பட்டுப் போகும். இல்லையா?

வெட்டுப்படுதலில் தீயதும் நடக்கும். நல்லதும் நடக்கும். துணி இருக்குனு வைச்சுப்போம், வெட்டுனாதனே சட்டை தைக்க முடியும். நல்லதும் நடக்க முடியும். ஆனால், இந்த யோகத்தில், அதிகமாகத் தீமையே உண்டு. சில நேரங்களில், சில அமைப்புக்களால் நன்மையும் உண்டு. நடுவில் மாட்டிக்கொண்ட வீட்டின் பலன்கள் கெடும் அல்லது பலன்கள் அநியாயத்திற்குத் தாமதமாகும்.

இதை எப்படி பார்க்கிறது ?

இரண்டு தீய கிரகங்கள் ஒரு வீட்டின் இரு பக்கமும் அல்லது
ஒருகிரகத்தின் இருபக்கமும் அமர்ந்திருந்தால் அது பாபகர்த்தாரி
யோகம் எனப்படும்!

உதாரணத்திற்கு, 7ஆம் வீட்டின் இருபுறமும் தீய கிரகங்கள்
இருந்தால், ஜாதகனின் திருமணம், தள்ளிக்
கொண்டே போகும். ஜாதகத்தில் வேறு நல்ல அமைப்புக்கள்
இல்லாமலிருந்தால், திருமணமே நடக்காமல் போய்விடும் அபாயமும்
உண்டு. அப்படியே திருமணம் ஆகியிருந்தாலும், திருமண வாழ்க்கை
மகிழ்ச்சியில்லாமல் இருக்கும்.

இதே அமைப்பு 10ஆம் வீட்டிற்கு ஏற்பட்டாலும், அதாவது பத்தாம்
வீட்டின் இரு புறமும் தீய கிரகங்கள் இருந்தாலும், ஜாதகனுக்கு
வேலை கிடைக்காது. கிடைத்தாலும் திருப்தியிருக்காது. அவதியாக
இருக்கும். தனியாக தொழில் செய்வதும் நல்லதல்ல.

இந்த அமைப்பு ஜாதகத்தில் எந்த இடத்தில் இருந்தாலும், அப்படியே
அந்த வீட்டிற்கான பலாபலன்கள் கெடும். அவை என்னவென்று
சம்பந்தப்பட்ட அந்த வீட்டை வைத்தே நீங்கள் தெரிந்து கொள்ளலாம்.

4 என்றால் கல்வி, 5 என்றால் குழந்தைபாக்கியம் இப்படி.....!

இதே அமைப்பில் சிலருக்கு நன்மையும் கிடைக்கக்கூடும்!

அது என்ன?

ஒரு வீட்டின் இருபுறமும் அல்லது ஒரு கிரகத்தின் இருபுறமும்
சுபக் கிரகங்கள் இருந்தால் சம்பந்தப்பட்ட அந்த வீட்டிற்கு
நன்மையான பலன்கள் அபரிதமாகக் கிடைக்கும்.

தீமைகளைச் செய்யக்கூடிய கிரகங்கள்:
சனி, செவ்வாய், ராகு, கேது & சூரியன்

நன்மைகளைச் செய்யக்கூடிய கிரகங்கள்:
குரு, வளர் பிறை சந்திரன், சுக்கிரன் & புதன்

உதாரணங்கள்:

துலாமில் சுக்கிரன். அதன் பின்னால் கன்னியில் சனி,
அதற்கு முன்னால் விருச்சிகத்தில் சூரியன் இருப்பதாக வைத்துக்
கொள்ளுங்கள். அது துலாம் வீட்டிற்குப் பாப கர்த்தாரி யோகத்தைக்
கொடுக்கும். கொடுத்தால் என்ன ஆகும்? சுக்கிரனால் சரிவர
இயங்க முடியாது. ஜாதகனுக்கு உரிய பலனைத் தரமுடியாது.

ஜாதகன் காசு இருந்தும் பட்டினி, கல்யாணம் பண்ணியும்
பிரம்மச்சாரியாக இருப்பான். சுகங்களை அனுபவிக்க முடியாது.

இதைப்போல ஐந்தாம் வீட்டின் இருபுறமும் இரு தீய கிரகங்கள்.
ஐந்தாம் வீட்டில் எந்தகிரகமும் இல்லை என்று வைத்துக்
கொள்ளுங்கள். இந்த அமைப்பு ஜாதகனின் குழந்தைகளைப்
பாதிக்கும். அதாவது ஜாதகன் தன்னுடைய குழந்தைகளால்
அவதிப் படுவான் அல்லது குழந்தை இல்லாமல் அவதிப்படுவான்

இரண்டு தீய கிரகங்களுக்கு இடையில் லக்கினம் மாட்டிக்கொண்டு
விட்டால், ஜாதகன் குணக்கேடு உடையவனாக இருப்பான். அதனால்
பல சிக்கல்களை அவன் எதிர்கொள்ள நேரிடும்.

=====================================================

அப்புறம், நம்ம இணைய வாசக அன்பர்கள் அனைவருக்கும் இன்னொரு முக்கியமான விஷயம்.
ஜோதிட பாடம் படிக்கிறது ரொம்ப ஈசி. அந்த மாதிரி , புரிகிற அளவுக்கு - நடத்த முடியும் ங்கிற
நம்பிக்கை , எனக்கு கொஞ்சம் இருக்கு. ஆனால் நீங்க மத்தவங்களுக்கு பார்த்து பலன் சொல்லும்
முன்பு - நீங்க ரொம்ப தெளிவா சொல்லணும். குழப்பவாதியா இருக்கக் கூடாது.

உங்களுடைய ஒழுக்கம் முக்கியம். தினமும், கறி , மீன் சாப்பிட்டுக் கிட்டு - சரக்கு அடிச்சுக்கிட்டு ,
கெட்ட பெண்களோட சகவாசம் வைச்சுக்கிட்டு - ரொம்ப பக்காவான மாடர்ன் ஜமீன்தார் ரேஞ்சுக்கு
இருந்தா - பலன் தப்பா போறதுக்கு வாய்ப்பு இருக்கு. ரொம்ப கவனமா இருங்க. ஏன்னா ,
கஷ்டடத்திலே தவிக்கிற ஒருத்தருக்கு - உங்களோட வார்த்தைகள் ஒரு ஆறுதலாவும்,
வழிகாட்டியாகவும், பலம் கொடுப்பதாகவும் இருக்கணும்...

ஏதாவது கெட்ட பலன் வரப்போற மாதிரி இருந்தால் கூட - உடனே உங்க வாயிலே இருந்து அந்த
வார்த்தைகள் வந்து விடக் கூடாது. வார்த்தைப் பிரயோகம் ரொம்ப கவனமா இருந்தே ஆகணும். குரு
ஸ்தானத்திலே இருக்கிற ஒருத்தரோட வாய் முகூர்த்தம் - கெட்ட விஷயங்களில் சீக்கிரமே பலித்து
விடுகிறது.

என்னுடைய அனுபவத்திலே இன்னொரு முக்கிய விஷயம் - தினமும் , இறை ஆலயங்களுக்கு
செல்ல முடிந்தால் - அது உங்களுக்கு அற்புத பலன்கள் தரும். வாக்கு பலிதம் ஏற்படும். அந்த
ஈசனின் அருள் , உங்களை கவசம் போல் காக்கும். உங்களையும் , உங்கள் சந்ததியையும் .

வேலை விஷயமாக வெளியூர் சென்றாலும், அருகில் உள்ள ஆலயம் செல்லும் வழக்கத்தை
கொள்ளுங்கள்.

ஒரு கிரகம் - சில வீடுகளில் இருக்கும்போது - பலமாகவும், சில வீடுகளில் பலவீனமாகவும்
இருக்கும் . இது உங்களுக்கு தெரிஞ்ச விஷயம் .. இல்லையா?

ஒரு கிரகத்திற்கு - குறிப்பிட்ட சில ஸ்தானங்களில் , மற்றொரு கிரகம் அமரும்போது - அது அற்புத
பலன்கள் தரும் யோகமாகி விடுகிறது. உதாரணத்துக்கு - மெட்ராஸ் மாதிரி ஊர்லே வந்து
இருக்கிறீங்க னு வைச்சுப்போம். உங்க சொந்த ஊர்லே இருந்து , ரொம்ப தெரிஞ்சவங்க - நாலு வீடு
தள்ளி இருக்கிறாங்கனு வைச்சுக்கோங்க. என்ன இருந்தாலும், அது ஒரு சப்போர்ட்.. தானே. அதுவே
உங்க சொந்த மாமா, மாமனார் னு இருந்தா.. கூடுதல் பலம்.. இல்லையா..? சில சமயம் அதுவே,
சிலருக்கு தொல்லையாவும் இருக்கலாம்.. கரெக்டா? அதே தான்.

அதே மாதிரி தான் - யோகங்களிலும் - சுப யோகம் , அவ யோகம் னு உண்டு.
அதாவது - சில யோகங்கள் நல்லதும் செய்யும். சில கெட்டதும் செய்யும்.

சில முக்கியமான யோகங்கள், அதனாலே ஏற்படக்கூடிய பலன்களும் பார்க்கலாம்.
யோகங்கள் :

ஒன்றுக்கும் மேற்பட்ட கிரகங்களின் சேர்க்கையாலும், ஒரு கிரகம் மற்றொரு கிரகத்தின் சம்மந்தம் பெறுவதாலும், ஒரு கிரகம் குறிப்பிட்ட ஸ்தானத்தில் ஆட்சி, உச்சம் போன்ற நிலைகளில் இருந்தாலும் ஏற்படக்கூடிய விளைவுகள் யோகம் எனப்படும்.

யோகம் என்றவுடன் அதிர்ஷ்டமான அமைப்பு என்று கருதினால் அது தவறாகும். ஜோதிட பரிபாஷையில் யோகங்கள் என்ற வார்த்தை ஒரு கிரகத்திற்கும் இன்னொரு கிரகத்திற்கும் தொடர்பை குறிக்கும் குறியிட்டு வார்த்தை தான். இந்த வார்த்தை தனித்தனி கிரகங்களோடு சம்பந்தப்படும் போது பலவித அர்த்தங்களைத் தருகிறது.

3600 யோகங்கள் இருப்பதாக பழைய மூல நூல்களில் குறிப்புகள் காணப்படுகின்றன. ஆனால் சுமார் 400 யோகங்கள் மட்டுமே அதிகம் நடைமுறையில் அலசி ஆராயப்படுகிறது.. .

பஞ்ச மஹா புருஷ யோகம்.

---------------------------------------------

இந்த யோகம் பஞ்ச மஹாபுருஷர்களால் ஏற்படக்கூடியது. நவகிரகங்களில் செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி, இவ்வைந்து கிரகங்களுக்கும் பஞ்ச மஹாபுருஷர்கள் என்று பொதுவாக ஒரு பெயர் உண்டு.

1) செவ்வாயால் ஏற்படக்கூடிய ருசக யோகம்.
2) புதனால் ஏற்படக்கூடிய பத்ராயோகம்.
3) குருவால் ஏற்படக்கூடிய ஹம்ச யோகம்
4) சுக்கிரனால் ஏற்படக்கூடிய மாளவியா யோகம்
5) சனியால் ஏற்படக்கூடிய சச யோகம்

நீசம் அடையாமல் , மேலே கூறிய கிரகங்கள் - இலக்கின கேந்திரத்தில் - நின்றாலோ, அல்லது தனது சொந்த வீடுகளில் ஆட்சி பெற்றாலோ , அல்லது உச்ச வீடுகளில் இருந்தாலோ - இந்த பஞ்ச மகா யோகங்களில் ஒன்று ஏற்படுகிறது. அதனால் என்ன பலன்..? அந்த கிரகங்களோட காரகத்துவம் பாருங்க..

உதாரணத்துக்கு - பத்ரா யோகம். புதன் - கேந்திரத்திலோ - இல்லை கன்னி , மிதுனத்திலோ இருந்தால் வரும். இந்த ஜாதகர்கள் - புத்தி சாலி, அறிவு ஜீவி.. பள்ளி படிப்பு கொஞ்சமா இருந்தாக் கூட - எதாவது ஒரு துறையில் , தானே முயன்று - கற்று - அந்த துறையில் நல்ல தேர்ச்சி பெற்று விடுகிறார்கள்.
அனுபவத்தில் - புதன் உச்சமாக , ஆட்சியாக இருப்பவர்கள் :- நகைச்சுவை உணர்வு அதிகமாக இருக்கும். காதலுக்கு தூது போவார்கள்.., காதலிக்கும் நண்பர்களை சேர்த்து வைப்பதில் - ஆர்வம் இருக்கும். அதனால் பிரச்னை வரும். சுயமாக சிந்திக்கும் தன்மை கொஞ்சம் கம்மி தான். ஆனால் - 'கெத்து' மெய்ண்டைன் பண்ணுவாங்க. இப்படி......
மத்த யோகங்களுக்கும் - இதே மாதிரி - எடுத்துக்கொள்ளவும்.

சந்திரன் சம்பந்தப்பட்ட யோகங்கள்

-----------------------------------------------------

சந்திரனோடு மற்ற கிரகங்கள் சம்பந்தப்படும் போது ஏற்படும் யோகங்களைக் கவனிப்போம். ஒரு ஜாதகத்தில் சந்திரனுக்கு முன்னும் பின்னும் சூரியன், ராகு, கேது தவிர வேறு கிரகங்கள் இருந்தால் அது துருதரா யோகம் எனப்படும். இந்த யோகம் ஜாதகனுக்கு நல்ல உறவையும் நல்ல குணத்தையும் வாகன சுகத்தையும் கொடுக்கும்.

அதேபோல சந்தினுக்கு 12வது இடத்தில் ராகு கேதுக்களைத் தவிர வேறு கிரகங்கள் இருந்தால் அனபாயோகம் எனப்படும். இந்த யோகம் ஆரோக்கியத்தையும், பெயர் புகழையும் தரும்.

சந்திரனுக்கு 2ம் இடத்தில் சூரியன், ராகு, கேதுக்களைத் தவிர வேறு கிரகங்கள் இருந்தால் அது சுனபா யோகம் எனப்படும். இந்த யோகம் சாதாரண மனிதனை உழைப்பின் மூலமாக உயர்த்தி அரசனுக்குச் சமமாக ஆக்கிவிடும்.

சந்திரனுக்கு முன்னும் பின்னும் கிரகங்கள் எதுவும் இல்லாது அது கேமத்துருமம் என்னும் யோகமாகும். இந்த யோகம் ஒரு ஜாதகத்தில் இருந்தால். இது எவ்வளவு பெரிய செல்வந்தர்களையும், அவர் இறப்பதற்கு முன் ஆண்டியாக்கி - வீதியில் நிற்க வைத்து விடும். இது பொது விதி. இதற்க்கு நிறைய விஷயங்களை சரி பார்க்க வேண்டும். அவசரப் பட்டு உடனே பலன் சொல்லி விடாதீர்கள்.

சந்திரனுக்கு 1, 4, 7, 10 ஆகிய ஸ்தானங்களில் குரு இருந்தால் அது கஜ கேசரி யோகமாகும். இந்த யோகம் தீர்க்காயுளையும், புகழையும், பண வருவாயையும், வாகன சுகத்தையும் கொடுக்கும்.
இது வந்து ரொம்ப அபூர்வம், அப்படி இப்படினு நெறைய பேர் காதுலே பூ சுத்தி இருப்பாங்க..
நம்பாதீங்க. மாசத்துலே , குறைஞ்சது - பத்து நாள் , சந்திரனும் - குருவும் - இந்த நிலைலே தான் இருப்பாங்க.
ஆனால் - இது ஒரு நல்ல யோகம். அதுலே சந்தேகம் இல்லை. எவ்வளவு கஷ்டப்படுற குடும்பத்திலே இந்த ஜாதகர் பிறந்தாலும், அந்த தரித்திர சூழ்நிலையிலிருந்து அந்த குடும்பத்தை மீட்டுக் கொண்டு வரும் ஆற்றல் - அந்த ஜாதகருக்கு ஏற்படுகிறது.
சந்திரனும், குருவும் - லக்கினத்தில் இருந்து மறையாமல் இருந்தால் - இது கண்டிப்பாக - மிக சிறந்த யோகமாகும்.

ஜாதகத்தில் சந்திரனும் செவ்வாயும் சேர்ந்திருந்தால் அது சந்திர மங்கள யோகமாகும். இந்த யோகம் அசையாத சொத்துக்களை அதிகமாகத் தரும். அதேநேரம் இக்கிரகங்களை அசுப கிரகம் ஏதாவது ஒன்று பார்த்தால் ஜாதகனுக்குச் சொத்துக்களைக் கொடுத்து மூளைக் கோளாறைத் தந்து விடுகிறது.

சந்திரனுக்கு 6, 8,12ல் குரு இருந்தால் அது சகடயோகமாகும். இந்த யோகத்தில் பிறந்தவர்களின் வாழ்க்கை நிலையில்லாமல் சக்கரம் போல் மேலும் கீழும் சுற்றிக் கொண்டே இருக்கும். நல்ல நிலைலே இருக்கிறவங்க - சர்ர் ருனு கீழே வந்து, திரும்ப மேல வருவாங்க..

சூரியன் சம்பந்தப்பட்ட யோகங்கள்

-----------------------------------------------------

சூரியனுக்கு 2ல் சந்திரன், ராகு, கேது, தவிர, வேறு கிரகங்கள் இருந்தால் அது வேசி யோகம் எனப்படும். இந்த யோகத்தோடு பிறந்த ஆண் ஆனாலும் பெண் ஆனாலும் சுய கௌரவத்தை இழந்து பணம் மற்றும் சொத்துக்களைப் பெறுவார்கள்.

சூரியனுக்கு 12ல் ராகு, கேதுக்களைத் தவிர மற்ற கிரகங்கள் இருந்தால் அது வாசியோகமாகும். இந்த யோகம் பெரும் புகழை ஜாதகன் பெறும்படிச் செய்யும். சூரியன் இருக்கும் ராசிக்கு இரு பக்கங்களிலும் எந்தக் கிரகம் இருந்தாலும் அது சுய உபயசாரி யோகம் எனப்படும். இது நல்ல வருவாயையும புகழையும் ஈட்டித்தரும்.

புத ஆதித்யா யோகம்
புதனும், சூரியனும் ஒரு ராசியில் சேர்ந்திருந்தால் அது யோகத்தைக் கொடுக்கும். அந்த யோகத்தின் பெயர் புத ஆதித்ய யோகம் .
இந்த யோகம் அதீத திறமைகளைக் கொடுக்கும். எடுத்த காரியங்களில் வெற்றியைக் கொடுக்கும். சமூகத்தில்/நட்பு வட்டாரங்களில் மதிப்பையும், மரியாதையையும் கொடுக்கும். நிபுணத்துவ யோகம் . உயர் கல்வி கற்கும் சூழ்நிலை ஏற்படும். அவசரப் படாதீங்க. நூத்துக்கு எண்பது பேருக்கு - சூரியனும், புதனும் சேர்ந்து தான் இருக்கும். இரண்டில் ஒன்று - ஆட்சி , உச்சம் இருக்க வேண்டும். அல்லது - கேந்திர, கோணங்களில் இருக்க வேண்டும். குறைந்த பட்சம் மறைவு ஸ்தானங்களில் இல்லாமல் இருக்க வேண்டும். தீய கிரக சேர்க்கை , பார்வை இருக்க கூடாது.

இதே போலே - பல யோகங்கள் இருக்கின்றன . ஜாதகம் பார்க்கும் பொழுது - இந்த யோகங்கள் இருக்கிறதேயானால் - உரிய தசா, புத்தி காலங்களில் - அந்த ஜாதகருக்கு - உரிய பலன்கள் ஏற்படுகிறது..

இந்து லக்கினம் பற்றிய தகவல்களுக்கு வருவோம்..
இதைப் பற்றி , நிறைய ஜோதிடர்களுக்கு தெரியாது என்பது என் அனுபவக் கருத்து. அது போன்ற , ஒரு அரிய விஷயத்தை உங்களிடம் பகிர்ந்து கொள்வதில் பெரு மகிழ்ச்சி.

உங்கள் ஜாதகத்தில் - எதுவும் உச்ச கிரகம், ஆட்சி கிரகம் இல்லை என்ற போது , இந்து லக்கினத்தில் நின்ற கிரகத்தின் தசை வருகிறதா என்று பாருங்கள்... நீங்கள் கோடீஸ்வரராவது 100 % உறுதி.
உங்களுக்கு கிடைக்கும் , பண வரவு பற்றி தெரிந்து கொள்ள - இரண்டாம் இடம், குரு பகவான் நிலைமை தவிர இந்து லக்கினமும் தெரிந்தால் நல்லது.

சரி, இதை எப்படி பார்ப்பது என்று பார்ப்போம்..

உங்கள் ஜாதக கட்டத்தை எடுத்துக் கொள்ளுங்கள் :

லக்கினம், ராசி --- என்ன என்று பாருங்கள் :

ஒவ்வொரு கிரகத்திற்கும் - இந்து இலக்கின விதிப்படி - கலை எண்கள் என்று உண்டு. "ஒளி எண்கள் /கதிர் எண்" என்றும் வைத்துக் கொள்ளலாம்.

சூரியனுக்கு - 30
சந்திரனுக்கு - 16
செவ்வாய்க்கு - 6
புதனுக்கு - 8
சுக்கிரனுக்கு - 12
குருவுக்கு - 10
சனிக்கு - 1

ராகு, கேதுக்கு - கலைகள் கிடையாது.

உங்கள் லக்கினத்தில் இருந்து - ஒன்பதாம் வீடு என்ன என்று பாருங்கள் . அந்த வீட்டின் அதிபதி யார் ? அவருக்கு எத்தனை கலை என்று பாருங்கள்.

அதேபோலே - உங்கள் ராசிக்கு - ஒன்பதாம் வீட்டின் அதிபர் , அவருக்கு எத்தனை கலை எண் என்று பாருங்கள் .

இரண்டு கலை எண்களையும் கூட்டி , வரும் கூட்டுத்தொகையை - 12 ஆல் வகுக்க வேண்டும்.
வகுத்த பிறகு வரும் எண்ணை, சந்திரன் நின்ற வீட்டில் இருந்து 1 ...2 ...3 ... என்று எண்ணி வாருங்கள்.
எந்த வீட்டில் மீதி தொகை முடிகிறதோ .. அந்த வீடு .. இந்து லக்கினம் என்று பெயர்...

இந்த இந்து லக்கினத்தில் இருந்து வரும் ஒரு கிரகத்தின் தசை நடக்கிறது என்றால்... உங்களுக்கு , பொன்னும் பொருளும், புகழும் குவியும்...

ஒரு உதாரணத்திற்கு - விருச்சிக லக்கினம் , சிம்ம ராசி என்று வைத்துக் கொள்வோம்.

விருச்சிகத்திற்கு - ஒன்பதாம் வீடு - கடகம் . அதிபதி - சந்திரன் . அவரது கலை எண் : 16 .

சிம்ம ராசிக்கு - ஒன்பதாம் வீடு - மேஷம் . அதிபதி - செவ்வாய். கலை எண் : 6.

இரண்டையும் கூட்டினால் - வருவது : 16 + 6 = 22 .

12 ஆல் வகுக்க மீதி வருவது ::: 10 . இதை சந்திரன் நின்ற சிம்ம ராசியில் இருந்து என்ன , 10 ஆம் வீடாக வருவது ரிஷபம். இந்த ஜாதகருக்கு - ரிஷபமே இந்து லக்கினம் ஆகும்.

ரிஷபத்தில் இவருக்கு நிற்கும் கிரகத்தின் தசை நடந்தால் - அவருக்கு , அந்த தசை காலம் - அற்புதமான ஒரு காலமாக இருக்கும். அது அசுப / தீய கிரகமாகவே இருந்தாலும் , இது பொருந்தும்.

அவரது பலன் அளவு வேறுபட வாய்ப்பு இருக்கிறது. உதாரணத்திற்கு நடை முறையில் - ஆளும் கட்சி கவுன்சிலரும் அதிகாரம் படைத்தவர்தான், MLA , MP , மினிஸ்டர் இப்படி ஆளுக்கு தகுந்த மாதிரி வேறுபடும் இல்லையா? அதே மாதிரி ...

இயல்பில் இந்து லக்கினம் - ஜென்ம லக்கினத்திற்கு பகை வீடு , இல்லை பகை கிரகம், நீச கிரகம் அங்கே இருந்தால் - பலன் கொஞ்சம் குறையும். ஆனால் , அபரிமித பலன்கள் கண்டிப்பாக ஏற்படும்.

அதே வேளையில் , இந்த இந்து லக்கினம் - ஜென்ம லக்கினத்திற்கு , மறைவு ஸ்தானமாக இல்லாமல் ( 3 ,6 ,8 ,12 ) - இந்து லக்கினத்தில் - ஒரு சுப கிரகம் இருந்து , அல்லது சுப கிரகங்களின் பார்வை பெற்று தசை நடந்தால் - அவர் உலக புகழ் பெரும் கோடீஸ்வரராவார்.

இதைத் தவிர சில நுணுக்கமான விதிகளும், விதி விலக்குகளும் உண்டு. அதை எல்லாம் நீங்கள் - தனியே , உங்களுக்கு வாய்ப்பு கிடைக்கும்போது - ஆராய்ச்சி
செய்து கொள்ளுங்கள்.

*************************************************************************************************************

சில விஷயங்களுக்கு - காரண காரியம் தெரிவது இல்லை. அந்த கால ரிஷிகளால் , வகுத்து வைக்கப் பட்டுள்ள ஜோதிட சாஸ்திர விதிகள் அதைப் போலே தான். நிறைய விதிகளுக்கு - கொஞ்சம் போலவாவது காரணம் புரியும். ஒரு சில விதிகளுக்கு,.... !? சுத்தம்.. ஏன் ? எதுக்குனே புரிபடாது... அந்த மாதிரி - இரண்டு விஷயங்களை , பலரது ஜாதகங்களை ஆராய்ந்து பார்த்ததில் , தெளிவாக அவை பொருந்தி இருப்பதால் , ஆச்சரியப்பட்டு , அந்த விஷயங்களை உங்களிடம் பகிர்ந்துகொள்கிறேன்.

**காரகோ பாவ நாஸ்தி**

நாம் ஏற்கனவே - பன்னிரண்டு வீடுகளைப் பற்றி , பாடம் பார்த்தோமே, ...அந்த , அந்த வீடுகளுக்கு காரகத்துவம் பெரும் கிரகங்களைப் பற்றி கூறி இருந்தேன்... ஞாபகம் இருக்கிறதா?

உதாரணத்திற்கு - ஏழாம் வீடு - களத்திர ஸ்தானம் - காரகம் பெறுவது - சுக்கிரன். ஐந்தாம் வீடு - குழந்தைகள் ஸ்தானம் - காரகம் பெறுவது - குரு .

கரெக்டா ? இந்த ஏழு கிரகங்களுமே, தனது காரகம் பெறும் இடங்களில் நின்றால் - சொதப்பி விடுகிறார்கள். அவர்கள் வேலை பார்ப்பதே இல்லை.

தனியாக நின்றால் , வெகு நிச்சயமாக சொதப்பல். மற்ற கிரகங்களுடன் இணைந்து இருப்பது - பரவா இல்லை.

அதாவது - எந்த லக்கினமாக இருந்தாலும், ஏழில் - சுக்கிரன் தனித்து இருந்தால் , அவர்களுக்கு திருமண விஷயம் , அவ்வளவு எளிதாக இருப்பது இல்லை. நிறைய பேருக்கு திருமணமே நடப்பது இல்லை. அல்லது வெகு தாமத திருமணம்... முறைப்படி திருமணம் செய்து குடித்தனம் நடத்த முடியாத நிலை இப்படி..தவறி,

விதி விலக்காய் நடந்தாலும் - கல்யாணம் பண்ணியும் பிரயோஜனம் இல்லாத நிலைமை. இப்படி.....

அதைப் போலவே , ஐந்தாம் வீட்டில் - குரு தனித்து நின்றால் - அவர்களுக்கு - குழந்தை பாக்கியம் இருப்பது இல்லை. ஆகா , பிரமாதம், ஐந்தில் குரு - நல்லா பக்காவா - திரிகோண ஸ்தானத்தில் இருக்கிறார் என அவசரப் பட்டு விடாதீர்கள்..

இதற்க்கு பெயர் தான் காரகோ பாவ நாஸ்தி ....

இதைக் கூட நிறைய ஜோதிடர்கள் தெரிந்து வைத்து இருக்கிறார்கள்.. ஆனால் , நாம் அடுத்து பார்க்க விருக்கும் விஷயம் - நிறைய பேருக்கு தெரிஞ்சு இருக்க வாய்ப்பு இல்லை என்பது என் அனுபவம்...

எந்த ஒரு விஷயமும் தெரிஞ்சுக்கிட ரெண்டு வகை இருக்கு. -- ஒன்னு உங்களுக்கு சொல்லிக் கொடுக்கிற குரு - பக்காவா , வெளிப்படையா சொல்லிக் கொடுக்கிறவரா இருக்கணும். ... இல்லையா , உங்களுக்கு இயல்பா இருக்கிற ஆர்வம் , உங்க தேடுதல் ... உங்களுக்கு நிறைய விஷய ஞானத்தைக் கொடுக்கும்.

**<u>கேந்திராதிபத்திய தோஷம்</u>**

சுப கிரகங்கள் - கேந்திர அதிபதிகளாக இருந்து , கேந்திரங்களிலேயே நிற்க - அவராலும் ஒன்றும் பிரயோஜனம் இல்லை என்கிறது விதி.. இது எல்லா கிரகங்களுக்கும் இல்லை. முழுக்க , முழுக்க சுப கிரகங்களுக்கு மட்டுமே.

இயல்பிலேயே - அசுப கிரகங்களான - செவ்வாய் , சனி, சூரியன் , தேய்பிறை சந்திரன், தீய கிரகங்களுடன் சேர்ந்தால் அசுப கிரகமான புதன் , ராகு , கேது - ஆகியோர் கேந்திரங்களில் நின்றால் - தோஷமில்லை.

எனவே , கேந்திராதிபத்திய தோஷம் பெறும் கிரகங்கள் - குரு, சுக்கிரன் , வளர்பிறை சந்திரன், தனியாக நிற்கும் புதன்.
இவர்கள் , வேறு கிரகங்களுடன் இணைந்து - கேந்திரத்தில் இருந்தால் , பரவா இல்லை. தனியே நிற்க கூடாது.

-------- வெறுமனே ஜாதகம் பார்த்து விட்டு - ஆஹா , நல்ல சுப கிரகம் - முழு பலத்துடன் கேந்திர ஸ்தானத்தில் நிற்கிறது.. அமோகமாக இருக்கும் என்று எண்ணி விடாதீர்கள்.. சரியா ?

தெளிவாக புரிய வில்லை என்றால் ஒரு உதாரணத்துடன் பார்ப்போம்..

கடக லக்கினம் என்று வைத்துக் கொள்ளுங்கள் :

கேந்திர வீடுகள் : 1 ,4 ,7 ,10 === கடகத்திற்கு என்னென்ன
வீடுகள் கேந்திரமாகிறது ?

கடகம், துலாம், மகரம் , மேஷம் .... கரெக்டா ...?

சந்திரன், சுக்கிரன், சனி , செவ்வாய் - இந்த வீடுகளுக்கு அதிபதிகள். சனியும் ,
செவ்வாயும் - கேந்திரத்தில் நிற்பது நல்லது.

ஆனால், வளர்பிறை , சந்திரனோ, இல்லை 4 ஆம் வீட்டுக்கு அதிபதியாக வரும்
சுக்கிரனோ - தனியாக கேந்திரத்தில் நிற்க அவரால் ,
முழுவதும் பலன்கள் இல்லை. இதைத்தான், கேந்திராதிபத்திய தோஷம் என்று
சாஸ்திரம் கூறுகிறது..

இந்த நுணுக்கமான விதிகளை ஏன் கூறுகிறேன் என்றால், முதலில் உங்கள்
ஜாதகத்தை முழுக்க ஆராய்ந்து பாருங்கள்.. இது வரை நடத்திய பாடங்களுடன் -
உங்கள் ஜாதகம் ஆராய்ந்து எப்படி, எவ்வளவு தூரம் - உங்களுக்கு, நீங்கள் பலன்
சொல்ல முடிகிறது என்று பாருங்கள்.., அது மற்றவர்களுக்கு பலன் சொல்வதற்கு
உங்களால் முடியும் என்ற நம்பிக்கை தரும்.

ஒரு ஜோதிடராக நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டிய மிக முக்கியமான
விஷயங்களில் " ஹோரையும் " ஒன்று.

ஜோதிடராக இருப்பதை விட்டுத் தள்ளுங்கள். அன்றாட நடைமுறையில் , இது
உங்களுக்கு அளப்பரிய பலன்கள் தரும். ஹோரை அறிந்து நடப்பவனை . யாரும்
ஜெயிக்க முடியாது என்பது சித்தர்கள் வாக்கு. அப்படிப் பட்ட ஒரு மகத்தான
விஷயம் பற்றி நாம் இன்று பார்க்க விருக்கிறோம்.

ஏழு கிரகங்களுக்கு மட்டுமே ஓரை உண்டு. ராகு, கேது சாயா கிரகங்கள்
என்பதாலும், அவற்றிற்கு சுற்றுப்பாதை இல்லாத காரணத்தாலும் அவற்றிற்கு
ஓரை கிடையாது.

பூமத்திய ரேகை, தீர்க்க ரேகை ஆகியவற்றை நமது முன்னோர்கள் எப்படி
உருவாக்கினார்களோ அதேபோல்தான் ஓரைகளும் உருவாக்கப்பட்டன. சூரியனின்
சுற்றுப்பாதை, சூரியனுக்கு அருகில் இருக்கக் கூடிய கிரகங்கள், தொலைவில்
இருக்கக் கூடிய கிரகங்கள், அதனுடைய ஈர்ப்பு சக்தி, அதன் ஒளிக்கற்றைகள்
பூமியை அடைவதற்கு எடுத்துக் கொள்ளப்படுவதற்கான கால நேரம் இதை
எல்லாம் அடிப்படையாக வைத்துதான் நமது முன்னோர்கள் ஓரைகளை

கணக்கிட்டுள்ளனர்.

சூரியன் மற்றும் அதன் அருகே அல்லது தொலைவில் உள்ள கிரகங்களின் அமைப்பைக் கொண்டு வானவியல் அறிஞர்கள் ஓரைகளை உருவாக்கினர். இதன்படி வாரத்தின் முதல் நாளான ஞாயிறன்று முதல் ஓரையை சூரியனுக்கு அளித்தனர்.

அதற்கு அடுத்து சுக்கிரன் , அதற்கு அடுத்து புதன் ஓரை , 4வது இடம் சந்திரனுக்கும், 5வது இடம் சனிக்கும், 6வது இடம் குருவுக்கும், 7வது இடம் செவ்வாய்க்கும் வழங்கினர்.

இதற்கு சுற்றுப்பாதை, கிரகங்களின் கதிர் வீச்சுதான் காரணம்.
இவற்றில் சுக்கிரன் ஓரை, புதன் ஓரை, குரு ஓரை ஆகிய மூன்றும் நல்ல ஓரைகள் எனப்படுகிறது. எந்த ஒரு நல்ல காரியம் செய்ய வேண்டுமென்றாலும் - இந்த ஹோரைகளில் துவங்கலாம்.

ஓரை என்பது சூரிய உதயத்தில் இருந்து கணக்கிடப்படுகிறது. அந்த நாளின் கிழமை அதன் முதல் ஓரையாக கொள்ளப்படுகிறது. உதாரணமாக ஞாயிறு காலை முதல் ஒரு மணி நேரம் (6-7 மணி) சூரியனின் ஓரை.

இதையடுத்து 7-8 மணி வரை சுக்கிரன் ஓரை, 8-9 மணி வரை புதன் ஓரை, 9-10 வரை சந்திரன் ஓரை, 10-11 வரை சனி ஓரை, 11-12 மணி வரை குரு ஓரை, 12-1 மணி வரை செவ்வாய் ஓரை. இதையடுத்து மீண்டும் சூரியன் ஓரை துவங்கும்.

இதேபோல் செவ்வாய்க்கிழமை என்றால் அன்று காலை 6 முதல் 7 மணி வரை செவ்வாய் ஒரை, புதன் கிழமை என்றால் காலை 6-7 மணி வரை புதன் ஓரை, அதன் பின் ஒவ்வொரு மணி நேரமும் மேலே கூறப்பட்டுள்ள வரிசைப்படி ஓரை கணக்கிடப்படும்.

பொதுவாக காலை 6 மணி என்பதனை சராசரி சூரிய உதய நேரமாகக் கொண்டுதான் ஓரைகள் கணக்கிடப்படுகின்றன.

**6 - 1- 8 - 3**

இந்த வரிசையை ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள். காலை 6 மணிக்கு வரும் ஓரை , திரும்பவும் மதியம் 1 மணிக்கும், இரவு 8 மணிக்கும் , பின்பு அதிகாலை 3 மணிக்கும் வரும்.

**சூரிய ஓரை** :

சூரியன் ஓரையில் அரசு சம்பந்தப்பட்ட காரியங்கள், வழக்கு தொடர்பான விடயங்கள் மேற்கொள்ள சிறப்பானதாக இருக்கும். உங்கள் மேலதிகாரிகளை சந்தித்தல், போன்ற பெருந்தலைகளை சந்திக்கும் காரியம் செய்யலாம்.

இந்த நேரத்தில் புதிதாக எந்த அலுவல்களையோ உடன் பாடுகளையோ செய்வது நல்லதல்ல, சுபகாரியங்கள் செய்யயவும் இந்த ஓரை ஏற்றதல்ல. இந்த ஓரை நடக்கும் நேரத்தில் பொருள் ஏதேனும் காணாமல் போனால் கிடைப்பது அரிது. அப்படிக் கிடைக்குமானால் மிகவும் தாமதித்து அப்பொருளின் நினைவு மறைந்தபின் கிழக்கு திசையில் கிடைக்கலாம்.இந்த நேரத்தில் உயில் சாசனம் எழுதலாம்.

**சுக்கிர ஓரை :**
சகல சுப காரியங்களுக்கு வீடு, நிலம், வண்டி வாகனம், ஆடை ஆபரணம் வாங்கவும் மிகவும் ஏற்றது. குறிப்பாக பெண்கள் தொடர்பு கொண்ட சகல காரியங்களிலும் நன்மை ஏற்படும். விவசாய்த்திற்கும், பயணங்கள் செய்யும் நல்லது. இந்த ஓரையில் காணாமல் போன பொருள் மேற்கு திசையில் சில நாள்களில் கிடைக்கும்.

**புதன் ஓரை** :
கல்வி மற்றும் எழுத்துத் தொடர்பான வேலை தொடங்குவதற்கும் ஆலோசிப்பதற்கும் ஏற்ற நேரம். சுப காரியங்கள் செய்யலாம். நேர்மையான விஷயங்களைப் பற்றிப் பேசவும் முடிவெடுக்கவும் இந்த நேர உகந்தது. பயணங்கள் மேற்கொள்ளவும் செய்யலாம்.இந்த ஓரையில் காணாமல் போகும் பொருள் விரைவில் அதிக சிரமமின்றி கிடைத்து விடும்.

**சந்திர ஓரை** :

வளர்பிறை காலத்தில் சந்திரன் ஓரையும் நல்ல ஓரையாகவே கருதப்படுகிறது.

இந்த ஓரைகளில் திருமணம், சீமந்தம், குழந்தைகளுக்கு மொட்டையடித்து காது குத்துதல், பெண் பார்ப்பது, பதவியேற்பது, வேலைக்கு விண்ணப்பிப்பது, வங்கி கணக்கு துவங்குதல் ஆகியற்றைச் செய்யலாம். இந்த ஓரை காலத்தில் எல்லா சுபகாரியங்களையும் செய்யலாம்.குறிப்பாக பெண்கள் தொடர்பு கொண்ட காரியங்களையும் மிகவும் ஏற்றது. வியாபார விஷயமாகவோ அல்லது புனித யாத்திரையாகவோ பயணம் செய்ய ஏற்றது.பிறரைச் சந்தித்துப் பேசவும் செய்யலாம். இந்த ஓரையில் எந்தப்பொருள் காணாமல் போனாலும் கிடைக்காது.

**சனி ஓரை** :

இதில் சனி ஓரை ஒரு சில காரியங்களுக்கு நன்றான பலனைத் தரும். கடனை அடைப்பதற்கு ஏற்ற ஓரையாக சனி ஓரை கருதப்படுகிறது.

உதாரணமாக சனி ஓரையில் ஒருவர் தனது கடனை அடைத்தால், அவர் மீண்டும் கடன் வாங்குவதற்கான சூழல் ஏற்படாது என ஜோதிட நூல்கள் கூறுகின்றன. இதேபோல் பழைய பாக்கி/கணக்குகளை தீர்ப்பது, ஊழ்வினை (பூர்வ ஜென்மப் பாவம்) தீர்ப்பது, பாத யாத்திரை , நடைபயணம் துவங்குவது, மரக்கன்று நடுதல், விருட்சங்கள் அமைத்தல், அணைக்கட்டு நிர்மாணிக்கும் பணிகளை துவக்குவது போன்றவற்றிற்கு சனி ஓரை சிறப்பானது.

**குரு ஓரை** : எல்லாவகை சுப காரியங்களுக்கு மிகவும் ஏற்ற நேரம், வியாபாரம், விவசாயம் செய்ய நல்லது. ஆடை ஆபரணப் பொருள்கள் வாங்கவும், வீடு மனை வாங்கவோ,விற்கவோ ஏற்றது.எதுவும் சட்டத்திற்கும் நியாயத்திற்கும் புறம்பான காரியமாக இருக்கக்கூடாது. கப்பற்பயணம் செய்வதற்கு இந்த ஓரை சிலாக்கிய்மானது அல்ல. இந்த நேரத்தில் காணாமல் போனபொருள்களைப் பற்றி வெளியில் சொன்னாலே போதும் . உடனே கிடைத்து விடும்.

**செவ்வாய் ஓரை**
செவ்வாய் ஓரை நிலம் வாங்குவது, விற்பது, அக்ரிமென்ட் போடுவது, சகோதர/பங்காளி பிரச்சனைகள், சொத்து பிரித்தல், உயில் எழுதுவது, ரத்த தானம், உறுப்பு தானம், மருத்துவ உதவிகள் செய்வது இவற்றையெல்லாம் மேற்கொள்ளலாம். இந்த ஓரையில் ஆயுதப் பிரயோகத்தை துவங்கினால் சக்தி வாய்ந்ததாக இருக்கும். செவ்வாய் அழிவுக்கு உரிய கிரகம் . அதிகாரத்தை பிரயோகம் செய்து ஒன்றை கட்டுக்குள் கொண்டு வரக் கூடியது செவ்வாய். எந்தவித நல்ல காரியங்களும் செய்ய உகந்த நேரமல்ல. இருப்பினும் தெய்வீகத் தொடர்பான விஷய்ங்களையோ, சண்டை சச்சரவுக்கான் விஷயங்களையோ பற்றிய் பேசலாம். இருப்பினும் இந்த ஓரையை தவிர்ப்பது நல்லது. இந்த ஓரை நேரத்தில் பொருள்கள் காணாமல் போனால் உடனே முயன்றால் தெற்கு திசையில் கிடைத்துவிடும்.தாமதித்தால் கிடைக்காது.

==================================================================

ஒரு சிறந்த ஜோதிடராக நீங்கள் ஹோரை சம்பந்தமாக தெரிந்து கொள்ள வேண்டிய ஒரு விஷயமும் உண்டு. நவ கிரகங்களில் - ஒன்றுக்கொன்று கடும்

பகை கிரகங்களும் உண்டு. அல்லவா ? அதையும் நீங்கள் மனதில் கொண்டு , ஹோரை தேர்ந்தெடுங்கள். என்னதான் குரு ஓரை சுப ஓரை என்றாலும், வெள்ளிக் கிழமை - குரு ஹோரை தேர்ந்தெடுக்க வேண்டாம்.
ஏன்..? அதுதான் உங்களுக்கு தெரியுமே..?

சரி, நிஜமாகவே இந்த ஹோரையின் செயல்பாடு அறிய - நீங்களே ஒரு சில விஷயங்களில் , துவங்கிப் பாருங்கள். வியந்து போவீர்கள். மனித வாழ்வில் ஓரைகளின் பங்களிப்பு முக்கியமானது. நம்மை அறியாமலேயே ஓரைகளின் கதிர்வீச்சை உணர முடியும். அதை உணர்ந்து நடந்தால் நலம் பெறுவீர்கள்.

குறிப்பாக கணவன் , மனைவி ஏதாவது வாக்குவாதம் செய்யத் துவங்கினால் , செவ்வாய் அல்லது சனி ஓரை வந்தால், அடக்கி வாசியுங்கள். அது மிகப் பெரிய சண்டையாகிவிடும். கணவன் . மனைவி என்றில்லை. மற்றவருக்கும் பொருந்தும். ஆதலால் , காலத்தின் இந்த ரகசிய கணக்கு - நீங்களும் தெரிந்து வைத்திருப்பதில் தவறில்லை...

நல்ல நேரம் பார்த்து , நல்ல ஹோரை பார்த்து செய்யும் காரியங்கள் - மிக மோசமான தசை , புக்தி காலங்களிலும் உங்களுக்கு ஒரு அரு மருந்தாக அமையும்.

முதல் இரண்டு தோஷங்களும், எல்லா ஜோதிடர்களுக்கும் அத்துபடி. அதனாலே , அந்த ரெண்டைப் பத்தி , நாம அடுத்த பாடங்களில் பார்த்துக் கொள்ளலாம். இப்போ, பார்க்கவிருப்பது புனர்பூ .

## <u>புனர்பூ தோஷம்</u>

ஒரு சில ஜாதகர்களுக்கு - பொருத்தம் பார்க்கும்போது , கொஞ்சம் ஓரளவுக்கு பொருந்தி , பேச்சு வார்த்தை நடந்து கொண்டு இருக்கும்போதே , திடீரென்று - பொருத்தம் பார்க்கப் பட்ட ஜாதகருக்கு , வேறு ஒரு இடத்தில் நல்ல வரன் வந்து , டக்குனு , முடிஞ்சு கல்யாணமே முடிந்து போகும்... கவனித்து இருக்கிறீர்களா ?

அது எல்லாமே .. இந்த புனர்பூ தோஷ வகையை சார்ந்தது... இந்த தோஷம் இருப்பவர்களுக்கு , பொருத்தம் பார்க்கும்போது - சம்பந்தப்பட்ட ஜாதகர் / ஜாதகிக்கு வேறு ஒரு நல்ல வரன் அமைந்து விடுகிறது.

சரி, இதை எப்படி ஜாதக ரீதியாக கண்டு பிடிப்பது ?

சந்திரன் , சனி - இரண்டுக்கும் சம்பந்தம் இருக்கிறதா ? என்று பாருங்கள்.

இரண்டும் ஒரே வீட்டில் சேர்ந்து இருந்தால் , அல்லது ஒருவருக்கொருவர் சம சப்தம பார்வை கொண்டு இருந்தால் ... ( அதாங்க - சந்திரனில் இருந்து ஏழாம் வீட்டில் சனி இருந்தால் ) , அல்லது இரண்டும் பரிவர்த்தனை ஆகி இருந்தால்... அல்லது இரண்டு கிரகமும் இருக்கும் நட்சத்திரங்கள் பரிவர்த்தனை ஆகி இருந்தால்... ( அதாவது - பூசம் நட்சத்திரத்தில் சந்திரன் இருந்து , அனுஷம் நட்சத்திரத்தில் சந்திரன் இருப்பது போலே... )

இந்த மாதிரி அமைப்பு இருப்பவர்கள் புனர்பூ தோஷத்தால் பாதிக்கப் பட்டு இருக்கிறார்கள் என்பது பொருள்.

புனர்பூ தோஷம் இருப்பவர்களுக்கு திருமண விஷயத்தில் என்ன நடக்கும் ?

(1 ) திருமணம் காலதாமதமாவது
(2 ) திருமண சம்பந்தமான பேச்சுவார்த்தைகளில் தொடங்கி, நிச்சயத்திலும், திருமணத்திலுமே தடைகள் ஏற்படுவது,
(3 ) திருமண நிச்சயம் முறிந்து போவது,
(4 ) நிச்சயிக்கப்பட்ட திருமணத் தேதி தள்ளி வைக்கப்படுவது,
(5 ) மணப்பெண்ணோ மாப்பிள்ளையோ மாறிப் போவது,
(6 ) திருமணத்துக்கு போகும் வழியில் காலதாமதமாகிப் போவது
இப்படி சொல்லிக்கொண்டே போகலாம்.

<u>பரிகாரம் :</u>

இந்த அமைப்பு இருப்பவர்கள் - திருமணஞ்சேரி சென்று முறைப்படி பரிகார பூஜை செய்து கொள்வது நல்லது . வசதி இருப்பவர்கள் , யாராவது ஏழை , எளியவர்களுக்கு திருமணம் நடைபெற உதவி செய்யலாம்.

குலதெய்வத்திற்கு - முடிகாணிக்கை, படையல் செலுத்தி வழிபாடு செய்யலாம்.

தொடர்ச்சியாக மூன்று பௌர்ணமி தினங்களில் விரதம் இருந்து - திருவண்ணாமலை கிரிவலம் சென்று , மும்மூன்று முறையாக ஒன்பது துறவிகளுக்கு வஸ்திர தானம் செய்து வந்தால் , உடனடியாக பொருத்தமான வரன் அமையும்.

களத்திர ஸ்தானம் எனப்படும் ஏழாம் வீடும் , குடும்ப ஸ்தானம் எனப்படும் இரண்டாம் வீடும் பாதிக்கப் பட்டிருந்தாலும், திருமணம் தள்ளிப் போகும். அவர்களுக்கும், மேற்கூறிய பரிகார முறை பொருந்தும்.

அனுபவத்தில், தெரிந்தோ தெரியாமலோ - யாருக்கேனும் திருமணம்

நடைபெறும்போது குளறுபடி செய்தால் , விவாகரத்து செய்ய துணை நின்றால் - அவர்கள் சந்ததிக்கு , இந்த அமைப்பு ஏற்படுகிறது. ஒருவேளை, பூர்வ ஜென்ம தொடர்பாகவும் இருக்கலாம்.

உங்களுக்கு தெரிந்தவர்கள் யாரேனும் இந்த அமைப்பு கொண்டு , அவர்களுக்கு திருமண தடை தொடர்ந்தால் , நீங்களும் உதவி செய்யலாம்.

## செவ்வாய் தோஷம்

திருமணப் பொருத்தம் பார்க்கும்போது , கவனிக்க வேண்டிய முக்கியமான விஷயங்களில் செவ்வாய் தோஷமும் ஒன்று. ஆனால் இந்த செவ்வாய் தோஷம் ஆணுக்கும், பெண்ணுக்கும் இருந்தால் திருமணம் செய்யலாம். ஒருவருக்கு செவ்வாய் தோஷம் இருந்து மற்றொருவற்கு செவ்வாய் தோஷம் இல்லை எனில் அவர்களுக்கு திருமணம் செய்யக்கூடாது என்பது ஜோதிட விதி.

செவ்வாய் ரத்த காரகன். யுத்த காரகன். எனவே பொருத்தம் பார்க்க விரும்புபவர்கள் செவ்வாய் இருக்கும் நிலையை சரியாக கணிக்க வேண்டி இருக்கிறது. செவ்வாய் நீசமாகவோ, பலமின்றியோ இருந்தால் ரத்த அணுக்கள் ஆரோக்கியமாக இல்லை என்று அர்த்தம்.

செவ்வாய் தோஷம் உள்ளவர்களுக்கு மற்றவர்களை விட சற்றே கூடுதலான காம உணர்ச்சி இருக்கும் . தாம்பத்தியத்தில் தொடர்ந்து நாட்டம் இருக்கும். ஆனால் தோஷம் இல்லாதவர்கள் காலப் போக்கில் தாம்பத்தியத்தில் இருந்து விலகுவர்.

தோஷம் உள்ளவர்களுக்கு, தோஷம் இல்லாதவர்களை திருமணம் செய்து வைத்தால், அவர்களுக்கிடையில் தாம்பத்திய ரீதியான பிரச்சனைகள் ஏற்படும். சூசகமாகக் கூற வேண்டுமென்றால் ஒருவர் விரும்ப, ஒருவர் அதற்க்கு மறுப்பு தெரிவிப்பார்.

ஒருகட்டத்தில் உங்களுக்கு தேவைப்பட்டால்/விருப்பமிருந்தால் வேறு எங்காவது சென்று கொள்ளுங்கள் என்று விளையாட்டாக கூறினாலும், அதை தனக்கு கிடைத்த அனுமதியாகக் கருதி வேறு துணையை தேடுவார்.

செவ்வாய் தோஷத்தால் பெற்றோருக்கு எந்தவித பாதிப்பும் ஏற்படாது. அதேபோல் மாமனார், மாமியாரையும் செவ்வாய் தோஷம் பாதிக்காது. தாம்பத்திய, காம வாழ்க்கை சிறப்பாக இருக்க வேண்டும் என்பதற்காகவே தோஷம் உள்ள

இருவருக்கும் திருமணம் செய்து வைத்தால் நன்றாக இருக்கும் என்று கூறுகின்றனர்.
லக்கனம், சந்திரன், சுக்கிரன் முதலியவைகளுக்கு 2,4,7,8,12, ஆகிய இடங்களில் செவ்வாய் இருந்தால் செவ்வாய் தோஷ ஜாதகமாக கருத வேண்டும்.

2, 4, 7, 8, 12 ஆகிய இடங்களில் செவ்வாய் உள்ள எல்லோருக்கும் செவ்வாய் தோஷம் என்று கூறிவிட முடியாது.

நடைமுறையில் லக்கினத்தை மட்டுமே கணக்கில் எடுத்து பெரும்பாலான ஜோதிடர்கள் கூறுவர். சிலர் முதல் வீட்டையும் கணக்கில் எடுப்பது உண்டு.

**சில விதிவிலக்குகள் உள்ளன** :

மேஷம், விருச்சிகம், மகரம், கடகம் ஆகிய வீடுகளில் செவ்வாய் இருந்தால் தோஷம் வலிமை குன்றி தோஷமில்லை என்ற நிலை ஏற்படும்.

காரணம் என்னவென்றால் சம்பந்தப்பட்ட வீடுகளில் செவ்வாய் ஆட்சி, உச்சம், நீசம், பெற்று இருப்பதால் தோஷம் குன்றும். மேஷம், விருச்சிகம், மகரம், கடகம் ஆகிய லக்னங்களிலோ இராசியிலோ பிறந்தவர் என்றால் உங்களுக்கு தோஷம் கிடையாது.

குரு, சூரியன், சனி சந்திரனுடன் சேர்ந்திருந்தால் அல்லது பார்க்கப் பட்டால் தோஷமில்லை என்ற நிலை ஏற்படும்.

சிம்மம் , ரிஷபம் அல்லது கும்பத்தில் செவ்வாய் இருந்தால் தோஷமில்லை என்ற நிலை ஏற்படும்.

4 - ம் இடம் மேஷம், விருச்சிகம் ஆகி செவ்வாய் இருந்தாலும் தோஷமில்லை என்ற நிலை ஏற்படும்.

7 - ம் இடம் கடகம், மகரம் ஆகி செவ்வாய் இருந்தாலும் தோஷமில்லை என்ற நிலை ஏற்படும்.

8 - ம் இடம் தனுசு, மீனம் ஆகி செவ்வாய் இருந்தாலும் தோஷமில்லை என்ற நிலை ஏற்படும்.

மிருகசீர்ஷம், சித்திரை, அவிட்டம் ஆகிய நக்ஷத்திரங்களில் பிறந்தவர் என்றால் உங்களுக்கு தோஷம் கிடையாது.

ஜாதகத்தில் லக்னத்தையோ, 7ம் இடத்தையோ,பெண்களுக்கு 8ம் இடத்தையோ குரு பார்த்தால் உங்களுக்கு தோஷம் கிடையாது.

7ம் இடம்,, 8ம் இடம்[பெண்களுக்கு மட்டும்] மேஷம், விருச்சிகம், மகரம், கடகம் ஆகிய லக்னங்களாக வந்தால் உங்களுக்கு தோஷம் கிடையாது.

செவ்வாய் அமர்ந்த நக்ஷத்திரக்கால் : மிருகசீர்ஷம், சித்திரை, அவிட்டம் ஆகிய நக்ஷத்திரங்களில் என்றால் உங்களுக்கு தோஷம் கிடையாது.

இதே போல் நிறைய விதி விலக்குகள் உண்டு.

**தினமும் கந்த ஷஷ்டி கவசம் பாராயணம் செய்தல் செவ்வாய் தோசத்திற்க்கு ஒரு மிகச் சிறந்த பரிகாரம் ஆகும்.**

எனவே செவ்வாய் தோஷம் என்றாலே வாசகர்கள் - ஜாதகம் பார்க்க வரும் அன்பர்களை பயமுறுத்தி விட வேண்டாம். இன்றைய நடைமுறையில் , பாதிக்கும் மேல் ,செவ்வாய் தோஷம் உள்ளவர்கள் தான் அதிகம். திருமண தாமதத்திற்கு ,செவ்வாய் தோஷம் மட்டுமே காரணம் ஆகாது.

சரி, இன்னும் சில தெரிந்து கொள்ள வேண்டிய ஜோதிட விதிகளை காண்போம். அன்பர்களே , இது அனைத்தும் பொதுவான விதி முறைகள் தான். ஆனால், ஒருவருக்கு பூர்வ புண்ணிய ஸ்தானம் பலமாகவும், குல தெய்வம் அருளும் , உங்களை பெற்றவர்களை, அல்லது புகுந்த வீட்டில் மாமனார் / மாமியாரை பொறுப்பாக கவனித்து நீங்கள் சேர்த்து வைக்கும் புண்ணியமும் இருந்தால், எந்த நாளும் உங்களுக்கு , ஒரு தீங்கும் ஏற்படாது. இது நான் ஆராய்ந்த நூற்றுக்கும் மேற்ப்பட்ட ஜாதகங்களிலிருந்து , எனக்கு கிடைத்த அனுபவ முடிவு.

## இரண்டும், இரண்டிற்கு மேற்பட்ட தாரம் ஏற்படக்காரணம் :

7ம் அதிபதி கெட்டு கெட்டவர்கள் வீட்டில் அமையப்பெற்றால் இருதார யோகம் உண்டு. ( யோகமா ?? ஆம். ஒரு சிலருக்கு வாழ்க்கை துணை தவறி விட்டால், திரும்பவும் திருமணம் நடைபெற வேண்டிய சூழல் ஏற்படுகிறதே ! )

7ம் அதிபதி ராகுவுடன் சேர்க்கை பெற்றாலோ அல்லது 7ம் இடத்தில் அசுபர் இருந்தாலோ , இரண்டு அசுபர்கள் 2ம் இடத்தில் அமைந்தாலோ

7ம் அதிபதி 10ல் அமையப் பெற்று ஆட்சி, உச்சம், நட்பு பெற்று 10ம் அதிபதியால் பாக்கப்பட்டாலோ

11ம் வீட்டில் இரண்டு வலிமையான கிரகங்கள் அமையப் பெற்று இருந்தாலோ

7ம் அதிபதியும் சுக்கிரனும் இணைந்து இருந்தாலோ அம்சத்தில் சேர்ந்து காணப்பட்டாலோ

7ம் அதிபதி கெட்டு 11ல் இரு கிரகங்கள் அமையப் பெற்றிருந்தாலோ

7ம் இடத்தில் சுக்கிரன், சனி இணைந்து காணப்பட்டாலோ

இரண்டாம் தாரம் உண்டா என்பதைப் பார்க்க நீங்கள் பார்க்க வேண்டிய முக்கியமான ஸ்தானம் - பதினொன்றாம் வீடு தான். அந்த வீட்டின் நிலைமை, வீட்டு அதிபதியின் நிலைமை நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும்.

## விதவைப் பெண் :

7ம் இடத்தில் உள்ள செவ்வாய் சூரியன் சேர்க்கை பெற்றால் , சூரிய தசை அல்லது செவ்வாய் தசையில் அவள் விதவையாவாள்.

மூன்று அசுபர்கள் 7ம் இடத்தில் அமையப்பெற்றால் அந்தப் பெண் மாங்கல்ய பலம் இழந்து விடுவாள்.

8ம் இடமான மங்கல்ய ஸ்தானத்தில் செவ்வாய், சனி, ராகு, கேது, போன்ற அசுபர்கள் அமையப்பெற்றாலும் விதவையாகி விடுவாள்.

7ம் இடத்தில் சனி, செவ்வாய் போன்ற அசுபர்கள் இணைந்து இருந்தால் இளவயதில் மாங்கல்ய பலம் இழ்க்க நேரிடும்.

## விவாகரத்து :

மங்கையர்களின் ஜாதகத்தில் 7ம், 8ம் இடங்கள் கெட்டிருந்தாலும்

லக்கினாதிபதி, 7ம் இடத்திற்கு அதிபதி 6, 8 போன்ற மறைவிடத்தில் இருந்தாலும் ,

12ம் இடத்தில் ராகு, 6ம் இடத்தில் கேது அமையப் பெற்ற பெண்களும்,

7ம் இடத்தில் நீச கிரகம் இருந்து சுபரால் பார்க்கப்பட்டாலும் விவாகரத்து அமையப் பெறும்.

**6-ம் வீடும், 7-ம் வீடும் தரும் களத்திர தோஷம்:**

இது கொஞ்சம் சுவாரஸ்யமான விஷயம். ஆறாம் ஸ்தானம் கடன் ,நோய் எதிரி. ஏழாம் வீடு களத்திரம் . இல்லையா?

அப்படிப்பட்ட ஏழாம் வீட்டிற்கு - ஆறாம் வீடு ,பன்னிரெண்டாம் வீடாக ,அதாவது விரய ஸ்தானமாக வருகிறது. ஆறுக்கும், ஏழுக்கும் - ஜாதகத்தில் சம்பந்தம் இருக்கிறதா என்று பாருங்கள்.... உங்களுக்கே வியப்பாக இருக்கும். இப்படி இணைந்து இருந்தால் வரும் வாழ்க்கைத் துணை சண்டைக் கோழியாகத் தான் பெரும்பாலும் அமைகிறது. மோசமான தசா / புக்தி காலங்களில் அவர்கள் கோர்ட் படியேறும் சூழ்நிலையும் ஏற்பட்டு விடுகிறது.

****************************************************************************************************

ஓம் நமசிவாய ;குரு தட்சணாமூர்த்தியாய நமக

இன்று திருமணப் பொருத்தம் எப்படி பார்ப்பது , என்று இரத்தின சுருக்கமாகப் பார்க்க விருக்கிறோம்.

பத்துப் பொருத்தம் பார்த்தும் - சில மணங்கள் முறிந்து போய்விடுகின்றன . பொருத்தம் பார்க்காமல் மணந்தவர்கள் கூட , மனம் ஒருமித்து வாழ்வதால் , வெற்றிகரமான தாம்பத்ய வாழ்வு வாழ்கின்றனர். பூர்வ புண்ணியம் பலமாக இருந்தால் , இறை அருள் என்றும் துணை நிற்கும். விதிப் படி நடக்கட்டும் என்று விட்டு விட்டால் , நல்லதோ , கெட்டதோ எது நடந்தாலும் ஏற்றுக் கொள்ளவேண்டியது தானே.

வீட்டில் முதல் திருமணம் பொருத்தம் பார்க்காமல் செய்துவிட்டு, ஏதோ காரணத்தால் - மண முறிவு ஏற்பட்டு விட்டால், அடுத்த திருமணம் அவ்வாறு செய்ய துணிவு வராது. பொருத்தமில்லா ஜாதகமாக இருந்ததும் ஒரு காரணமோ? என்று நொந்து போகின்றனர்.

என் அனுபவத்தில், ஜாதகம் உண்மையோ , பொய்யோ - ஆனால் இவர் தான் மனைவி / கணவன் என்று அமைவது இருக்கிறதே , அது நிச்சயம் ஜென்மாந்திர தொடர்பு தான். திருமணம் ஆனா அன்பர்களுக்கு இது புரியும் என நினைக்கிறேன். அதே போல் , தான் குழந்தை பிறப்பும். கணவன் , மனைவி கையில் மட்டும் இல்லாத ஒரு விஷயம் . திருமணம் முடிந்து , உடனே / ஒரு வருடத்துக்குள் குழந்தை பிறந்து இருந்தால் , அவர்களுக்கு இந்த உண்மை தெரியாது. ஒரு ஆறு மாதம், ஒரு வருடத்திற்கு பிறகு கரு உருவாகி இருந்தால், அவர்களுக்கு இது புரியும்.

சரி எதற்கு , இவ்வளவு பில்ட் அப் என்று கேட்கிறீர்களா? நம் முன்னோர்கள், சித்த புருஷர்கள் கூறிய படி , ஜாதகப் பொருத்தம் பார்ப்பது - இதற்கு ஒரு பொருத்தமான அணுகுமுறை என்று தோன்றுகிறது. சரி, பாடத்தைப் பார்ப்போம்.

திருமணப் பொருத்தம் என்பது; கணவன் மனைவியாக இணையும் இருவருக்கும் நிலையான மன ஒற்றுமை, மகிழ்ச்சி, இன்பமான தாம்பத்திய உறவு, பிள்ளைப் பேறு, சுபிட்சமான எதிர்காலம் என்பன அமையுமா? என இருவருடைய ஜாதகங்களின் உள்ள கிரகங்களின் ஆதிக்கத்தைக் (நிலைகளைக்) கொண்டு கணித்து அறிதல் .

விவாகப் பொருத்தம் பார்க்கும் பொழுது மணமகன், மணமகள் ஆகிய இருவருடைய ஜாதகங்களிலும், பிறந்த நட்சத்திரங்களை வைத்து 10- பொருத்தங்களும், ஜாதக-கிரக நிலையை கொண்டு கிரக-தோஷங்களும் பார்த்து விவாகம் முடிவு செய்யப்படுகின்றது.

இன்பமான குடும்ப வாழ்க்கைக்கு; மனப் பொருத்தம், புரிந்துணர்வு, அன்பு , பெருந்தன்மை, பரஸ்பர நம்பிக்கை, பிள்ளைப் பேறு, மகிழ்ச்சியான சிற்றின்ப வாழ்க்கை, அதிர்ஷ்டம் ஆகியன அடிப்படைத் தேவைகளாகும். இவற்றுடன் மாரக தோஷம் அற்றவர்களாகவும் அமையப் பெற்றவர்களின் குடும்ப வாழ்க்கை ஆயுட் காலம் வரை மகிழ்ச்சியாக இருக்கும் என்பது அனுபவ உண்மை.

எனவே திருமணத்திற்கு மன பொருத்தமும், ஜாதகப் பொருத்தமும் மிக முக்கியமானதாகும். கிரகப் பொருத்தம் இல்லாத மன பொருத்தம் தற்காலிகமானது. காலப் போக்கில் கிரகநிலை மற்றங்களினால் மனம் மாற்றமடைந்து குழப்பங்கள் ஏற்படலாம். ஆதலினால், நீடித்த மகிழ்ச்சியான திருமண வாழ்க்கையை உறுதி செய்வதற்கு " ஜாதகப் பொருத்தம்" மிக கட்டாயமாகின்றது.

## <u>திருமணப் பொருத்தம்</u>

முக்கியமான பத்துப் பொருத்தங்களாவன:

1. நட்சத்திரப்-பொருத்தம், 2. கணப்-பொருத்தம், 3. மகேந்திரப்-பொருத்தம், 4. ஸ்திரி தீர்க்க-பொருத்தம், 5. யோனிப்-பொருத்தம், 6. ராசிப்-பொருத்தம், 7. ராசி அதிபதிப்-பொருத்தம், 8. வஸ்யப்-பொருத்தம், 9. ரச்சுப்-பொருத்தம், 10. வேதைப்-பொருத்தம் என்பனவாம்.

1. நட்சத்திரப்-பொருத்தம்: (ஆயுள் ஆரோக்கிய விருத்தி)
இதனை தினப்பொருத்தம் என்றும் சொல்வார்கள். இந்தப் பொருத்தம் ஆண் பெண் இருபாலாருடைய ஆயுளையும் ஆரோக்கியத்தையும் நிர்ணயிக்கக் கூடியது.

பெண்ணின் நட்சத்திரம் முதல் புருஷன் நட்சத்திரம் 2, 4, 6, 8, 9, 11, 13, 15, 18, 20, 24, 26 ஆக வரின் உத்தமம். இந்த அமைப்பில் இல்லாதிருந்தால் பொருத்தம் இல்லை.

ஜன்ம நட்சத்திரம் முதல்:
10வது நட்சத்திரம் கர்ம நட்சத்திரம்
7-வது நட்சத்திரம் வதம்
19-வது நட்சத்திரம் அனு ஜென்மம்
22-வது நட்சத்திரத்தின் 4ம் பதம் வைநாசியம்
27-வது நட்சத்திரம் மருத்யு நட்சத்திரம்
27-வது நட்சத்திரம் வேறு ராசி எனில் நீக்கவும், ஒரே ராசியாகில் உத்தமம்

ரோகினி, திருவாதிரை, மகம், விசாகம், திருவோணம், ஹஸ்தம், உத்திரட்டாதி, ரேவதி ஆகிய 8 நட்சத்திரங்கள் ஏக நட்சத்திரங்களாக இருந்தால் பொருத்தம் உத்தமம்.

பூரம், உத்திரம், சித்திரை, புனர்பூசம், பூசம், அஸ்வினி, கார்த்திகை, பூராடம், உத்திராடம், மிருகசீர்ஷம், அனுஷம் ஆகிய 11 நட்சத்திரங்களும் ஏக நட்சத்திரங்களாக இருந்தால் பொருத்தம் மத்திமம்.

ஒரே ராசியாக இருந்தால் புருஷ நட்சத்திர பாதம் முந்தி இருந்தால் உத்தமம். மற்றைய நட்சத்திரங்கள் ஏக நட்சத்திரங்களாக இருந்தால் பொருத்தம் இல்லை. விலக்கப் படவேண்டும்.

ஸ்திரீ நட்சத்திரத்தில் இருந்து 7வது நட்சத்திரமாக புருஷ நட்சத்திரம் வரின், வதம் என்றும், புருஷ நட்சத்திரத்தில் இருந்து 22வது நட்சத்திரமாக ஸ்திரீ நட்சத்திரம் வரின், வைநாசிகம் என்றும் சொல்லப்படும். இந்த வதம், வைநாசிகம் ஆகிய இரண்டும் ஒதுக்கப்பட வேண்டும்.

ஆனால்; திருவாதிரைக்கு - உத்திரமும், பூரத்திற்கு - அனுஷமும்; பூசத்திற்கு - சித்திரையும்; புனர்பூசத்திற்கு - ஹஸ்தமும்; பூரட்டாதிக்கு - ரோகினியும் வதம்; வைநாசிகமானால் சுபம். கெடுதல் இல்லை.

உத்தராடத்திற்கு - ரேவதியும்; மூலத்திற்கு -பூரட்டாதியும்; பரணிக்கு - பூசமுமானால் வதம்-வைநாசிக தோஷம் இல்லை.

ஏக-ராசியில் பெண் நட்சத்திரம் முந்தியது விரும்பத்தக்கதல்ல. ஏக-ராசியிலும் பரணி, அவிட்டம், பூசம் இவை புருஷ நட்சத்திரங்களாக வந்து பெண் நட்சத்திரத்திற்கு முந்தியதானாலும் விலக்கப்பட வேண்டியவை.

சதயம், அசுவினி, ஹஸ்தம், ஸ்வாதி, கிருத்திகை,பூராடம், ரோகினி, மகம் இந்த 8ம் ஏக ராசிகளாகில் ஸ்திரீ முன்வந்தால் செய்யலாம்.

2. கணப்பொருத்தம்: (மங்களம்)
இப்பொருத்தம் சரியாக இருந்தால் தம்பதிகள் சுப பலன்களை அடைந்து சுகமாக

வாழ்வார்கள். தம்பதியின் வாழ்க்கையில் நிலையான மகிழ்ச்சி ஏற்படுத்துவது இப்பொருத்தமே யாகும்.

இதை; குணப்பொருத்தம் என்றும் அழைப்பார்கள். பரந்த மனப்பான்மை, உயர்ந்த லட்சியங்கள், நன்னடத்தை, நல்ல குணங்கள் கொண்டவர்களை தேவகணம் என்றும்; சாதாரணமான குணமும், புத்தியும், லட்சியங்களும், நோக்கங்களும் உடையவர்களை மனுஷகணம் என்றும்; முரட்டு குணமும், மட்டமான எண்ணங்களும் கொண்டவ்ர்களை ராட்சத கணம் என்றும் மூன்று கணங்களாக பிரிக்கப்ப்ட்டுள்ளது.

ஸ்திரீ, புருஷருக்கு ஒரே கணமாக இருந்தால் பொருத்தம் உண்டு. ஸ்திரீ மனுஷ கணமும் புருஷர் தேவ கணமுமாய் இருந்தால் பொருந்தும்.

ஸ்திரீ தேவ கணமும் புருஷர் மனுஷ கணமுமாய் இருந்தால் பொருந்தும். ராக்ஷஸ கணத்திற்கு மனுஷகணமும், தேவ கணமும் பொருந்தாது. (நட்சத்திரங்களும் அவற்றிற்கான கண விபரங்களையும் பஞ்சாங்கத்தில் பார்க்கவும்)

3. மகேந்திரப் பொருத்தம்: (சம்பத்து விருத்தி)
இப்பொருத்தம் இருந்தால் புத்திரவிருத்தி உண்டாகும். மக்கட் செல்வங்களை உண்டாக்கி, அவர்கள் மேன்மையாக வாழ்கின்ற யோகத்தை உண்டாக்குவதே, இந்த மகேந்திரப் பொருத்தமாகும்.
பெண் நட்சத்திரம் முதல் ஆண் நட்சத்திரம் வரை எண்ணினால் 4, 7, 10, 13, 16, 19, 22, 25 ஆக வரின் பொருந்தும். சம்பத்து கொடுக்கும்.

4. ஸ்திரீ தீர்க்கம்: (சகல சம்பத் விருத்தி)
இதன் மூலம் திருமகள் கடாட்சமும், சுபீட்சமும் நீடிக்கும். ஸ்திரீதீர்க்கப் பொருத்தமிருந்தால் சகலவிதமான சம்பத்துகளும் விருத்தியாகும்.

பெண்ணின் நட்சத்திரம் முதல் ஆண் நட்சத்திரம் வரை எண்ணினால் 13 நட்சத்திரங்களுக்குக் கீழாக ஆண் நட்சத்திரம் இருந்தால் பொருந்தாது. 13க்கு மேல் இருந்தால் உத்தமம். 9-க்கு மேல் 13 வரை மத்திமம். 9 வரை (7க்கு மேல் இருந்தால் பொருந்தும் என்று அபிப்பிராயம் தெரிவிப்பாரும் உளர்.)

5. யோனிப் பொருத்தம்: (தம்பதிகளின் அன்யோன்ய நட்பு - மகிழ்ச்சியான சிற்றின்ப உறவு)
இது, ஆண் பெண் ஆகிய இருவருடைய உடலமைப்புகளும் ஒன்றுக் கொன்று பொருத்தமாகவும், உடல் உறவு கொள்வதற்கு ஏற்றவையாகவும் அமைவதற்கு ஆதாரமாகும்.

இருவருக்கும் ஒரு யோனியாயினும், பகையில்லாத யோனிகளாகில் ஆண் யோனி ஆணுக்கும் பெண் யோனி பெண்ணுக்குமாயினும், இருவருக்கும் பெண் யோனியாயினும் உத்தமம். இருவருக்கும் பகையில்லாத ஆண் யோனியாயின் மத்திமம். ஆணுக்கு பெண் யோனியும் பெண்ணுக்கு ஆண் யோனியுமாயினும் ஒன்றிற் கொன்று பகையோனி யாயினும் பொருந்தாது.

ஒன்றிற்கொன்று பகை யோனிகள்:
குதிரை - எருமை; யானை - சிங்கம்; குரங்கு - ஆடு; பாம்பு - கீரி; மான் - நாய்; எலி - பூனை; மாடு - புலி; பெருச்சாளி - பூனை.

( இது எல்லாமே நமது பழைய பாடங்களில் கொடுத்துள்ளவை தான்.எந்த நட்சத்திரத்திற்கு என்ன யோனி - என்று refer பண்ணுங்க. )

6. ராசிப் பொருத்தம்: (வம்ச விருத்தி)
இந்த இராசிப் பொருத்தம் இருந்தால் தான் வம்சம் விருத்தியாகும்.

பெண்ணும் புருஷனும் ஒரு ராசியாயினும்; பெண் ராசிக்கு புருஷன் ராசி 6-க்கு மேற்படினும் உத்தமம்.
பெண் ராசிக்கு புருஷன் ராசி 2-ஆயின் மிருத்து; 3-ஆயின் துக்கம்; 4-ஆயின் தரித்திரம்; 5-ஆயின் வைதவ்வியம்; 6-ஆயின் புத்திர நாசம். ரிஷபம் முதலான இரட்டை ராசிகளில் பிறந்த பெண்ணுக்கு 6-ம் ராசி புருஷ ராசியாக வரினும் மத்திமமான பொருத்தத்தை கொடுக்கும்.

பெண்ணும் புருஷனும் ஒரே ராசியாகும் போது பெண் நட்சத்திரத்திற்கு புருஷ நட்சத்திரம் பிந்தியதாகிற் பொருந்தாது.

7. ராசி அதிபதிப்-பொருத்தம்: (சந்ததி விருத்தி)
இராசியாதிபதிப் பொருத்தம் இருந்தால் தான் குடும்பம் சுபீட்சமாக வாழமுடியும். இப் பொருத்தம் இருந்தால் தம்பதிகளிடயே நல்ல ஒற்றுமையும் சந்தோஷமான வாழ்க்கையும் அமையும. பொருத்தம் மத்திமமாயின் அவ்வப்போது சிறிய கருத்து வேறுபாடுகள் வந்து போகும். புத்திரர்கள் யோகமாக வாழ்வார்கள்.

இருவர் இராசிகளும் ஒருவராயினும்; ஒருவருக்கொருவர் மித்துருக்களாயினும் உத்தமம். மித்துருக்கள் அல்லாதவை சத்துருக்கள் - பொருந்தாது.

யார் யாருக்கு நண்பர்கள்..? பழைய பாடம் --- again ..!!

8. வஸ்யப்-பொருத்தம்: (அன்யோன்ய வசியம் - இணைபிரியா அன்பு)
கணவன் மனைவி இருவரும் ஒருவரை ஒருவர் சமமாக விரும்பி, அன்பின் பிணைப்பிலும் அணைப்பிலும் இனைந்து இரண்டறக் கலக்கும் தன்மையை அடைவதற்கு இந்த வசியப் பொருத்தம் சிறப்பாக அமைந்திருக்க வேண்டும்.

பெண்ராசிக்கு புருஷ ராசி வசியமானால் உத்தமம். புருஷ ராசிக்கு பெண் ராசி வசியமானால் மத்திமம். வசியமில்லாதது பொருந்தாது. இதுவும் ஒரு முக்கியமான பொருத்தம்.

பெண் ராசி : ஆண் ராசி
மேஷம் : சிம்மம் , விருச்சிகம்
ரிஷபம் : கடகம், துலாம்
மிதுனம் : கன்னி
கடகம் : விருட்சிகம், தனுசு
சிம்மம் : மகரம்
கன்னி : ரிஷபம், மீனம்
துலாம் : மகரம்
விருச்சிகம் : கடகம், கன்னி
தனுசு : மீனம்
மகரம் : கும்பம்
கும்பம் : மீனம்
மீனம் : மகரம்

9. ரச்சுப் பொருத்தம்: (தீர்க்க சுமங்கலியாய் இருப்பது) ரச்சுப் பொருத்தம் மிக முக்கியமானது.

கணவனாக நிச்சயம் செய்பவரின் ஆயுள் நிலையை உறுதிப் படுத்துவதற்கு இந்தப் பொருத்தம் பார்ப்பது மிகவும் அவசியமானதாகும். ஏனென்றால், பெண்ணின் மாங்கல்ய பாக்கியத்தை இந்தப் பொருத்தத்தை ஆராய்து பார்த்துத்தான் நிச்சயிக்க வேண்டியுள்ளது.

சிரோ ரச்சு (சிர்ச்சு): மிருகசீரிடம், சித்திரை, அவிட்டம்
கண்ட ரச்சு (கழுத்து): ரோகினி, திருவாதிரை, அஸ்தம், சுவாதி, திருவோணம், சதயம்
நாபி ரச்சு (உதரம்) : கிருத்திகை , புனர்பூசம், உத்திரம், விசாகம், உத்திராடம், பூரட்டாதி
ஊரு ரச்சு (துடை) பரணி, பூசம், பூரம், அனுஷம், பூராடம், உத்திரட்டாதி
பாத ரச்சு (பாதம்): அஸ்வினி, ஆயில்யம், மகம், கேட்டை, மூலம், ரேவதி

ஸ்த்ரீ, புருஷ நட்சத்திரங்கள் ஒரே ரச்சுவாக இல்லாமல் இருப்பது உத்தமம்.

ஒரே இரச்சுவானால்: பொருந்தாது.

சிரோ ரச்சு: புருஷன் மரணம்
கண்ட ரச்சு: பெண் மரணம்

நாபி ரச்சு: புத்திர தோஷம்
ஊரு ரச்சு: பண நஷ்டம்
பாத ரச்சு: பிரயாணத்தில் தீமை

10. வேதைப்-பொருத்தம் (இடையூறு அற்ற இன்ப வாழ்க்கை)
தம்பதியின் வாழ்க்கையில் ஏற்படக்கூடிய துன்பங்களையும் துக்கங்களையும் முன்னதாகவே அறிந்து அவற்றை விலகச் செய்து, அவர்களை இன்பமாக வாழவைக்கும் சக்தியுடையது இந்த வேதைப் பொருத்தமாகும்.

வேதை என்றால் ஒன்றிற்கொன்று தாக்குதல் என்று பொருள். எனவே வேதையில் இருக்கும் நட்சத்திரங்கள் பொருந்தாது மாறி இருப்பின் பொருத்தம் உண்டு. ஸ்திரி புருஷருடைய நட்சத்திரங்கள் கீழே குறித்தவாறு ஒன்றிற்கொன்று வேதையாய் இருப்பின் பொருந்தாது.

அஸ்வினி - கேட்டை
பரணி - அனுஷம்
கார்த்திகை - விசாகம்
ரோகினி - சுவாதி
திருவாதிரை - திருவோணம்
புனர்பூசம் - உத்திராடம்
பூசம் - பூராடம்
ஆயிலியம் - மூலம்
மகம் - ரேவதி
பூரம் - உத்தராட்டாதி
உத்திரம் - பூரட்டாதி
அஸ்தம் - சதயம்
மிருகசீரிடம், சித்திரை, அவிட்டம் ஒன்றிற்கொன்று வேதை

இந்த 10-பொருத்தங்களையும், ஜாதகங்களின் கிரக நிலைகளையும் கவனத்தில் கொண்டு விவாஹ பொருத்தம் தீர்மானிக்கப்படல் வேண்டும்.

ஜோதிட சாஸ்திர விதிப்படி , மனிதனாக பிறந்த ஒரு சாதகனின் பூர்வ ஜென்ம கர்மாக்களை தரம் பிரித்து , பலா பலன்களை தெளிவாக தருவது - நவ கிரகங்களே. ஒன்பது கிரகங்களும் , அதற்கேற்ப பன்னிரண்டு வீடுகளில் அமர்ந்து , இந்த நேரத்தில் , இந்த பலன்கள் என்று தெளிவாக கிடைக்க வைக்கின்றன.

என்னுடைய அனுபவத்திலும், ஆராய்ச்சியிலும் - கிடைத்த ஜாதகங்களை ஒப்பிட்டுப் பார்க்கும்போது , பெரும்பாலான நடந்து முடிந்த அசம்பாவிதங்களுக்கு - நவ கிரகங்களின் பங்களிப்பு பெரும்பாலும் ஒத்துப் போவதை உணர முடிந்தது. அதை வைத்து எனக்கு கிடைத்த சிறு ஞானத்தால் , வர விருக்கும் இன்னல்களை

முடிந்த அளவுக்கு , தகுதி உள்ள அன்பர்களுக்கு பக்குவமாக எடுத்துக் கூறி - ஓரளவுக்கு தவிர்த்தும் இருக்கிறேன். அதற்க்கு அந்த ஜாதகரின் கிரக ஒத்துழைப்பும் இருத்தல் அவசியம். அவர்களுக்கு தெய்வ நம்பிக்கையும், செய்யும் பரிகாரத்தை முழு நம்பிக்கையுடன் , முழு மனதோடு செய்வதும் முக்கியம்.

கோடிகளில் பணம் கொட்டிக் கிடந்தாலும், நோய் என்று ஒன்று வந்தால் , அதுவும் எளிதில் தீராத வியாதி என்றால் முடிந்தது கதை. விரக்தியின் உச்சத்துக்கே சென்று விடுவர். செய்த கருமங்கள் இப்போவாவது கழிந்தனவே என்று நினைத்து அடுத்து அதை சரி செய்ய என்ன செய்ய வேண்டுமோ, அதை செய்ய வேண்டும்.

ஏராளமான நிஜ சம்பவங்கள், நம் வாசகர்கள் அனைவருக்கும் பெரிய படிப்பினையாக இருக்கும். அதைப் கொஞ்சம் கொஞ்சமாக பின்வரும் கட்டுரைகளில் காணலாம்.

இன்று நாம் பார்க்க விருப்பது , இன்றைய நடைமுறை ஜோதிடர்கள் - பொதுவாக விதிப்படி காணும் விஷயங்கள். நமக்கும் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்கள். ஆனால், ஒரே ஒரு விஷயம் நன்றாக உணர்ந்து கொள்ளுங்கள். ஜோதிட விதிகள் உங்களுக்கு தெரிந்து கொள்ள மட்டுமே. ஆனால், இறை வழிபாடும், குருவருளும் இருந்தால் , ஒரு ஜாதகத்தை பார்க்கும் போதே உங்களுக்கு விதிகளையும் தாண்டி , ஒரு சில பலன்கள் உங்கள் காதுகளில் யாரோ ஒருவர் ஓதுவதுபோல ஒலிக்கும். அவற்றில் பெரும்பாலானவை விதிகளுக்கு முரண்பட்டு இருந்தாலும் , முற்றிலும் உண்மையாகவும் இருக்கும். அந்த ஜாதகர் நீங்கள் கூறம் ஒரு குறிப்பிட்ட பலனைக் கேட்டு , அப்படியே ஆடிப்போய் விடுவர். அதற்க்கு அந்த ஜோதிடர் , முறையான பயிற்சி மேற்கொண்டு , இறை வழிபாடு செய்தலும் அவசியம்.

ஒருவரது ஜாதகத்தில் லக்னத்திற்கு ஆறாமிடம் ரோக ஸ்தானம் எனப்படும். இந்த ஆறாமிடம் மூலம் குறிப்பிட்ட ஜாதகர் எத்தகைய நோய்களுக்கு ஆட்படுவார் என்பதை அறியலாம். ஆறாமிடத்தில் அமர்ந்துள்ள கிரகங்கள் மூலமும், ஆறாமிடத்தை பார்வை செய்யும் கிரகங்கள் மூலமும், அந்த ஜாதகர் எத்தகைய நோய்களுக்கு ஆட்படுவார் என்பதையும் அறிய இயலும். இந்த நோய்களின் தாக்குதல் எப்போது பலமாக தன் இயல்பைக் காட்டும், எந்த காலக் கட்டங்களில் கட்டுப்பாட்டில் இருக்கும் என்பதையும் அறியலாம்.

**சூரியன்**: மலச்சிக்கல், அஜீரணம், தூக்கமின்மை, கண் நோய்கள், ரத்த அழுத்தம், இதய நோய், ஆஸ்துமா, வயிற்றில் பூச்சிகள் போன்ற நோய் களையும் ஜுரம் போன்றவை.

**சந்திரன்**: மனநோய்கள், உணர்ச்சி வசப்படுதல், அதிவேக இதயத் துடிப்பு, ரத்த அழுத்தம், காச நோய், ரத்த சோகை, சளி, கபம், பாலியல் நோய்கள் இரைப்பைப் புண், நீரிழிவு, குடல் புண் போன்றவை.

**செவ்வாய்**: மூலநோய், நீரிழிவு, இரைப்பை மற்றும் குடல் நோய்கள், மன அழுத்தம், தோல் வியாதிகள், இதய நோய், நரம்புத் தளர்ச்சி, அம்மை, விபத்து மற்றும் ஆயுதங்களால் பாதிப்புகள்.

**புதன்**: இதய நோய்கள், ரத்த அழுத்தம், வயிற்றுப்புண், புற்றுநோய், தோல் நோய்கள், நரம்பு தளர்ச்சி, இரைப்பை புண் போன்றவை.

**குரு**: தொண்டை சம்பந்தமான நோய்கள், தைராய்டு, அம்மை, முடக்கு வாதம், காமாலை, நரம்பு சம்பந்தப்பட்ட வியாதிகள், பக்க வாதம், கீழ் வாதம், நீரிழிவு போன்றவை.

**சுக்கிரன்**: கண், காது, மூக்கு நோய்கள். நுரையீரல் நோய், இருமல், குடல்புண், இருதய நோய், ரத்த அழுத்தம், பாலியல் தொடர்பு வியாதிகள் போன்றவை.

**சனி**: மனநோய், கை கால் வலிப்பு, மூளை பாதிப்பு, தோல் நோய், நீண்ட கால வியாதிகள், சிறுநீரக நோய், பித்தம், குடல் நோய், விபத்தால் பாதிப்பு போன்றவை.

**ராகு**: அதிக அமிலம் சுரத்தல், வயிறு கோளாறுகள், அஜீரணம், தூக்கமின்மை, மூளை நோய், குடல் புண், தோல் வியாதிகள் போன்றவை

**கேது**: புற்றுநோய், வாதம், தோல் நோய்கள், காலரா, நரம்புத் தளர்ச்சி, சிறுநீரகக் கோளாறு போன்றவை.

**நோய்களும் அவற்றை குணப்படுத்தும் நவரத்தின கற்களும்**:

மேஷ லக்னத்தில் பிறந்தவர்கள் ரோகாதிபதியான புதனுக்குரிய மரகதத் துடன், நோய் தந்த கிரகத்திற்குரிய ரத்தினத்தையும் இணைத்து, இடது கை மோதிர விரலில் அணிய நோய் கட்டுக்குள் வரும்.

ரிஷப லக்னத்தில் பிறந்தவர்கள் ரோகாதிபதியான சுக்கிரனுக்குரிய வைரத்துடன் நோய் தந்த கிரகத்திற்குரிய ரத்தினத்தையும் இணைத்து இடது கை மோதிர விரலில் அணிய, நோய் கட்டுக்குள் வரும்.

மிதுன லக்னத்தில் பிறந்தவர்கள் ரோகாதிபதியான செவ்வாய்க்குரிய ஜாதி சிகப்பு பவளத்துடன் நோய் தந்த கிரகத்திற்குரிய ரத்தினத்தையும் இணைத்து, இடது கை மோதிர விரலில் அணிய, நோய் கட்டுக்குள் வரும்.

கடக லக்னத்தில் பிறந்தவர்கள் ரோகாதிபதியான குருவிற்குரிய கனக புஷப

ராகத்தை நோய் தந்த கிரகத்திற்குரிய ரத்தினத்தையும் இணைத்து, இடது கை மோதிர விரலில் அணிய, நோய் கட்டுக்குள் வரும்.

சிம்ம லக்னத்தில் பிறந்தவர்கள் ரோகாதிபதியான சனிக்குரிய நீலத்தை, நோய் தந்த கிரகத்திற்கு உரிய ரத்தினத்தையும் இணைத்து, இடது கை மோதிர விரலில் அணிய நோய் கட்டுக்குள்; வரும்.

கன்னி லக்னத்தில் பிறந்தவர்கள் ரோகாதிபதியான சனிக்குரிய நீலத்தை, நோய் தந்த கிரகத்திற்குரிய ரத்தினத்துடன் இணைத்து, இடது கை மோதிர விரலில் அணிய நோய் கட்டுக்குள் வரும்.

துலாம் லக்னத்தில் பிறந்தவர்கள் ரோகாதிபதியான குருவுக்கு உரிய கனக புஷபராகத்தை நோய் தந்த கிரகத்திற்கு உரிய ரத்தினத்துடன் இணைத்து, இடது கை மோதிர விரலில் அணிய நோய் கட்டுக்குள் வரும்.

விருச்சிக லக்னத்தில் பிறந்தவர்கள் ரோகாதிபதியான செவ்வாய்க்குரிய சிகப்பு பவளத்தை நோய் தந்த கிரகத்திற்கு உரிய ரத்தினத்துடன் இணைத்து, இடது கை மோதிர விரலில் அணிய நோய் கட்டுக்குள் வரும்.

தனுசு லக்னத்தில் பிறந்தவர்கள் ரோகாதிபதியான சுக்கிரனுக்குரிய வைரத்தை, நோய் தந்த கிரகத்திற்குரிய ரத்தினத்துடன்; இணைத்து, இடது கை மோதிர விரலில் அணிய நோய் கட்டுக்குள் வரும்.

மகர லக்னத்தில் பிறந்தவர்கள் ரோகாதிபதியான புதனுக்குரிய மரக தத்தை நோய் தந்த கிரகத்திற்கு உரிய ரத்தினத்துடன் இணைத்து, இடது கை மோதிர விரலில் அணிய நோய் கட்டுக்குள் வரும்.

கும்ப லக்னத்தில் பிறந்தவர்கள் ரோகாதிபதியான சந்திரனுக்குரிய ஜாதி முத்தினை, நோய் தந்த கிரகத்திற்கு உரிய ரத்தினத்துடன் இணைத்து, இடது கை மோதிர விரலில் அணிய நோய் கட்டுக்குள் வரும்.

மீன லக்னத்தில் பிறந்தவர்கள் ரோகாதிபதியான சூரியனுக்குரிய மாணிக்கத்தை, நோய் தந்த கிரகத்திற்குரிய ரத்தினத்துடன் இணைத்து, இடது கை மோதிர விரலில் அணிய நோய் கட்டுக்குள் வரும்.

**கிரகங்களும் - அவற்றை சாந்திசெய்யும் நவரத்தின கற்களும்**:

சூரியன் - மாணிக்கம்
சந்திரன் - ஜாதி முத்து
செவ்வாய் - சிகப்பு பவளம்
புதன் - மரகதம்
குரு - கனக புஷபராகம்
சுக்கிரன் - வைரம்
சனி - நீலம்
ராகு - கோமேதகம்
கேது - வைடூரியம்

இரண்டு ரத்தினங்களை இணைக்கும்போது, அவைகளுக்குள் பேதை ஏற் படுமானால், நடுவில் ஏதேனும் சாதாரண கல்லினை வைக்க வேண்டும். மோதிரம் அடியில் திறப்புடன் ஓபன்- செட்டிங் முறையில் அமைக்கப்பட வேண்டும். நோயின் தாக்கம் தீர்ந்தவுடன், மோதிரத்தை எடுத்துவிட வேண் டும். மேலே குறிப்பிட்டவை பொதுவானது ஆகும்.

தனிப்பட்ட ஜாதகங் களில், கிரகங்களின் நிலையை ஆராய்ந்து, நவரத்தினங்களை உரிய முறையில் அணிந்து, நன்மைகளைப் பெறலாம்.
எண் கணிதம் கொஞ்சம் தெரிந்து கொள்வதும் , ஒரு நல்ல ஜோதிடருக்கு அழகு. எந்த வகையில் எண் கணித ஞானம் வேண்டும் என்பதை மூன்றாம் எண்ணை , குரு பகவானை , ராசி கற்களை உதாரணமாக வைத்து இன்று பார்க்கலாம். மஞ்சள் நிறமுடைய புஷ்பராகக்கல் , மூன்றாம் எண் குருவிற்கு உரியது.

3, 12, 21, 30 ஆகிய தேதிகளில் பிறந்தவர்களின் எண் 3ஆம் எண்ணாகும். இந்த மூன்றாம் எண்காரர்கள் பொதுவாக வசீகரமானவர்கள். ஆண்கள் கம்பீரமாக இருப்பார்கள். இந்த எண்ணில் பிறந்த பெண்கள் அழகாக இருப்பார்கள். சிலர் திரும்பிப் பார்க்க வைக்கும் அழகுடன் இருப்பார்கள்
ஜோதிடமாகட்டும் அல்லது எண் ஜோதிடமாகட்டும், குருவிற்கு முக்கியமான பங்கு உள்ளது. சூரியனிட மிருந்து தான் பெறும் சக்தியைவிடப் பன்மடங்கு சக்தியை வெளிபடுத்தும் கிரகமாகும் அது.C G L S என்கிற எங்கள் குரு பகவானுக்கு உரிய எழுத்துக்கள். நீங்கள் தொழில் தொடங்க ஆலோசனை கூறினால் , குருவுக்குரிய இந்த எழுத்துக்களில் தொடங்கினால் வெற்றி நிச்சயம்.

நியாயத்தையும், தர்மத்தையும் போதிக்கும் கிரகம் அது. அதனால்தான் அதற்குப் பிரஹஸ்பதி அல்லது வாத்தியார் என்ற பெயரும் உண்டு. பண்டைய நூல்கள் குருவை முக்கியப்படுத்திப் பல செய்திகளைச் சொல்கின்றன. சூரியன், சந்திரன், செவ்வாய் ஆகிய மூன்று கிரகங்களும் குருவிற்கு நட்புக் கிரகங்களாகும். தனுசு,

மீனம் ஆகிய இரண்டு ராசிகளும் குருவிற்குச் சொந்த இடங்களாகும். கடகம் உச்சமான இடம். மகரம் நீசமான இடம்.

பாக்கியஸ்தானம் எனப்படும் ஒன்பதாம் வீட்டிற்குக் காரகன் குரு. தந்தைக்குக் காரகன் சூரியன் என்றபோதிலும். ஒன்பதாம்வீட்டின் மற்ற செயல்பாடுகளுக்கெல்லாம் குருவே அதிபதி.

ஒன்பதாம் வீடுதான் அதிர்ஷ்டத்தைக்குறிக்கும் வீடு. அதிர்ஷ்டத்திற்கு அதிபதி குரு. அதை மறக்க வேண்டாம். ஜாதகத்தில் குரு, கேந்திர கோணங்களில் இருப்பது நன்மை பயக்கும்!

நுண்ணறிவு, திருமணம், வாரிசு, ஆகியவற்றிற்கும் குருவின் அமைப்பு முக்கியம். பெண்ணின் ஜாதகத்தில் குருவின் அமைப்பைவைத்துத்தான் அவளுக்கு நல்ல கணவன் அமைவான். ஜாதகத்தில் குரு மறைவிடங்களில் இருந்தால் திருமணம் தாமதமாகும்.

சனி, ராகு அல்லது கேதுவுடன் கூட்டாகவோ அல்லது எதிரெதிர் பார்வையுடனோ இருக்கும் குருவால், திருமண வாழ்க்கையில் மகிழ்ச்சி இருக்காது. மிதுனம், கன்னி லக்கினக்காரர்களுக்கு, அதுபோன்ற அமைப்பு இருந்தால், சிலரது திருமணம் விவாகரத்தில் முடிந்துவிடும்.

மூன்றாம் எண்ணில் பிறந்தவர்கள் கடினமான உழைப்பாளிகள். விடாமுயற்சியுடன் செயல்படக்கூடியவர்கள். தங்களைத் தாங்களே பலவிதமான செயல்களில் ஈடுபடுத்திக் கொள்ளக்கூடியவர்கள். சோம்பேறித்தனம் என்பது சிறிதும் இருக்காது. அதீதமாகப் பொருள் ஈட்டக்கூடியவர்கள். அதாவது சம்பாதிக்கக்கூடியவர்கள்.

அறவழிகளில் ஈடுபாடு உடையவர்கள். கடமையே வெற்றிக்கு வழி என்பதிலும் உறுதியாக இருக்கக் கூடியவர்கள். செயல்படக்கூடியவர்கள். எப்போதும் சுறுசுறுப்பாக இருக்கக்கூடியவர்கள். ஓய்வு என்று சொல்லி ஒரு இடத்தில் சும்மா இருக்கமாட்டார்கள். செய்யும் வேலை அலுப்பைத் தந்தாலும், அதை விடாது செய்து முடிக்கும் ஆற்றலைக் கொண்டவர்கள்.

எந்த வேலையை மேற்கொண்டாலும், அதை வெற்றிகரமாகச் செய்து முடிக்கக்கூடியவர்கள். அந்த விதமான செயல்பாடே அவர்களுக்கு அதீதமான தன்னம்பிக்கையைக் கொடுக்கும். அந்தத் தன்னம்பிக்கைதான் அவர்களின் தாரக மந்திரம். சொன்ன சொல்லையும், கொடுத்த வாக்கையும் காப்பாற்றக் கூடியவர்கள். அதனால் பலரது நம்பிக்கைக்கும் ஆளாகியிருப்பவர்கள். எதிலும் ஒரு ஒழுங்கை விரும்புபவர்கள். கடமை, கண்ணியம், கட்டுப்பாடு என்று சிறப்புடன் வாழ்பவர்கள். அன்பு, பாசம், பரிவு, ஆலோசனை என்று அனைத்தும்

இவர்களைத் தேடி வரும். சமூக அந்தஸ்தும் தேடிவரும்.

ஆரோக்கியமான உடற்கட்டு இருக்கும். வாழ்க்கையுடன் இயைந்து போவார்கள். ஆக்கபூர்வமானவர்கள். மகிழ்ச்சியை உடையவர்கள். நகைச்சுவை உணர்வுடையவர்கள். மற்றவர்களுக்குத் தூண்டுதலாக விளங்கக்கூடியவர்கள். மற்றவர்களுக்கு உதவக்கூடியவர்கள்.

ஒற்றிலக்க எண்களில் - அதாவது 1,3,5,7,9 எனும் எண்களில் 3ஆம் எண்தான் அதிக சக்தியுள்ள எண். கடுமையான உழைப்பினால், சிலருக்கு, மன அழுத்தங்கள் உண்டாகும். சில இடையூறுகள் ஏற்படும். ஆனால் இந்த எண்ணிற்கு இயற்கையாகவே உள்ள அதிர்ஷ்டம்தரும் அமைப்பினால், அவைகள் எல்லாம் அவ்வப்போது களையப்பட்டுவிடும்.

தேவையானபோது இந்த எண்காரர்களுக்குப் பணம் கிடைத்துக் கொண்டே இருக்கும். செய்யும் வேலையில் அல்லது தொழிலில் தலைமை ஏற்கும் நிலைக்கு உயர்வார்கள்.

நினைவில் கொள்ள வேண்டிய தேதிகள்: 3,12, 21 மற்றும் 30. அதுபோல 6,9,15,18,24 & 27 தேதிகளும் நன்மை பயக்கக்கூடியதாகவே இருக்கும். வியாழக்கிழமை உரிய கிழமையாகும். அதுபோல திங்கள், செவ்வாய் & புதன் கிழமைகளும் இந்த எண்காரர்களுக்குச் சாதகமான கிழமைகளே!

இந்த எண்காரர்களுக்குச் சாதகமான நிறம் மஞ்சள். மஞ்சள் நிறத்தில் துண்டு, படுக்கைவிரிப்பு, தலயணை உறை, கைக்குட்டை என்று எல்லாவற்றிலும் மஞ்சள் நிறத்தையே போற்றி வைத்துக்கொள்ளலாம்.

நவரத்தினங்களில் மஞ்சள் நிறமுடைய புஷ்பராகக்கல் நன்மை பயக்கும்!
உடல் நலம்: இந்த எண்காரர்களுக்கு, நீரழிவு நோய், மஞ்சள்க் காமாலை நோய் போன்றவைகள் வரக்கூடும். எச்சரிக்கையாக இருக்கவேண்டும்.

இந்த எண்காரர்களின் வாழ்க்கையில், 21, 30, 33, 36, 48, 57, 66, ஆகிய வயதில் வாழ்க்கை ஏற்ற முடையதாக இருக்கும்

**<u>பாபகர்த்தாரி யோகம்</u>**

முதல் வீடு எனப்படும் லக்கினத்தைப் பற்றி ஒரு அடிப்படை விதியை நீங்கள் அறிதல் அவசியம். மேலே கொடுத்துள்ள அட்டவணையை பார்த்தீர்கள் என்றால் ஒன்று தெள்ளத் தெளிவாக விளங்கும். சூரியனுக்கும், சந்திரனுக்கும் மட்டும் தலா ஒரு வீடுதான்.

மற்ற ஐந்து கிரகங்களுக்கும், அதாவது புதன், சுக்கிரன், செவ்வாய், குரு, சனி ஆகிய ஐந்து கிரகங்களுக்கும் இரண்டு வீடுகள் இருக்கும். பலன்கள் பெரும்பாலும் அந்த கிரகங்களின் குணங்களையும் உள்ளடக்கியிருக்கும். உதாரணமாக மிதுனம், கன்னி ஆகிய லக்கினக்காரர்களுக்குப் புதன்தான் அதிபதி என்பதால் அவர்கள் இயற்கையாகவே புத்திசாலிகளாக இருப்பார்கள்.அதேபோல சனி அதிபதியாக இருக்கும் மகரம், கும்பம் ஆகிய லக்கினத்தைச் சேர்ந்தவர்கள் கடும் உழைப்பாளிகளாக இருப்பார்கள்.சுக்கிரன் அதிபதியாக இருப்பவர்கள்.கலைகளில் ஆர்வமுடையவர்களாகவும், குரு அதிபதியாக இருப்பவர்கள், மனிதநேயம், தர்மசிந்தனை மிக்கவர்களாகவும் இருப்பார்கள். இதெல்லாம் பொது விதி!.

1. லக்கினத்திற்கு இரண்டு பக்கமும் - அதாவது முன்னும், பின்னும் உள்ள வீடுகளில் - சுபக் கிரகங்கள் இருந்தால் ஜாதகன் ராஜயோகம் உடையவனாக இருப்பான்.

2. அதேபோல் லக்கினத்திற்கு இரண்டு பக்கமும் பாவக் கிரகங்கள் நின்றால் அல்லது இருந்தால் - ஜாதகன் அதிர்ஷ்டமில்லாதவன். தரித்திரயோகம். வாழ்க்கை போராட்டங்கள் நிறைந்ததாக இருக்கும் அவன் அல்லது அவள் எதையும் போராடித்தான் பெற வேண்டும்.

இரண்டு VIP வீடுகளுக்கு நடுவில் உங்கள் வீடு இருந்தால் எப்படி இருக்கும் என்றும் அல்லது இரண்டு பேட்டை தாதாக்களின் வீடுகளுக்கு நடுவில் உங்கள் வீடு இருந்தால் எப்படி இருக்கும் என்றும் கற்பனை செய்து பாருங்கள், அப்போது உண்மை உங்களுக்குப் புலப்படும்.

இந்த விதி தலையான விதியாகும்.

இது லக்கினம் என்று மட்டுமில்லை, மற்ற எல்லா பாவங்களுக் குமே இது பொருந்தும்.

இதே பலன்தான் ஏழாம் வீடு எனப்படும் திருமண வீடாக இருந்தாலும் சரி, பத்தாம் வீடு எனப்படும் தொழில்/வேலை வீடாக இருந்தாலும் சரி, நான்காம் வீடு எனப்படும் தாய், கல்வி, சுகம் ஆகியவற்றிற்கான வீடாக இருந்தாலும் சரி

அல்லது ஒன்பதாம் வீடு எனப்படும் தந்தை, முன்னோர் சொத்து,
பாக்கியம் ஆகியவை சம்பந்தப்பட்ட வீடாக இருந்தாலும் சரி
பலன் அதற்கு ஏற்றார் போலத்தான் இருக்கும்.

ஜாதகத்தை அலசிப் பார்க்கும் போது இந்த விதியை நினைவில்
கொண்டு அலச வேண்டும்.

அந்த விதியின் பெயர் பாபகர்த்தாரி யோகம்

1.லக்கின அதிபதி பத்தாம் வீட்டிற்கு உரியவன்
பதினொன்றாம் வீட்டிற்கு உரியவன் ஆகிய மூவரும்
நல்ல நிலைமியில் இருந்தால் ஜாதகன் வியாபாரம் செய்து அல்லது
தொழில் செய்து அல்லது பெரிய நிறுவனத்தில் உயர் வேலையில்
இருந்து நிறையப் பொருள் ஈட்டுவான்.

2.லக்கின அதிபதி பத்தாம் வீட்டிற்கு உரியவன்
இருவர் மட்டும் நன்றாக இருந்தால் உத்தியோகம் பார்த்து வசதியாக
வாழ்வான்.

3.லக்கின அதிபதி பலவீனமாக இருந்தால் - அதாவது
ஆறு எட்டு, பன்னிரெண்டு ஆகிய இடங்களில் மறைந்து விட்டால்
அல்லது பத்தாம் வீட்டிற்கு உரியவன்அப்படியிருந்தாலும்
ஜாதகனுக்குக் கஷ்ட ஜீவனம்தான். மற்ற கிரகங்கள் வலுவாக இருந்தால்
விதிவிலக்காக சுக ஜீவனமாக இருப்பான்.

4.லக்கின அதிபதி பத்தாம் வீட்டிற்கு உரியவன்
இருவரும் பலம் பொருந்தி கேந்திர திரிகோணங்களில்
இருந்தால் ஜாதகன் தான் பிறந்த ஊரில் அல்லது இருக்கும் ஏரியாவில்
பிரபலமாக இருப்பான்.பலருக்கும் உதவி செய்பவனாக இருப்பான்.

*****************************************************************************************************

# நவகிரகங்கள்- கேது

கேது சூரியனை ஒரு முறை சுற்றிவர 18 1/2 ஆண்டுகள் எடுத்துக்கொள்ளும்.இராகுக்கு போல் கேதுவுக்கும் சொந்த வீடு கிடையாது. தான் அமர்ந்த வீட்டையே சொந்த வீடாக எடுத்துக்கொள்ளும். ராகு உள்ள பண்புகள் அனைத்தும் கேதுவுக்கும் பொருந்தும்.
பாட்டியார்,மாந்தரீகம்,ஞானம்,மோட்சம்.,விநாயகர் வழிபாடு,விரக்தியடைதல்,விபசாரம் செய்தல்,தற்கொலை செய்யும் எண்ணம்,புண்ணிய ஸ்தல யாத்திரை.சிறைப்படல்,ஞானிகள் தரிசனம் ஆகியவற்றிக்கு கேது காரணம் ஆகிறார். இவருக்கு ஞானகாரகன் என்று பெயர். வேதாந்த அறிவு நுட்பங்களுக்கும், மோட்சத்திற்க்கும், எந்த ஒரு பிரச்சனையிலிருந்து விமோச்சனம் பெறுவதற்க்கும் காரகத்துவம் உள்ளது கேது. எளிமை, கடுமை இரண்டுக்கும் உடையதும், உலக பந்தங்களில் இருந்து விடுபட வைப்பதும் கேதுவே. வியாதியில் இருந்து நிவாரணம் தருவதும், பகைவரை முறியடிக்க செய்வதும் கேது. கோபத்தில் நடைபெறும் தவறுகளுக்கும் கேதுவே காரணம்.

கேதுவைப்போல கெடுப்பவன் இல்லை என்பது ஜோதிட பழமொழி. விபத்துகளையும். தாகாத சகவாசத்தையும் வழங்குவதும் கேதுவே.ரிஷபத்தில் நீசம், விருச்சிகத்தில் உச்சம். பஞ்ச பூதங்களில் ஜலம். கேது ஞானமாரக்கத்தில் ஆன்மீகத்தை வழங்குபவர். ஞான காரகன் என்ற புகழைப் பெறுபவன் கேது. மோட்ச காரகனும் இவனே. மோகினியால் துண்டிக்கப்பட்ட ராகுவின் உடம்பே கேது. விஷ்ணுவை நோக்கித் தவம் இருந்ததால் பாம்பு உடலைப் பெற்றான். விஞ்ஞானம், மெய்ஞானம் ஆகிய அனைத்துத் துறைகளையும் தன் வசத்தில் வைத்திருப்பவன். நீச பாஷைகளில் தேர்ச்சியைத் தருவான். தாய் வழிப் பாட்டனுக்கு காரகன். கீழ்ப்பெரும்பள்ளம் கேதுவிற்கு உரிய தலம். கேது தோஷமுள்ளவர்கள் கீழ்ப்பெரும்பள்ளம் சென்று கேது பகவானை வழிபடலாம். செவ்வரளி மாலை அணிவித்து கொள்ளில் செய்த கொழுக்கட்டை மோதகம் நிவேதனம் செய்ய வேண்டும். கேது பகவானுக்குரிய தோத்திரம் பாடி வழிபட்டு வர எல்லா நலன்களும் பெறலாம்.

அருள்மிகு நாகநாதர் திருக்கோயில்
மூலவர்:நாகநாதர்
உற்சவர்:சோமாஸ்கந்தர்
அம்மன்/தாயார்:சவுந்தர்யநாயகி
தல விருட்சம்:மூங்கில்
தீர்த்தம்:நாகதீர்த்தம்
ஆகமம்/பூஜை:காமிகம்
பழமை:1000-2000 வருடங்களுக்கு முன்
புராண பெயர் ஊர்:கீழப்பெரும்பள்ளம்
மாவட்டம்:நாகப்பட்டினம்
மாநிலம்:தமிழ்நாடு
பாடியவர்கள்:

சிவராத்திரி, ஐப்பசியில் அன்னாபிஷேகம், பங்குனியில் வாசுகி உற்சவம். நவக்கிரகங்களில் இத்தலம் கேதுவுக்கு உரியது. காலை 6 மணி முதல் 12.30 மணி வரை, மாலை 3.30 மணி முதல் இரவு 8.30 மணி வரை திறந்திருக்கும். அருள்மிகு நாகநாதசுவாமி திருக்கோயில், (கேது தலம்), கீழ்ப்பெரும்பள்ளம் - 609 105. தரங்கம்பாடி தாலுகா, நாகப்பட்டினம் மாவட்டம். இத்தலவிநாயகர் அனுக்கிரக விநாயகர் என்ற பெயரில் அருள்பாலிக்கிறார். இக்கோயிலில் கேதுபகவான் தனிசன்னதியில் மேற்கு நோக்கி இருக்கிறார். பாம்பு தலையுடனும், மனித உடலுடனும் உள்ள இவர், சிம்ம பீடத்தில் இரு கை கூப்பி சிவசன்னதியை நோக்கி வணங்கிய கோலத்தில் இருக்கிறார். ஞானகாரகனான இவர் இங்கு அனுக்கிரக மூர்த்தியாக காட்சி தருகிறார். இவரைக் கண்டு பயப்படத் தேவையில்லை. தன்னால் பாதிக்கப்படும் ராசியினருக்கு இவர் நன்மையே செய்வார். படிப்பில் முன்னேற, குடும்பவிருத்தி பெற இவரிடம் வேண்டிக்கொள்ளலாம். ஜாதக ரீதியாக நாகதோஷம் உள்ளவர்கள் முதலில் நாகநாதரையும், பின் கேதுவையும் வழிபட வேண்டும். கேதுவிற்குரிய செவ்வரளி மலர் வைத்து, கொள்ளு சாத நைவேத்யம் படைத்து, ஏழு தீபம் ஏற்றி வணங்குவது விசேஷம். நரம்பு, வாயு தொடர்பான பிரச்சனை மற்றும் பயம் நீங்க, தொழில், வியாபாரம் சிறக்க, தம்பதியர் ஒற்றுமையுடன் இருக்க, ஆயுள் அதிகரிக்க, குடும்பத்தில் ஐஸ்வர்யம் நிலைக்க, தலைமுறை சிறக்க நாகநாதரையும், கேதுபகவானையும் வழிபடலாம். ஜாதகத்தில் கேது தசாபுத்தி நடப்பவர்கள், ஜென்மநட்சத்திரத்தில் பாலபிஷேகம் செய்து வழிபடலாம். கேது பகவானுக்கு கொள்ளு சாத நைவேத்யம் படைத்து, பலவர்ண வஸ்திரம் சாத்தி வழிபடுகிறார்கள்.

தலபெருமை: எமகண்டகால வழிபாடு: இக்கோயிலில் கேது பகவானுக்கு ராகுகாலம் மற்றும் எமகண்டத்தில் விசேஷ அபிஷேகம் மற்றும் பூஜை நடக்கிறது. அப்போது, 16 வகையான அபிஷேகம் மற்றும் ஹோமம் செய்தும், கொள்ளுப்பொடி, உப்பு, மிளகு கலந்த சாதத்தை நைவேத்யமாக படைத்தும், பலவண்ண வஸ்திரம் சாத்தியும், நல்லெண்ணெய் விளக்கு ஏற்றியும் வழிபடுகிறார்கள். கொள்ளு சாத பிரசாதத்தை இங்கேயே விநியோகித்துவிட வேண்டும். வீட்டிற்கு எடுத்துச்செல்லக்கூடாது. இதை கோயிலிலேயே செய்து தருகிறார்கள். இதற்கு ரூ.75 கட்டணம். சனி, திங்கள் மற்றும் ஜென்ம நட்சத்திரத்தில் இவரை வழிபடுவது விசேஷம். அபிஷேகத்திற்கு ரூ.450, தனிப்பட்ட முறையில் ஹோமம் நடத்துவதற்கு ரூ.3,500 கட்டணமாக வசூலிக்கின்றனர். தொழில், வியாபாரம் சிறக்கவும், வழக்கு, தம்பதியர் பிரச்னை, விபத்து, மரணபயம், நரம்பு, வாயு தொடர்பான பிரச்னைகள் நீங்கவும் கேதுவிடம் வேண்டிக்கொள்ளலாம். பங்குனியில் வாசுகி உற்சவம் நடக்கிறது. விழாவின் மூன்றாம் நாளில் கேதுவிற்கு, சிவன் காட்சி தந்த நிகழ்ச்சி நடக்கும். வருடத்தில் இவ்விழாவின்போதும், கேது பெயர்ச்சியின்போது மட்டுமே, கேது வீதியுலா செல்வார்.
விசேஷ ஹோமம்: ராகு கேது பெயர்ச்சியன்று விசேஷ ஹோமம் நடக்கிறது. அர்ச்சகர்களே இதை நடத்த உள்ளனர். இதில் பங்கேற்க கட்டணம் கிடையாது. கேதுவிற்கு உரிய எண் 7. எனவே, 16 வித பூஜை செய்து, 7 லட்சம் ஜபமந்திரம் சொல்லி, பின்பு கொள்ளு தானியம், கொள்ளினால் செய்யப்பட்ட பாயசம், சூர்ணம், வடை, சாதம், பொங்கல் மற்றும் கொள் உருண்டை என 7 விதமான நைவேத்யங்களை ஹோமத்தில் இடுகின்றனர். பக்தர்கள் 16 விதமான தானங்களை அந்தணர்களுக்கு செய்வதன் மூலம் பலனடையலாம். அன்று 7 ஆயிரம் பக்தர்களுக்கு அன்னதானமும் நடக்கிறது. இதற்குரிய பொருட்களையும் பக்தர்கள் கோயில் நிர்வாகத்திடம் முன்னதாகவே கொடுக்கலாம்.
இரட்டை சூரியன்: கேது இங்கு பிரதான மூர்த்தி என்பதால் நவக்கிரக சன்னதி இல்லை. கேது சன்னதிக்கு அருகில் இரண்டு சூரியன் சிலைகளும், சனீஸ்வரர் சிலையும் உள்ளன. உத்ராயண புண்ணிய காலத்தில் (தை-ஆனி) ஒரு சூரியனுக்கும், தெட்சிணாயண புண்ணிய காலத்தில் (ஆடி-மார்கழி) மற்றொரு சூரியனுக்கும் விசேஷ பூஜை நடக்கிறது.
**தல வரலாறு:** தேவர்களும், அசுரர்களும் அமுதம் பெற பாற்கடலை கடைந்தபோது வாசுகி என்ற நாகத்தை கயிறாக பயன்படுத்தினர். தொடர்ந்து பாற்கடலை கடைந்ததால் வாசுகி பலவீனமடைந்தது. ஒருகட்டத்தில் களைப்பால் விஷத்தை உமிழ்ந்தது. பயந்து போன தேவர்கள் சிவனிடம்

முறையிட்டனர். அவர் விஷத்தை விழுங்கி, தேவர்களை காப்பாற்றினார். தனது விஷத்தை, சிவன் விழுங்க வேண்டிய நிலை ஏற்பட்டதற்காக வாசுகி வருந்தியது. சிவஅபச்சாரம் செய்ததற்கு பிராயச்சித்தமாக தவமிருந்தது. வாசுகிக்கு காட்சி தந்த சிவன், பாவ விமோசனம் கொடுத்ததோடு, அதன் தியாக உணர்வை பாராட்டினார். அப்போது வாசுகி, தனக்கு அருள் செய்த கோலத்தில், தனக்கு காட்சி கொடுத்த இடத்தில் எழுந்தருள வேண்டும் என்று வேண்டியது. அதன் வேண்டுதலை ஏற்ற சிவன், நாகத்தின் பெயரைத் தாங்கி, "நாகநாதர்' என்ற பெயருடன் இத்தலத்தில் அமர்ந்தார்.

நிறம்-சிவப்பு மலர்-செவ்வல்லி

தானியம்-கொள்

திசை-வடமேற்கு

காரகம்-ஞானம்,மோட்சம்

உச்சம்-விருச்சகம்

நட்சத்திரங்கள்-அசுவனி,மகம்,முலம்

பால்-அலி

நட்பு-சனி,சுக்கிரன்

பகை-சூரியன்,சந்திரன்,செவ்வாய்

சமம்-புதன்,குரு

திசைகாலம்-7 ஆண்டுகள்

கோசரகாலம்-1 1/2 வருடம்

சித்திரகுப்தன் இவருக்கு அதி தேவதை,

பிரம்மன் பிரத்யதி தேவதை.

வடமேற்கு கேதுவிற்கு உரிய திசை.

வைடூர்யம் கேதுவிற்கு உகந்த ரத்தினம்.

கேது 1 ஆம் வீட்டில் இருந்தால் எதிரிகளால் பிரச்சினை உண்டாகும். தொழில் திறமை இருக்கும் உடம்பில் பிரச்சினை உருவாகும். சனியின் வீடுகளான மகரம் கும்பம் வீடுகளில் கேது தங்கியிருந்தால் இந்த நாட்டையை ஆளலாம். செவ்வாய் வீடான விருச்சகத்தில் தங்கி இருந்தாலும் அந்த யோகம் கிடைக்கும் பிற வீடுகளில் இருந்தால் அந்தளவுக்கு இருக்காது கஷ்டத்தில் தான் வாழ்க்கை வாழவேண்டிருக்கும். நான் பார்த்த வரையில் சனியின் வீடுகளில் அல்லது சனியுடன் கேது இருந்தால் அந்த ஜாதகன் பணக்காரகனாகத்தான் இருப்பார்.

கேது 2 ஆம் வீட்டில் இருந்தால் தன பிரச்சினை உண்டாகும். குடும்பத்தில் பிரச்சினை உண்டாகும். படிப்பில் அந்தளவுக்கு விருப்பம் இருக்காது.

குடும்பத்தில் செய்வினை கோளாறுகள் இருக்கும். குடும்பத்தில் நிம்மதி குறைந்து இருக்கும். திருமணம் தள்ளிக்கொண்டே போகும். திருமணம் முடிந்தவுடன் குழந்தை பேறும் தடை ஏற்படும்.

கேது 3 ஆம் வீட்டில் இருந்தால் தான் உண்டு தான் வேலை உண்டு என்று இருக்கமாட்டார்கள் இவர்களால் பிரச்சினை உருவாகிக்கொண்டே இருக்கும். இளைய சகோதர சகோதரிகள் இருக்கமாட்டார்கள். அப்படி இருந்தாலும் பிரச்சினை தான். கல்வியில் விருப்பம் இருக்காது. காமத்தின் மீது தீவிர ஈடுபாடு இருக்கும். நல்ல துணிவுடன் இருப்பார் எந்த காரியத்திலும் தடைகள் இருந்து கொண்டே இருக்கும். பரிகாரம் ராமேஸ்வரம் தான்.

கேது 4 ஆம் வீட்டில் இருந்தால் தாய் நலம் கிடைக்கும். தாயாரின் வழியில் பிரச்சினை தான். தாயாரின் உடன் பிறந்தவர்களில் யாராவது ஒருவர் திருமண வாழ்வில் பிரச்சினையில் இருப்பார்கள். தீய எண்ணங்களில் மனது செல்லும். பிறரின் ஆலோசனைகளை ஏற்க மாட்டார்கள். வாகனங்கள் வாங்குவதற்க்கு தடை ஏற்பட்டுக்கொண்டே இருக்கும். வானங்களால் பிரச்சினை உருவாகிக்கொண்டே இருக்கும். வீடு கோவிலுக்கு அருகில் இருக்கும் அதுவும் பிள்ளையார் கோவிலாக இருக்குகூடும்.

கேது 5 ஆம் வீட்டில் இருந்தால் கெட்ட குணம் இருக்கும். புத்தி கூர்மை இருக்காது. வயிற்று வலி ஏற்படும். மனதில் கவலை இருந்துக்கொண்டே இருக்கும். கடுமையான புத்திர தோஷத்தை ஏற்படுத்தும். அப்படியே குழந்தைகள் இருந்தாலும் அந்த குழந்தைகளால் இவர்களுக்கு ஒன்றும் நன்மை நடைபெறாது. விநாயகரை வழிபாட்டு மூலம் இன்பம் காணலாம்.

கேது 6 ஆம் வீட்டில் இருந்தால் பகைவர்கள் இருக்கமாட்டார்கள். இளமை காலத்தில் பிரச்சினை இருக்கும். உறவினர் மூலம் நல்ல மரியாதை இருக்கும். நல்ல சுகபோகமான வாழ்க்கை வாழலாம் கடக ராசியாக இருந்தால் மதுபானம் மீது கடுமையான ஈடுபாடு இருக்கும். ஜலதோஷம் அடிக்கடி ஏற்படும். தண்ணீரில் கண்டம் ஏற்படலாம் எச்சரிகை தேவை.

கேது 7 ஆம் வீட்டில் இருந்தால் களத்திரதோஷம் ஏற்படும். திருமணத்தில் சண்டை சச்சரவு இருக்கும். இளமை கால வாழ்க்கை நன்றாக இருக்காது. மனைவி அல்லாத பெண்களுடன் தொடர்பு ஏற்படும். திருமண வாழ்க்கையை நினைத்து மனக்கவலை அடையும். உடம்பில் நோய் ஏற்படும்.

கேது 8 ஆம் வீட்டில் இருந்தால் திருமண வாழ்வில் பிரச்சினை. ஆயுள் பலம் குறையும். உடம்பில் நோய் தோன்றி புண் வரும். முறை தவறி நடக்ககூடும். தற்கொலை எண்ணம் தோன்றும். பொதுவாக கேது இந்த வீட்டில் இருந்தால் நோய்களை தருவார்.

கேது 9 ஆம் வீட்டில் இருந்தால் பித்ரு தோஷம் வாழ்க்கையில் அனைத்து விஷயங்களிலும் தடைகள் ஏற்படும். தந்தையுடன் எல்லா நேரங்களிலும் சண்டை தான் போடுவார். தெய்வ பக்தி இருக்காது. நண்பர்கள் உதவி செய்வார்கள். மனநிலை ஒரே மாதிரியாக இருக்காது. பிற மதத்தவர் உதவி செய்வார்கள்.

கேது 10 ஆம் வீட்டில் இருந்தால் கலைகளில் ஈடுபாட்டுடன் இருந்து கலைஞராக இருப்பார். பிறர் மனதை நோகடிக்கமாட்டார். இரக்கமனம் இருக்கும். நல்ல தன்னம்பிக்கையுடன் தொழில் செய்து வெற்றிக்கொள்வார். மதங்களில் ஈடுபாட்டுடன் இருப்பார். தந்தை நலமுடன் இருக்கமுடியாது . தந்தை பணத்திற்க்காக கஷ்டபடுவார்.

கேது 11 ஆம் வீட்டில் இருந்தால் சொத்துக்கள் சேரும் செல்வநிலையில் நன்றாக வாழ்வார் நண்பர்களின் உதவி இருக்கும். சுகபோகங்களுக்கு குறை இருக்காது. நல்ல பணவரவு இருக்கும். சமுதாயத்தில் நல்ல மதிப்புடனும் பெயருடனும் இருப்பார்கள். மூத்த சகோதர சகோதரிகளிடம் சண்டை இருக்கும்.

கேது 12 ஆம் வீட்டில் இருந்தால் இதுதான் ஜாதகரின் கடைசி பிறவியாக இருக்ககூடும். புண்ணிய தலங்களுக்க அடிக்கடி செல்வார். பணசேமிப்பு இருக்காது அனைத்தும் புண்ணிய காரியங்களுக்கு செலவாகும். இல்லற சுகபோகங்களில் ஈடுபாடு இருக்காது. பாதங்களில் நோய் ஏற்படக்கூடும். நல்ல திறமையாக வாதங்களில் ஈடுபட்டு வெற்றிக்கொள்வார்.

ஒருவருடைய வாழ்வில் கேது தசை எப்படியும் ஒரு ஆட்டு ஆட்டிவிடும். கேது தனது தீய பலன்களான விரக்தி, வெறுப்பு, கணவன் மனைவி சண்டை, பைத்தியம் பிடித்தல், சித்தபிரமை நிலை வருதல்,தன்னிலை மறத்தல், நல்லவர்களுடன் சண்டை போடுதல்,தான்தோன்றி தனமாக நடத்தல், வெளிநாடுகளை வேதனை படுதல்,ஜெயில் தண்டனை

அனுபவித்தல், தற்கொலை எண்ணங்கள் கூட தோன்றுதல் போன்றவைகளை தர முற்படும்.

இது போன்ற பலன்கள் கோச்சாரத்தில் கேது ஜென்ம ராசியில் இருந்தாலும், திரிகோண ராசிகளில் உட்கார்ந்தாலும், இது போன்ற பிரச்சனைகள் சந்திப்பது உறுதி. இரண்டில் கேது தங்கும் போது குடும்பத்தில் வெளியாட்களின் மூலம் குழப்பம் ஏற்பட்டு வீபரீத விளைவுகளை ஏற்படுத்தி விடும். ஏழில் கேது தங்கும் போது மனைவிக்கு தனது செய்கை பிடிக்காமல் நம்மையே கொலை செய்வதற்கும் துணிவாள். பத்தில் கேது வரும் போது தொழில் நாட்டம் குறைந்து பரதேசி போல் அங்குமிங்கும் அலைவான்.

சூரிய தசையில் கேது புக்தி புகழுக்கு பங்கம் வந்துவிடும். சந்திர தசையில் கேது புக்தி புத்தி சுவாதீனம் இல்லாமல் வைத்து விடும். செவ்வாய் தசையில் கேது புக்தி மனதில் கொலை வெறி தோன்றும். குரு தசையில் கேது புக்தி நல்லவர்களின் பழிச் சொல்லுக்கு ஆளாகுவார்கள். சுகர தசையில் கேது புக்தி இழிகுல பெண்களின் சிநேகம் கிடைத்து, பெயர் கெட்டு, வீட்டில் இருக்கும் மனைவியும் பிரிந்து போக வாய்ப்பு. சனிதசையில் கேது புக்தி திருடன் என்ற பெயரை கொடுத்து விடும். ராகு தசையில் கேது புக்தி சமூகத்தில் கெட்ட காரியங்களில் தொடர்பை ஏற்படுத்தி விடும்.

இந்த தருணங்களில் கேதுவின் அதிதேவதையாக வரும் விநாயக பெருமாளை வழிபட்டால், கேதுவின் தீய பலன்கள் மாறி நல்ல பலன்களான பெரியவர்கள், சாதுக்கள், குருமார்களின் தொடர்பு ஏற்படும். ஆன்மிக கருத்துக்களில் மனம் ஈடுபடும். யாத்திரைகள் போக வைக்கும். கேதுவிற்கு குரு பார்வை ஏற்பட்டு விட்டால் ராஜகுரு பதவி தேடிவரும். சில நேரங்களில் கோடீஸ்வர யோகம் கூட வந்துவிடும். இந்த தருணங்களில் உடல் லௌகிக இன்பத்தில் முழுகும், ஆனால் அதே நேரத்தில் உயிர் இகத்தில் இருந்த்கொண்டே பரத்தை நினைக்கும்.

**கேது மந்திரம் (துஷ்ட சக்திகளை விரட்டிட)**

ஓம் அம்வத்வஜாய வித்மஹே
சூலஹஸ்தாய தீமஹி
தன்னோ கேது ப்ரசோதயாத்
ஓம் கேதுக்ரஹாய வித்மஹே
மஹாவக்த்ராய தீமஹி
தன்னோ கேது ப்ரசோதயாத்
ஓம் விக்ருத்தானநாய வித்மஹே

ஜேமிநிஜாய தீமஹி
தன்னோ கேதுஹ் ப்ரசோதயாத்
ஓம் தமோக்ரஹாய வித்மஹே
த்வஜஸ்திதாய தீமஹி
தன்னோ கேதுஹ் ப்ரசோதயாத்
ஓம் அஸ்வத்வஜாய வித்மஹே
சூலஹஸ்தாய தீமஹி
தன்னோ கேதுஹ் ப்ரசோதயாத்

*******************************************************************************************************

# நவகிரகங்கள்- சுக்கிரன்

சுக்கிரன் இது சூரியனுக்கு 6,70,00,000 அப்பால் சுற்றி வருகிறது. இது சூரியனை 225 நாட்களில் சுற்றி வருகிறது. இது 23 1/2 மணி நேரத்தில் தன்னைத்தானே சுற்றி வருகிறது. இவர் களத்திர காரகன் என அழைக்கப்படுகிறார். அசுர குரு சுக்கிரன் ஆவார். உலக இன்பங்களுக்கும் ஆடம்பரமான வாழ்விற்க்கும், அமோகமான வாழ்விற்க்கும் சுக்கிரன் தான் காரணமாகிறார். காமஇச்சை,வாகனம்,ஆடைகள் ஆபரணங்கள், அலங்காரம், வாசனை திரவியங்கள், சங்கீதம், அழகு,வியாபாரம், நடனம்,நடிப்பு ஆகியவற்றுக்கு காரணம் ஆகிறார். இவருக்கு 7 ஆம் பார்வை மட்டுமே உண்டு. அறுபத்தி நான்கு கலைகளுக்கும் அதிபதி சுக்ரன். காதல், சுக போகம் இவற்றிற்கு அதிபதி சுக்ரனே. ஜோதிடப்படி களத்திரகாரகள் சுக்கிரன். இவனே வாகனங்களுக்கும் அதிபதி. ஜனன உறுப்புகளைக் காப்பவன் இவனே. சிற்றின்பத்தை நுகர வைப்பவனும் இவனே. உடலில் வீர்யம் இவன். அணிமணி, ஆபரணம் சுக்கிரன் அருள் இருந்தாலே சேரும். கிழக்குத் திசை சுக்ரனுக்கு உரிய திசை. இந்திராணி இவருக்கு அதி தேவதை. இந்திர மருத்துவன் பிரத்யதி தேவதை. வைரம் சுக்ரனுக்கு உகந்த ரத்தினம்.

கருடனே சுக்கிரனின் வாகனம். கலைக்கு காரகன் சுக்கிரன். பரணி, பூரம், பூராடம் இந்த மூன்று நட்சத்திரங்களுக்கும் நாயகன். ரிஷபம், துலாம் ஆட்சி வீடுகள், மீனம் உச்ச வீடு, கன்னி நீச வீடு.சுக்கிரன் சந்திரனுடன் கூடி பலமுடன் 10ல் இருந்தால் நடிப்புகலையில் தேர்ச்சிபெற்று, குறிப்பிட்ட ஜாதகர் அல்லது ஜாதகி நட்சத்திர ஸ்தானம் பெற்று அவ்வகையில் அதிர்ஷ்டசாலியாக திகழ முடியும். லக்னம் எதுவானாலும் சரி சுக்கிரன் 10வது வீட்டில் தனித்திருப்பாரானல் நிச்சயமாக கலைத்துறை ஒன்றில் பாண்டித்யம் பெற்று அதனால் மற்றோரை பரவசபடுத்துகின்ற ஆற்றல் அமைந்து அவ்வகையில் அதிர்ஷ்டம் பெற முடியும். பொருட்களை வாங்குவதும், விற்பதும் இன்றைய வாழ்வியலில் முக்கியமான தொழில் ஆகும். இந்த தொழில் வளமையை ஏற்படுத்துவார் சுக்கிரன். சுக்கிரன் பலம் பெற்று இருந்தால் காதலில் வெற்றிகிடைக்கும். ஒருவரது ஜாதகத்தில் சுக்கிரன் தசாகாலம் நடக்கும் போது நல்லமுறையில் வாழ்க்கையில் அனுபவிக்க வேண்டிய சிற்றின்ப,

பேறின்பங்களுக்கு வழிவகுப்பார். குறிப்பிட்ட ஒரு நபரை பார்த்து இவர் ஜென்டில்மேன் என்று சொன்னால் அவர் ஜாதகத்தில் சுக்கிரன் சிறப்பாக அமைந்துள்ளார் என்று அர்த்தம். லக்னத்திற்க்கு 4ல் ஆட்சி, உச்சம், நட்புப்பெற்று அமர்ந்தால் வண்டி, வாகனம், செல்வாக்கு, அந்தஸ்து ஆகியவை அற்புதமாக அமையும இது சுக்கிரனின் அதிகார தலமாகும். கஞ்சனூர் சென்று நீல ஆடை அணிந்து வெண்தாமரை மலர்களால் சுக்கிர பகவானையும் பிரார்த்திக்க வேண்டும். இதனால் தொல்லைகள் நீங்கி நலன்கள் கிட்டும். சுக்கிர தோசம் நீங்க அனைவரும் வழிபட வேண்டிய தலம்.

திருக்கஞ்சனூர்
இறைவர் திருப்பெயர் : அக்னீஸ்வரர்.
இறைவியார் திருப்பெயர் : கற்பகாம்பிகை
தல மரம் : பலாச மரம் (புரசு)
தீர்த்தம் : அக்கினி தீர்த்தம், பராசர தீர்த்தம்.
வழிபட்டோர் : பராசர முனிவர், பிரம்மா, அக்கினி, கம்சன், சந்திரன், விருத்தகாளகண்டன், சித்திரசேனன், மார்க்கண்டேயர், சுரைக்கா முனிவர் முதலியோர்.
தேவாரப் பாடல்கள் : அப்பர் - மூவிலைவேற் சூலம்

தல வரலாறு கம்சன் வழிபட்டதால் இத்தலம் மருவி கஞ்சனூர் என்றாயிற்று. முன்பொரு காலத்தில் கஞ்சனூரில் வாசுதேவர் என்னும் வைணவர் வாழ்ந்து வந்தார். அவருக்கு சுதர்சனர் என்ற குழந்தை பிறந்தது. வைணவக் குடும்பத்தில் பிறந்தாலும் அக்குழந்தை சிவபக்தியில் சிறந்து விளங்கியது. திருநீறு, உருத்திராக்கதாரியாகத் திகழ்ந்த அக்குழந்தை, தந்தை எவ்வளவோ சொல்லியும் கேட்கவில்லை. அவ்வூர் மக்கள் சொல்லியவாறே பழுக்கக் காய்ச்சிய இரும்பு முக்காலிமீதமர்ந்து "சிவமே பரம்பொருள்" என்று அக்குழந்தை மும்முறை கூறியதைக் கண்டவர்கள் வியந்தனர். (இக்காட்சியைச் சித்தரிக்கும் உருவம் இவ்வூர் பெருமாள் கோயிலிலும், அக்னீஸ்வரர் கோயில் நடராசர் சந்நிதியிலும் உள்ளது.) இறைவன் தட்சிணாமூர்த்தியாக வந்து சுதர்சனரை ஆட்கொண்டு ஹரதத்தர் என்ற பெயரளித்துச் சிவநாம தீட்சை செய்தார். மேலும், இங்கு ஒரு செல்வந்தர் தினந்தோறும் அக்னீஸ்வரருக்கு நைவேத்தியம் படைத்து வந்தார். அன்றாடம் அவர் கனவில் இறைவன் தோன்றி தான் அவ்வுணவை உண்ணும் காட்சியைத் தருவார். ஒரு நாள் அக்கனவு தோன்றவில்லை; காரணம் புரியாது அவர் விழித்தார். விசாரித்ததில் அன்று அக்னீஸ்வரர்,

ஹரதத்தரிடம் ஏழை அந்தணர் வடிவில் சென்று கஞ்சியை வாங்கியுண்டதாகவும் அதனால் வயிறு நிரம்பிவிட செல்வந்தரின் உணவை ஏற்கவில்லை என்றும் உணர்ந்தார். இதன்மூலம் ஹரதத்தரின் பெருமையையறிந்து அச்செல்வர் அவரை நாடிச் சென்று வணங்கியதாக வரலாறு சொல்லப்படுகிறது.இவ்வூரில் பக்தர் ஒருவர் சுரைக்காய் விற்றுப் பிழைத்து வந்தார். இவரிடம் ஒரே ஒரு சுரைக்காய்தான் எஞ்சியிருந்தது. அதை விதைக்கு ஆகும் என்று அப்படியே வைத்துவிட்டார். அந்நிலையில் இறைவன் அவரிடம் விருந்தினராக வந்து உணவிடுமாறு கேட்க, அப்பக்தர் செய்வதறியாது திகைத்தார். அதிதிகட்குச் சுரைக்காய் கறிக்கு ஆகாது என்றெண்ணிக் கலங்கினார். அப்போது இறைவன் அசரீரியாக "ஒரு பாதி விதைக்கு, ஒரு பாதி கறிக்கு " என்றருளிச் செய்து ஏற்று, அவருக்கு அருள்புரிந்தார் என்றொரு வரலாறு சொல்லப்படுகிறது. இதன் தொடர்பாகவே இவர் பெயர் சுரைக்காய் பக்தர் என்றாயிற்று. இங்குள்ள

நந்தி புல் உண்ட வரலாறு - அந்தணர் ஒருவர் புல்லுக்கட்டொன்றைத் தெரியாமல் போட்டுவிட்டதால் பசுக் கன்று ஒன்று இறந்துவிட்டது. இதனால் பசுத்தோஷம் அவருக்கு நேர்ந்தது என்று பிராமணர்கள் அந்த ஏழை அந்தணரை விலக்கி வைத்துவிட்டனர். அவர் செய்வதறியாது ஹரதத்தரிடம் சென்று முறையிட்டார் - அவ்வாறு முறையிடும்போது பஞ்சாட்சரத்தைச் சொல்லியவாறே சென்றார். அதைக்கேட்ட ஹரதத்தர் சிவபஞ்சாட்சரத்தைச் சொல்லியதால் அப்பாதகம் நீங்கிவிட்டதாகச் சொன்னார். பிராமணர்கள் அதை ஏற்காமல் தங்கட்கு நேரடிச் சான்று தந்து நிரூபிக்குமாறு கூறினர். ஹரதத்தர் உடனே அவ்வந்தணரை அழைத்து, காவிரியில் நீராடி ஒரு கைப்புல் எடுத்து வந்து அந்தக் கல் நந்தியிடம் தருமாறு பணித்தார். அவ்வந்தணரும் அவ்வாறே செய்து, "கல் நந்தி புல் சாப்பிடுமானால் பஞ்சாட்சரத்தால் தோஷம் நிங்கும் " என்று சொல்லிப் புல்லைத்தர, அந்த நந்தியும் உண்டதாக வரலாறு சொல்லப்படுகிறது. (இந்நந்தி புல் உண்டதால் நாக்கு வெளியில் நீட்டிக் கொண்டிருக்கவில்லை).

சிறப்புக்கள்

பலாசவனம், பராசரபுரம், பிரமபுரி, அக்கினிபுரம், கம்சபுரம், முத்திபுரி என்பன இத்தலத்திற்குள்ள வேறு பெயர்கள். பராசரருக்குச் சித்தப்பிரமை நீங்கியதும்; பிரம்மனுக்குத் திருமணக் காட்சி தந்ததும்; அக்கினிக்கு உண்டானசோகை நோயைத் தீர்த்ததும்; சந்திரனின் சாபம் நீங்கியதும்; கம்சன் என்னும் மன்னனின் உடற்பிணி (மூத்திரதிருச்சிர நோய்) நீங்கியதும்; மாண்டவ்ய புத்திரர்களுக்கு மாத்ருகத்தி தோஷம் நீங்கியதும்; விருத்த காளகண்டன்,

சித்திரசேனன், மார்க்கண்டேயர், சுரைக்காய் முனிவர் ஆகியோர் அருள் பெற்றதும்; கலிக்காமருக்குத் திருமணம் நடந்ததும்; மானக் கஞ்சாற நாயனார் அவதரித்து வழிபட்ட சிறப்பினதும் ஆகிய பல்வகைப் பெருமைகளையும் உடையது இத்தலம். இவற்றுக்கும் மேலாக பஞ்சாட்சர மகிமையை வெளிபடுத்திய ஹரதத்த சிவாசாரியார் அவதரித்த தலம். இவருக்கு இறைவன் அருள் செய்த வரலாறு தனிப்பெருமையுடையது. ஹரதத்தர் சிவபூசை செய்வதுபோல உள்ள ஹரதத்தர் தனிக்கோயிலும் இத்தலத்தில் உள்ளது. மானக்கஞ்சாறர், கலிக்காமர் திருவுருவங்களை அடுத்து, பக்கத்தில் சுரைக்காய்ப் பக்தர் என்ற அடியார் மனைவியுடன் காட்சித் தருகின்றார்.

நடராச சபையில் நடராசர் மூலத்திருமேனியில் சிவகாமியுடன் (சிலாரூபமாக) இருப்பது தனிச் சிறப்பு; இம்மூர்த்தியே பராசரருக்கு தாண்டவக் காட்சித் தந்தவர். இத்தாண்டவம் முத்தித் தாண்டவம் எனப்படுகிறது.

மூலவர் சுயம்பு மூர்த்தி - உயர்ந்த பாணத்துடன் காட்சித் தருகிறார்.

அம்பாள் திருமணக் கோலக் காட்சி தருகிறார்.

நாடொறும் ஆறு கால வழிபாடுகள்.

சோழர், விஜயநகர மன்னர்கள் காலத்திய கல்வெட்டுக்களில் இத்தலம் 'விருதராச பயங்கர வளநாட்டு நல்லாற்றூர் நாட்டுக் கஞ்சனூர் ' என்றும்; இறைவன் பெயர் 'அக்னீஸ்வரம் உடையார் ' என்றும் குறிக்கப்பட்டுள்ளன.

அமைவிடம் மாநிலம் : தமிழ் நாடு கும்பகோணத்திலிருந்து பேருந்து வசதியுள்ளது. திருவாவடுதுறைக்கு அருகில் உள்ள தலம்.

அருள்மிகு அக்னீஸ்வரர் திருக்கோயில்

மூலவர்:அக்னீஸ்வரர்

உற்சவர்:-

அம்மன்/தாயார்: கற்பகாம்பாள்

தல விருட்சம்: பலா

தீர்த்தம்:அக்னி தீர்த்தம், பராசர தீர்த்தம்

ஆகமம்/பூஜை :-

பழமை:1000-2000 வருடங்களுக்கு முன்

புராண பெயர்:கஞ்சனூர்(பலாசவனம், பராசபுரம்,பிரமபுரி, அக்கினிபுரம், கம்சபுரம், முத்திரிபுரி என்ற வேறு பெயர்களும் உண்டு)

ஊர்:கஞ்சனூர்

மாவட்டம்: தஞ்சாவூர்

மாநிலம்: தமிழ்நாடு

திருநாவுக்கரசர்
தேவாரப்பதிகம்
வானவனை வலிவலமும் மறைக் காடானை மதிசூடும் பெருமானை
மறையோன் தன்னை ஏனவனை இமவான்தன் பேதை யோடும்
இனிதிருந்த
பெருமானை ஏத்து வார்க்குத் தேனவனைத் தித்திக்கும் பெருமான்
தன்னைத்
தீதிலா மறையோனைத் தேவர் போற்றும் கானவனைக் கஞ்சனூர் ஆண்ட
கோவைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்த் தேனே. -திருநாவுக்கரசர்
தேவாரப்பாடல் பெற்ற காவிரி வடகரைத்தலங்களில் இது 36வது தலம்.

திருவிழா:மாசி மகம், தைத்திங்களில் ஹரதத்தர் காட்சி, ஆடிப்பூரம்,
திருவாதிரை, நவராத்திரி, சிவராத்திரி

தல சிறப்பு:நவகிரகத்தலங்களில் இத்தலம் சுக்கிரனுக்குரிய
தலமாகும். சுக்கிரன் வழிபாடு செய்த தலங்களுள் இதுவும் ஒன்று.
சுக்கிரனுக்கு இங்கு தனி சன்னதி உள்ளது. இங்கு சிவன் உயர்ந்த
பாணத்துடன் சுயம்பு மூர்த்தியாக அருள்பாலிக்கிறார். நடராஜர்
மூலத்திருமேனியில் சிவகாமியுடன் (சிலா ரூபமாக) இருப்பது தனிசிறப்பு
வாய்ந்தது. இத்தலத்தில் ஈசன் பிரம்மனுக்கு தன் திருமணக்கோலத்தை
காட்டியருளினார். எனவே தான் இங்கு அம்மனை தன் வலப்பாகத்தில்
சிவன் கொண்டருள்கிறார்.
பராசர முனிவருக்கு சிவன் இங்கு தாண்டவ கோலம் காட்டி முக்தி
அருளினார். எனவே இங்குள்ள நடராஜர் "முக்தி தாண்டவ மூர்த்தி' என
அழைக்கப்படுகிறார்.
காலை 7.30 முதல் மதியம் 12 வரை. மாலை 4.30 முதல் இரவு 9 மணிவரை
நடை திறந்திருக்கும்

**அருள்மிகு அக்னீஸ்வரர் திருக்கோயில், கஞ்சனூர், -609 804**
(வழி) துகிலி, திருவிடைமருதூர் வட்டம், தஞ்சாவூர் மாவட்டம்.
கோயில் ராஜகோபுரம் ஐந்து நிலைகளையுடையது. பழமையான கோயில்.
தெற்கு வாயில் வழியாக உள்வந்தால் உள்மண்டபம் உள்ளது. பிரகாரமாக
வலம் வந்து மண்டபத்தையடைந்தால் இடப்பால் விநாயகர் தரிசனம்,
வலப்பால் விசுவநாதர் சந்நிதி. அடுத்து அம்பாள் சந்நிதி. உள்வாயிலைத்
தாண்டி சுவாமி சந்நிதிக்குச் செல்லும்போது இடப்பால் (வௌவால் நெத்தி

மண்டபத்தில்) விநாயகர், மயூரசுப்பிரமணியர், மகாலட்சுமி சந்நிதிகள் உள்ளன.

தலமரம் - புரசு (பலாசு) உள்ளது. இதன்கீழ் அக்னீஸ்வரர் லிங்கம் தரிசனம் அடுத்து மானக்கஞ்சாறர், கலிக்காமர் திருவுருவங்கள் உள்ளன. பக்கத்தில் சுரைக்காய்ப் பக்தர் என்ற அடியார் மனைவியுடன் காட்சி தருகிறார்.
மகா மண்டபத்தில் பைரவர், சூரியன், சனிபகவான், சந்திரன், நவக்கிரக சந்நிதி, நால்வர் சந்நிதிகள் உள்ளன.
உடல்பிணி, சோகை நோய், சித்தபிரமை நீங்கவும், செல்வம் செழிக்கவும் இத்தல இறைவனிடம் பிரார்த்தனை செய்து கொள்கின்றனர். பிரார்த்தனை நிறைவேறியதும் இறைவனுக்கு அபிஷேகம் செய்தும், வஸ்திரம் சாத்தியும் வழிபாடு செய்கின்றனர்.

தலபெருமை:பராசரருக்கு சித்தபிரமை நீங்கியது. பிரம்மனுக்கு திருமண காட்சி தந்தது. அக்னிக்கு உண்டான சோகை நோயை தீர்த்தது, சந்திரனின் சாபம் நீங்கியது, கம்சன் என்னும மன்னனின் உடற்பிணி நீங்கியது, கலிக்காமருக்கு திருமணம் நடந்தது, மானக்கஞ்சாரர் அவதரித்து வழிபட்டது ஆகிய சிறப்புகளை உடையது இத்தலம். மேலும் பஞ்சாட்சர மகிமையை வெளிப்படுத்திய ஹரதத்த சிவாச்சாரியார் அவதார தலம்.
மகாபலியைக் காப்பாற்ற தன் கண்ணையே இழந்தவர் சுக்ராச்சாரியார். எந்தக் கஷ்டம் வந்தாலும் தன்னை நம்பி வந்தவரைக் காப்பாற்ற வேண்டுமென்ற குணம் கொண்டவர். இவரது அருள் பெற, நவக்கிரக தலங்களில் தஞ்சாவூர் மாவட்டம் கஞ்சனூர் செல்ல வேண்டும்.

நவக்கிரகங்களில் சுக்கிரன் ஆறாவது கிரகம் ஆவார். இவர் பிரம்ம தேவரின் மானஸ புத்திரராகிய பிருகு முனிவருக்கும், பிலோமிசைக்கும் மகன். எனவே தான் இவருக்கு பார்க்கவன் என்ற பெயர் உண்டு. இவருக்கு "கவி' என்ற மற்றொரு பெயரும் உண்டு.
சுக்கிரன் மிகச்சிறந்த சிவ பக்தர், சிவபெருமான் அருளால் இறந்தவர்களை உயிர்பிழைக்க செய்யும் "அமிர்த சஞ்சீவி' மந்திரத்தை கற்றவர். இவர் வெள்ளை நிறம் கொண்டவர். வெண்தாமரையுடன் கருட வாகனத்தில் வீற்றிருப்பார். முதலை வாகனமும் உண்டு. இவர் அசுரர்களுக்கு குரு. சுக்கிராச்சாரியார் என அழைக்கப்பட்டார். ரிஷப, துலா ராசிக்கு அதிபதியான இவர் பரணி, பூரம், பூராடம் நட்சத்திரத்திற்கு உரியவர். சுக்கிர திசை 20 ஆண்டுகள் நடக்கும். ஒரு ராசியில் சஞ்சரிக்க இவருக்கு ஒரு மாத காலம் ஆகும். சுக்கிரனுக்கு நண்பர்கள் புதனும் சனியும். எதிரி சூரியனும் சந்திரனும். சமமானவர்கள் செவ்வாயும் குருவும். மகாபலியைக் காப்பாற்ற

தன் கண்ணையே இழந்தவர் சுக்ராச்சாரியார். எந்தக் கஷ்டம் வந்தாலும் தன்னை நம்பி வந்தவரைக் காப்பாற்ற வேண்டுமென்ற குணம் கொண்டவர். ஒரு முறை சுக்கிராச்சாரியாரால் விஷ்ணுவுக்கு சுக்ர தோஷம் ஏற்பட்டது. இத்தோஷத்தை நீக்க விஷ்ணு ஹரதத்தர் என்ற திருநாமத்துடன் இங்குள்ள சிவனை வழிபட்டு தோஷம் நீங்க பெற்றார் என்கிறது புராணம். சுக்கிர தோஷம் உள்ளவர்கள் இத்தலத்தில் சுக்கிரனுக்கு அருகில் உள்ள ஐம்பொன்னால் ஆன சிவனை வழிபாடு செய்வது சிறப்பு.

தல வரலாறு:முன்பு கஞ்சனூரில் வாசுதேவர் என்னும் வைணவருக்கு பிறந்த குழந்தையின் பெயர் சுதர்சனர். வைணவக்குடும்பத்தில் பிறந்தாலும் அக்குழந்தை சிவபக்தியில் சிறந்து விளங்கியது. திருநீறு, உருத்திராக்கதாரியாக திகழ்ந்த அக்குழந்தை எவ்வளவு சொல்லியும் கேட்கவில்லை. அவ்வூர் மக்கள் சொல்லியவாறே பழுக்கக் காய்ச்சிய இரும்பு முக்காலி மீதுஅமர்ந்து "சிவமே பரம்பொருள்' என்று அக்குழந்தை மும்முறை கூறியதைக்கண்டு வியந்தனர். இக்காட்சியை சித்தரிக்கும் உருவம் இவ்வூர் பெருமாள் கோயிலிலும், அக்னீஸ்வரர் கோயில் நடராஜர்சன்னதியிலும் உள்ளது. பெருமாள் கோயிலிலும் அக்னீஸ்வரர் கற்பகாம்பாள் எழுந்தருளியுள்ளனர். ஹரதத்தருக்கு உபதேசித்து அருள்செய்த தெட்சிணாமூர்த்தி உருவில் ஹரதத்தரின் உருவமும் உள்ளது. இம்மூர்த்தியே சுதர்சனரை ஆட்கொண்டு ஹரதத்தர் என்ற பெயர் அளித்து சிவநாம தீட்சை செய்தவர்.
ஒரு செல்வந்தர் தினமும் அக்னீஸ்வரருக்கு நைவேத்தியம் படைத்துவந்தார். அன்றாடம் அவர் கனவில் இறைவன் தோன்றி அவ்வுணவை உண்பதுபோல காட்சி தருவார். ஒருநாள் அக்கனவு தோன்றவில்லை. காரணம் புரியாது அவர் விழித்தார். விசாரித்ததில் அன்று அக்னீஸ்வரர் ஹரதத்தரிடம் ஏழை பிராமணர் வடிவில் சென்று கஞ்சியை வாங்கி உண்டதாகவும் அதனால் வயிறு நிரம்பிவிட செல்வந்தரின் உணவை ஏற்கவில்லை என்றும் உணர்ந்தார். இதன்மூலம் ஹரதத்தரின் பெருமையை அறிந்து அச்செல்வர் அவரை நாடிச்சென்று வணங்கியதாக வரலாறு சொல்லப்படுகிறது. ஆலயத்தில் ஹரதத்தரின் குடும்பமும், ஏழை அந்தணராக வந்த இறைவனின் திருவுருவமும் உள்ளன. ஊருக்குள் வரும்போது அரசமரத்தின் எதிரில் கிழக்குநோக்கி ஹரதத்தர் சிவபூஜை செய்வதுபோல உள்ள ஹரதத்தர் தனிக்கோயிலும் இத்தலத்தில் உள்ளது. சுவாமி சன்னதிக்கு செல்லும் வழியில் சுரைக்காய் பக்தர் என்ற அடியவர் மனைவியுடன் காட்சிதருகிறார். இவ்வூரைச் சேர்ந்த பக்தர் ஒருவர் சுரைக்காய் விற்று பிழைத்துவந்தார். இதனால் இவர் பெயர் சுரைக்காய்

பக்தர் என்றாயிற்று. இவரிடம் ஒரே ஒரு சுரைக்காய்தான் எஞ்சியிருந்தது. அதை விதைக்கு ஆகும் என்று அப்படியே வைத்துவிட்டார். அந்நிலையில் இறைவன் அவரிடம் விருந்தினராக வந்து உணவிடுமாறு கேட்க, அவர் செய்வதறியாது திகைத்தார். அதிதிகளுக்கு சுரைக்காய் ஆகாது என்று எண்ணி கலங்கினார். அப்போது இறைவன் அசரீரியாக "ஒரு பாதி விதைக்கு, ஒரு பாதி கறிக்கு' என்று அருளிச்செய்து ஏற்று, அவருக்கு அருள்புரிந்தார் என்று ஒரு வரலாறு சொல்லப்படுகிறது.

கல்நந்தி: பிராமணர் ஒருவர் புல் கட்டை தெரியாமல் போட்டுவிட்டதால் பசுக்கன்று ஒன்று இறந்தது. இதனால் அவருக்கு பசுதோஷம் நேர்ந்தது என்று பிராமணர்கள் அவரை தங்களிடமிருந்து விலக்கி வைத்துவிட்டனர். அவர் செய்வதறியாமல்ஹரதத்தரிடம் முறையிட்டார். அவ்வாறு முறையிடும்போது பஞ்சாட்சரத்தைச் சொல்லியவாறே சென்றார். அதைக்கேட்ட ஹரதத்தர் சிவபஞ்சாட்சரத்தை சொல்லியதால் அப்பாதகம் நீங்கிவிட்டதாக கூறினார். பிராமணர்கள் அதை ஏற்காமல் தங்களக்கு நேரடிச்சான்று தந்து நிரூபிக்குமாறு கூறினர். ஹரதத்தர் உடனே அந்த பிராமணரை அழைத்து, காவிரியில் நீராடி ஒரு கைப்புல் எடுத்துவந்து அந்த கல்நந்தியிடம் தருமாறு பணித்தார். அப்பிராமணரும் அவ்வாறே செய்து, ""கல்நந்தி புல் சாப்பிடுமானால் பஞ்சாட்சரத்தால் தோஷம் நீங்கும்" என்று

சொல்லி புல்லைத்தர அந்நந்தியும் உண்டதாக வரலாறு.

அதிசயத்தின் அடிப்படையில்: இங்கு சிவன் உயர்ந்த பாணத்துடன் சுயம்பு

மூர்த்தியாக அருள்பாலிக்கிறார்.
நிறம்- வெண்மை
வாகனம்-கருடன்
உலோகம்-வெள்ளி
தானியம்-மொச்சை
பால்-பெண்
திசைகாலம்-20 வருடங்கள்
கோசர காலம்-1 மாதம்
நட்பு-புதன்,சனி,ராகு,கேது
பகை-சூரியன்,சந்திரன்
சமம்-செவ்வாய்,குரு
நட்சத்திரம்-பரணி,பூரம்,பூராடம்

**ஒவ்வொரு வீட்டிலும் சுக்கிரன் இருந்தால் என்ன பலன்**

சுக்கிரன் 1 ஆம் வீட்டில் இருந்தால் நல்ல தோற்றப்பொழிவை தரும். அனைவரும் கவர்ந்து இழுக்கும் தோற்றம் இருக்கும். ஆண்களாக இருந்தால் பெண்களாலும் பெண்களாக இருந்தால் ஆண்களாகவும் ஈர்க்கப்படுவார்கள். எதிர்பாலினரிடம் நல்ல நட்பு இருக்கும். துணைவியார் அழகாக அமைவார்.

சுக்கிரன் 2 ஆம் வீட்டில் இருந்தால் நல்ல பேச்சு திறமை இருக்கும். தனவரவுகள் நன்றாக இருக்கும். நல்ல அதிர்ஷ்டசாலியாக இருப்பார். குடும்பத்தில் பெண்கள் கூட்டம் அதிகமாக இருக்கும். செல்வ வளம் நன்றாக இருக்கும்.

சுக்கிரன் 3 ஆம் வீட்டில் இருந்தால் சிறிய தொலைவு பயணம் அடிக்கடி நடைபெறும் கடித போக்குவரத்து பெண்களிடத்தில் இருந்து வரும். இளைய சகோதரிகள் அதிகம் பேர் இருப்பார்கள். சிற்றின்ப சுகத்தில் மனது அலைபாயும்.

சுக்கிரன் 4 ஆம் வீட்டில் இருந்தால் நல்ல ஆடம்பரமான வீடு அமையும். நல்ல தோற்றம் அமையும். சுகமான வாழ்க்கை அமையும். வாகனம் அமையும். வாகனத்துறையில் பணிபுரியலாம் அல்லது டிராவல்ஸ் தொழில் நடத்தலாம். உற்றார் உறவினர் மூலம் நல்ல உறவு ஏற்படும். கற்பனை வளம் இருக்கும்.

சுக்கிரன் 5 ஆம் வீட்டில் இருந்தால் கலைகளில் ஈடுபட்டு வாழ்க்கை வசதிகளை பெறவைப்பார். நல்ல கல்வி ,கற்பனை வளம் இருக்கும். பெண் குழந்தைகள் அதிகமாக இருக்கும். அரசாங்கத்தில் பணிபுரிய வைப்பார். திடீர் வருமானத்திற்க்கு வாய்ப்பு உண்டு. குலதெய்வம் ஏதாவது ஒரு அம்மனாக இருக்கும். லட்சுமியை வழிபடலாம்.

சுக்கிரன் 6 ஆம் வீட்டில் இருந்தால் செல்வ வளம் குன்றும். எதிரிகள் தொந்தரவு இருக்கும். பெண்களால் பிரச்சினைகள் இருக்கும். மர்ம பாகங்களில் நோய் வரும். பெண்களால் ஏமாற்றப்படுவார். சண்டை என்று வந்தால் முதலில் பெண்கள் வழியில் தான் ஆரம்பம் ஆகும்.

சுக்கிரன் 7 ஆம் வீட்டில் இருந்தால் அழகான தோற்றத்தை உருவாக்குவார். அழகான மனைவி அமையும். காமத்தில் அதிக ஈடுபாடு இருக்கும். நல்ல பணக்காரராக இருக்கவைப்பார். பல பெண்களிடத்தில் தொடர்பு ஏற்படும். சுக்கிரன் ஏழில் கெட்டால் சுக்கிர தோஷத்தை ஏற்படுத்துவார். இவரிடம்

தொடர்பு வைத்திருப்பவர்கள் பெரும்பாலும் பெண்களாக இருக்கும்.

சுக்கிரன் 8 ஆம் வீட்டில் இருந்தால் நீண்ட ஆயுள் இருக்கும் எட்டாம் வீட்டில் இருந்து இரண்டாம் வீட்டை சுக்கிரன் பார்ப்பதால் தன வரவு நன்றாக இருக்கும் ஆனால் திருமணத்திற்க்கு தோஷத்தை ஏற்படுத்துவார்.

சுக்கிரன் 9 ஆம் வீட்டில் இருந்தால் தெய்வ பக்தியில் ஈடுபாடு அதிகமாக இருக்கும். உயர்கல்வியில் சிறந்து விளங்குவார். பணவரவுகள் நன்றாக இருக்கும். தந்தைக்கும் இவருக்கும் உள்ள தொடர்பு நல்லவிதத்தில் இருக்கும். மனைவி மூலம் நல்லது நடக்கும். மொத்தத்தில் வசதியான வாழ்க்கை வாழ சுக்கிரன் துணைபுரிவார்.

சுக்கிரன் 10 ஆம் வீட்டில் இருந்தால் கலைதுறையில் ஈடுபாடு அதிகமாக இருக்கும். கலைதுறையில் தொழில் தொடங்கலாம். பெண்களால் வருமானம் இருக்கும். கலைதுறையில் போட்டிகளில் சமாளித்து முன்னேறி வர சுக்கிரன் துணைபுரிவார். நண்பர்களால் லாபம் உண்டு.

சுக்கிரன் 11 ஆம் வீட்டில் இருந்தால் நல்ல லாபம் ஏற்படும் மூத்த சகோதரிகளால் நன்மை ஏற்படும். லாபம் பன்மடங்காக உயரும். பெண்களால் லாபம் ஏற்படும் பல பெண்களிடத்தில் தொடர்பு ஏற்படும். நண்பர்கள் உதவி செய்வார்கள். கலைதுறை மூலம் வருமானம் பெருகும்.

சுக்கிரன் 12 ஆம் வீட்டில் இருந்தால் பெண்கள் மூலம் பொருள் இழுப்பு ஏற்படும். தொழிலில் முன்னேறுவது கடினம். பணவரவுகள் இருக்கும் ஆனால் பணத்தை போகத்திற்க்கு அதிக செலவு செய்வார்கள். மனைவி சொல்லே மந்திரம் என்று மனைவி பேச்சை கேட்பார்கள்.

**சுக்கிரன் (தடைபட்ட திருமணம் நடக்க)**

ஓம் அஸ்வத்வஜாய வித்மஹே
தனு ஹஸ்தாய தீமஹி
தன்னோ சுக்ரஹ் ப்ரசோதயாத்
ஓம் தைத்யாசார்யாய வித்மஹே
ஸ்வேதவர்ணாய தீமஹி
தன்னோ சுக்ரஹ் ப்ரசோதயாத்
ஓம் பார்கவாய வித்மஹே
தைத்யாசார்யாய தீமஹி

தன்னோ சுக்ரஹ் ப்ரசோதயாத்
ஓம் தைத்யபூஜ்யாய வித்மஹே
ப்ருகுப் புத்ராய தீமஹி
தன்னோ சுக்ரஹ் ப்ரசோதயாத்

**************************************************************************************************************

# நவகிரகங்கள்- சூரியன்

சூரியன் ஒரு நெருப்பு கோளம் ஆகும். இதை நாம் கிரகம் என்று அழைக்கிறோம். ஆனால் சிலர் இதனை நட்சத்திரம் என்று அழைக்கின்றனர். ஆனால் ஜோதிடத்தில் நாம் கிரகம் என்றே அழைக்க வேண்டும். இந்த கிரகத்தை மையமாக வைத்தே அனைத்து கிரகங்களும் இயங்கி வருகிறது. சூரியன் வான்வெளியில் தன்னைத் தானே சுற்றி சந்திரன்வருகிறது.

இது நமது பூமிக்கும் சூரியனுக்கும் உள்ள தொலைவு சுமாராக 9,20,30,000 KM ஆகும். சூரியன் தன்னைத்தானே ஒரு தடவை சுற்றி வர ஒரு மாதம் காலம் ஆகிறது. 12 ராசியையும் சுற்றி வர 365 நாள் 15 நாழிகை 32 விநாடிகள் ஆகிறது. இது தான் நாம் ஒரு வருடம் என்கிறோம். இவர் ஒவ்வொரு ராசியிலும் ஒரு மாதம் தங்கி இருப்பார். இவர் அடுத்த ராசிக்கு செல்லும் போது அடுத்த மாதம் பிறக்கும். சூரியன் ஆத்ம காரகன் என்று அழைக்கப்படுகிறார். இவரே உடம்புக்கு உயிர் தருபவர். சூரியனை வைத்தே லக்கினம் கணக்கிடப்படும். சூரியனை வைத்து தகப்பனார், உடல்பலம், ஆண்மை,பரிசுத்தம்,அரசியல் தொடர்பு தகப்பனார் உடன் பிறந்தவர்கள், புகழ் அனைத்தும் பார்க்க வேண்டும்.இவர் ஐந்தில் வந்து அமரும் போது புத்திர தோஷத்தை தருகிறார். ஏழில் வந்து அமரும் போது களத்திர தோஷத்தை தருகிறார். உலகில் அசையும் பொருட்கள், அசையாப் பொருட்கள் ஆகிய எல்லாவற்றுக்குமே ஆத்மாவாக விளங்குவது சூரியனே . சூரியனே நவக்கிரகங்களுள் முதன்மையாகும். ஒருவனாக எப்போதும் சஞ்சரிப்பவன் யார் என்று மகாபாரதத்தில் யட்ச பிரச்னத்தில் கேள்வி எழுகிறது. அவன் சூரியனே என்றும் விடை கிடைக்கிறது. ஒற்றைச் சக்கரம் கொண்ட தேரில் வேதத்தின் ஏழு சந்தங்களை ஏழு குதிரைகளாகக் கொண்டு பூட்டி பவனி வருகிறான் சூரியன்.

ஜோதிடப்படி சூரியனே பிதுர் காரகன். சுய நிலை, சுய உணர்வு, செல்வாக்கு, கௌரவம், அந்தஸ்து, வீரம், பராக்ரமம், சரீர சுகம், நன்னடத்தை ஆகியவற்றிற்குக் காரகத்துவம் சூரியனுக்கே உண்டு. கண், ஒளி, உஷ்ணம், அரசு, ஆதரவு இவற்றின் அதிபதியும் சூரியனே! கிழக்குத் திசை சூரியனுக்கு உரியது. சூரியனின் அருளால் வடமொழி அறிவு ஏற்படும்.உஷா தேவி, சாயா தேவி ஆகிய இரு தேவிகளுடன் சூரியனார்

கோவிலில் சூரியன் விளங்குகிறார்.
அக்னி இவருக்கு அதி தேவதை.
ருத்ரன் இவருக்கு பிரத்யதி தேவதை.
மாணிக்கம் உகந்த ரத்தினம்.
ஏழு குதிரைகள் பூட்டிய ரதமே சூரியனின் வாகனம்!

சூரியன் ஆன்மாவை பிரதிபலிப்பவன் சூரியன். ஒருவருக்கு ஆத்மபலம் அமையவேண்டுமானால் சூரியபலம் ஜாதகத்தில் அமையவேண்டும். சூரியனை வணங்கி ஆதித்திய ஷிருதய மந்திரத்தால் இராமன் இராவனனை வெல்லும் ஆற்றல் பெற்றான். வேதங்களில் தலைசிறந்த மந்திரம் காயத்ரீ. காயத்ரீ மந்திரத்துக்கு உரியவன் சூரியன். சூரியநமஸ்காரம் என்ற ஒரு விசேஷமான வழிபாடு முறை உண்டு. இதை செய்வதில் ஆன்மீக பலமும் சரிர பலமும் அடையமுடியும் என்பது அனுபவம் கண்ட உண்மை.
சுயநிலை,சுய-உயர்வு, செல்வாக்கு கௌரவம், ஆற்றல், வீரம், பராகிரமம், சரிர சுகம், நன்நடத்தை நேத்திரம், உஷ்ணம், ஒளி அரசாங்க ஆதரவு முதலியவற்றின் காரன் சூரியன்.
சூரியன் அக்கினியை அதிதேவதையாக கொண்டவன்.
கதிரவன், ரவி, பகலவன் என பல பெயர்கள் உண்டு.
தகப்பனை குறிக்கும் கிரகம் சூரியன்.
உத்திரம், உத்திரட்டாதி, கார்திகை நட்சத்திரக்கு உரியவன்.
சூரியனுக்கு சொந்த வீடு சிம்மம்.
உச்ச வீடு மேஷம்,
நீச்ச வீடு சுக்கிரன்.
சூரியனார் கோவில்

அருள்மிகு சிவசூரியநாராயணமூர்த்தி ஆலயம்
நவக்கிரகங்களில் முதன்மையாகக் கருதப்படுவது சூரியன்.வாரத்தின் முதல் நாளான ஞாயிறு சூரியனின் பெயரைக் கொண்டே ஏற்பட்டுள்ளது.சூரியன் காசிப முனிவருக்கு அதிதி பால் பிறந்தவர் என்பதால் அவருக்கு ஆதித்தன் என்ற பெயர் உண்டாயிற்று. சூரியனார் கோவில் தஞ்சாவூர் மாவட்டத்தில் திருவிடைமருதூர் வட்டத்தில் காவிரியின் வடகரையில் உள்ளது.ஆடுதுறைக்கு தெற்கில் இரண்டு கி.மி தூரத்தில் சூரியனார் கோவில் உள்ளது.
இறைவன் : ஸ்ரீ சிவசூரியநாராயணமூர்த்தி
இறைவி : சாயாதேவி,உஷாதேவி
தீர்த்தம் : சூர்யப்புஷ்கரணி

ஸ்தலவிருக்ஷம் : வெள்ளெருக்கு
நவக்கிரக கோவில்களில் ஒன்றான கோவிலே சூரியனார் கோவில் ஆகும். இந்தக் கோவில் தஞ்சாவூர் மாவட்டத்தில் ஆடுதுறை என்னும் ஊருக்கு அருகில் அமைந்துள்ளது. மற்ற நவக்கிரக கோவில்கள் அணைத்திலும் சிவபெருமானே மூலவராக இருக்க...இங்கு மட்டும் சூரிய பகவான் முக்கிய கடவுளாக காட்சியளிக்கிறார்.

வரலாறு: இதுவரை கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டுகள் மூலம் இக்கோவில் குலோத்துங்க சோழ மன்னன் காலத்தில் (கி.பி 1060 - கி.பி.1118) கட்டப்பட்டிருக்கலாம் என்று நம்பப்படுகிறது. முதலில் இக்கோவில் அர்காவனம் என்று அழைக்கப்பட்டு பின்னரே சூரியனார் கோவில் என்று மாறியது.

கட்டிடக்கலை: இக்கோவிலின் இராஜகோபுரம் 50 அடி உயரம் கொண்டது. மொத்தம் மூன்று நிலைகளையும் ஐந்து கலச்ங்களையும்
உடையது. இக்கோவிலின் முன் புஷ்கரினி தீர்த்தமும் நவக்கிரக தீர்த்தமும் உள்ளன.

சிற்பக்கலை: கோவில் கோபுரம் முழுவதும் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. கர்ப்பக்கிரகத்தில் சூரிய பகவானும் இடது புறம் உஷா தேவியும் வலது புறம் ப்ரத்யுஷா தேவியும் காட்சியளிக்கின்றனர். மேலும் மற்ற எட்டு கிரகங்களுக்கான கடவுள்களும் இங்கு தனித்தனி சந்நிதியில் காட்சியளிக்கின்றனர்.

வழிபடும் முறை: கண் நோய்கள், இருதய நோய்கள் , மஞ்சள் காமாலை ஆகியநோய்களால் பாதிக்கப்பட்டோரும் ஏழரை சனி, ஜென்ம சனி, அஷ்டம சனி ஆகியன உள்ளோரும், நவக்கிரக தோஷங்கள் உடையோரும் சூரிய பகவானை வழிபட்டால் நன்மை பயக்கும். மேலும் இங்கு 12 ஞாயிற்றுக்கிழமைகள் தங்கி வழிபடுவது சிறப்பு.
ஆதித்ய ஹ்ரதயப் பாடலை பாடி வழிபடுதலும் நன்று.
தமிழ்நாட்டில் கும்பகோணத்துக்கு கிழக்கே கும்பகோணம்-பூம்புகார் சாலையில் சூரியனார் கோவில் அமைந்துள்ளது. ஆடுதுறை இரயில் நிலையத்தில் இறங்கி அணைக்கரை செல்லும் பேருந்தில் ஏறி இக்கோவிலை அடையலாம். திருமங்கலக்குடி காளியம்மன் கோவில் பேருந்து நிறுத்தத்தில் இறங்கி சற்று தொலைவு நடந்து கோவிலை அடையலாம். நவநாயகர்களில் சூரியன் சுபக்கிரகம் ஆவார். இவரை

வழிபட்டால் புகழ் கூடும். மங்களம் உண்டாகும். உடல் நலம் பெறும். சனிக்கிரகத்தால் பாதிப்படைந்தவர்கள் சூரியனார் கோவில் சென்று வழிபடுதல் வேண்டும். சிவப்பு மலர்களால் சூரியனாரை அர்ச்சித்து கோதுமையை நிவேதித்து ஞாயிற்றுக்கிழமை விரதம் மேற்கொள்வது நலம். சூரியனார் கோவில் ஸ்தலத்தில் சூரிய பகவான் ஆலயம் மேற்கு நோக்கிஅமைந்திருக்கிறது.இராஜகோபுரத்திற்கு வெளியே சூர்யப்புஷ்கரணி என்ற மூன்று நிலைகளோடு ஐந்து கலசம் தாங்கி உயர்ந்து நிற்கிறது.சிவசூரியநாராயணமூர்த்தி இடதுபுறத்தில் உஷாதேவியும் வலதுபுறத்தில் சாயாதேவியும் நின்ற கோலத்தில் காட்சி தருகிறார்கள். நவக்கிரகங்களே தங்களது சாபம் நீங்க விநாயகர் பிரதிஷ்டை செய்து, வழிபட்டு அருள் பெற்ற தலம் சூரியனார்கோவில். தென்னகத்தில் சூரியனுக்கான தனிக்கோயில் இதுதான். இங்கு, உஷாதேவி-சாயாதேவியுடன் அருளும் சூரியனாரைத் தரிசிக்கும் அதே நேரம், குருபகவானின் அருட்பார்வையும் ஒருசேர பெறலாம். சூரிய பகவானைச் சுற்றி நவக்கிரக நாயகர்களும் தனிச் சந்நிதிகளில் அருள்வது விசேஷம். கும்பகோணத்திலிருந்து கிழக்கே சுமார் 15 கி.மீ தொலைவில் உள்ளது இந்தத் தலம் '

சூரியன் தை மாதம் மகர ராசியில் சஞ்சரிப்பதையே மகர சங்கராந்தியாகக் கொண்டாடுகிறோம் அன்று சூரியன், தட்சிணாயனத்தில் இருந்து உத்தராயனத்துக்கு சஞ்சரிக்கும் காலத்தில்... சூரிய பகவானுக்கு கோதுமை சர்க்கரைப் பொங்கல், கரும்பு, வாழை, தேங்காய் கொண்டு நைவேத்தியம் செய்து சிவப்பு வஸ்திரம், செந்தாமரைப் பூக்கள் அணிவித்து வழிபடுவது சிறப்பு. இதனால் சத்ரு நாசம்... சூரிய திசை, சூரிய புத்தியால் ஏற்படும் தோஷங்கள் நிவர்த்தியாகும். கண் கோளாறுகளும் நீங்கி அருள்பெற்றுச் செல்வது இந்தத் தலத்தின் சிறப்பு" மேலும், இந்தத் தலத்தின் விருட்சமான வெள்ளெருக்கு மரத்தில் சிவப்புத் துணி சாற்றி, மஞ்சள் கட்டி.... புதுமணத் தம்பதிகள் வழிபட்டால், சூரியகடாட்சம் நிறைந்த குழந்தைகள் பிறக்கும். தீராத தோல் நோயும் தீரும் என்பது நம்பிக்கை.

இறைவன் :சூரியன்

தல விருட்சம்;எருக்கு

நிறம் : சிவப்பு

வச்திரம்: சிவப்புத் துணி

மலர்: தாமரை மற்றும் எருக்கு

இரத்தினம்: ரூபி

தானியம் - கோதுமை

வாகனம்: ஏழு குதிரைகள் பூட்டிய தேர்
உணவு: சர்க்கரைப் பொங்கல், ரவை மற்றும் கோதுமை
தேசம் - கலிங்கம்
நட்பு கிரகம் - சந்திரன்.வியாழன்.செவ்வாய்
பகை கிரகம் - சுக்கிரன்.சனி.ராகு.கேது
நட்சத்திரம் - கார்த்திகை,உத்திரம்,உத்திராடம்
இனம் - ஆண்
நீசம் - துலாம்
உச்சம் - மேஷம்

ஒவ்வொரு வீட்டிலும் சூரியன் இருந்தால் என்ன பலன் ஒரு கிரகம் ஒரு வீட்டில் இருக்கும் போது அந்த வீடு அந்த கிரகத்திற்க்கு அது உகந்த வீடா அல்லது அந்த வீடு பகை வீடா என்று பார்க்க வேண்டும். அந்த வீட்டிற்க்கு எந்த கிரகத்தின் பார்வை இருக்கிறது என்றும் பார்க்க வேண்டும் அப்பொழுது தான் பலன்கள் சரியாக இருக்கும். சூரியன் சொந்த வீட்டில் அல்லது உச்ச வீட்டில் இருந்தால் பணம் குவியும். செல்வாக்கு பெருகும் பலம் குறைந்து சூரியன் அமர்ந்தால் பணத்தை இழக்க நேரிடும் படிப்பு குறைவு ஏற்படும், முரட்டு தனமான பேச்சு ஏற்படும். இரண்டாம் வீட்டில் இருக்கும்சூரியனால் குடும்ப நலத்தை பெறுவது குறைவாகும். சூரியன் முதல் வீட்டில் இருந்தால் கண்ணில் நோய் இருக்க வாய்ப்பு உண்டு. சந்திரன் வீடான கடகம் லக்கனம் ஆக இருப்பவர்கள் கண்ணில் ஒரு கோடு இருக்க வாய்ப்பு உண்டு. முதல் வீட்டில் சூரியன் இருக்கும் போது அந்த நபர் மிக சிறந்த திறமையாளராகவும் இருப்பார். அந்த லக்கனம் மேஷமாகவும் அல்லது சிம்மமாக இருக்கிறது என்று வைத்துக்கொள்ளுங்கள் அந்த நபருக்கு பணம் நன்றாக வரும். நல்ல படிப்பையும் கொடுப்பார்.ஒரு சிலர் பித்த சம்பந்தப்பட்ட பிரச்சினை இருக்கும் தலையில் பாரமாக இருக்கிறது என்று சொல்வார்கள். திருமண வாழ்வு சந்தோஷமாக இருக்கும். கோபமும் பொறுமை இல்லாதவராகவும் இருப்பார்கள். முதல் வீடு லக்கனம் லக்கனத்தில் சூரியன் இருந்தால் தலை வழுக்கை தலையாக இருக்க வாய்ப்பு உண்டு அல்லது ஏறு நேற்றியாகவும் இருக்க வாய்ப்பு அதிகம். உங்கள் ஜாதகத்தை எடுத்து வைத்துக்கொண்டு எனக்கு முதல் வீட்டில் சூரியன் இருக்கிறது ஆனால் முடி சம்பந்தப்பட்ட பிரச்சினைகள் இல்லை என்று கேட்க வேண்டாம். எல்லாம் பொது பலன்கள் மட்டும்தான்.

மூன்றாம் வீட்டில் இருக்கும் சூரியனால் நல்ல வீரனாக இருப்பார்கள். நல்ல செல்வவளம் இருக்கும். தாய் நலம் பாதிக்கப்படும். தாய்க்கும் மகனுக்கும்

உறவுநிலை திருப்திகரமாக இருக்காது.
நான்காம் வீட்டு சூரியன் நல்ல பலத்தோடு இருந்தால் அரசாங்கத்தில் நல்ல மதிப்பு கிடைக்கும். சொத்துக்கள் சேரும். நல்ல நட்பு உண்டாகும். எடுத்த காரியங்கள் அனைத்தும் வெற்றிகரமாக நடைபெறும். தாயார் நல்ல நலத்துடன் வாழ்வார்கள்.நான்காம் வீட்டு சூரியன் கெட்டு இருந்தால் தாயார் நலம் பாதிக்கப்படும். மகிழ்ச்சி உண்டாகாது. அரசாங்கத்தில் பணியாற்றி மிகவும் குறைவாக சம்பாதித்து தந்தையின் சொத்துகளை அழிப்பார். இதயநோய் ஏற்பட வாய்ப்பு உள்ளது.
சூரியன் 5 ஆம் வீட்டில் நல்ல நிலைமையில் இருந்தால் நல்ல அறிவாற்றலை தருவார் . மலை பிரதேசங்களில் செல்ல வாய்ப்பு கிடைக்கும். நல்ல பண வசதிகள் கிடைக்கும்.சூரியன் கெட்டு இருந்தால் கடுமையான புத்திர தோஷம் ஏற்படும். வயிற்றுக் கோளாறு ஏற்படும். இந்த இடத்தில் சூரியன் இருப்பது ஆயுள் குறைந்து இருக்கும்.
சூரியன் 6 ஆம் இடத்தில் நல்ல நிலையில் இருந்தால் பகைவர்கள் இருப்பார்கள். அவர்களை வெற்றிக்கொள்ளும் வாய்ப்பை தருவார். நல்ல பணிகளை செய்ய வைப்பர் .செல்வம் குவியவைப்பார். வாழ்க்கையில் உயர்ந்த நிலையில் இருக்கவைப்பார். நல்ல ஜரணசக்தி கிடைக்கும்.6- ஆம் இடத்து சூரியனால் சிற்றின்ப வேட்கையை அதிகமான தருவார். அரசாங்கத்தின் மூலம் பொருள் செலவு ஏற்படும். மனைவியின் உடல் நிலை சரியாக இருக்காது.
சூரியன் 7 ல் இருந்தால் ஆண் ஜாதகராக இருந்தால் பெண்களால் மனசிக்கலை தருவார். உடம்பில் அடிபடும். உடம்பு சுகம் இருக்காது கவலைகள் வரும் 7 ஆம் இடத்து சூரியனால் அரசாங்கத்திற்க்கு எதிராக ஈடுபடவைக்கும். திருமணவாழ்வில் தடை உண்டாகும். தொழிலில் வருமானத்தை உண்டுபண்ணமாட்டார். வாழ்க்கை துணையின் நலத்தை கெடுப்பார்.
சூரியன் 8 ல் உள்ள சூரியனால் கண் பார்வையை மங்கசெய்வார். அதிக காலம் வாழ்வது கடினம் ஆயுளை குறைக்க செய்வார். செல்வத்தை இழக்க செய்வார். நண்பர்கள் மூலமும் பெண்கள் மூலமும் தீமைகள் உண்டாகும். உற்றார் உறவினர்களை விட்டு பிரிவார்கள். உடலில் மர்மபாகங்களில் உபத்திரம் உண்டாகும். மனதில் எப்பொழுதும் கவலை ஏற்பட்டுக்கொண்டு இருக்கும்.
சூரியன் 9 ல் உள்ள சூரியனால் குழந்தை பாக்கியம் கிடைக்கும். ஆட்சியில் இருந்தால் தந்தையிடம் நன்றாக நடந்துகொள்வார் தந்தையாரின் பாசம் இவருக்கு கிடைக்கும்.பகைவீட்டில் இருந்தால் தந்தைக்கும் மகனுக்கும்

உள்ள உறவு கெடுக்கும். அடிக்கடி பயணம் செய்ய வைக்கும் நல்ல அறிவு வெற்றி வாழ்க்கை வசதிகள் ஆகியவற்றை பெறவைக்கும்.
சூரியன் 10 ல் உள்ள சூரியனால் நல்ல கல்வி கிடைக்கும் குழந்தை பாக்கியம் கிடைக்கும். அரசாங்கத்தில் பணிபுரிய நேரிடும் வாகன வசதி கிடைக்கும். பெரிய தொழில்களை நிர்வகிக்க முடியும்.
சூரியன் 11 ல் உள்ள சூரியனால் செல்வம் குவிய செய்வார். வாழ்க்கையில் உயர்ந்த நிலைக்கு செல்வர் நல்ல உடம்பு பலம் உண்டாகும். பல்வேறு துறைகளில் வருவாய் வர செய்வார். வாழ்க்கை துணை மூலம் மகிழ்ச்சி ஏற்படும் அரசாங்க வேலை கிடைக்கும்.
சூரியன் 12 ல் உள்ள சூரியனால் தொழில்களில் வீழ்ச்சியை உண்டாகும். அனைத்து முயற்சிகளிலும் தோல்வியை உண்டாக்குவார் செல்வ வளம் இருக்காது. புனித காரியங்களுக்காக செலவு செய்திடவைப்பார். புனித யாத்திரை செய்திடவைப்பார்.

ஆதித்யன் (சூரியன்)

ஓம் அஸ்வத்வஜாய வித்மஹே
பாசஹஸ்தாய தீமஹி
தன்னோ சூர்யஹ் ப்ரசோதயாத்
ஓம் பாஸ்கராய வித்மஹே
திவாகராய தீமஹி
தன்னோ சூர்யஹ் ப்ரசோதயாத்
ஓம் பாஸ்கராய வித்மஹே
மஹா ஜ்யோதிஸ்சக்ராய தீமஹி
தன்னோ சூர்யஹ் ப்ரசோதயாத்
ஓம் பாஸ்கராய வித்மஹே
மஹாத்யுதிகராய தீமஹி
தன்னோ ஆதித்யஹ் ப்ரசோதயாத்
ஓம் பாஸ்கராய வித்மஹே
மஹாதேஜாய தீமஹி
தன்னோ சூர்யஹ் ப்ரசோதயாத்
ஓம் ஆதித்யாய வித்மஹே
மார்தாண்டாய தீமஹி
தன்னோ சூர்யஹ் ப்ரசோதயாத்
ஓம் லீலாலாய வித்மஹே
மஹா த்யுதிகராய தீமஹி

தன்னோ ஆதித்யாய ப்ரசோதயாத்
ஓம் பிரபாகராய வித்மஹே
மஹா த்யுதிகராய தீமஹி
தன்னோ ஆதித்யாய ப்ரசோதயாத்

**************************************************************************************************************

# நவகிரகங்கள்- சந்திரன்

சந்திரன் பூமியில் இருந்து 2738800 KM துரத்தில் சுற்றி வருகிறது . இது பூமிக்கு உபகிரகம். இது தன்னைத் தானே சுற்ற 27 நாட்கள் 8 மணி நேரம் ஆகிறது. இது பூமியை 29 நாட்கள் 12 மணி 44 விநாடிகளில் சுற்றி வருகிறது. சந்திரன் மனதுக்கு காரகம் ஆகிறார். தாயாருக்கும் காரகம் ஆகிறார்.சந்திரன் இரட்டை நிலை பண்பு கொண்டது. வளர்பிறை.தேய்பிறை என்ற இரண்டு நிலைப்பாடு உண்டு. அதற்கு ஏற்றதுப்போல் தான் பலன்கள் தரும். சந்திரனை கொண்டு ராசி கணக்கிடப்படுகிறது. சந்திரனுடன் கெட்ட கிரகங்கள் இணைவது நல்லது கிடையாது. முக அழகு, பெண் வழியில் லாபம், நீர் சம்பந்தமான பொருட்கள். சந்திரன் பார்வை 7ம் பார்வை மட்டும் உண்டு. அதைப்போல் சந்திரன் எட்டில் அமரும் போது வாழ்க்கை சோதனை ஆகிவிடும். ஏழில் தனித்து அமரும் போது காதல் மணம் தருகிறார். உயிர்களை இன்பத்தில் லயிக்கச் செய்து சுகம் காண வைப்பது சந்திரனின் இயல்பு. சந்திரனின் அதிகாரத் தலம் திங்களூர். வெண்மை வாய்ந்த அலரி மற்றும் அல்லி மலர்களால் இவரை அர்ச்சித்து பச்சரிசி நிவேதித்து நலம் பெறலாம். திங்களூரில் சந்திரனை வழிபடுவதால் நலம் பெறலாம். மனதிற்க்கும், உடலுக்கும் காரகன் சந்திரன். உலக வாழ்வுக்கு சரிர பலம் முக்கியம். சரிர பலத்திற்க்கு மனவளம் அடிப்படை. ஜாதகத்தில் சந்திரன் பலம் பெற்றிருந்தால் இரண்டையுமே அடைய முடியும். ரோகினி அஸ்தம் திருவோணம் இந்த மூன்று நட்சத்திரங்களுக்கும் நாயகன் சந்திரன். தாய்க்கு காரகன் சந்திரன். கடகம் ஆட்சி எனும் சொந்த வீடு, ரிஷபம் உச்ச வீடு, விருச்சிகம் நீச வீடு. திருமண பொருத்தங்கள் சந்திரன் சஞ்சாரம் செய்யும் நட்சத்திரங்களை அடிப்படையாக கொண்டே உறுதிபடுத்தபட்டு வருகின்றன. சுபமுகர்தங்கள் நிச்சயிக்கபடுவதும் சந்திரனைக் கொண்டுதான்.

நாம் பிறக்கும் போது சந்திரன் இருந்த வீட்டை வைத்துதான் கோச்சார பலன்கள் நிர்ணயிக்கபடுகின்றது. சந்திரன் ஜாதகத்தில் அமைந்த வீடு தான் இராசி எனப்படுகிறது.

சூரியனோடு கோச்சார ரீதியாக சேரும் பொழுது அமாவாசை ஆகின்றது. சூரியனும், சந்திரனும் ஒன்றுக்கொன்று பார்வையிடும் பொழுது அதாவது நேர்கோட்டில் 180 பாகையில் சந்திக்கும்

பொழுது பௌர்ணமி ஆகின்றது. 'சந்த்ரமா மனஸோ ஜா' என்று புருஷ சூக்தம் போற்றும் சந்திரனே மனதிற்கு அதிபதி. இவனே உடலுக்கு காரகன். சரீர பலம், மனோ பலம் இரண்டுமே உலக வாழ்க்கையின் வெற்றிக்கு மூல பலம் ஆகும். ஜனன லக்னத்தின்படி நல்ல பலன்களை ஒரு ஜாதகத்தில் காண முடியவில்லை எனில், சந்திரனை லக்னமாகக் கொண்டு பலன்களைச் சொல்ல வேண்டும் என்று விதி இருக்கிறது. இதையே 'விதி கெட்டால் மதியைப் பாரு' ; விதியை மதியால் வெல்லலாம் என்ற பழமொழி உணர்த்துகிறுது! ஜோதிடப்படி மாத்ரு காரகன் சந்திரன். கடற்பயணம், ரசனை, அறிவு, ஆனந்தம், புகழ், அழகு, நடு நிலைமை, சுக போகம் இவற்றிற்கு காரகன் சந்திரனே! முகூர்த்தங்களை நிச்சயம் செய்வது, ஜாதக தசா இருப்பு, திருமணப் பொருத்தம் ஆகிய முக்கியமானவை அனைத்துமே சந்திரனை அடிப்படையாகக் கொண்டே நிர்ணயிக்கப்படுகின்றன. தென் கிழக்குத் திசை சந்திரனுக்குரியது. உகந்த நிறம் வெள்ளை. சந்திரனுக்கு உரிய தலம் திங்களூர்.

விஷ்ணுவின் அம்சமான சந்திரனின் நற்பலன்களைப் பெற பௌர்ணமியன்று திருப்பதி சென்று தரிசனம் செய்து தங்கி வழிபடுவது நலம் பயக்கும். மூலிகைக்கு அதிபதி சந்திரன். செல்வத்தை தருபவன் என யஜுர் வேதம் சந்திரனைப் புகழ்கிறது. சந்திரன் நிற்கும் வீட்டை ராசி வீடாகக் கொண்டு இதன் முன் பின் வீடுகளை சனி கடக்கும் போது ஏற்படும் ஏழரை ஆண்டுகள் 'ஏழரை நாட்டுச் சனி' என்று கூறப்படுகிறது. முத்து சந்திரனுக்கு உகந்த ரத்தினம். வெள்ளைக்குதிரை சந்திரனின் வாகனம்!

திங்களூர்

நவகிரகத் தலங்களுள் சந்திரன் தலம் திங்களூர் ஆகும். தமிழ் நாட்டில் தஞ்சாவூர் மாவட்டத்தில் திருவையாற்றில் இருந்து சுமார் 3 கி.மீ.தொலைவிலும் கும்பகோணத்தில் இருந்து சுமார் 33 கி.மீ.தொலைவிலும் இத்தலம் அமைந்துள்ளது. தேவர்களும் அசுரர்களும் அமிர்தத்தைப் பெற வேண்டி திருப்பாற்கடலைக் கடைந்தார்கள்.மந்திர மலையை மத்தாகவும் வாசுகி எனும் பாம்பைக் கயிறாகவும் கொண்டு அவர்கள் பாற்கடலைக் கடைந்தபோது,ஆலகால விஷம் வெளிப்பட்டது.அசுரர்கள் வாசுகியின் தலைப்பக்கத்திலும் தேவர்கள் வால் பக்கத்திலும் நின்றுகொண்டு இருந்தனர்.தேவர்களைக் காப்பாற்றுவதற்காக இறைவன் அந்த விஷத்தை தானே அருந்தினார்.ஆனாலும் நஞ்சின் தாக்கத்தினால் தேவர்கள் மயக்கம் அடைந்துவிட்டனர்.அப்போது

அமிர்தத்துடன் எழுந்து வந்த சந்திரன், தேவர்களின் மயக்கத்தைத் தெளிவித்தான். திங்களூரில் அப்பூதி அடிகள் என்ற சிவனடியார் வாழ்ந்து வந்தார். இவர் திருநாவுக்கரசரிடம் கொண்டிருந்த அன்பின் மிகுதியால், அவர் பெயரில் பல நற்பணிகளைச் செய்து வந்தார். ஒருமுறை திங்களூருக்கு எழுந்தருளிய திருநாவுக்கரசர், அப்பூதி அடிகளின் இல்லத்துக்கு வருகை புரிந்தார். திருநாவுக்கரசர் தமது இல்லத்தில் உணவருந்த வேண்டும் என்ற அப்பூதி அடிகளின் வேண்டுகோளை திருநாவுக்கரசர் ஏற்றுக் கொண்டார்.அதற்காக தோட்டத்தில் சென்று வாழை இலை பறித்து வருமாறு அப்பூதி அடிகள் சிறுவனான தமது மகனை அனுப்பி வைத்தார்.ஆனால் வாழைத்தோப்பில் பாம்பு கடித்து சிறுவன் இறந்து விட்டான். தமது துயரத்தை திருநாவுக்கரசரிடம் காட்ட விரும்பாத அப்பூதி, பிணத்தை துணியைல் மூடி வைத்துவிட்டு திருநாவுக்கரசருக்கு உணவு பரிமாறினார்.ஆனால் நிலைமையை உணர்ந்துகொண்ட திருநாவுக்கரசர் சிறுவனின் பிணத்தை கோவிலுக்கு எடுத்துச் சென்று இறைவன் முன் கிடத்தி இறைவனை மனமுருகப் பாடினார். சிறுவன் உயிர் பெற்று எழுந்தான். திருநாவுக்கரசர் பாடிய பாடகள் பத்தும் "திருப்பதிகம்" என்றழைக்கப் படுகின்றன. புரட்டாசி மற்றூம் பஙுகுனி மாதங்களில் சந்திரனின் கிரணங்கள் இறைவன் சிலை மீது விழுமாறு அமைக்கப்பட்டு இருப்பது இக்கோவிலின் சிறப்பம்சம்.

அருள்மிகு கைலாசநாதர் திருக்கோயில்

-

மூலவர்:கைலாசநாதர்
உற்சவர்:-
அம்மன்/தாயார்: -
தல விருட்சம்: வில்வமரம்
தீர்த்தம்:சந்திரபுஷ்கரிணி
ஆகமம்/பூஜை :-
பழமை:1000-2000 வருடங்களுக்கு முன்
புராண பெயர்:-
ஊர்:திங்களூர்
மாவட்டம்: தஞ்சாவூர்
மாநிலம்: தமிழ்நாடு
மகாசிவராத்திரி, மார்கழி திருவாதிரை, பங்குஉத்திரம், திருக்கார்த்திகை
தமிழகத்தில் அன்னப்பிரசானத்துக்கு மிகச் சிறந்த தலம்
திங்களூர் கைலாசநாதர் கோயிலாகும்.

காலை 6 மணிமுதல் 11 மணி வரை, மாலை 4 மணி முதல் இரவு 8 மணி வரை திறந்திருக்கும்.
அருள்மிகு கைலாசநாதர் திருக்கோயில், திங்களூர் - 613 204 தஞ்சாவூர் மாவட்டம்.
இறைவன்: கைலாசநாதர்
இறைவி : பெரியநாயகி
சந்திரன் தென்கிழக்கு திசை நோக்கி இருக்கிறார்.
சந்திரனின் நிறம் : வெண்மை
வச்திரம்: வெள்ளைத்துணி
தான்யம்; நெல்
உணவு: தயிர் சாதம்
மலர்: வெள்ளை அரளி
நிறம் - வெண்மை
இரத்தினம்- முத்து
உலோகம்-ஈயம்
ஆட்சி- கடகம்
உச்சம்-ரிஷபம்
நீசம்-விருச்சகம்
இனம்-பெண்
நட்பு-சூரியன்
பகை-இராகு
சமம்-செவ்வாய்,வியாழன்.சனி.சுக்கிரன்
தானியம்-பச்சரிசி
திசைகாலம்- 10 ஆண்டுகள்

**சந்திரன் அறிவியல் தகவல்:** சந்திரன் பூமியிலிருந்து 4லட்சத்து 6ஆயிரம் கி.மீ., தூரத்தில் உள்ளது. இது பூமியை விட 81 மடங்கு எடை குறைவானது. ஒருநாள் தோன்றிய நேரத்தில் இருந்து 52 நிமிடங்கள் கழித்து மறுநாள் உதயமாகும். தன்னைத்தானே சுற்றவும், பூமியை ஒருமுறை சுற்றவும் 29 1/2 நாட்கள் ஆகும்.
திருமணத்தடை, குழந்தை பாக்கியம், கல்வியில் சிறந்து விளங்க இறைவனை பிரார்த்திக்கலாம். சுவாமி, அம்பாளுக்கு வஸ்திரம் அணிவித்தும், கோயில் திருப்பணிக்கு பொருளுதவி செய்தும் நேர்த்திக்கடன் நிறைவேற்றலாம். குழந்தைக்கு முதல் சோறு கொடுப்பதை "அன்னப்பிரசானம்' என்பர். கிராம மக்கள் தங்கள் குல தெய்வக்

கோயில்களில் இதைச் செய்வர். வசதி படைத்தவர்கள் பெரும்பாலும் குருவாயூர் குருவாயூரப்பன் சன்னதியில் இந்த சடங்கைச் செய்வது வழக்கம். தமிழகத்தில் அன்னப்பிரசானத்துக்கு மிகச் சிறந்த தலம் திங்களூர் கைலாசநாதர் கோயிலாகும்.

அசுவினி, மிருகசிரீஷம், உத்திரம், சுவாதி, திருவோணம், சதயம், ரேவதி நட்சத்திர நாட்களிலும், சந்திரஹோரை வேளையிலும் சந்திரனையும், பசுவையும் குழந்தைக்கு காண்பித்து, வெள்ளிக் கிண்ணத்தில் பால், நெய், தேன் கலந்த சாதத்தை ஊட்ட வேண்டும். இவ்வாறு உண்ணும் குழந்தைகளுக்கு ஜலதேவதையின் அருளும், ஔஷதி தேவதையின் அருளும் கிடைக்கும் என்பது நம்பிக்கை. ஜலதேவதையின் அருளால், குழந்தைக்கு ஜலதோஷம், காய்ச்சல் உள்ளிட்ட நோய் அண்டாது என்றும், அப்படியே வந்தாலும் ஔஷதி (மருந்து) தேவதையின் அருளால் அது உடனே நீங்கி விடும் என்பதும் இத்தலத்து விசேஷம். குழந்தைகளுக்கு அம்புலியை காட்டி சோறூட்டுவது ஏதோ விளையாட்டுக்காக மட்டுமல்ல. அதில் ஆன்மிகக்காரணமும் புதைந்து கிடக்கிறது என்பதால்தான்.

திருநாவுக்கரசர் தேவாரம் பாடிய பெரியவர். இவரை உலகமே அறியும். ஆனால், மூத்த திருநாவுக்கரசர், இளைய திருநாவுக்கரசர் பற்றி யாருக்காவது தெரியுமா? இவர்களை தரிசிக்க திங்களூர் கைலாசநாதர் கோயிலுக்கு செல்ல வேண்டும்.

அப்பூதியடிகள் என்ற சிவபக்தர் திங்களூரில் வசித்தார். இவரது மனைவி அருள்மொழி. இவர்களுக்கு இரண்டு குழந்தைகள். நீங்கள் ஒரு முருக பக்தராக இருந்து. உங்களுக்கு குழந்தை பிறந்தால் "முருகன், கந்தன், கார்த்திகேயன்' என ஏதோ ஒரு பெயர் வைப்பீர்கள். ஆனால், அப்பூதியடிகள் சிவபக்தராயினும் கூட, சிவனின் அடியவரான திருநாவுக்கரசரின் பெயரை தன் குழந்தைகளுக்கு வைத்தார். மூத்தவனுக்கு "மூத்த திருநாவுக்கரசு', இளையவனுக்கு "இளைய திருநாவுக்கரசு' என்று. தன்னை விட தன் அடியார்களுக்கு தொண்டு செய்வதையே தெய்வம் விரும்பும். "மக்கள் சேவையே மகேசன் சேவை' என்பதும் இறைவனுக்கு பிடித்த பொன்மொழி. அதைப் பின்பற்றி நாவுக்கரசரின் பெயரால் கல்விக்கூடம். அன்னசத்திரம், தண்ணீர் பந்தல் ஆகியவை அமைத்தார். மக்கள் சேவையை வலியுறுத்தும் இந்த குடும்பத்தினர் சிலை வடிவில் திங்களூர் கைலாசநாதர் கோயிலில் உள்ளனர். வேறு எந்தக் கோயிலிலும் மூத்த, இளைய திருநாவுக்கரசர்களைக் காண முடியாது. இதில் மூத்த திருநாவுக்கரசை பாம்பு தீண்டியது. திருநாவுக்கரசர் அக்குழந்தையைக் காப்பாற்றியதாக வரலாறு உள்ளது.

சங்கடம் தீர்ப்பான் சந்திர பகவான்! சந்திரன், சாதாரண கண்களுக்கும் புலப்படும் கிரகம். பகலில், சூரிய கிரணத்தில் மறைந்திருப்பதால், பார்க்க இயலாது; இரவில் நன்றாகப் பார்க்கலாம். தேய்ந்தும் வளர்ந்துமாக மாறுபவன், சந்திரன். பரம்பொருளின் மனதிலிருந்து வெளிவந்தவன் என்கிறது வேதம் (சந்திரமா மனஸோஜாத:). பரம்பொருளானது பிரபஞ்சாகாரமாகத் தோற்றம் அளிக்கிறது. உடல் எடுத்த உலகின் மனமான சந்திரன், பருவங்களை உருவாக்கி, உலகை மகிழ்ச்சியில் ஆழ்த்துகிறான் என்கிறது வேதம் (சந்திரமா: ஷட்ஹோதா. ஸரிதூன்கல்பயாதி) ஏதும் அறியாத குழந்தையும் சந்திரனைப் பார்த்து மகிழும்; தொண்டு கிழமும் மகிழும். இளைஞர்களின் மனத்தை, விரும்பியவளுடன் சேர்த்து மகிழ வைப்பவன் சந்திரன். அதுமட்டுமின்றி, உயிரினங்களை வெப்பத்திலிருந்து பாதுகாப்ப வனும் இவனே! மனித மனத்தை இயக்குபவன் என்று சந்திரனைக் குறிப்பிடுகிறது ஜோதிடம் (மனஸ்துஹினகு...). தேய்ந்தும் வளர்ந்தும் மாறி மாறித் தென்படும் இயல்பு, மனித மனத்திலும் வெளிப்படும். செடி- கொடிகளின் மருத்துவ குணத்தை, சந்திரனின் கிரணங்கள் உருவாக்குகின்றன (ஸோமோவா ஓஷதீனாம் ராஜா...) பௌர்ணமியில், கடல் அலையை அதிகம் எழச் செய்பவன். இரவில் மலரும் பூக்கள், சந்திரனைக் கண்டதும் குதூலத்துடன் காட்சி தரும். அதுபோல், பிரபஞ்சப் பொருட்களில், சந்திரனின் தாக்கம் தென்பட்டு மாறுபாட்டைச் சந்திக்கும். வெகு தொலைவில், விண்வெளியில் வலம் வந்தாலும், சந்திரனது தாக்கம் பிரபஞ்சத்தை மட்டுமின்றி, மனிதர்களையும் பாதிக்கும். ஆகாயம் என்ற பூதம் ஒன்றுதான்; அது உலக அளவுக்குப் பரவியிருக்கிறது. ஆகாயம் என்றால் இடைவெளி என்று அர்த்தம். இடைவெளியில் வாழ்கிற நமக்கு, இடைவெளியின் தாக்கம் இருக்கும் என்பதில் ஆச்சரியம் ஏதுமில்லை. உலகின் ஒரு கோடியில் நிகழும் சம்பவத்தை, மறு கோடியில் இருந்தபடி சின்னத்திரை வழியே பார்க்கிறோம். அதற்கு ஆகாசத்தின் பங்கு தவிர்க்க முடியாதது.

சூரியனிடம் இருந்து சூடான கிரணத்தைப் பெற்று, தன்னிடம் இருக்கிற தண்ணீருடன் இணைத்துக் குளிரச் செய்து, வெப்பத்தால் வாடும் உலகைக் குளிர்வித்து மகிழச் செய்கிறான் சந்திரன் (ஸலிலமயே சசினி...). தண்ணீருடன் தென்படுவதால், கடக ராசியான ஜல ராசி அவன் இருப்பிடம் என்கிறது ஜோதிடம். கடகம் என்றால் நண்டு. அது, ஈரப்பதமான இடத்தில் வாழும். ஆகவே, ஈரமான மனம், கருணையுள்ளம் கொண்டவன் என்பதற்குப் பொருத்தமானவன், சந்திரன்! அமாவாசையில், சூரியனில் மறைந்த சந்திரன், ஒவ்வொரு நாளும் சிறுகச் சிறுக கிரணத்தைப்

பெற்று வளர்ந்து, 15-ஆம் நாளில் முழு நிலவெனக் காட்சி தருவான். அதனை பௌர்ணமி என்கிறது வேதம் (பஞ்சதச்யாமா பூர்யதெ...). பிரதமையில் இருந்து சூரியன், தனது கிரணத்தைத் திரும்பப் பெறும்போது, ஒவ்வொரு பகுதியாகத் தேய்ந்து தேய்ந்து, சூரியனில் ஒன்றிவிடுவதை அமாவாசை என்பார்கள் (பஞ்சதய்யாமபுஷீயதை). ஒவ்வொரு பிறையாக வளர்வதால், வளர்பிறை; ஒவ்வொரு பிறையாகத் தேய்வதால் தேய்பிறை என்றாகிவிட்டது. ஒவ்வொரு பிறையிலும் தடங்கலின்றி வளர்வதால், செயல்களும் வளர்ந்தோங்க வேண்டும் என்று, வளர்பிறையை ஏற்றனர். தேய்பிறையை தென்புலத்தார் பணிவிடைக்கு ஒதுக்கினர். சந்திர கிரகணத்தில் பிடிக்கும் வேளை வளர்பிறையானதால், தான- தருமங்களைச் செய்யச் சொன்னார்கள். விடும் வேளையில் பிரதமை என்பதால், தேய்பிறையைக் கொண்டு தர்ப்பணம் செய்யப் பரிந்துரைத்தனர். ஈசனின் சிரசில் சந்திரன் வீற்றிருப்பதால், சந்திரசூடன் என சிவனாருக்குத் திருநாமம் உண்டு. அதேபோல், அம்பாளின் சிரசிலும் ஸ்ரீவிநாயகரின் சிரசிலும்கூட சந்திரன் வீற்றிருக்கிறான் என்கிறது புராணம்.

ஸ்ரீமந் நாராயணரின் கண்ணாகத் திகழ்கிறது எனச் சந்திரனைக் குறிப்பிடுவர். சந்திரனுடன் கூடிய சூரியனில், அதாவது அமாவாசை மற்றும் பௌர்ணமி, வேள்வி செய்ய வேண்டிய வேளை என்கிறது வேதம்! முழு நிலவில் இணைந்த நட்சத்திரங்களை, அதன் பெயரைக் கொண்டே மாதங்களின் பெயர்களாக ஏற்றனர். பௌர்ணமியில் சித்திரை நட்சத்திரம் இணைந்து வர... சித்திரை என அந்த மாதத்துக்குப் பெயர் வந்தது. மற்ற மாதங்களுக்கு, பௌர்ணமியைக் கொண்டே பெயர் வரும். அதாவது, காலத்தை அளக்கும் கருவியாகத் திகழ்பவன் சந்திரன்! அதனைச் சாந்திர மானம் என்பார் கள். விரதங்களையும் பூஜைகளையும் சாந்திர மானத்தைக் கொண்டே கணக்கிடுவார்கள். அமாவாசையில் சூரியனில் ஒடுங்கிவிடுவதால், பலமிழந்து விடுவான் சந்திரன். ஆகவே அந்த வேளையில், மனநோய்கள் வலுப்பெறும் என்கிறது ஜோதிடம். மனதுக்கும் சந்திரனுக்கும் தொடர்பு இருப்பதை, நோயின் ஏற்றத்தாழ்வு சுட்டிக்காட்டும். சாதாரண நோய்கள்கூட, அமாவாசை நெருங்கும் நாட்களில் வலுப்பெறும். உடல், புலன்கள், மனம், ஆன்மா ஆகியவற்றின் இணைப்பும் அதன் தொடர்ச்சியுமே வாழ்க்கை என்கிறது ஆயுர்வேதம். இதில் முக்கியமானது மனம்! ஆகவே, வாழ்வில் சந்திரனுக்கு நிரந்தரப் பங்கு இருக்கிறது. நல்ல காரியங்களைச் செயலாற்ற, சந்திர பலம் வேண்டும் என்கிறது சாஸ்திரம் (சந்திர பலம் ததேவ). சந்திர பலம் இருந்துவிட்டால், மனமானது ஈடுபாட்டுடன் செயலாற்றும்! ஆயிரம் பிறை கண்டவனை,

சதாபிஷேகம் செய்வித்து மகிழ்விப்பவன், சந்திரன்.

மாசி பௌர்ணமியின் இரவில் சந்திர பூஜை நிகழும். அப்போது, பால் பாயசம் நைவேத்தியம் செய்து, குழந்தைகளுக்கும் அனைவருக்கும் அளிக்கிற வழக்கம், கிராமங்களில் இன்றைக்கும் உண்டு! தென்புலத்தார், தேவர்கள், ரிஷிகள் ஆகியோரது பணிவிடைகளில் சந்திரனின் பங்கு இருப்பதால், வாழ்வு சிறக்க அவனருள் வேண்டும். விண்வெளியில் முதல் ஓடுபாதை, சந்திரனுடையது. ஆகவே, பூமிக்கு அருகில் இருப்பவன் அவன்! அவனுக்கு மேல், நான்காவது ஓடுபாதையில் இருக்கும் சூரியனிடம் இருந்து கிரணத்தைப் பெற்றுச் செயல்படுவான் சந்திரன். ராசிச் சக்கரத்தில், சந்திரனுக்கு அடுத்த ராசியில், அதாவது சிம்மத்தில் சூரிய னுக்கு இடமளித்திருக்கிறது ஜோதிடம். ஆன்மாவுடன் இணைந்து மனம் செயல்படுவது போல், சூரிய கிரணத் துடன் இணைந்து செயல்படுவான், சந்திரன்! ஆகவே, அடுத்தடுத்த வீடு பொருத்தமாக அமைந்துள்ளது. ஆன்மா ஒன்று; அதேபோல் மனமும் ஒன்று! ஆதலால், 12 வீடுகள் இருந்தும், இரண்டுபேருக்கும் ஒவ்வொரு வீடுதான் ஒதுக்கப்பட்டிருக்கிறது. சுகத்தை அதாவது மகிழ்ச்சியை மனம் அறியும். ஆகையால், ராசி புருஷனில் 4-ஆம் வீட்டில் சந்திர னுக்கு இடமளித்தனர்.

வளர்பிறையில் சந்திரன் நல்லவன்; சுப பலனையே அளிப்பான். தேய்பிறையில் பலம் குன்றியவன்; அசுபன் - விருப்பமில்லாத பலனையே திணிப்பான்!
குருவுடன் இணைந்து பொரு ளாதாரத்தைச் செழிப்பாக்குபவன் சந்திரன். தன்னுடைய கேந்திரங்களில் குரு இருந்தாலும் அதாவது 4, 7, 10-ல் இருந்தாலும் பணத் தட்டுப்பாடின்றி காரியத்தை நிறைவேற்றி வைப்பான் சந்திரன். 5, 9-ல் குரு இருந்தால், ஆன்மிக வாழ்வில் ஆர்வத்தைத் தூண்டுவான்! பூமியும் விண்வெளியும் சேர்ந்தே இருந்தது. பிறகு, அது அகண்ட இடைவெளியுடன் தனித்தனியே காட்சி அளித்தது. பூமியின் மண், சந்திரனில் ஒட்டியுள்ளது. அதில் தென்படும் கறுப்புப் புள்ளி, மண் எனத் தெரிவிக்கிறது வேதம் (யதத: சந்திரமஸி கிருஷ்ணம் ஊஷான்னிவபன்...). இப்படியான விலகல், நமக்கு வாழ இடத்தை அளித்தது. முக அழகை, சந்திரனுடன் ஒப்பிடுவார்கள் புலவர் பெருமக்கள். பகலில், வெப்பத்தில் சூடேறிய நதிகள், தடாகங்கள் ஆகியவற்றின் நீரைக் குளிரச் செய்து, வெதுவெதுப்பாக மாற்றி, அதில் நீராடுவதற்கு நமக்கு உதவுபவன், சந்திரன். சந்திர கிரணத்தின் சேர்க்கையால், குளிர்ந்த காற்று கிடைக்கிறது. அதேபோல், சந்திரன் இணைந்தால்தான், வேள்வியானது நிறைவுபெறும்

(ஸோமாயஸ்வாஹா...). அதேபோல், நாம் அணியும் ஆடையில், அவனுடைய சாந்நித்தியம் உண்டு. ஸோமஸ் என்றால் சந்திரன்; ஸோமஸ் என்றால் ஆடை என்றும் பொருள் உண்டு (ஸோமஸ்யதனூரஸி...). சதுர்த்தியில் சந்திரனைப் பார்க்க நேர்ந்தால், வீண் பழியேதும் வராமல் தடுக்க, ஆடையில் இருந்து ஒரு நூலை எடுத்து, சந்திரனுக்கு அளிக்கும் சம்பிரதாயம் கிராமங்களில் உண்டு. வெப்பமும் குளிர்ச்சியும்தான் பருவ மாற்றத்தின் மூலப் பொருள். அதில் குளிர்ச்சியான பங்கு, சந்திரனுடையது. சந்திரகாந்தக் கல், சந்திர கிரணம் பட்டு, உருகி ஓடும்; குளிர்ச்சியான சூழலை உருவாக்கும்.

ராவணன், குளியல் அறையில் சந்திரகாந்தக் கல் உமிழும் நீரில் நீராடுவான் என்கிறது சம்பூர்ண ராமாயணம் (ஏஷமிருங்கோபி...). கல்லைக் கரைக்கும் சந்திரன், கல் மனத்தையும் கரைப்பான். கோழிக்குக் கிடைத்த வைரக்கல், குரங்குக்கு கிடைத்த பூமாலை வீணாகிவிடுகிறது. அதுபோல், ஒப்பில்லாப் பொருள் (ஜோதிடம்) குப்பையில் சேருவது வேதனை அளிக்கிறது. அனுபவத்தில் உணரும் அறிவை, அடை யாளம் காணாமல் இருப்பது நமது துரதிர்ஷ்டம். சசிமங்கள யோகத்தில், சந்திரனுக்குப் பெரும்பங்கு உண்டு. சனியோடு இணைந்தால் ஒருவனுக்குச் சிந்தனை வளம் குன்றிவிடும். மானம், வெட்கம், சூடு, சொரணை ஆகிய அனைத்தும் அவனை விட்டு விலகிவிடும். விரும்பியதை அடைவதற்காக, தரம் தாழ்ந்த வழியைக் கூடப் பின்பற்றச் செய்வான் சந்திரன். சனியின் தாமஸ குண சேர்க்கையில்சோம்பல், அறியாமை, மோகம் ஆகியன மேலோங்கி, மனித இயல்பே அகன்றுவிடும். 'எனக்குக் கிடைக்காதது எவருக்குமே கிடைக்கக்கூடாது' எனும் எண்ணத்தில், பொருளையே அழிக்கும் குணத்தைத் தருவான், சந்திரன். அதேநேரம், புதனுடன் இணைந்தால், சங்கடத்தில் சிக்கியபோதும் அறநெறியில் செயல்பட வைப்பான், சந்திரன். எந்தச் சூழலிலும் ஒழுக்கம் தவறாமல் இருக்கும் குணத்தைத் தருவான்! சூரியனுடன் சந்திரன் இணைந் தால், சிந்தனை வளம் பெருகும். சூரியன்- ஆன்மா; சந்திரன்- மனம். ஆன்மாவின் இணைப்பில் உலக சுகத்தை மறந்து, தனிமையில் மகிழ்ச்சியை உணரச் செய்வான் சந்திரன். ஏனெனில், சூரியன் எனும் ஆன்மாவில் இருந்து, உருப்பெற்றவன் அவன். ஆனால், ஆன்மாவுடன் இணைந்த மனமானது, அதனை மறந்து, புலன் வழியே அலைந்து, சலிப்புற்று, செய்வதறியாது தவிக்கிறது. நாயைக் குளிப்பாட்டி நடுவீட்டில் வைத்தாலும், அது... வாலைக் குழைத் துக் கொண்டு, வெளியே சென்றுவிடும் என்பார்களே... அப்படித்தான் இருக்கிறது நம்முடைய மனம்! சந்திர வம்சத்தில் இருந்து வந்தவர்கள் மகாபாரத

நாயகர்கள். மனதின் மாறுபட்ட சிந்தனைகளை அவர்களிடம் காணலாம். சூதும் வாதும், அறமும் ஆற்றலும், நெறியும் ஒழுக்கமும், பொறுமையும் போற்று தலும், உலகவியலும் ஆன்மிகமும் என சகலமும் அவர்களிடம் உண்டு! மனம் என்பது அணு அளவுதான்; ஆனால், அதன் கொள்ளளவு கடல் போல் விரிந்திருக்கும். தேய்ந்தும் வளர்ந்தும் நிலையின்றிச் செயல்படும் சந்திரனின் மறுபக்கம், ஒருவனைச் சீரழியச் செய்கிறது.

ஸ்ரீராமன் என்று சொல்வதைவிட, ஸ்ரீராமச்சந்திரன் எனும்போது, நம்மையும் அறியாமல் ஒரு ஈர்ப்பு அவனுடன் இணையச் செய்யும். சூரிய வம்சத்தில் உதித்தவன் ஸ்ரீராமச் சந்திரன். ஆன்மாவுடன் அதாவது சூரியனுடன் சந்திரனாகிய மனமும் இணைந்திருக்க... சந்திரனுடைய மறு பக்கத்தின் இயல்பான ஆன்ம சுகத்தை ஈட்டித் தருகிறது. ஈடு இணையற்ற ராம ராஜ்ஜியத்தை உருவாக்குவதில், சந்திரனுக்கு பெரும் பங்கு உண்டு! ராகுவுடன் இணையும்போது, மனதுள் அசுர குணம் தலைதூக்கும். ராகு- அசுரன். அவனுடைய இயல்பு, மனதுள் ஆட்கொள்ளும். மிருகத்தனமே முன்னிற்கும். அப்போது, பாபமும் தெரியாது; புண்ணியமும் தெரியாது. ஆறாம் அறிவே முடங்கிவிடும்; மனிதத் தன்மை அகன்று, வாக்குச் சுத்தம் போயே போய்விடும். கேதுவுடன் இணைந்தால், சிந்தனை வளம் குன்றும்; மனம் போன போக்கில் செயல்படச் செய்வான் சந்திரன்! பணம் இருந்தும், உரிய தருணம் கிடைத்தும் பயன்படுத்தாதவர்கள் உண்டு. திறமை இருந்தும் வெளிக்காட்டாதவர்கள் இருக்கின்றனர். செயல் பாட்டில் விபரீதம் நிகழ்ந்ததும், பணமும் திறமையும் வெளியே வரும். புத்தகத்து அறிவும் பிறரிடம் உள்ள பணமும் சந்தர்ப்பத்துக்கு உதவாது. உச்சம், ஸ்வக்ஷேத்ரம், வளர்பிறை, சுபயோகம், சுபதிருஷ்டி போன்ற அந்தஸ்தில் சந்திரன் வலுப்பெற்றிருந்தால், செவ்வாய், சனி, ராகு- கேது ஆகியோரின் தாக்கம் இருப் பினும், கடும் புயலிலும் அசையாத மரம் போல் சிறப்புறத் திகழக் காரணமாவான், சந்திரன். நீசம், தேய்பிறை, அசுப சேர்க்கை, அதன் யோகம் ஆகியவற்றைப் பெற்றிருந்தால், சிந்தனை தடுமாறும்; சங்கடங்களையே சந்திக்க நேரிடும். மனம் மகிழ்ச்சியை உணரும். ஆகவே அனைத்துக்கும் ஆதாரம், மனம்! உண்மையில், உடலில் மனம் என்கிற ஒன்றே இல்லை.

உறங்கிக் கிடக்கிற எண்ணக் குவியலையே மனம் என்கிறோம். எண்ணங்களை, நினைவுகளை மனனம் செய்வதால், அது மனம் என்றாயிற்று. எண்ணங்கள் அழிந்தால், மனனம் செய்யவோ நினைவுபடுத்திப் பார்க்கவோ ஏதும் இல்லாமலிருந்தால், மனமானது மறைந்துவிடும். அமாவாசையில் சந்திரன் மறைந்து, ஆன்மா மட்டுமே

தெரிகிறது. ஆகவே, ஆன்மாவில் லயிப்பது மோட்சம்! துயரத்திலிருந்து விடுபடு வதும் மோட்சம்தான்! கட்டுப்பட்டிருப்பதற்கும் விடுபடுவதற்கும் மனமே காரணம் (மன ஏவ மனுஷ்யாணாம் காரணம் பிந்தமோஷயோ:). உடலில் உறைந் திருக்கிற மனமே அத்தனை ஆர்ப்பாட்டங்களுக்கும் அமைதிக்கும் காரணம்! சுகாதாரம், ஆன்மிகம், ஆடம்பர வாழ்க்கை ஆகியவற்றுக்கும் மனதுக்கும் தொடர்பு உண்டு. மனத்தைத் தெளிவுபடுத்த, மகான்கள் பலரும் பல வழிகளைப் பரிந்துரைத்துள்ளனர் காலத்துடன் இணைந்த சந்திரனின் பங்கினை அறியாதவனுக்கு வெற்றி கேள்விக்குறியாகிவிடும். குரங்கு, சும்மாவேனும் இருக்குமா, என்ன? சேட்டை பண்ணிக்கொண்டே இருக்கும். அதைத் தேள் கொட்டினால், சேட்டை திசை மாறும். மதுவை அருந்தி, பிசாசும் பிடித்துக்கொண்ட நிலையில், அதன் சேட்டை எப்படியிருக்கும்? மனம் என்பதும் இப்படித்தான்… சும்மா இருக்காது. காமம், குரோதம், மதம், மாச்சரியம் ஆகியவற்றின் தாக்கத்தால் திக்குமுக்காடிப் போகும். நிலைத்து நின்று, சிந்தித்துச் செயல்பட சந்திரனின் வலுவான இணைப்பு துணை நிற்கும்! ஆகவே உடல் சுத்தத்தை கவனிக்கிறோமோ இல்லையோ… மனத் தூய்மையில் அக்கறை செலுத்துவது அவசியம். அதற்கு, சந்திர வழிபாடு மிக மிக அவசியம். மனத்துடன் தொடர்பு இல்லாதவர்களைத் தேடி அலையாமல், மனதுக்குத் தொடர்பு உடைய சந்திரனை அணுகுவதே சாலச் சிறந்தது.

திங்கட்கிழமை, சந்திரனுக்கு உரிய நாள். அன்றைய தினத்தில், 'ஸம் ஸோமாயநம:' என்று சொல்லி, 16 வகை உபசாரங்களை நடைமுறைப்படுத்துங்கள். கைகள் புஷ்பத்தை அள்ள, மனம் அவன் பெயரை அசைபோட, அவனுடைய திருமேனியில், புஷ்பத்தைச் சமர்ப்பியுங்கள். சந்திரனை மனதார நினைக்க, சந்திரனின் சாந்நித்யம், மனதுள் வந்துவிடும். அவனுக்கே உண்டான மென்மை, மலர்களில் உண்டு. அதனை, அவனிடமே சமர்ப்பிப்பது, மனதுள் அவனது இயல்பை வரவழைக்கிற காரியம்! சந்திரனை வேதங்கள் முழங்கி வழிபடுங்கள்; இல்லையெனில், அவனுடைய திருநாமத்தைச் சொல்லியே வழிபடலாம்!

தசாச்வம் ச்வேதபத்மஸ்தம்
விசின்த்யோமாதி தைவதம்
ஜலப்ரத்ய திதைவம்ச
ஸ¨ர்யாஸ்ய மாஹ்வயேத் ததா - எனும் ஸ்லோகத்தைச் சொல்லி, சந்திரனை வணங்குங்கள்.

வருங்காலத்துக்காக மனக்கோட்டை கட்டாமல், மனத்தை திடமாக்கிக் கொண்டால், சந்தர்ப்பம் வரும்போது, சரியான சிந்தனையைத் தந்து,

வெற்றிக்கு வழி வகுப்பான், சந்திரன்! சந்திரன், வெளியே இல்லை; உள்ளுக்குள்ளேயே இருக்கிறான்.

**ஒவ்வொரு வீட்டிலும் சந்திரன் இருந்தால் என்ன பலன் சந்திரன்**

முதல் வீட்டில் இருந்தால் லக்கினத்தில் இருப்பது நல்லது ஆனால் சந்திரனுக்கு அது சொந்த வீடாகவோ அல்லது உச்ச வீடாகவோ இருந்தால் நல்லது நட்பு வீடாக இருந்தாலும் நல்லது வாழ்க்கையில் உயர்வு பெறுவதற்க்கு நல்லது செய்வார். சிற்றின்ப சுகம் நன்றாக அமையும். பந்தயத்தில் வெற்றி பெறுவார் திடீர் பணவரவு இருக்கும்.

சந்திரன் 2-ல் சந்திரன் செல்வம் தருவார். நன்றாக பேச்சு வரும் அரசாங்கத்தில் நல்ல மதிப்பு இருக்கும் சொத்து சுகம் ஏற்படும். பெயரும் புகழும் உண்டாகக் காரணமாக இருப்பார். நல்ல கல்வி கிடைக்கும் சந்திரன் கெட்டால் செல்வத்தை இழக்க செய்யும். நல்ல பணவரவு இருக்காது. பொதுவாக வளர்பிறையில் நல்லது செய்வார்.

சந்திரன் 3-ல் சந்திரன் நல்ல நிலையில் இருந்தால் உடல் வலிமையையும் ஆற்றலையும் தருவார். சகோதர சகோதரிகளை ஆதரிப்பார் நல்ல மகிழ்ச்சியான வாழ்க்கை அமையும். மூன்றாவது வீடாக இருப்பதால் அடிக்கடி குறுகிய பயண செய்ய வைப்பார். வாகனம் வசதி கிடைக்கும் சந்திரன் கெட்டால் அனைத்தும் எதிர்மறையாக இருக்கும்.

சந்திரன் 4-ல் இருந்தால் மகிழ்ச்சியான வாழ்வு கிடைக்கும் 4 ஆம் வீடு வீட்டை குறிப்பதால் ஆறு குளம் கடலோரத்தில் வீடு அமையும். நண்பர்களுக்கு உதவி செய்வார். தாய்வழிச்சொத்து கிடைக்கும் கொடை குணம் இருக்கும்.

சந்திரன் 5-ல் சந்திரன் பலம் பெற்று இருந்தால் பணம் வந்து கொண்டே இருக்கும் நல்ல நண்பர்கள் கிடைப்பார்கள். அதிர்ஷ்ட வாய்ப்பு கிடைக்கும். நல்ல அறிவாற்றலை தருவார் வாழ்க்கையில் உயர்ந்த நிலைய அடையவைப்பார். குழந்தைபாக்கியம் அமையும் ஆனால் பெண் குழந்தைகளே பிறக்கும். சந்திரன் கெட்டால் அனைத்தும் எதிர்மறையாக இருக்கும்.

சந்திரன் 6-ல் சந்திரன் இருந்தால் சுகபோக வாழ்வு வாழ்பவர். விரோதிகளை உண்டு பண்ணுவார். இளம் வயதில் மகிழ்ச்சி குறையும். சந்திரன் அசுபபலன்

பெற்று இருந்தால் அடுத்தவருக்கு அடங்கி நடக்கக்கூடிய தன்மையை தருவார்.

சந்திரன் 7 ல் இருந்தால் ஆணாக இருந்தால் பெண்களிடம் பற்று இருக்கும். பெண்ணாக இருந்தால் ஆண்களிடம் பற்று இருக்கும். ஆண்/பெண் இருவரும் மூலம் பணவு இருக்கும் மகிழ்ச்சியான குடும்ப வாழ்க்கை இருக்கும். ஆண் /பெண் அழகாக இருப்பார்கள். சந்திரன் பலம் இழந்தால் ஆண் / பெண் உடல் பலன் குறையும். நோய் வரும்.

சந்திரன் 8- ல் இருந்தால் அறிவாற்றல் நல்ல இருக்கும். ஆனால் ஆயுளை குறைக்கும். சுக்கிலபட்சமாக இருந்தால் ஆயுள் நன்றாக இருக்கும். மனம் நிம்மதி இழந்து காணப்படும். சந்திரன் நன்றாக இருந்தால் நல்ல செல்வந்தராக இருப்பார்கள். பெரிய குடும்பத்தை உண்டுபண்ணுவார்.

சந்திரன் 9-ல் உள்ள சந்திரன் இருந்தால் நல்ல பாக்கியசாலியாக இருப்பார். புத்திரபாக்கியம் இருக்கும். உறவினர்கள் நல்ல உதவி செய்வார்கள். செல்வம் குவியும். சங்கீதம் நாடகம் போன்றவற்றில் ஈடுபாடு அதிகமாகும். அம்மாவின் அரவணைப்பு இருக்கும்.

சந்திரன் 10-ல் உள்ள சந்திரன் தன் மதத்தின் மீது பற்று ஏற்பட்டு மதம் பிரசாரம் செய்வார். நல்ல செல்வ வளம் சந்திரன் தருவார். வாழ்க்கையில் உன்னதமான பல நல்ல காரியங்களை செய்வார். செய்தொழில்களில் பகைவர்களை வெற்றிக்கொள்ளும் தைரியத்தை தருவார்.வாழ்க்கையில் பற்றிய எண்ணத்தை இயற்கையாக உண்டுபண்ணுவார். தாய்வழியில் நல்லது செய்வார். நண்பர்களிடத்தில் நல்ல நட்பு உண்டுபண்ணுவார். தொழில் நுட்பத்துறையில் ஈடுபட வைக்கும். தொழில்நுட்பத்துறையில் நல்ல அறிவு வளர செய்வார். வாழ்க்கையில் நல்ல வசதி வாய்ப்பு கிடைக்கும். அரசாங்கத்தில் நல்ல வசதி வாய்ப்பு கிடைக்கும். சிலபேருக்கு அரசாங்கத்தில் வேலை செய்ய வாய்ப்பு கிடைக்கும்.

சந்திரன் 11-ல் உள்ள சந்திரன் மூத்த சகோதர்களின் மூலம் லாபத்தை தருவார். எந்த வேலையை எடுத்தாலும் எளிதில் முடிக்க கூடிய திறமையை தருவார். நல்ல தீர்க்காயுள் ஏற்படும். வேலையாட்கள் மூலம் வருமானம் கிடைக்கும். வெளிநாட்டு பயணங்கள் மீது ஆர்வம் ஏற்படும். அரசாங்கத்தின் மூலம் பெயரும் புகழும் கிடைக்கும். நல்ல செல்வ வளம் சேரும்.

சந்திரன் 12-ல் உள்ள சந்திரன் பாதங்களில் வலி உண்டாக செய்வான். வாழ்க்கையில் மதிப்பு இழக்க செய்வான். கண் பார்வை மங்க செய்வான். அறிவாற்றல் குறையும். குறுகிய மனப்பான்மை இருக்கும். மனஉளைச்சல் இருக்கும். செலவு கூடும்.

சந்திரன்

ஓம் பத்மத்வஜாய வித்மஹே
ஹேமரூபாய தீமஹி
தன்னோ சோமஹ் ப்ரசோதயாத்
ஓம் க்ஷீரபுத்ராய வித்மஹே
அமிர்தாய தீமஹி
தன்னோ சந்திரஹ் ப்ரசோதயாத்
ஓம் அமிர்தேசாய வித்மஹே
ராத்ரிஞ்சராய தீமஹி
தன்னோ சந்திரஹ் ப்ரசோதயாத்
ஓம் சுதாகராய வித்மஹே
மஹாஔஷதீஸாய தீமஹி
தன்னோ சோமஹ் ப்ரசோதயாத்
ஓம் ஆத்ரேயாய வித்மஹே
தண்டஹஸ்தாய தீமஹி
தன்னோ சந்திரஹ் ப்ரசோதயாத்
ஓம் சங்கஹஸ்தாய வித்மஹே
நிதீச்வராய தீமஹி
தன்னோ ஹோமஹ் ப்ரசோதயாத்

****************************************************************************************************

# நவகிரகங்கள்- செவ்வாய்

செவ்வாய் தன்னைத் தானே 24 மணி 37 நிமிடம் 23 விநாடிகளில் சுற்றி வரும். சூரியனை 687.9 நாட்களில் சுற்றி வருகிறது. செவ்வாய் சகோதரன் காரகன் ஆகிறார். மேஷத்தில் செவ்வாய் இருக்கும் போது வெறித்தனமாகவும். விருச்சகத்தில் உள்ள போது வேகம் குறைவாகவும் இருக்கிறார். திருடு,வெட்டுக்காயம்,தீ காயம்,எதிரிகள்,பேராசை,அதிக காமம், போலீஸ், துணிச்சல், அரசியல் தொடர்பு ஆகிய குணங்கள் ஆகும். செவ்வாய்க்கு 4,7,8 ஆகிய பார்வைகள் உள்ளன. 1,4,7 இருப்பது நல்லதல்ல. 2,4,7,8,12 ஆம் இடங்கள் இருப்பது நல்லதல்ல. இந்த இடங்களில் இருந்தால் தோஷம் ஆகும். அங்காரகன், குஜன்,மங்களன் என்ற பெயர்களும் உண்டு. முதல் வரிசையில் வைத்து எண்ணப்படுகின்ற அரசியல் தலைவர்கள், காவல்துறை அதிகாரிகள், நாட்டு தளபதிகள், நீதிபதிகள், பொறியியல் வல்லுனர்கள் முதலானோர்களின் ஜாதகங்களில் செவ்வாயின் பலம் இருந்தே தீரும் என்பது உறுதி. பெருந்தன்மை அதே நேரத்தில் கண்டிப்பு, தொண்டு செய்தல், தலைமை வகித்தல், வைராக்கியம், பகைவரை வெல்லும் பராக்கிரம் இவற்றை வழங்குபவன் செவ்வாய் கிரகம். ரத்தத்திற்க்கும், சகோதரத்திற்க்கும் காரகன். மேஷம், விருச்சிகம் ஆட்சி வீடுகள். மகரம் உச்ச வீடு, கடகம் நீச வீடு. அவிட்டம், மிருக சீரிடம், சித்திரை நட்சத்திரங்கள் செவ்வாய்க்கு உரிய நட்சத்திரங்கள். ஜாதகத்தில் செவ்வாய் தோஷமுடையவர்களுக்கு சீக்கிரம் திருமணம் ஆவதில்லை. லக்னத்திற்கு 2,4,7,8,12 இவைகளில் செவ்வாய் இருந்தால் செவ்வாய் தோஷம் உண்டு. ஆனால் செவ்வாய் குருவோடு சேர்ந்தாலும், சனி, ராகு, கேதுவோடு சேர்ந்தாலும் செவ்வாய் தோஷம் பரிகாரம் ஆகிவடும். செவ்வாய் குருவோடு சேர்ந்தால் குருமங்கள யோகம் உண்டாகும். செவ்வாய் சந்திரனோடு சேர்ந்தால் சந்திரமங்கள யோகம் உண்டாகும்.

அங்காரகன், குஜன், மங்களன், பௌமன், உக்கிரன் என்று பல பெயர்களால் அழைக்கப்படும் செவ்வாய் நவக்கிரகங்களுள் மூன்றாவது இடத்தைப் பெறுபவன். சகோதர காரகன் இவனே. ரத்தத்திற்கு காரகன் செவ்வாய். உடல் உறுதி, மன உறுதி தருபவன் செவ்வாய். உஷ்ணம், கோபம், எரிபொருள் ஆகியவற்றிற்கு உரியவன் செவ்வாய். கண்டிப்பதும் இவனே, தண்டிப்பதும் இவனே. மாபெரும் போர் வீரர்களை

வழி நடுத்துபவன். பெரும் விளையாட்டு வீரர்களுக்கு அருள்பாலிப்பவன். செந்நிறத்தோல் அழகன், கடும் பார்வை உடையவன், பொறுமை அற்றவன். தெற்கு திசை செவ்வாய்க்கு உரியது. வழிபடுவோரின் விருப்பத்தை பூர்த்தி செய்பவன் இவன். தேசத்தை வழி நடத்தும் தலைவர்கள், படை தளகர்த்தர்கள், தீ போல சுட்டெரித்து தூய்மையை விரும்புவோர் ஆகியோரின் நாயகன் செவ்வாய். பவளமே செவ்வாய்க்கு உகந்த ரத்தினம். ஆட்டுக்கிடா செவ்வாயின் வாகனம். வைத்தீஸ்வரன் கோவிலில் அங்காரகன் எனப்படும் செவ்வாயும் மூலவராகவும் உற்சவராகவும் எழுந்தருளியிருக்கிறார். ஒவ்வொரு செவ்வாய்க் கிழமையும் இவருக்கு சிறப்பு நாட்கள்தாம். நமதுமனை மங்களம் சிறக்க செவ்வாயின் அருள் வேண்டும். செவ்வாயின் அருள் வேண்டி வைத்தீஸ்வரன் கோவிலுக்கு சென்று வழிபடலாம்.

**வைத்தீஸ்வரன் கோவில்**

"இத்திருக்குளத்தில் குளித்தெழுந்தால்
சகல நோய்களும் தீரும் என்பது திண்ணம்.
இத்தலத்தில் அடி வைப்பதால் பில்லி சூனியம்
முதலானவையும் கூட அகலும் என்பர்."

தென் நாட்டின் தலைசிறந்த பிரார்த்தனைத் தலங்களுள் ஒன்றானது. புள்ளிருக்கு வேளூர் எனப்படும் பாடல் பெற்ற தலம். பலராலும் பொதுவாக வைத்தீஸ்வரன் கோயில் என்றே அழைக்கப்பெறுகின்றது. சோழ வளநாட்டில் தஞ்சை மாவட்டத்தில் காவிரியின் வடகரைத் தலங்களில் 16வது தலமான இத்திருத்தலம் இந்திய இருப்புப் பாதையில் வைத்தீஸ்வரன் கோயில் எனும் பெயருடன் புகை வண்டி நிலையமாகவும் அமைந்துள்ளது. தருமையாதீனத்திற்குச் சொந்தமான 27 கோயில்களுள் மிகவும் புராதனமான, பிரபலமான ஒன்றாகும் இங்குள்ள கோயில்.

பெயர்க் காரணம்: புள்(ஜடாயு). இருக்கு(ரிக்வேதம்), வேள்(முருகன்), ஊர்(சூரியன்) ஆகிய இந்நால்வரும் பூசித்ததால் புள்ளிருக்கு வேளூர் எனும் பெயர் கொண்டது. மற்றும் சடாயு புரி, கந்தபுரி,வேதபுரி என்றும் அங்காரகன் வழிபட்டமையால் அங்காரகபுரம் என்றும் , அம்பிகையைப் பூசித்தமையால் அம்பிகாபுரம் எனவும் அழைக்கப்பெறும். வினைதீர்த்தான் கோயில், தையல்நாயகி கோயில் மற்றும் வழக்கில் உள்ள வைத்தீஸ்வரன்கோயில் எனப் பல பெயர்களும் உண்டு.

கோயில் அமைப்பு: நான்கு கோபுரங்களுடனும் உயர்ந்த மதில்களோடும் கூடிய கோயில். மேற்கு நோக்கிய இறைவன் சந்நிதி கொண்டது. அம்பாள்

சந்நிதி தெற்கு நோக்கி உள்ளது. தெற்கில் கணேசன் திகழ் மேற்கில் பைரவரும். தொக்கவடக்கில் தொடர்காளிமிக்க கிழக்கு உள்ளிருக்கும் வீரனையும் உற்றுப் பணிந்துய்ந்தேன். புள்ளிருக்கு வேளூரிற்போய். எனும் பாடலின் மூலம் வைத்தியநாத ஸ்வாமி ஆலயத்தைத் தெற்கில் கணபதியும்,மேற்கில் பைரவரும், வடக்கில் காளியும், கிழக்கில் வீரபத்திரரும் காவல் புரிகின்றனர் என்று அறியலாம்.

தீர்த்தம்: கோயிலுக்குள் விளங்கும் சித்தாமிர்த்த தீர்த்தம் விசேஷமானது. நான்கு புரங்களிலும் மண்டபத்தோடும் படிக்கட்டுகளோடும் நடுவில் நீராழி மண்டபத்தோடும் விளங்குகின்றது. இங்கே கிருத யுகத்தில் காமதேனு இறைவனைத் தன் முலைப்பால் கொண்டு திருமஞ்சனம் ஆட்டிய சம்பவம் நிகழ்ந்தது. அதுவே புனித தீர்த்தமாக பெருகி இங்கு அமைந்ததென்பர். இதன் காரணமாக கோக்ஷர தீர்த்தம் என்று பெயர்ப் பெறலாயிற்று. சதானந்த முனிவர் இங்கு தவம் செய்து கொண்டிருந்தபோது பாம்பால் துரத்தப்பெற்று தவளை ஒன்று தண்ணீரில் குதித்து அவர் தவத்தை கலைத்தது. முனிவர் குளத்தில் பாம்பும் தவளையும் வாசஞ் செய்யக்கூடாது என்று சபித்ததால் இக்குளத்தில் தவளைகள் வசிப்பதில்லை என்பர். இத்திருக்குளத்தில் குளித்தெழுந்தால் சகல நோய்களும் தீரும் என்பது திண்ணம். நோய்தீரக் குளத்தில் வெல்லம் கரைத்து விடுவதும் பிரகாரத்தில் உள்ள மரப்பெட்டியில் உப்பு, மிளகு இரண்டையும் கலந்து கொட்டுவதும் இன்றும் உள்ள ஒரு பிராத்தனை வழக்கம். சித்தாமிர்த்த தீர்த்தம் தவிர கோதண்ட தீர்த்தம், கௌதம தீர்த்தம், வில்வ தீர்த்தம், அங்கசந்தனத் தீர்த்தம், முனிவர் தீர்த்தம் என்று வேறு தீர்த்தங்களும் இங்கு உள.

மூர்த்திகள்: சுவாமி பெயர் ஸ்ரீவைத்தியநாதன், வைத்தீஸ்வரன், அம்பாள் பெயர் ஸ்ரீதையல்நாயகி, முருகன் செல்வமுத்துக் குமரன் எனும் பெயரோடு விளங்குகின்றார். கோளிலித்தலம் என்று அழைக்கப்படும் வைத்தீஸ்வரன் கோயிலில் நவக்கிரகங்கள் வக்கிரமில்லாமல் வரிசையாக ஈஸ்வரன் சந்நிதிக்கு பின்புறம் நோய்கள் தீர வேண்டி பிரார்த்தித்திருக்கும் காட்சியைக் காணலாம். அங்காரகனின் செங்குஷ்டநோயைத் தீர்த்தபடியால் அங்காரகத் தலமாகின்றது. அங்காரகனுக்குத் தனிச் சந்நிதி உண்டு. மூல விக்கிரகத்தோடு உற்சவ விக்கிரகமான அங்காரகனும் உண்டு. இரண்டும் தனித்தனிச் சந்நிதிகளாக உள்ளன. அங்காரக தோஷம் உள்ளவர்கள் இங்கு வந்து வழிபடுவதால் தோஷம் நீங்கப் பெறுவர். நவக்கிரகங்களுக்கு அடுத்தாற்போல் 63 நாயன்மார்கள், ஸப்த கன்னியர் ஆகியோரையும் மற்றும்

ஆயுர்வேதத்தின் தலைவனான தன்வந்திரி சித்தர் விஷ்ணு ஸ்வரூபத்தில் அமர்ந்திருக்கும் வடிவத்தையும் காணலாம். துர்க்கை மற்றும் சஹஸ்ர லிங்கமும் விசேஷமானவை.

தலப்பெருமை: முருகன் சூரபத்மனை வெல்ல வேல் வாங்கிய தலம் இது. இறைவன் 4448 நோய்களையும் அதோடு ஊழ்வினைகளையும் தீர்க்கவல்ல வைத்தியநாதராய் எழுந்தருளியுள்ளார். அவருக்கு உதவியாய் அம்பாள் கையில் தைல பாத்திரமும், அமிர்த சஞ்சீவியும், வில்வமரத்தடி மண்ணும் ஏந்தி வர, இருவரும் தீராத நோய்களையும், வினைகளையும் தீர்த்து வைக்கும் வேதியத் தம்பதிகளாகின்றனர். இத்தலத்தில் அடி வைப்பதால் பில்லி சூனியம் முதலானவையும் கூட அகலும் என்பர்.
சடாயு குண்டம்: சீதையை இராவணன் சிறையெடுத்துச் சென்றபோது, அதனைத் தடுத்த ஜடாயுவின் சிறகுகளை இராவணன் வெட்டி வீழ்த்தினான். பின்னர் இராமன் அவ்வழியில் சீதையைத் தேடி வந்த நேரத்தில், நடந்தவற்றைச் சொல்லிய ஜடாயு இராமனது காலடியில் உயிர்ததுறந்தான். இராமபிரான் ஜடாயுவின் வேண்டுகோள்படி சிதையடுக்கி அவனது உடலைத் தகனம் செய்த இடம் 'ஜடாயு குண்டம்' என்று அழைக்கப் பெறுகின்றது. இன்றும் இக்குண்டத்தில் உள்ள திருநீற்றினை அணிந்தால் தீராத நோய்களும் தீரும் எனும் நம்பிக்கை உண்டு. ஜடாயு குண்டத்திற்கு அருகில் ஜடாயு மோட்சத்தைச் சிலை வடிவில் காணலாம். ஜடாயு உற்சவ மூர்த்தியாகவும் இருக்கின்றார்.

திருச்சாந்துருண்டை: இது வைத்தியநாதப் பெருமானின் பிரசாதமாக நோய் நீங்கும் பொருட்டு அளிக்கப்பெறுவது. ஆலயத்தில் விபூதி குண்டத்தில் (ஜடாயு குண்டத்தில்) உள்ள விபூதியையும் சித்தாமிர்த தீரத்த நீரையும் சேர்த்துக் குழைத்து, ஐந்தெழுத்து மந்திரமாகிய 'நமசிவாய' என்பதனை ஓதிக்கொண்டே முத்துக்குமார சுவாமி சந்நிதியில் உள்ள குழியம்மியில் அரைத்து உளுந்தளவில் உருட்டி, அம்பாள் திருவடியில் வைத்து அர்ச்சித்து எடுத்துச் சேகரித்து வைத்துக் கொண்டு வேண்டியவர்களுக்கு அந்த உருண்டை வழங்கப் பெறுகின்றது. இதனை உண்டோர் நோய் (தீவினை) நீங்கி வாழ்வாங்கு வாழ்ந்து, பின் முக்தி எய்துவர். இங்கு அர்த்த சாமப் பூஜை செல்வ முத்துக்குமார சுவாமிக்குச் செய்த பின்புதான் ஸ்வாமிக்குச் செய்யப் பெறுகின்றது. அர்த்தசாமப் பூஜையின்போது முத்துக்குமார சுவாமிக்கு அணிவிக்கப் பெறும் சந்தனமான 'நேத்திரிப்படி' சந்தனமும் வேண்டிய வரம் தரவல்ல மகிமையுடையது. இந்தச் சந்தனத்தை 'புழுகாப்பு' என்பர்.

தல விருட்சம்: கிழக்குக் கோபுர வாயிலில் உள்ள வேம்பு தல விருட்சமாகும். இதனை 'வேம்படிமால்' என்கின்றனர். ஆதிவைத்தியநாதபுரம் இதுதான் என்பர்.

திருவிழாக்கள் : நாள்தோறும் 6 கால பூஜைகள் உண்டு. பங்குனியில் பிரம்மோற்சவம் நடைபெறும். அதில் ஐந்தாவது நாளன்று செல்வமுத்துக்குமரன் வைத்தியநாதரைப் பூசித்துச் செண்டு பெறும் காட்சி மிக அற்புதமான ஒன்று. உற்சவகாலத்தில் கயிலையில் சோமாஸ்கந்தர் எழுந்தருளியிருப்பது போல் சுவாமி ஒரு புறமும், அம்பாள் ஒரு புறமுமாக எழுந்தருள, செல்வமுத்துக்குமார சுவாமி நடுவில் எழுந்தருள்வார். மாதந்தோறும் வரும் கார்த்திகைவிழா இங்குச் சிறப்பானது. இந்நாளில் செல்வமுத்துக்குமார சுவாமிக்கு நடைபெறும் அபிஷேக ஆராதனைகளைத் தரிசிக்க மக்கள் பல்லாயிரக்கணக்கில் கூடுவர். அபிஷேகங்களில் சந்தன அபிஷேகம் மிகவும் சிறப்புடையது. தருமை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் மாதந்தோறும் கார்த்திகையன்று எழுந்தருள, அவர்கள் திரு முன்னி லையில் இந்த அபிஷேகம் நடைபெறுவது கண்கொள்ளக் காட்சி. அங்காரக் க்ஷேத்திரமாதலால் செவ்வாயக் கிழமைகளில் அங்காரகர் பிரகாரத்தில் வலம் வருவார். கார்த்திகை மாத சோம வாரங்களில் ஈசுவரனுக்குச் சங்காபிஷேகமும் உண்டு. ஆண்டுதோறும் நகரத்தார்கள் சித்திரை மாதத்தில் வண்டிப் பயணமாக வேளூருக்கு வரும் வழக்கம் உண்டு. ஏறத்தாழ இருநூறு ஆண்டுகளுக்கு மேலாக இப்பயணம் ஆண்டுதோறும் தமிழ்ப் புத்தாண்டுக்குப் பிறகு சித்திரைத் திங்களில் நடைபெற்று வருகின்றன. இப்பயணம் கீரணிப்பட்டி முத்து மாரியம்மன் திருவிழா முடிந்து தொடர்ந்து வரும் புதன்கிழமை இரவு 12 மணிக்கு மேல் அதாவது வியாழக்கிழமை காலை தொடங்குகிறது. இப்பயணம் கீரணிப்பட்டித் திருவிழா முடிந்தபின் நடைபெறுவதற்குக் காரணம் நகரத்தார்கள் காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து பாண்டிய நாடு வரும்போது கீரணி அம்மனையும் தங்களோடு கொண்டு வந்தார்கள் என்பது வரலாறு. இதனைக் கீழ்க்காணும் கும்மிப்பாடல் வழி அறியலாம்.

"காவிரிப்பூம் பட்டினத்தில் இருந்ததொரு
காவலன் மாறனழைத்து வர பூவிரிப்
புலன்மிகும் பாண்டிய நாட்டினிற்
பொங்கத்துடன் வந்தமர்ந்தானே"

பொங்கம் = பொலிவு அல்லது மகிழ்ச்சி.

வண்டிப் பயணமாகத் துவங்கி நடைப்பயணத்தையும் இன்று ஈர்த்துப்

பல்லாயிரக் கணக்கானோர் பங்கு பெறும் சிறப்புறு பயணமாகியுள்ளது. இது கீழச்சீவல்பட்டி, அழகாபுரி நகரத்தார்களோடு பள்ளத்தூர், குருவிக்கொண்டான்பட்டி, ஆத்தங்குடி, கோட்டையூர், சிறுகூடற்பட்டி ஆகிய ஊர்களிலிருந்தும் பக்தர்கள் இந்த வண்டிப் பயணத்தில் கலந்து கொள்கின்றனர். திருஞானசம்பந்தர் இத்தலத்தைப் பற்றிப் பதிகம் ஒன்று பாடியுள்ளார். திருநாவுக்கரசர் இரண்டு பதிகங்கள் பாடியுள்ளார். தருமையாதீனம் 10வது மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிக ஞானசம்பந்த பரமாச்சாரிய ஸ்வாமி அருளிய செல்வமுத்துக்குமாரசாமி திருவருட்பாவும் குமரகுருபரர் அருளிய பிள்ளைத் தமிழும் இத்தலம் பற்றிய அழகு தமிழ்ப் பாடல்கள். “தையல்நாயகியைத் தொழுது எழுவார் தொங்கத் தொங்கத் தாலி அணிவார்”. வைத்தியநாதனைப் போற்றி எழுவாருக்கு அவனே மந்திரமும் மருந்துமாகித் தீராத நோய் தீர்த்து வைப்பான். பிறவிப் பெரும்பயனையும் தேடித்தருவான்.

நிறம்- சிகப்பு
அணிகலன்-பவளம்
வாகனம்-அன்னம்
தானியம் -துவரை
காரகம்- பூமி,சகோதரன்,வீடு
கடவுள் - முருகன்
சுவை-துவர்ப்பு
உச்சம- மகரம்
நீசம் - கடகம்
திசைகாலம்- 7 ஆண்டுகள்
நட்பு- சூரியன்
பகை-புதன்,ராகு,கேது
சமம்-சுக்கிரன்,சனி
உபகிரகம்-துமன்
கோவில்-வைத்தீஸ்வரன் கோவில்

**ஒவ்வொரு வீட்டிலும் செவ்வாய் இருந்தால் என்ன பலன்**

செவ்வாய் 1 ல் இருந்தால் தலையில் அடிபடும். செவ்வாய் ஒன்றாம் வீட்டில் இருந்து 7 ம் பார்வையாக 7 ம் வீட்டை பார்ப்பதால் திருமண வாழ்வில் சங்கடங்கள் ஏற்படும். செவ்வாய் முதல் வீட்டில் இருப்பதால் மூர்க்கதனமாக கோபம் வரும். தாயாருக்கு தீங்கு விளைவிக்கும். கோபம் அதிகரிக்கும். இளம்தோற்றமாக காணப்படும். உடம்பில் உஷ்ணம்

காரணமாக கட்டி ஏற்படும். நல்ல தைரியசாலிகளாக இருப்பார்கள். தலையில் அடிப்படும். ஏதாவது விதத்தில் தலையில் அடிப்படும். செவ்வாய் தசையில் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். செவ்வாக்கு சொந்த வீடாக அல்லது உச்ச வீடாக இருந்தால் நல்லது நடக்கும்.

செவ்வாய் 2 ம் வீட்டில் இருந்தால் வாக்கில் கடுமை இருக்கும். பேச்சில் சண்டை வரும். செவ்வாய்க்கு சொந்த வீடாகவோ உச்சவீடாக இல்லாவிட்டால் அவர் சொல்லே அவருக்கு விரோதமாக ஆகும். கையில் காசு தங்காது. செவ்வாய் இரண்டில் இருப்பதால் குடும்பத்தில் சண்டை சச்சரவுகள். கண்ணில் தொந்தரவு இருக்கும். செவ்வாய் பலம் பெற்று இருந்தால் நல்லது நடக்கும். செவ்வாய் இரண்டில் இருப்பதால் தோஷம் ஏற்படும்.

செவ்வாய் 3 ம் வீட்டில் இருந்தால் நல்ல தைரியசாலியாக இருப்பார். காதில் தொந்தரவு இருக்கும். செல்வம் நிறைய கிடைக்கும். நல்ல அறிவாற்றல் கிடைக்கும். உடம்பு நல்ல உறுதியாக இருக்கும். இளைய சகோதரருக்கு கெடுதல் செய்யும். சிலபேருக்கு இளைய சகோதர,சகோதரிகள் இருக்க மாட்டார்கள். 3 ஆம் வீட்டில் செவ்வாய் பலம் பெற்றால் நல்ல வாழ்க்கை அமையும். 3 ஆம் வீட்டு செவ்வாய் மூலம் தாய்நலம் கெடும்.

செவ்வாய் 4 ம் வீட்டில் இருந்தால் தாய்வீட்டின் சொத்து கிடைக்கும். தாயின் உடல்நிலை மோசமாக இருக்கும். கணவன் மனைவி சண்டை சச்சரவு இருக்கும். நல்ல சொத்துக்கள் சேரும். 4 ஆம் வீட்டு செவ்வாய் பலம் குறைந்தால் வாழ்க்கையில் வசதி வாய்ப்பு குறையும். மார்பில் வலி ஏற்படும்.

செவ்வாய் 5 ஆம் வீட்டில் இருந்தால் புத்திரதோஷம் ஏற்படும். புத்தி மங்கும். குழந்தைகளால் சண்டை சச்சரவுகள் ஏற்படும். வயிற்றுவலி ஏற்படும். எதிரிகளால் தொல்லை வரும். பணவரவு இருக்காது. 5 ஆம் வீடு செவ்வாய்க்கு சொந்த வீடாகவோ அல்லது உச்சவீடாகவோ இருந்தால் தடைகள் அனைத்தும் அகலும். 5ஆம் வீடு நாம் எந்த தெய்வத்தை வணங்க வேண்டும் என்று காட்டும் இடம் ஆகையால் செவ்வாய் 5-ல் இருந்தால் சுப்பிரமணியரை வணங்க வேண்டும்.

செவ்வாய் 6 ஆம் வீட்டில் இருந்தால் எதிரிகளை வெற்றிகொள்ளும் தைரியும் இருக்கும். நல்ல சொத்துக்கள் சேரும். செவ்வாய் காமம் அதிகமாக இருக்கும். தாய்மாமனுக்கு தொல்லை தருவார். நல்ல செரிக்கும்.

இரத்தம் மாசுபடும் அதனால் உடலில் கட்டி ஏற்படும். நல்ல கற்றவர்களிடம் தொடர்பு ஏற்படும். புகழ் ஏற்படும். 6 ஆம் வீட்டு செவ்வாயினால் பெரும் பொருட்செலவு ஏற்படும்.

செவ்வாய் 7 ஆம் வீட்டில் இருந்தால் 7 ஆம் பார்வையாக லக்கினத்தை பார்ப்பதால் தலையில் அடிபடும். திருமண வாழ்க்கையில் பிரச்சனை ஏற்படும். செவ்வாய்க்கு நட்பு வீடாக இருந்தாலும் சொந்த வீடாக அல்லது உச்ச வீட்டில் இருந்தால் பிரச்சினைகள் இருக்காது. பெண்களால் பிரச்சினை உண்டாகும். இவரிடம் தொடர்பு வைத்திருப்பவர்கள் முன்கோபக்காரர்களாக இருக்ககூடும்.

செவ்வாய் 8 ஆம் இடத்தில் இருந்தால் கண் பார்வை கெடும். ஜெயிலுக்கு செல்ல நேரிடும். இரத்த சம்பந்தமாக பிரச்சினை ஏற்படும்.கடன் பளு ஏற்படும். ஆயுள் குறையும். கோபம் அதிகம் வரும். சகோதர்களின் நலம் கெடும். பொருளாதாரம் அதிகம் பாதிக்கப்படும்.

செவ்வாய் 9 ஆம் இடத்தில் இருந்தால் தந்தையாரின் நலம் கெடும். தந்தைக்கும் இவருக்கும் சண்டை சச்சரவு இருந்து கொண்டே இருக்கும். 9 ஆம் இடத்தில் உள்ள செவ்வாய்யால் தந்தையாரின் நலம் கெடும். தந்தைக்கும் இவருக்கும் சண்டை சச்சரவு இருந்து கொண்டே இருக்கும். நற்பணிகள் செய்யமாட்டார். கொடிய செயல்கள் செய்ய வைப்பார். 9 ஆம் வீட்டு செவ்வாய் ஆட்சி அல்லது உச்சம் பெற்றால் நல்ல நிலைக்கு உயர்த்துவார்.

செவ்வாய் 10 ஆம் இடத்தில் இருந்தால் கனரக வாகனங்கள் தொழிற்சாலையில் உயர்ந்த பதவியில் அமர வைப்பார். பதவியில் தலைமை இடம் தேடி வரும். நெருப்பு மூலமாகவும் வருமானம் பெருகும். பெரிய மனிதர்களிடம் இருந்து பெரிய பொறுப்புகள் தேடி வரும்.

செவ்வாய் 11 ஆம் இடத்தில் இருந்தால் பெரும் பணக்காராக மாற்றுவார். மகிழ்ச்சி நிறைந்து இருக்கும். பெரும் செலவு செய்து தொழிலில் முன்னேற்றம் காண வைப்பார். பணப்புழக்கம் நன்றாக இருக்கும். மூத்த சகோதர சகோதரிகளிடம் சண்டை சச்சரவு ஏற்படும்.

செவ்வாய் 12 ஆம் வீட்டில் இருந்தால் கெடுதல் அதிகம் இருக்கும். சிறை செல்ல நேரிடும். பெண்கள் மூலம் பொருளாதார இழப்பு ஏற்படும். மர்ம விலங்கினால் ஆபத்து ஏற்படும்.

தென்னிந்திய மக்கள் செவ்வாய்கிழமையில் எந்த நல்ல காரியங்களும் தொடங்குவது இல்லை ஆனால் இந்தியாவின் வடமாநில மக்கள் இந்த கிழமைக்கு மங்களவார் என்று பெயர் வைத்து நல்ல காரியங்களை தொடங்குகிறார்கள் என்று தினமலர் நாளிதழில் படித்தேன். அதனால் தான் செவ்வாய்யைப் பற்றி எழுதலாம் என்று எண்ணினேன் அதனுடன் நமது பாடமும் செவ்வாய் பற்றி வந்துகொண்டுருப்பதால் எழுதுகிறேன். நமது வீட்டில் எல்லாம் திருமண காலங்களில் பெண் பார்க்கும் அல்லது மாப்பிள்ளை பார்க்கும் படலத்தில் தவறாது அடிபடும் வார்த்தை செவ்வாய் தோஷம் இருக்கிறதா அல்லது இல்லையா என்றுதான். இந்த தோஷம் ஒவ்வொரு ஜோதிடரிடமும் வேறுபடும். ஒருவர் தோஷம் இருக்கும்பார் இன்னொருவர் தோஷம் இல்லை என்பார். செவ்வாய் உச்சவீட்டில் இருக்கிறது அதனால் தோஷம் கிடையாது என்பர் அல்லது செவ்வாய் நீசவீட்டில் இருக்கிறது அதனால் தோஷம் கிடையாது என்பார்கள். இதனைப்பற்றி ஆராய்வதற்கே பல வழிகள் இருக்கிறது. நான் சொல்ல வந்தது. ஒன்பது கிரகங்களில் நீங்கள் கேட்டவுடன் அள்ளி வழங்குபவர் செவ்வாய் மட்டும் தான். ஏனென்றால் செவ்வாய்கிரகம் ஒரு அக்னி கிரகம் அது மிகவும் வீரியத் தன்மை வாய்ந்த கிரகம் இருக்கும். நெருப்பு உடனே பற்றிக்கொள்ளும் தன்மையினால் செவ்வாய் மட்டும் உடனே தருபவர். வேறு எந்த கிரகத்திடம் கேட்டாலும் பலன் உடனே நடக்காது. ஆனால் செவ்வாயிடம் மட்டும் கேட்டால் உடனே நிறைவேறும். நீங்கள் இதனை ஒரு ஆய்வாகவே எடுத்துக்கொள்ளலாம். செவ்வாயின் கடவுளாகிய முருகனிடம் ஏதோ ஒரு வேண்டுதலுடன் கேளுங்கள் அந்த காரியம் நிச்சயம் நடந்தேறும். உங்கள் வேலை உடனே நடக்க வேண்டும் என்றால் செவ்வாய்கிழமை பயன்படுத்துங்கள். உங்களுக்கு செவ்வாய்தோஷம் இருந்தால் ஒன்பது வாரம் செவ்வாய்கிழமை விரதம் இருந்து பாருங்கள். விரதத்தின் தன்மை பொறுத்து தோஷம் நீங்கி நல்லது நடக்கும். செவ்வாய் கிழமை நாம் பயன்படுத்தலாம். முருகனை முழு மனதுடன் வழிபட்டு அனைத்தையும் பெறுவோம்.

**அங்காரகன் (செவ்வாய் தோஷம் நிவர்த்தி அடைய)**

ஓம் வீரத்வஜாய வித்மஹே
விக்ன ஹஸ்தாய தீமஹி
தன்னோ பௌமஹ் ப்ரசோதயாத்
ஓம் அங்காரகாய வித்மஹே

சக்திஹஸ்தாய தீமஹி
தன்னோ பௌம்ஹ் ப்ரசோதயாத்
ஓம் அங்காரகாய வித்மஹே
சக்திஹஸ்தாய தீமஹி
தன்னோ குஜஹ் ப்ரசோதயாத்
ஓம் லோஹிதாங்காய வித்மஹே
பூமிபுத்ராய தீமஹி
தன்னோ குஜஹ் ப்ரசோதயாத்

*****************************************************************************************************

# நவகிரகங்கள்- இராகு

இராகு சூரியனை ஒரு முறை சுற்றிவர 18 1/2 ஆண்டுகள் எடுத்துக்கொள்ளும். இராகுக்கு என்று சொந்த வீடு கிடையாது. தான் அமர்ந்த வீட்டையே சொந்த வீடாக எடுத்துக்கொள்ளும். பாட்டன்,பைத்தியம்,பேய்,விஷம்,குடல் சம்பந்தமான நோய்,பித்தம்,பிறரை கெடுத்தல்,விதவையை சேர்தல்,குஷ்டம்,மாந்தீரிகம்,அன்னிய பாஷை அறிதல்,மறைந்து வாழ்தல்,விஷ பூச்சிகள்,புத்திர தோஷம் ஆகியவற்றிருக்கு இராகு காரணம் வகிக்கிறார்.இராகு தான் அமர்ந்த இடங்களையே சொந்தமாக கொள்வதால் அந்த வீட்டின் அதிபதிகளின் தன்மைக்கு ஏற்றவாரே பலன் தரும். இராகு,கேதுவிற்க்கு இடையில் லக்கினம் முதல் அனைத்து கிரகங்களும் அகப்பட்டுக்கொண்டால் அதற்கு கால சர்ப்ப தோஷம் என அழைக்கப்படும். அகப்பட்ட கிரகம் வலுவிழந்துவிடும். சதயம், சுவாதி, திருவாதிரை இம்மூனறு நட்சத்திரங்களும் இராகு பகவானுக்கு உரியது. இவருக்கு சொந்த வீடுகள் கிடையாது. உச்ச வீடு விருச்சிகம், நீச வீடு ரிஷபம். எந்த நட்ச்த்திரத்தில் அல்லது வீட்டில் அமர்கிறாரோ அந்த அந்த பலன்களை வழங்குவார்.

இராகுவை போல கொடுப்பவன் இல்லை என்பது ஜோதிட பலமொழி. சனியை போல ராகுவும் பலன்களை தருவார். வெளிநாடு. வெளிபாஷை, வெளிமனிதர்கள், வேறு மதம் சார்ந்தவர்களோடு நட்பு-அதன் மூலம் நன்மை இவைகளை வழங்குவார் இராகு. 7-வது, 8-வது வீட்டில்,இராகு இருந்தால் சங்கடங்களை கொடுப்பார். இராகு சர்ப தோஷம், கால சர்ப தோஷம் முதலியன ஏற்படும். இராகு பலம் பெற்று ஒருவர் ஜாதகத்தில் இருந்தால்- ஸ்பெகுலேஷன்-லாட்டரி, பந்தயம் மூலமாக ஒரு மனிதரை கோடிஸ்வரர் ஆக்குவார். பலமிழந்த இராகு- ஏமாற்றுதல், பொய் சொல்லுதல், கள்ள வழியில் நடத்தல் ஆகியவைகளுக்கு காரணங்களாக அமையும். அரசாங்கத்தில் பதவி-புகழ் பெறுவதற்கு, எதிரிகள் அஞ்சி நடப்பதற்க்கு இராகு பலமே காரணம். இராகு லக்ன கேந்திரம் அல்லது திரிகோண ஸ்தானமான 5,9 ல் இருந்தால் சிறப்பு பலன்கள் தருவார். 6,12 ல் இருந்தாலும் வெற்றி கிடைக்கும்.

சாயா கிரகம் என்று அழைக்கப்படும் ராகு, பாற்கடல் கடையப்பட்டு அமுதம் எடுத்து அமரர்களுக்கு படைக்கப்பட்ட போது

தேவனாக உருமாறி சூரியனுக்கும் மதியவனுக்கும் இடையே அமர்ந்து அமுதம் உண்ண ஆரம்பித்தான். மோகினி உருவில் அமுதம் பரிமாறி வந்த திருமாலிடம் சூரியனும் மதியவனும் ராகுவைக் காட்டிக் கொடுக்கவே தன் சக்கரம் கொண்டு ராகுவின் தலையை சீவினார் திருமால். அமுதம் உண்டதால் சாகாத் தன்மையைப் பெற்ற ராகு உடல் வேறு தலை வேறாகி விழுந்தான். பாம்பின் உடலைப் பெற்று விஷ்ணுவின் அருள் வேண்டி தவம் இயற்றி கிரக நிலையை அடைந்தான். அரசாங்கத்தில் பதவி, புகழ் இவற்றைப் பெற ராகுவின் அருள் வேண்டும். ஜாதகத்தில் ராகு பலம் பொருந்தி இருந்தால் நல்ல முன்னேற்றம் ஏற்படும். ஸ்பெகுலேஷன், சூதாட்டம் என்ற இவற்றிற்கெல்லாம் அதிபதி ராகுவே. மிலேச்சருக்கு அதிபதி. கலப்பு இனத்திற்கு வழி வகுப்பவன். வெளிநாட்டுக் கலப்புக்கு அதிபதி. தென்மேற்கு திசைக்கு அதிபதி ராகு. திருநாகேஸ்வரம் ராகுவிற்கு உரிய தலம். பசு ராகுவின் அதி தேவதை, பாம்பு பிரத்யதி தேவதை. கோமேதகம் ராகுவிற்கு உரிய ரத்தினம். ராகு பகவானை வழிபட ஏற்ற தலம் திருநாகேஸ்வரம். இங்கு சென்று மந்தார மலர் மாலையிட்டு, கருப்பு ஆடைதானம் செய்து உளுந்தினால் செய்த பலகாரத்தை ராகு பகவானுக்கு நிவேதிக்க வேண்டும். இதனால் ராகுதோஷம் நீங்கும்.

**திருநாகேசுவரம் நாகநாதசுவாமி கோயில்**

சம்பந்தர், அப்பர், சுந்தரர் மூவரதும் பாடல் பெற்ற சிவாலயமாகும். இது தஞ்சை மாவட்டத்தில் கும்பகோணத்தில் இருந்து தென்கிழக்கில் காரைக்கால் செல்லும் நெடுஞ்சாலையில் 6 கி.மி. தொலைவில் திருநாகேஸ்வரம் தலம் அமைந்துள்ளது. கோயிலின் சிறப்பு சேக்கிழார் திருப்பணி செய்த தலம்.திருநாகேஸ்வரம் நவக்கிரகத் தலங்களில் ராகு பகவானுக்குரிய விசேட தலம் என்ற பெருமையும் உடையதாகும். பாதாள லோகத்திலிருந்து நாகராஜன் வந்து இங்குள்ள சிவபெருமானை வழிபட்டதால் இக் கோயிலின் மூலவர் நாகநாதசுவாமி என்றழைக்கப்படுகின்றார். சிறந்த சிவபக்த கிரகமாகிய இராகு சில இடங்களில் மேனமை பெற்று விளங்கிய போதிலும் நாகநாதசுவாமி கோயிலின் இரண்டாவது பிரகாரம் தென் மேற்கு மூலையில் நாகவல்லி, நாக்கன்னி ஆகிய தன் இரு தேவிமாருடன் மங்கள ராகுவாக தனிக்கோயிலில் அமர்ந்து காட்சி அளிக்கின்றார். இவருக்குகந்த நிறம் நீலம் என்பதால் அணிகின்ற ஆடை மட்டுமல்ல, இவருக்குச் செய்கின்ற பாலாபிஷேகத்தின்போது தலை மீது ஊற்றும் பால் தலையிலிருந்து வழிந்து உடல் மீது வரும் போது பாலின் நிறமும் நீலமாகி விடுகின்ற

அதிசயத்தைப் பார்க்கலாம். இவருக்கு உகந்த மலர் மந்தாரை. 1986ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 16ஆம் நாள் ராகு பகவானின் மீது ஐந்தரை அடி நீளமுள்ள நாகமானது தனது சட்டையை மாலையாக இராகு பகவானுக்க் அணிவித்து இவரது பெருமையை உலகிற்கு உணர்த்தியது. அதை எடுத்து பத்திரப் படுத்திக் கண்ணாடிப் பேழைக்குள் வைத்திருக்கின்றனர். இறைவனைத் தரிசிக்க வரும் பக்தர்கள் பார்வைக்குக் காட்சிப் பொருளாக வைக்கப் பட்டிருக்கின்றது. ராகுவின் பிறப்பு வரலாறும் கிரகச்சிறப்பும் சுவை நிரம்பியவை. ராஜவம்சத்து மன்னன் ஒருவனுக்கும் அசுரகுலப் பெண்ணொருத்திக்கும் மகனாகப் பிறந்தவன் ராகு. தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடையும்போது அசுரனாகிய ராகு உருமாறி தேவர்கள் வரிசையில் சேர்ந்து மகாவிஷ்ணுவிடமிருந்து அமிர்தத்தைப் பெற்று உண்டு விட்டான். உண்மை அறிந்த மகாவிட்ணு கையிலிருந்த அகப்பையால் அவனது மண்டையில் அடிக்க தலை வேறு உடல் வேறாகி விழுந்தான். ஆனாலும் அமிர்தம் உண்ட மகிமையால் அவன் தலைப்பகுதியில் உயிர் இருந்தது. ராகுவும் தவறுக்கு வருந்தி இறைவனை வேண்டி நிற்க. இறைவன் பாம்பின் உடலை அவனுக்குக் கொடுத்து அவனை ஒரு நிழல் கிரகமாகவும் ஆக்கினார்.

**அருள்மிகு நாகேஸ்வரர் திருக்கோயில்**

மூலவர்.நாகேஸ்வரர், நாகநாதர்
உற்சவர்
அம்மன்/தாயார்:பிறையணி வானுதலாள் (கிரிகுஜாம்பிகை தனி சன்னதி)
தல விருட்சம்:செண்பகம்
தீர்த்தம்:சூரியதீர்த்தம்
ஆகமம்/பூஜை
பழமை:1000-2000 வருடங்களுக்கு முன்
புராண பெயர்:திருநாகேச்சுரம்
ஊர்:திருநாகேஸ்வரம்
மாவட்டம்:தஞ்சாவூர்
மாநிலம்:தமிழ்நாடு
பாடியவர்கள்: சுந்தரர்
தேவாரப்பதிகம்
அரைவிரி கோவணத்தோடு அரவார்த்தொரு நான்மறைநூல் உரைபெரு கவ்வுரைத்தன்று உகந்தருள் செய்ததென்னே வரைதரு மாமணியும் வரைச்சந்த கிலோடும் உந்தித் திரைபொரு தண்பழனத் திருநாகேச்

சரத்தானே. -சுந்தரர்

தேவாரப்பாடல் பெற்ற காவிரி தென்கரைத்தலங்களில் இது 29 வது தலம். மகாசிவராத்திரி, மார்கழி திருவாதிரை, பங்குனிஉத்திரம், திருக்கார்த்திகை. கார்த்திகையில் பிரம்மோற்ஸவம், ராகு பெயர்ச்சி. ஞாயிறு தோறும் மாலை 4.30-6 மணி ராகு காலத்தில் ராகு பகவானுக்கு சிறப்பு பூஜை, பாலபிஷேகம் நடக்கும். இது தவிர பக்தர்கள் வேண்டுதல் பூஜைகளும் நடக்கிறது.
இங்கு மூலவர் நாகேஸ்வரர் சுயம்புமூர்த்தியாக அருள்பாலிக்கிறார். இத்தலத்தில் ராகு பகவானுக்கு பாலபிஷேகம் செய்யும்போது , பால் நீல நிறத்தில் மாறுகிறது. இக்கோயிலில் ஒரே சன்னதியில் கிரிகுஜாம்பிகை, லட்சுமி, சரஸ்வதி ஆகிய முத்தேவியரும் காட்சி தருகின்றனர். பொதுவாக ராகு மனித தலை, நாக உடலுடன்தான் காட்சி தருவார். ஆனால், இக்கோயிலில் மனித வடிவில் காட்சி தருகிறார். காலை 6 மணி முதல் 12.45 மணி வரை, மாலை 4 மணி முதல் இரவு 8.30 மணி வரை திறந்திருக்கும்.
அருள்மிகு நாகேஸ்வரர் திருக்கோயில் , திருநாகேஸ்வரம் - 612 204. தஞ்சாவூர் மாவட்டம்.
பிரதான வாயில் கிழக்கு கோபுரம் - ஐந்து நிலைகளையுடையது. நிருத்த கணபதி, நந்தி, சூரியதீர்த்தம் உள்ளன. நூற்றுக்கால் மண்டபம் சூரியதீர்த்த்தின் கரையில் மழுப்பொறுத்த விநாயகர் சந்நிதி, இரண்டாம் பிரகாரத்தில் நாகராஜா உருவமுள்ளது. சேக்கிழார் திருப்பணி செய்த மண்டபமுள்ளது. சேக்கிழார் அவர் தாயார், தம்பி உருவங்கள் உள்ளன. இத்தலத்திற்கு மிகு அருகில் ஒப்பிலியப்பன் திருக்கோயில் உள்ளது.

**ராகு குட்டித்தகவல்:** அதிதேவதை - பசு
பிரத்யதி தேவதை - நாகம்
நிறம் - கருமை
வாகனம் - சிம்மம்
தானியம் - உளுந்து
மலர் - மந்தாரை
ரத்தினம் - கோமேதகம்
வஸ்திரம் - நீலம்
நைவேத்யம் - உளுந்துப்பொடி சாதம்
நட்புவீடு - மிதுனம், கன்னி, துலாம்
பகைவீடு - கடகம், சிம்மம்

ராசியில் தங்கும் காலம் - 1 1/2 வருடம்
திருமணத்தடை, குழந்தை பாக்கியம், கல்வியில் சிறந்து விளங்க இறைவனை பிரார்த்திக்கலாம்.

இத்தலம் ராகு தோஷ பரிகார தலமாக இருக்கிறது. நாகதோஷம் உள்ளவர்கள் இவருக்கு பாலபிஷேகம் செய்து வேண்டிக் கொள்கிறார்கள். இதனால் தோஷ நிவர்த்தியாவதாக நம்பிக்கை இருக்கிறது. சுவாமி, அம்பாளுக்கு அபிஷேகம் செய்தும், வஸ்திரம் அணிவித்தும் நேர்த்திக்கடன் நிறைவேற்றலாம்.
முத்தேவியர் தரிசனம்: அம்பாள் பிறையணியம்பாள் தனிச்சன்னதியில் இருக்கிறாள். இவள் தவிர, இக்கோயிலில் ஒரே சன்னதியில் கிரிகுஜாம்பிகை, லட்சுமி, சரஸ்வதி ஆகிய முத்தேவியரும் காட்சி தருகின்றனர். பிருங்கி முனிவருக்காக இங்கு முத்தேவியரும் காட்சி தந்தனர். இதன் அடிப்படையில் இச்சன்னதியில் முத்தேவியரும் காட்சி தருகின்றனர். மார்கழியில் இந்த மூன்று அம்பிகைக்கும் புனுகு சாத்துகின்றனர். அப்போது 45 நாட்கள் இந்த அம்பிகையரை தரிசிக்க முடியாது. இந்நாட்களில் அம்பிகையின் சன்னதி முன்புள்ள திரைச்சீலைக்கே பூஜை நடக்கிறது. தை கடைசி வெள்ளியன்று இவரது சன்னதி முன்மண்டபத்தில் அன்னம், காய்கறி, பழங்கள் போன்றவற்றை படைக்கின்றனர். இவளது சன்னதியில் பாலசாஸ்தா, சங்கநிதி மற்றும் பதுமநிதியும் இருக்கின்றனர். இங்கு முத்தேவியரை வணங்கி, இவர்களை வழிபட குடும்பத்தில் ஐஸ்வர்யம் உண்டாகும் என்பது நம்பிக்கை.
ராகு வரலாறு: ராகு பகவான், சுசீல முனிவரால் தனக்கு ஏற்பட்ட சாபம் நீங்க இத்தலத்து இறைவனை வழிபட்டார். எனவே இத்தலத்து இறைவன் "நாகநாதர்' எனப் பெயர் பெற்றார். அன்று முதல் இது ராகு தோஷ நிவர்த்தி தலமாக விளங்குகிறது. சிறந்த சிவபக்த கிரகமாகிய ராகு, ராமேஸ்வரம் மற்றும் காளஹஸ்தி ஆகிய இடங்களில் மேன்மை பெற்று விளங்குகிறது. இருந்த போதிலும் இத்தலத்தில் ராகுபகவான் தனது மனைவிகளான சிம்ஹி, சித்ரலேகாவுடன் மங்கள ராகுவாக தம்மை வழிபடுவோருக்கு பல நலன்களையும் அருளும் தருவது சிறப்பு. நாகத்திற்கு சிவன் அருள் செய்த தலமென்பதால், நவக்கிரகங்களில் ஒருவரான ராகு, இத்தலத்தில் சிவனை வழிபட தேவியருடன் வந்தார். தினமும் சிவதரிசனம் பெற வேண்டி இங்கேயே மனைவியருடன் தங்கி விட்டார். பிற்காலத்தில், ராகுவுக்கு இங்கு தனிச்சன்னதி எழுப்பப்பட்டது. இவருடன் நாகவல்லி, நாககன்னி என்ற மனைவியரையும் சேர்த்து பிரதிஷ்டை செய்யப்பட்டது. இவர்

அனுக்கிரஹம் புரியும் "மங்கள ராகு'வாக அருளுவது விசேஷம். பொதுவாக ராகு மனித தலை, நாக உடலுடன்தான் காட்சி தருவார். ஆனால், இக்கோயிலில் மனித வடிவில் காட்சி தருகிறார். ராகுவை, இந்த கோலத்தில் காண்பது அபூர்வம். கிரகங்களில் ராகு பகவான் யோககாரகனாவார். இவரை வணங்கிட யோகம், பதவி, தொழில், வளமான வாழ்வு, எதிர்ப்புகளை சமாளிக்கும் திறன், வறுமை, நோய் நீக்கம், கடன், வெளிநாட்டு பயண யோகம் ஆகியவற்றை அருள்வார்.
தோஷ பரிகாரம்: இத்தலம் ராகு தோஷ பரிகார தலமாக இருக்கிறது. நாகதோஷம் உள்ளவர்கள் இவருக்கு பாலபிஷேகம் செய்து வேண்டிக் கொள்கிறார்கள். இதனால் தோஷ நிவர்த்தியாவதாக நம்பிக்கை இருக்கிறது. பாலபிஷேகத்தின்போது, பால் நீல நிறத்தில் மாறுவது கலியுகத்திலும் நாம் காணும் அதிசயம். தினமும் காலை 9.30, 11.30, மாலை 5.30 மணி மற்றும் ராகு காலங்களில் இவருக்கு பாலபிஷேகம் செய்யப்படுகிறது. ராகு பகவான், இத்தலத்தில் சிவராத்திரியின் போது சிவனை வழிபட்டு அருள்பெற்றாராம். இதன் அடிப்படையில் தற்போதும் சிவராத்திரியின் போது, இரண்டு கால பூஜையை ராகுவே செய்வதாக ஐதீகம். சிவராத்திரி மற்றும் ராகு பெயர்ச்சியின்போது மட்டும் ராகு பகவான் உற்சவர் வீதியுலா செல்கிறார்.
ராகு பெயர்ச்சி விசேஷ பூஜை: ராகுபெயர்ச்சியின் போது பரிகார பூஜை செய்து கொள்ளலாம்.

சிறப்பம்சம்: கிரிகுஜாம்பிகை சன்னதியில் விநாயகரும், அருகில் ராகுபகவான், "யோகராகு' என்ற பெயரிலும் இருக்கின்றனர். எனவே, இவர் இப்பெயரில் அழைக்கப்படுகிறார். கேதுவிற்கு அதிபதி விநாயகர். இந்த விநாயகரையும், யோக ராகுவையும் வணங்கினால் ராகு,கேது தோஷம் நிவர்த்தியாவதாக நம்பிக்கை.
தல வரலாறு:சிவபெருமானை மட்டுமே வணங்கி வந்தார் பிருங்கி முனிவர். இதனால் கோபம் கொண்ட பார்வதி சிவனிடம் அர்த்தநாரீஸ்வர வடிவம் வேண்டி கடும் தவம் புரிந்தாள். பார்வதியின் தவத்திற்கு மகிழ்ந்த இறைவன், அவளுக்கு தன் உடலில் பாதி கொடுத்து உமையொருவரானார். அர்த்தநாரீஸ்வர வடிவம் உலகின் பல பகுதிகளில் அமைய வேண்டும் என வேண்டினாள். அதன்படி இத்தலத்தில் அர்த்தநாரீஸ்வர வடிவில் சிவ பார்வதி காட்சியளிக்கின்றனர். மூலவர் நாகேஸ்வரர் சுயம்புமூர்த்தியாக அருள்பாலிக்கிறார். அம்மன் பிறையணி வானுதலாள். சுசீலர் என்ற முனிவரின் மகன் சுகர்மன். ஒருசமயம் அவன் வனத்தின் வழியே சென்று கொண்டிருந்தபோது, நாக அரசனான தக்ககன் என்ற பாம்பு தீண்டியது.

இதையறிந்த முனிவர் கோபம் கொண்டார். தன் மகனை தீண்டிய தக்ககன் மானிடனாக பிறக்கும்படி சபித்துவிட்டார். சாபவிமோசனம் பெற, தக்ககன் காசிப முனிவரிடம் ஆலோசனை கேட்டான். "பூலோகத்தில் லிங்க பிரதிஷ்டை செய்து, சிவபூஜை செய்து வழிபட்டால் சாபம் நீங்கும்' என்றார் அவர். அதன்படி பூமிக்கு வந்த தக்ககன், சிவலிங்க பூஜை செய்தான். சிவன் அவனுக்கு காட்சி தந்து சாபவிமோசனம் கொடுத்தார். இவரே இத்தலத்தில் அருளுகிறார். நாகமாகிய தக்ககனுக்கு அருளியதால் இவர், "நாகநாதர்' என பெயர் பெற்றார்.

அதிசயத்தின் அடிப்படையில்: இங்கு சிவன் சுயம்பு மூர்த்தியாக அருள்பாலிக்கிறார். இத்தலத்தில் ராகு பகவானுக்கு பாலபிஷேகம் செய்யும்போது , பால் நீல நிறத்தில் மாறுகிறது.
நிறம்-கருப்பு
மலர்-மந்தாரை
வாகனம்-ஆடு
ஆட்சி-இல்லை
உச்சம்-விருச்சகம்
நீசம்-ரிஷபம்
நட்சத்திரங்கள்-திருவாதிரை,சுவாதி,சதயம்
பால்-பெண்
கோசார காலம்-1 1/2 வருடம்
நட்பு-சனி,சுக்கிரன்
பகை-சூரியன்,சந்திரன்,செவ்வாய்
சமம்-புதன்,குரு
உலோகம்-கருங்கல்

ராகு 1 ஆம் வீட்டில் இருந்தால் உடல் நிலை நன்றாக இருக்காது. காம உணர்வு அதிகமாக இருக்கும். கீழ்தரமான எண்ணங்கள் இருக்கும். துணைவி மூலம் பிரச்சினை இருக்கும். துணைவியார் உடல்நிலை பாதிக்கப்படும். முகம் ஒழுங்காக இருக்காது. பற்கள் இடைவெளி விட்டு இருக்கும். மனநோய் தாக்கி அவதிப்படலாம்.

ராகு 2 ஆம் வீட்டில் இருந்தால் பொய் பேச்சு பேசுவார். தனபாக்கியம் குறையும். புத்திர தோஷத்தை ஏற்படுத்துவார். குடும்ப உறுப்பினர்களில் பெண்கள் அதிகமாக இருக்கலாம். குடும்பத்தில் அடிக்கடி சண்டை சச்சரவுகள் இருக்கும். உணவு பழக்க விஷயத்தில் முறையான வகையில்

பின்பற்ற வேண்டும் இல்லையென்றால் உணவு விஷமாகும். விவாதங்களைத் தவிர்ப்பது நன்மை தரும்.

ராகு 3 ஆம் வீட்டில் இருந்தால் சிறந்த தைரியசாலியாக இருப்பார்கள். இளைய சகோதர சகோதரிகள் இருக்கமாட்டார்கள். அப்படியே இருந்தால் சண்டை சச்சரவு இருக்கும். நல்ல தீர்க ஆயுள் இருக்கும். வியாபாரத்தில் ஈடுபட்டு வெற்றி பெறுவார். வெளிதொடர்புகள் நன்றாக இருக்கும்.

ராகு 4 ஆம் வீட்டில் இருந்தால் தாய் நலம் கெடும். வீட்டிற்க்குள் அடிக்கடி பாம்பு வரும். வீட்டில் அமைதி இருக்காது. குடும்ப வாழ்க்கையில் நிம்மதி இருக்காது. தாய்வழி உறவினர்கள் பகை இருக்கும். குடும்ப தேவைக்கான செலவு அதிகரிக்கும். வாகன விஷயத்தில் கவனமாக இருக்க வேண்டும்.

ராகு 5 ஆம் வீட்டில் இருந்தால் புத்திர தோஷம் ஏற்படும். பெண்களாக இருந்தால் கர்ப்பப் பையில் கிருமி இருக்கும். புத்தி கூர்மை குறைவாக இருக்கும். குழந்தை பாக்கியம் இருந்தாலும் பெற்றோருக்கும் குழந்தைகளுக்கும் நல்ல உறவு இருக்காது.ஐந்தாம் வீடு லெட்சுமி காரமான வீடு சில நேரங்களில் திடீர் பணவரவுகள் வரும். தன்னலம் கருதாமல் இருப்பார்கள்.

ராகு 6 ஆம் வீட்டில் இருந்தால் எதிரிகளை வெல்வார் தந்திர வழிகளில் வெற்றிக்கொள்வார். இளம் வயதில் வறுமையில் வாடுவார். கடன் வாங்குவார். நோய் தரும் இடமாக இருப்பதால் உடம்பில் புண் ஏற்படும். உடம்பு வலி ஏற்படும். தாய்வழி உறவினர் பகை ஏற்படும். தொழில் வளர்ச்சியில் புதிய யுக்தி பயன்படுத்தி முன்னேற்றமும் தாராள பணவரவும் இருக்கும்.

ராகு 7 ஆம் வீட்டில் இருந்தால் களத்திரதோஷத்தை ஏற்படுத்தும். பல பெண்கள் தொடர்பு ஏற்படும் சிற்றின்பத்தில் ஈடுபாடு அதிகம் ஏற்படும் துணைவரின் நலம் கெடும். துணைவர்களால் திருமண வாழ்வில் பிரச்சினை ஏற்படும். இவர்களிடம் தொடர்பு வைத்திருப்பவர்கள் இவரை ஏமாற்றுவார்கள். திருமணம் நடைபெறாதவர்களாக இருந்தால் திருமணத்தடை ஏற்படுத்தும் திருமணம் நடைபெற்றவர்களுக்கு வீண் குழப்பங்களை ஏற்படுத்துவார். அதனால் பிரிவினை ஏற்படும். கூட்டு வியாபாரத்தில் அதிக கவனம் செலுத்தவேண்டும் இல்லையென்றால் சுருட்டிக்கொண்டு ஓடிவிடுவார்கள்.

ராகு 8 ஆம் வீட்டில் இருந்தால் உடம்பில் நோய் ஏற்படுத்துவார். நண்பர்களிடம் தேவையற்ற விவாதம் தவிர்கவும். செல்வ நிலை ஒரே மாதிரியாக இருக்காது. துணைவரிடம் சண்டை சச்சரவு ஏற்படும். விபத்து ஏற்படும். தகுதிக்கு மீறிய பணம் கொடுக்கல் வாங்கல் மற்றும் வாக்குறுதி தருவது கூடாது. பணவசதி அவ்வளவு சிறப்பாக இருக்காது. இறக்கும் தறுவாயில் படுத்த படுக்கையாக இறக்க நேரிடும். உடலில் புண் ஏற்படும். பாதுகாப்பு குறைவான இடத்தில் தங்காதீர்கள். குடும்பத்தில் இருப்பவர்களுடன் அனுசரித்து செல்வது நல்லது.

ராகு 9 ஆம் வீட்டில் இருந்தால் கடுமையான பித்ரு தோஷம் ஏற்படும். எடுத்த அனைத்து காரியங்களும் தடை ஏற்படும். பெரியவர்களின் சாபங்கள் இருக்கும். தந்தை நலம் பாதிக்கப்படும். உயர்கல்வி படிக்க இயலாது. ஆன்மீக ரீதியில் புண்ணிய காரியங்கள் செய்வார்கள். சொத்துக்கள் வாங்கும் போது கவனம் தேவை.

ராகு 10 ஆம் வீட்டில் இருந்தால் நல்ல தொழில் வாய்ப்பு அமையும். வருமானம் நன்றாக இருக்கும். அன்னியர் மூலம் தொழில் அமையும். ஆன்மீக விஷயத்தில் நாட்டம் அதிகமாகும். தொழில் சார்ந்த வகையில் சந்திக்கும் குறுக்கீடுகளைச் சரி செய்ய கடின முயற்சி தேவைப்படும். கலைதுறையில் நுழைந்து சாதிக்கலாம். தொழில் வியாபாரம் திருப்திகரமாக நடக்கும்.

ராகு 11 ஆம் வீட்டில் இருந்தால் நல்ல செல்வ வளம் வரும். வருமானத்தில் குறைவு இருக்காது. மூத்த சகோதர சகோதரிகளிடம் பகை இருக்கும். சமூகத்தில் மதிப்பும் மரியாதையும் கூடும். ஆன்மீக பயணம் செல்ல நேரிடலாம். பொருளாதாரத்தில் நல்ல உயர்வைத் தருவார். புதிய புதிய தொழில்கள் ஆரம்பித்துக்கொண்டே இருப்பார்கள்.

ராகு 12 ஆம் வீட்டில் இருந்தால் செலவு அதிகமாக இருக்கும். கடுமையாக உழைத்தாலும் வருமானம் அதிகமாக இருக்காது. முழுமையான நித்திரை சுகம் இருக்காது. புத்திர தோஷத்தை ஏற்படுத்துவார். பிள்ளைகளால் செலவு ஏற்படும். பாதங்களில் பிரச்சினை ஏற்படும். எதிர்பாராத செலவுகள் வரலாம். வெளி நாட்டு வேலை வாய்ப்புகள் கிடைக்கும்.

**ராகு (நாகதோஷத்திலிருந்து நிவிர்த்தி அடைய)**

ஓம் சிரரூபாய வித்மஹே

அமிருதேசாய தீமஹி

தன்னோ ராஹுஹ் ப்ரசோதயாத்
ஓம் நகத்வஜாய வித்மஹே
பத்மஹஸ்தாய தீமஹி
தன்னோ ராஹுஹ் ப்ரசோதயாத்
ஓம் நீலவர்ணாய வித்மஹே
சிம்ஹிகேசாய தீமஹி
தன்னோ ராஹுஹ் ப்ரசோதயாத்
ஓம் பைடினசாய வித்மஹே
சர்மதராய தீமஹி
தன்னோ ராஹுஹ் ப்ரசோதயாத்

****************************************************************************************************

# நவகிரகங்கள்- குரு

சூரியனுக்கு சுமார் 48,00,00,030 KM தூரத்திற்க்கு அப்பால் இருந்த சூரியனை சுற்றி வருகிறது இது தன்னைத்தானே 9 மணி 55 நிமிடங்களில் சுற்றுகிறது. குரு புத்திரகாரன் என அழைக்கப்படுகிறது. மந்திரம், ஞாபகசக்தி, வேதமந்திர சாஸ்திர அறிவு,யானை,குதிரை போன்ற வாகன அந்தஸ்த்து,பணம்,பிராமண உபசாரம் இது அனைத்திற்க்கும் காரகன் ஆகிறார். குரு பார்வை கோடி புண்ணியம். இவரின் பார்வையால் அனைத்து தோஷமும் நீங்கும்.ஆனால் குரு அமர்ந்த இடம் கெட்டுவிடும். நவக்கிரகங்களின் குருவாக விளங்குபவர் வியாழபகவான். குரு தோஷங்கள் விலகிட ஆலங்குடி சென்று வழிபடலாம். 24 நெய் தீபங்கள் ஏற்றி 24 முறை மௌன வலம் வரவேண்டும். குரு பகவானுக்கு வியாழக்கிழமையில் அபிஷேகம் செய்வித்து மஞ்சள்நிற வஸ்திரம் வெண்முல்லை ஆகியவற்றால் அலங்காரம் செய்து எலுமிச்சம் பழம் அன்னம் நிவேதிக்க வேண்டும். குருவருள் திருவருள் என்பார்கள். குருபகவான் என்று சிறப்பித்து கூறப்படும் குருபார்க்க கோடி நன்மை. குருபார்வை அதாவது வியாழ நோக்கம் வந்தால் திருமணம் மற்றும் சுபகாரியங்கள் செய்யலாம் என்ற வழக்கம் உள்ளது.

சுபகிரக வரிசையில் முதன்மையாக பேசபடும் குருபகவான் ஆட்சி வீடுகள் மீனம், தனுசு. உச்ச வீடு கடகம், நீச வீடு மகரம். குருபகவான் ஆட்சி அல்லது உச்சம் பெற்று சூரியனோடு இனைந்நு 6,8,12 வது இடங்களில் மறைவு பெறாமல் அமைந்தால் ராஜயோகம். கோடிஸ்வர யோகம் அமையும். மேதைகளையும்மூ ஞானிகளையும் உருவாக்குவது குருபகவான். பிரகஸ்பதி என்று குருகிரகத்தை அழைப்பார்கள் இதன் பொருள் ஞானத்தலைவன் என்பதாகும். விவேகத்தையும், அந்தஸ்தையும், ஆற்றலையும், புத்திர பாக்கியத்தையும் வாரி வழங்குவார். பஞ்ச பூதங்களில் ஆகாயம் குருபகவான். கன்னி லக்னமாக அமைந்து, குரு 3ல் அமர்ந்து பாவகிரகங்கள் பார்த்தாலோ-சேர்ந்தாலோ இரண்டு மனைவிகள் அமையும். குருபகவான் ஜாதகங்களில் சிறப்பாக அமைந்தால் நல்ல குடும்பம், நல்ல கணவன்,மனைவி, செல்வசெழிப்பு அனைத்தும் ஏற்படும். அதிர்ஷ்ட வாய்ப்புகளை பெறலாம். தெய்வ அருள் கிடைக்கும். ஜோதிட ஞானத்தை

குரு வழங்குவார். அறிவு வாயந்த குழந்தைகளை பெறுவதும் குருபகவான் அருள்தான். பிரஹஸ்பதி, வியாழன், பீதாம்பர், பொன்னன் ஆகிய பெயர்களால் அழைக்கப்படும் வியாழன் தெய்வீக அறிவுக்கும், ஞானத்திற்கும் அதிபதி ஆவார். குரு பார்த்தால் கோடி நன்மை என்ற பழமொழி ஒன்றே குருவின் பெருமையை விளக்கப் போதுமானது. தலைமை தாங்குவது குரு பலத்தால் ஏற்படும். அந்தணர், பசுக்களுக்கு அதிபதி. குரு மஞ்சள் நிறத்தோன். சாத்வீகன். உடலில் சதை இவர். புத்திர காரகன், தன காரகன் இவரே. திருமணம் ஒருவருக்கு செய்ய குரு பலம் , குரு பார்வை அவசியம். ஒருவர் நல்லவரா ? கெட்டவரா? என்று குருவின் நிலையை வைத்து கூறிட முடியும். வடக்குத் திசை குருவிற்கு உரியது. குருவிற்கு உரிய தலம் ஆலங்குடி. பிரம்மன் இவருக்கு அதி தேவதை. இந்திரன் பிரத்யதி தேவதை. புஷ்பராகம் குருவிற்கு உகந்த ரத்தினம்.

கும்பகோணம் - நீடாமங்கலம் - மன்னார்குடி சாலையில் கும்பகோணத்தில் இருந்து தெற்கே 17 கி.மி. தொலைவில் இத்தலம் இருக்கிறது. நவக்கிரக ஸ்தலங்களில் ஆலங்குடி குரு ஸ்தலமாக விளங்குகிறது. இவ்வூரின் அமைவிடம் 10.37° N 78.98° E ஆகும். கடல் மட்டத்தில் இருந்து இவ்வூர் சராசரியாக 79 மீட்டர் (259 அடி) உயரத்தில் இருக்கின்றது. ஆலங்குடி இந்தியாவின் தமிழ்நாடு மாநிலத்தில் புதுக்கோட்டை மாவட்டத்தில் ஆலங்குடி தாலுகாவில் அமைந்துள்ள ஒரு சட்ட மன்ற தொகுதியான பேரூராட்சி. இத்தொகுதியுடன் உள்ளடங்கிய முக்கியமான சிற்றூர்கள் (கிராமங்கள்) சிக்கப்பட்டி,மேலத்தூர், கீலாத்தூர், பள்ளதுவிடுதி, கல்லாலன்குடி, கொத்தமங்கலம் மாங்காடு வடகாடு ஆகும்.

அருள்மிகு ஆபத்சகாயேஸ்வரர் திருக்கோயில்

மூலவர்:ஆபத்சகாயேஸ்வரர், காசி ஆரண்யேஸ்வரர்,
உற்சவர்:தெட்சிணாமூர்த்தி
அம்மன்/தாயார்: ஏலவார்குழலிதல
விருட்சம்: பூளை என்னும் செடி
தீர்த்தம்:பிரமதீர்த்தம், அமிர்த புஷ்கரணி மற்றும் உள்ள தீர்த்தங்கள்.
ஆகமம்/பூஜை :-
பழமை:1000-2000 வருடங்களுக்கு முன்
புராண பெயர்:இரும்பூளை, திருவிரும்பூளை
உலோகம்-பொன்
தானியம்-கொண்டை கடலை

பால்-ஆண்
திசை காலம்-16 வருடங்கள்
கோசார காலம்- 1 வருடம்
நட்பு-சூரியன்,சந்திரன்,செவ்வாய்
பகை-புதன்,சுக்கிரன்
சமம்- சனி,ராகு,கேது
உபகிரகம்-எமகண்டன்
நட்சத்திரம்-புனர்பூசம்,விசாகம்,பூரட்டாதி
ஊர்:ஆலங்குடி
மாவட்டம்: தஞ்சாவூர்
மாநிலம்: தமிழ்நாடு
திருஞானசம்பந்தர் தேவாரபதிகம்
நச்சித் தொழுவீர்கள் நமக்கிது சொல்லீர்
கச்சிப் பொலி காமக்கொடி யுடன்கூடி
இச்சித் திரும்பூளை யிடங் கொண்ட ஈசன்
உச்சித் தலையில் பலி கொண்டு உழலூணே. -திருஞானசம்பந்தர்
தேவார பாடல் பெற்ற காவிரி தென்கரை தலங்களில் இது 98வது தலம்.

தல சிறப்பு: இங்கு மூலவர் ஆபத்சகாயர் சுயம்புலிங்கமாக அருள்பாலிக்கிறார். (இத்தலத்தில் தெட்சிணாமூர்த்தி விசேஷம் - குருதக்ஷிணாமூர்த்தி, ஆதலின் இதைத் தெட்சிணாமூர்த்தித் தலம் என்பர்.) விசுவாமித்திரர், முசுகுந்தர், வீரபத்திரர் பூசித்த தலம். அம்பிகை இத்தலத்தில் தோன்றித் தவம் செய்து இறைவனைத் திருமணம் புரிந்து கொண்ட தலம். இப்போதும் இங்குள்ள சுந்தரர் சிலையில் அம்மைத் தழும்புகள் இருப்பதைக் காணலாம்.
காலை 6 மணி முதல் 11 மணி வரை, மாலை 4 மணி முதல் இரவு 8.30 மணி வரை திறந்திருக்கும்.

அருள்மிகு ஆபத்சகாயேஸ்வரர் திருக்கோயில், ஆலங்குடி அஞ்சல் - 612801. கும்பகோணம் வட்டம். தஞ்சாவூர் மாவட்டம். ஆலயம் ஊரின் நடுவே அழகாக, ஐந்து நிலைகள் கொண்ட ராஜகோபுரத்துடன் காட்சியளிக்கின்றது. விசேட மூர்த்தி அருள்மிகு குருதட்சிணாமூர்த்தி உள்பிரகாரங்களில் கலங்காமல் காத்த விநாயகர், முருகன், லஷ்மி, நால்வர், சூரியேசர், சோமேசர், குருமோசேசுரர், சோமநாதர், சப்தரிஷிநாதர், விஷ்ணு நாதர், பிர்மேசர் ஆகிய சப்தலிங்கங்களோடு காசிவிசுவநாதர், விசாலாட்சி, அகத்தியர் முதலியவரும் உள்ளனர். ஆக்ஞாகணபதி, சோமாஸ்கந்தர், பெரிய

வடிவோடுகூடிய விநாயகர், சுப்பிரமணியர், சண்டேஸ்வரர், கல்யாணசாஸ்தா, சப்த மாதாக்கள் முதலிய உற்சவமூர்த்தங்களும் உள்ளன. சபாநாதர் சந்நிதியில் திருமுறைக் கோயில் உள்ளது. உற்சவ தக்ஷிணாமூர்த்தி, சனகாதி நால்வருடன் காட்சிதருகின்றனர். சுவாமி மகாமண்டபத்தில் நந்தி பலிபீடம் செப்புத் திருமேனியுடன் உள்ளது. மகாமண்டப வாயிலில் துவகர பாலகர்களும் உளர். ஆபத்சகாயர் கிழக்கு நோக்கிய சந்நிதி. இத்தலத்துச் சிறப்புடைய குரு தக்ஷிணாமூர்த்தி தெற்கு கோஷ்டத்திலுள்ளார். மேற்கில் இலிங்கோற்பவரும், வடக்கில் பிரம்மாவும், துர்க்கையும் உளர். "ஞான கூபம்' என்னும் தீர்த்தக் கிணறு உள்ளது. சுக்கிரவார அம்மன் சந்நிதி, சனீஸ்வரர் சந்நிதி, வசந்த மண்டபம், சப்தமாதா ஆலயமும் உள்ளன. இத்தலத்தின் கிழக்கே "பூளைவள ஆறு' பாய்கிறது. ஐப்பசியில் இதன் தீர்த்தத்தைக் கொண்டு வந்து சுவாமிக்கு அபிஷேகம் செய்கிறார்கள்.

பிரார்த்தனை: நாகதோஷம் நீங்கவும், பயம், குழப்பம் நீங்க இங்குள்ள விநாயகரையும், திருமணத்தடை நீங்கவும், கல்வி, கேள்விகளில் சிறந்து விளங்கவும் இங்கு பிரார்த்தனை செய்கின்றனர்.

நேர்த்திக்கடன்: பிரார்த்தனை நிறைவேறியதும் இறைவனுக்கு அபிஷேகம் செய்தும், புது வஸ்திரம் சாத்தியும் நேர்த்திக்கடன் நிறைவேற்றுகின்றனர்.

தலபெருமை: ஆலங்குடி ஆபத்சகாயேஸ்வரர் கோயிலில் ஒவ்வொரு ஆண்டும் மாசி மாத வியாழக்கிழமையில் மட்டுமே குரு பகவானுக்கு சிறப்பு அபிஷேகம் நடக்கும். ஒரு காலத்தில் பாசிபடியாத தாலிக்கயிறை கூட மாசியில் மாற்றி விடுவார்களாம் பெண்கள். குரு பலம் இருப்பவர்களுக்கு மாங்கல்ய பாக்கியம் நீண்டகாலம் நிலைத்திருக்கும். அந்த குரு பகவானுக்கு மாசியில் அபிஷேகம் நடப்பது சிறப்பிலும் சிறப்பு. குரு பெயர்ச்சி நாளை விட இந்த நாள் விசேஷ சக்தி வாய்ந்த நாளாக கருதப்படுகிறது. இங்கு குருவின் நேரடி தரிசனம் கிடையாது. தெட்சிணாமூர்த்தியே இங்கு குருவாய் இருந்து சனகாதி முனிவர்களுக்கு உபதேசிக்கிறார். இவரையே குருவாக கருதி வழிபடுகின்றனர் பக்தர்கள். விசுவாமித்திரர் வழிபட்ட தலம். ஆலகால விஷத்தை இறைவன் உண்டு தேவர்களைக்காத்தபிரான் உள்ள தலம். இதனால் ஆலங்குடி என்றாயிற்று என்பர். இதற்குச் சான்றாகச் சொல்லப்படும் காளமேகப் புலவர் பாடல் வருமாறு :-

""ஆலங்குடியானை ஆலாலம் உண்டானை

ஆலங் குடியான் என்று ஆர் சொன்னார் - ஆலம்
குடியானேயாகில் குவலயத்தோரெல்லாம்
மடியாரோ மண் மீதினில்".
இவ்வூரில் விஷத்தால் எவர்க்கும் எவ்விதத் தீங்கும் உண்டாவதில்லை
என்று சொல்லப்படுகிறது. கருநிறமுள்ள பூளைச் செடியைத்
தலவிருட்சமாகக் கொண்டுள்ளதால் திருஇரும்பூளை என்றும், ஆலமரத்தின்
கீழிருந்து அறமுரைத்த பெருமானுக்குரிய தலமாதலாலும் திருப்பாற்கடலில்
அமுதம் கடைந்தபோது தோன்றிய ஆலத்தை உண்டு அமரர்களைக்
காத்தருளிய இறைவன் வீற்றிருப்பதாலும் ஆலங்குடி என்று பெயர்.
திருவிடைமருதூர் மகாலிங்கப் பெருமானுக்குரிய பரிவாரத் தலங்களில்
இத்தலம் தட்சிணாமூர்த்தித் தலம். பஞ்ச ஆரண்யத் தலங்களில் இத்தலம்
ஒன்றாகும். தட்சிணாமூர்த்தி இத்தலத்தின் சிறப்புக் கடவுளாக
விளங்குகிறார். வியாழக்கிழமையில் இம்மூர்த்தியை வழிபடுவோர் எல்லா
நலங்களும் பெறுவர். நாகதோஷ முடையவர்கள் இத்தலத்தை வழிபட்டு
தோஷம் நீங்கப் பெறுகின்றன. தெட்சிணாமூர்த்தி உற்சவராக தேரில் பவனி
வருவது தமிழகத்திலேயே இங்கு மட்டும்தான்.

தட்சன், சுந்தரர்: இக்கோயிலின் வெளியே தனிக்கோயிலில் பார்வதியின்
தந்தையான தட்சன் சாபம் பெற்று ஆட்டுத்தலையுடன் காட்சியளிப்பதைக்
காணலாம். இது மிகவும் சிறிய சிலை. தற்போது சற்று சேதமடைந்தது
போல் தெளிவற்ற உருவத்துடன் உள்ளது. ஆனால், திருவாரூருக்கு ஒரு
மன்னனால் எடுத்துச் செல்லப்பட்டு, அங்கிருக்க விரும்பாமல், ஒரு
அர்ச்சகரின் உதவியோடு மீண்டும் ஆலங்குடிக்கே திரும்பிய சுந்தரர் சிலை
அற்புதமாக கோயிலுக்குள் இருக்கிறது. தெட்சிணாமூர்த்தி சன்னதியை
ஒட்டி, உற்சவர் சிலைகள் இருக்குமிடத்தில் இந்த சிலையும் இருக்கிறது.
இந்த சிலையை திருவாரூரில் இருந்து ஒளித்து எடுத்து வந்த அர்ச்சகர்,
காவலர்களிடம் இருந்து தப்பிக்க, அம்மை கண்ட தன் குழந்தையை
எடுத்துச் செல்வதாக கூறினார். ஆலங்குடி வந்து பார்த்த போது சிலைக்கே
அம்மை போட்டிருந்தது. இப்போதும் அம்மைத் தழும்புகள் சிலையில்
இருப்பதைக் காணலாம்.

சுக்ரவார அம்பிகை: "சுக்ரவாரம்' என்றால் வெள்ளிக்கிழமை.
வெள்ளிக்கிழமை அம்மனுக்கு விசேஷம் என்பது அறிந்த உண்மை தான்.
அந்த வெள்ளியின் பெயரையே தாங்கி தனி சன்னதி ஒன்றில் அழகே
வடிவாக அம்பிகை அருள்பாலிக்கிறாள். இவளது பெயரும் "சுக்ரவார
அம்பிகை' என்பது குறிப்பிட்டத்தக்கது.

மாதா, பிதா, குரு: இக்கோயிலின் அமைப்பு வித்தியாசமானது. உள்ளே நுழைந்ததும் கண்ணில் படுவது அம்மன் சன்னதி. அடுத்து சுவாமி சன்னதியைப் பார்க்கலாம். இதன் பிறகு குரு சன்னதி வரும். மாதா, பிதா, குரு என்ற அடிப்படையில் இக்கோயில் அமைந்திருப்பதாக கருதப்படுகிறது.

தல வரலாறு: சுந்தரர் இத்தலத்திற்கு வரும்போது வெட்டாற்று வெள்ளப் பெருக்கில் ஆபத்சகாயரே ஓடக்காரராக வந்து கரையேற்றிக் காட்சிதந்தார் என்பது வரலாறு. ஓடம் நிலைதடுமாறிப் பாறையில் மோதியபோது காத்தவிநாயகர் கலங்காமல் காத்த பிள்ளையார் என வழங்கப்படுகிறார்.

அதிசயத்தின் அடிப்படையில்: இங்கு மூலவர் ஆபத்சகாயேஸ்வரர் சுயம்புலிங்கமாக அருள்பாலிக்கிறார்.

## ஒவ்வொரு வீட்டிலும் குரு இருந்தால் என்ன பலன்

குருவை பற்றி பார்க்கலாம் நவகிரங்களில் முழு சுபர் என்று அழைக்கப்படுபவர் குருபகவான் தான்.
இவர் ஒருவர் நல்ல நிலைமையில் இருந்தாலோ போதும் எவ்வளவு பிரச்சினைகளையும் எதிர்கொள்ளும் நிலை கிடைக்கும். இவர் காரகம் வகிக்கும் செயல் குழந்தை பாக்கியம் திருமணம் நல்ல முறையில் பணவரவுகள் ஆகியவை ஆகும். இவரின் கருணை இருந்தால் தான் வீட்டில் மங்கல நிகழ்ச்சி நடைபெறும். குரு எப்பொழுதும் சொந்த மதத்தை குறிப்பவர். அவர் அவர்களின் மதங்களை பின்பற்றினாலே குரு நல்லது செய்கிறது. ஒருவருக்கு திருமணம் நடைபெறுவதற்க்கு காரகம் வகிப்பவர் குரு பகவான். ஒழுங்கான திருமணம் நடைபெற வேண்டும் என்றால் குரு பகவான் நல்ல நிலையில் இருந்தால் மட்டும் தான் நடைபெறும்.

குரு 1 ஆம் வீட்டில் இருந்தால் நல்ல தோற்றம் இருக்கும். நல்ல ஆயுளுடன் இருப்பார்கள். சிறந்த மனைவி அமையும். இவருடன் தொடர்பு வைத்திருப்பவர்கள் நல்ல ஆன்மிகவாதிகளாக இருப்பார்கள். குழந்தை பாக்கியம் கிடைக்கும். பூர்வ புண்ணிய பாக்கியம் கிடைக்கும். இவர்களின் குழந்தைகள் சிறந்து விளங்குவார்கள். வாழ்க்கையில் இவர் நல்ல முன்னேற்றம் காண்பார்கள். தந்தை இவருக்கு உதவி புரிவார்.

குரு 2 ஆம் வீட்டில் இருந்தால் நல்ல பேசுவார்கள் இவர்களின் வாக்குக்கு சமுதாயத்தில் மதிப்பு இருக்கும். கல்வியில் சிறந்து விளங்குவார்கள். குடும்பத்தில் நிம்மதி இருக்கும். குழந்தை பாக்கியம் கிடைக்கும். கையிருப்பு பணம் எந்த நேரமும் வந்து கொண்டே இருக்கும். வியாபாரத்தில் சிறந்து

விளங்குவார்கள். இவருடன் சேரும் வியாபார நண்பர்களும் நல்ல முறையில் இருப்பார்கள்.

குரு 3 ஆம் வீட்டில் இருந்தால் பக்தியில் ஈடுபாடு இருக்கும் இளைய சகோதரர் நல்ல முன்னேற்றம் இருக்கும் அவர் மூலம் இவருக்கு நன்மை கிடைக்கும். எதிர்பாலினரிடம் மோகம் இருக்கும். அளவோடுதான் மகிழ்ச்சி இருக்கும்.

குரு 4 ஆம் வீட்டில் இருந்தால் தாய் நல்ல நலத்துடன் இருப்பார். குழந்தை பாக்கியம் தாமதமாக இருக்கும். குழந்தைகள் மூலம் நல்ல விஷயங்கள் நடக்காது. பகைவர்கள் உண்டாகுவார்கள். விவசாய சம்பந்தபட்ட குடும்பமாக இருந்தால் விவசாயம் மூலம் நல்ல வருமானம் இருக்கும்.

குரு 5 ஆம் வீட்டில் இருந்தால் புத்திரபாக்கியம் கிடைக்கும். புத்திரக்களால் நல்ல நிலைக்கு வரலாம். நுண்ணிய அறிவு இருக்கும். குலதெய்வத்தின் அருள் கிடைக்கும். திடீர் பணவரவுகள் இருக்கும்.

குரு 6 ஆம் வீட்டில் இருந்தால் பகைவரை வெற்றி கொள்ளலாம். சமுதாயத்தில் மதிப்பு இருக்காது. குழந்தை பாக்கியம் தடை ஏற்படுத்துவார். மங்கலகரமான நிகழ்ச்சிகள் நடைபெற தாமதம் ஆகும். உடம்பு பலம் இழந்து காணப்படும்.

குரு 7 ஆம் வீட்டில் இருந்தால் நல்ல மனைவி அமையும். குரு லக்கினத்தை பார்ப்பதால் உடல் நிலை நன்றாக இருக்கும். சமுதாயத்தில் நல்ல புகழ் கிடைக்க வழி செய்வார். மனைவியாக வருபவர் ஆன்மிக சம்பந்தப்பட்ட குடும்பமாக இருக்கும். மனைவியும் ஆன்மிக விஷயங்களில் நாட்டம் உள்ளவராக இருப்பார். இவர்களிடம் தொடர்பு வைத்துருப்பவர்கள் நல்ல மதகுருமார்களாக இருக்க வாய்ப்பு உண்டு.

குரு 8 ஆம் வீட்டில் இருந்தால் மனைவி அமைவது கஷ்டமாக இருக்கும். திருமணம் முடிந்தால் மனைவியின் உடல்நிலை பாதிக்கப்படும். செல்வ நிலை இருக்கும். சோதிடத்துறையில் நல்ல அறிவு ஏற்படும். மரண வீட்டை குறிப்பதால் உயிர் வாதை இல்லாமல் உடனே போகும்.

குரு 9 ஆம் வீட்டில் இருந்தால் நல்ல பாக்கியம் கிடைக்கும். மிக உயர்ந்த பதவியில் இருப்பார். ஆன்மிகத்தில் சிறந்து விளங்குவார். மிகப்பெரிய மடாதிபதிகளின் தொடர்பு ஏற்படும். மிக உயர்ந்த படிப்புகள் எல்லாம்

படிப்பார்கள். வெளிநாடுகள் செல்ல வைப்பார். வெளிநாட்டு தொடர்பு மூலம் பணவரவுகள் இருக்கும். குலதெய்வ அருள் இருக்கும். மந்திர வித்தை நன்றாக இருக்கும்.

குரு 10 ஆம் வீட்டில் இருந்தால் நல்ல தொழில் அமையும். செல்வ நிலை உயரும். அரசாங்கத்தில் நல்ல பெயர் கிடைக்கும். அவரை சுற்றிய வட்டாரங்களில் மதிப்பு இருக்கும். வருமானத்தை பெருக்குவார். கோவில் சம்பந்தப்பட்ட இடங்களில் வேலைக்கு அமர்த்துவார்.

குரு 11 ஆம் வீட்டில் இருந்தால் தொழிலில் நல்ல வருமானம் இருக்கும். மூத்த சகோதர சகோதரிகள் மூலம் நன்மை நடக்கும். நல்ல நண்பர்கள் அமைவார்கள். வாகன வசதிகள் ஏற்படும். எந்த வேலையை எடுத்தாலும் வருமானத்திற்க்கு குறைவு இருக்காது. குழந்தை பாக்கியம் இருக்கும்.

குரு 12 ஆம் வீட்டில் இருந்தால் ஒழுகத்தை கடைபிடிக்க மாட்டார். புண்ணிய இடங்களுக்கு அடிக்கடி செல்ல வைப்பார். குழந்தை பாக்கியத்தில் குறை இருக்கும். சில பேர் பக்திமான்கள் போல் நடிப்பார்கள். கோவில் கட்டுதல் ஆறு குளம் வெட்டுதல் போன்றவற்றில் ஈடுபட வைப்பார். பணவிரையம் ஏற்படும்.

**குரு (நல்ல மனைவி அமைய)**

ஓம் குருதேவாய வித்மஹே
பரப்ரஹ்மாய தீமஹி
தன்னோ குருஹ் ப்ரசோதயாத்
ஓம் சுராசார்யாய வித்மஹே
தேவபூஜ்யாய தீமஹி
தன்னோ குருஹ் ப்ரசோதயாத்
ஓம் குருதேவாய வித்மஹே
பரம் குருப்யோம் தீமஹி
தன்னோ குருஹ் ப்ரசோதயாத்
ஓம் சுராசார்யாய வித்மஹே
மஹாவித்யாய தீமஹி
தன்னோ கருஹ் ப்ரசோதயாத்
ஓம் அங்கிரஸாய வித்மஹே
சுராசார்யாய தீமஹி
தன்னோ ஜீவஹ் ப்ரசோதயாத்

# குளிகன் / மாந்தி

மாந்தியை குளிகன் என்றும் அழைக்கபடுகிறது. சனிபகவானின் புத்திரன்என்று ம் அழைக்கபடுகிறது. இது துணை கிரகமாக செயல்படுகிறது. பகலில்ஒரு குழந் தை பிறந்தால் குளிகன் என்றும் இரவில் ஒரு குழந்தைபிறந்தால் மாந்தி என்று ம் சொல்ல படுகிறது

சனியின் மைந்தனும் மாந்தி என்றும் குளிகன் என்றும் கூறப்படும் கிரகமா னதுலக்கினத்தில் அமைந்தால் அச்சாதகனுக்கு நல்ல மனை வாய்த்தலும்நி றைதனமும், நிலம் முதலியன அமைதலோடு அவனது விதியும்தீர்க்கமான தாக அமையும் என்று கூறுக.

தனஸ்தானமான இரண்டாமிடத்தில் அமைய அவன் கலகன் எனவும் நேத்தி ரஊனம் உறுவோன் என்றும் அதாவது கண்களில் ரோகம் பெறுபவன் என்று ம்,தனவிரயம் செய்வன் என்பது மட்டுமல்லாமல் தரணியில் துஷ்டன் என வும்பெயர் வாங்குவன் என நீ துணிந்து கூறுவாயாக.

இக்குளிகன் திருதிய ஸ்தானத்தில் அதாவது மூன்றாமிடத்தில் அமையப் பெ ற்றசாதகன் தன் தம்பியரோடும், நண்பர்களோடும் போர் செய்பவன் என்பத ையும் நீஉணர்ந்து கூறுவதோடு இவன் வாய்ச் சமர்த்தன், நல்ல விரதஒழு க்கமுள்ளவன் என்பதையும் உணருக.

குளிகன் நான்கில் அமையப் பெற்ற சாதகன் தன் பிறப்பிடத்தை விட்டுவேற் றிடம் சென்று, மலைப் பகுதிகளிலும் சில காலம் வாழ்ந்திருப்பன்.அதனால் குற்ற மொன்றுமில்லை

இலக்கனத்திற்கு ஐந்தாம் இடத்தில் சனியின் குமாரனான குளிகனானவன்நி ற்கப்பிறந்தவன் குணவானாக வாழ்வான் எனினும் புத்திர தோடம்உடையவ னேயாவான். மிகச் சிறந்த வீரனாக இவன் விளங்குவதோடுபகையை ஒழித் தழிக்கும் பாங்கறிந்தவன்; திடமாக வாழ்பவன். வெகுதனதான்ய சம்பத்துட ையவன்,

இக்குளிகன் ஆறாமிடத்தில் நிற்கப் பிறந்தவன் நிறைந்த ஆயுள் உள்ளோன். பரோபகாரி, இவனும் வீரனே என்பதனை நன்கு கிரக பலம் அறிந்துகூறுவா யாக.

இலக்கினத்திற்கு ஏழாம் இடத்தில் குளிகன் நிற்கப் பிறந்த சாதகனுக்குக்கண் டம் நேரும். இவனுக்கு விவாதத்தாலே வெகுதன விரயம் சிவனருளாலேசி த்திக்கும்.

எட்டாமிடத்தில் குளிகன் நிற்கப் பிறந்த ஜாதகன் மகா அழும்பன் என்பதோடு நீரால் கண்டம் ஏற்படும் என்பதையும், அறிவித்துக் கொள்ளலாம்.

இலக்கினத்திற்கு ஒன்பதாம் இடமான பாக்கிய ஸ்தானத்தில் குளிகன் நிற்க ப்பிறந்த ஜாதகன் முகவசியமுடையவன் என்றாலும் அழும்பனாய் பிதுர்துர ோகியாய் விளங்குவான். எனினும் இப்பூமியின் கண் நிறை தனம் பெற்று மகிழ்வோனே யாவான். அதனால் குற்றமில்லை எனக் கூறுக.

பத்தாம் இடமான கர்ம ஸ்தானத்தில் குளிகன் நிற்கப் பிறந்த சாதகன்கருமி யாகவும், துரோகம் செய்பவனாகவும் இருப்பான். கிரக நிலையை நன்குஆ ய்ந்தறிந்து தீட்டு நிகழ்ந்த வீட்டில் உஞ்சை விருத்தி ஜீவனம் செய்பவனாக இருப்பன். கிரக பலம் அறிந்து சிறப்பாகவும் திண்ணமாகவும் பலன் கூறுக.

இலக்கினத்திற்கு பதினொன்றாம் இடத்தில் குளிகன் நிற்கப் பிறந்த சாதகன்ப ூமியில் நல்ல புகழ் உடையவனேயாவான். சிறந்த தனலாபம் உடையவ னே.இவனது ஆயுள் பலத்தை அறிந்து கிரக நிலைமை தெரிந்து நீ சொல்லு க.இவன் வசியன் [தேவதை வசியன்] ஜாலக்காரன்.

பன்னிரண்டாம் இடத்தில் குளிகன் நிற்கப் பிறந்தவன் வீண்விரயம் செய்பவ ன்.ரசவாதம் தேர்ந்தவன். குடும்ப நாசம் செய்பவன்.

**<u>மாந்தி புராணகதை</u>**

இராவணன் மகன் மேகநாதன் (எ) இந்திரஜித் பிறந்த நேரத்திலேயே மாந்தி அவதரித்தார். சர்வ வல்லமையும், அரிய அற்புதமான வரங்களையும் பெற்ற இந்திரஜித் தின் இறப்பின் பொருட்டே, அவன் பிறக்கும்போதே பிறந்தவர்தான் மாந்தி

.

ராமாயணத்தில் ஒரு கிளைக் கதையில், மாந்தியைப் பற்றிய செய்தி உள்ளது என்று கேள்விப்பட்டிருக்கிறேன். படித்தவர்கள் அறியத்தரலாம். தன் தவவலிமையால் சிவனிடம் வரம் பெற்ற ராவணன், கிரகங்களையே தன்னிடத்திற்கு அழைக்கும் பேறுபெற்று விளங்கினானாம். தன் மகன் இந்திரஜித் பிறக்க இருந்த சமயத்தில், சனியை வரவழைத்த ராவணன். என்னுடைய மகனின் ஜாதகத்தில் நீ பதினொன்றாம் இடத்தில்தான் இருக்க வேண்டும் என்று பணித்தானாம். ஜாதகத்தில், சனிக்கு 11ஆம் வீடு சிறந்த இடம். 12ஆம் வீடுதான் மோசமான இடம். வேறு வழியில்லாமல் சரி என்று ஒப்புக்கொண்ட சனி, அலட்சியத்தாலும், தவறுதலாலும், கவனக்குறைவாலும், அப்படி 11ல் நிற்கும் போது, சனியின் ஒரு கால் 12ஆம் வீட்டின் மேல் இருந்ததாம். கோபமுற்ற ராவணன், தன் நீண்ட வாளால், சனியின் அந்தக் காலை வெட்டிவீழ்த்த, அது ஒன்றாம் வீட்டில் போய் விழுந்ததாம். விழுந்த அந்தக் காலும், அதனுடன் இருந்த சதைப் பகுதியும் சேர்ந்துதான் மாந்தியாக உருவெடுத்ததாம். அதோடு லக்கினத்தில் உயிர் பெற்று எழுந்ததால், ராவணனின் மகன் இந்திரஜித்தின் வாழ்க்கையை, அற்ப ஆயுளிலேயே முடித்ததாம்.

ஸ்ரீசனீஸ்வரரைப்போல் வல்லமை பெற்றவர்தான் மாந்தி. சனிக்கு நிகரானவர் எனலாம். அதனால் ஜாதகத்தில் மாந்தியின் பலன்களையும் நிர்ணயித்து அறிய வேண்டும். மாந்தி கடிகாரச் சுற்று முறையில் வலம் வரும் கிரகமாகும்.

## **மாந்தி / குளிகன் சேர்க்கை பலன்கள்**

ஸ்ரீசனீஸ்வரரைப்போல் வல்லமை பெற்றவர்தான் மாந்தி. சனிக்கு நிகரானவர் எனலாம். அதனால் ஜாதகத்தில் மாந்தியின் பலன்களையும் நிர்ணயித்து அறிய வேண்டும். மாந்தி கடிகாரச் சுற்று முறையில் வலம் வரும் கிரகமாகும்.

மகரம், கும்பம் ஆகிய ராசிகளை ஆட்சி வீடாகப் பெற்ற ஸ்ரீசனீஸ்வரரிடமிருந்து கும்ப ராசியை ஆட்சி வீடாகப் பெற்றவர்தான் மாந்தி. இவருக்கு உச்ச வீடு, நீச வீடு இல்லை. மாந்தி தான் அமர்ந்திருக்கும் இடத்தி-ருந்து 2, 7, 12 ஆகிய இல்லங்களைப் பார்ப்பார் என நூல்கபில் கூறப்பட்டுள்ளது.

லக்னத்திற்கு 6, 8, 12-ல் சந்திரன் அமர்ந்து ஆவியுலகத் தலைவன் மாந்தி சேர்க்கை பெற்றால், ஜாதகர் துர்ஆவிகளினால் பீடிக்கப்பட்டு மரண வேதனை அடைவார். ஸ்ரீஆஞ்சனேயரை வழிபட்டால் துர்ஆவிகள் விலகும். மாந்தியினால் ஏற்பட்ட தோஷம் விலகும்.

மாந்திக்கு 7-ல் புதன் அமர்ந்து சுபர்களால் பார்க்கப்பட்டால், ஜாதகர் தந்தை செய்த தொழில் மூலம் நிரம்ப வருமானம் பெற்று எல்லா ஐஸ்வர்யங்களுட னும் வாழ்வார்.

ஆண் ஜாதகருக்கு, மாந்திக்கு 3-ல் சனி அமர்ந்தால், ஜாதகரின் சகோதரர் தீய பழக்கங்கள் மிகுந்தவராவார். குலப்பெருமை கெடும். அரச தண்டனைக்கு உள்ளாவார்.

பெண் ஜாதகத்தில், மாந்திக்கு 3-ல் சனி அமர்ந்து ஜென்ம நட்சத்திரம் ரோகிணி என்றால், ஜாதகிக்கு இல்லற வாழ்க்கையில் சிறிதும் நிம்மதியிராது. வாழ்க்கையில் பெரும் பகுதி போராட்டமாக இருக்கும். பிறந்த வீட்டிற்கும் புகுந்த வீட்டிற்கும் துரதிர்ஷ்டமா கும். தோஷம் மிகுதி.

மாந்திக்கு 5-ல் ராகு அல்லது சனி இருந்தால், ஜாதகர் ஆண்மையில்லாதவரா வார். பெண் ஜாதகம் என்றால் பிரசவத்தில் துன்பம் ஏற்படும். பெண் ஜாதகத்தில் செவ்வாய், சூரியனோடு மாந்தி சேர்க்கை பெற்றால் நெறியற்ற வாழ்க்கை வாழ்வாள்.

லக்னத்திற்கு 5, 9-ஆம் இடங்கள் கன்னி, மிதுனம், மகரம், கும்பம் போன்ற ராசிகளில் ஒன்றாக அமைந்து, சனி- மாந்தி சேர்க்கையோ, பார்வையோ 5, 9-ஆம் இடங்களுக்கு ஏற்பட்டால் ஜாதகி மலடியாவாள்.

லக்னத்திற்கு 3-ல் சனி உச்சம் பெற்று மாந்தியின் சேர்க்கை பெற்று சுக்கிரன் பார்த்தால், ஜாதகர் பெண் பித்தனாவான். பெண் நோயால் அவதியுறுவான்.

லக்னத்திற்கு 4-ல் கேதுவும் மாந்தியும் சேர்க்கை பெற்றால் மிகுந்த துரதிர்ஷ்ட மாகும். வாழ்க்கையில் எல்லா விஷயங்களி லும் அதிருப்தி காணப்படும். ஒரு இடத்திலும் நிலையாக வாழ முடியாது. நாடோடி போல்

வாழ்க்கை அமையும். தாய்க்கும் தோஷமாகும்.

பெண்ணின் ஜாதகத்தில் சுக்கிரனுக்கு 4-ல் மாந்தி நின்றால் புத்திரதோஷம் மிகுதி. கணவன் நோயாü ஆவான். 4-ல் உள்ள மாந்தியுடன் சனி சேர்க்கை பெற்றாலோ பார்த்தாலோ ஜாதகி மிகுந்த துரதிர்ஷ்டசா-. லக்னத்திற்கு 2, 8-ல் சர்ப்ப கிரகங்கள் அமையப் பெற்று மாந்தி சேர்க்கை பெற்றால், நாக தோஷத்தால் மாங்கல்ய தோஷமாகும்.

## குளிகை காலம் பலன்கள்

மாந்திக்கு குளிகன் என்ற சிறப்பு பெயர் உண்டு. பொதுவாக குளிகன் காலம் நல்ல காலம்- சுபகாலம் என நூல்கüல் கூறப்பட்டுள்ளது. சனியின் மைந்தனாகிய மாந்தி ஒவ்வொரு நாலும் தான் ஆட்சி செய்யும் குளிகன் காலத்தில் செய்யப்படும் சுபகாரியங்களை- மகிழ்ச்சிக்குரிய காரியங்களை மேன்மேலும் பன்மடங்கு அபிவிருத்தி செய்து நம்மை மகிழச் செய்வார்.

அதேபோல் நமக்குத் துன்பம் தரக்கூடியக் காரியங்களை குளிகன் காலத்தில் செய்தால் அவை பன்மடங்கு அபிவிருத்தியாகி துன்பங்கள் எல்லையில்லாமல் காணப்படும்.

பொதுவாக ஒரு மனிதர் இறந்துவிட்டால் பிரேதத்தை மயானத்திற்கு எடுத்துச் செல்ல குளிகன் காலம் தவிர்த்துதான் எடுத்துச் செல்வார்கள் என்பது அனைவரும் அறிய வேண்டும்

**************************************************************************************************************

# நவகிரகங்கள்- புதன்

புதன் வித்யாகாரன் என்று அழைக்கப்படுகிறார். இது சூரியனை சுற்றி வருகிறது சூரியனுக்கு சுமார் 1,60,00,000 KM அப்பால் இருந்து சுற்றி வருகிறது. இது தன்னைத்தானே 24 மணி நேரத்தில் சுற்றி வருகிறது. 88 நாட்களில் சூரியனை சுற்றி வருகிறது. புதன் கல்வி,மாமன், அத்தை,மைத்துனர்களை பற்றி அறிந்து கொள்ள புதன் உதவி செய்பவர். புதன் ஒரு அலிக்கிரகம் எனப்படும். கல்வி,வித்தை,மாமன்,அத்தை,மைத்துனர்,நண்பர்கள்,கணிதம்,கபடம்,கதைகள், சிற்பம்,சித்திரம்,நுண்கலைகள்,நடிப்பு,சாஸ்திர ஞானம் ஆகியவற்றிக்கு காரணம் ஆகிறார். சுபகிரக வரிசையில் புதனும் சேரும். ஆனால் புதனோடு பாவகிரகங்கள் சேர்ந்தால் பாவி ஆகிவிடும். புதன் அலிக்கிரகம். எந்த கிரகத்தோடு சேர்கிறதோ அந்த கிரகத்தின் தன்மை பிரதிபல்க்கும். கேட்டை, ஆயில்யம், ரேவதி இந்த மூன்று நட்சத்திரங்களின் நாயகன். முதுன ராசிக்கும், கன்னி ராசிக்கும் அதிபதி புதனே. புதன் ஆட்சி பெற்று அல்லது உச்சம் பெற்று சூரியனோடு சேர்ந்தால் புதஆதித்ய யோகம் உண்டாகும். இதனால் கல்வி மூலம் பெரிய அந்தஸ்த்தை ஏற்படுத்தும். புதன் வித்யாகாரகன். கல்வி வித்தை, தொழில் இவைகளின் மூலம் சிறப்பை ஏற்படுத்துபவன். நாடகம் மற்றும் நடன அமைப்புகளுக்கு புதனுடைய பலமே காரணம். நகைச்சுவை ததும்பும் நயமான பேச்சு, பளிச்சென்ற உச்சரிப்பு, புத்தக வெளியீடு இவைகளுக்கு புதபலமே காரணம்.

புதன் வாக்குஸ்தானத்தில்- 2 ஆம் இடத்தில் ஆட்சி உச்சம் பெற்றால் சிறந்த பேச்சுதன்மை இருக்கும். வித்யா காரகன் புதன். கணிதம், லாஜிக், வைத்தியம், ஜோதிடம் ஆகிய அனைத்திற்கும் நாயகன் புதனே. நாடகம், நடனம், புத்தக பிரசுரம் ஆகியவற்றிற்கு புதனின் பலமே வேண்டும். உடலில் நரம்பு இவன். நரம்பு மண்டலத்தின் ஆதாரமும் இவனே. வடகிழக்கு புதனுக்கு உரிய திசை. புதன் ஜாதகத்தில் வலுப்பெற்றிருந்தால் ஜோதிடக்கலை சித்திக்கும். புதனால் பிரதிஷ்டை செய்யப்பட்ட லிங்கம் காசியில் உள்ளது. திருவெண்காடு புதனுக்குரிய தலம். விஷ்ணு இவருக்கு அதி தேவதை. நாராயணன் பிரத்யதி தேவதை. மரகதம் புதனுக்கு உகந்த ரத்தினம். உடலில் நரம்பு சம்பந்தமான அனைத்து

நோய்களுக்கும் திருவெண்காடு சென்று புதனை வழிபட நிவர்த்தி பெறலாம். இங்கே இவருக்கும் பதினெழு தீபம் ஏற்றி, பதினேழு முறை வலம் வந்து புத பகவானை வழிபட்டால் திருமண தோஷம், புத்திர தோஷம் முதலியன நீங்கும். இவருக்கு பச்சை வஸ்திரம் அணிவித்து வெண்காந்தள் மலர் சூட்டி, பாசிப்பருப்பு பொடியில் காரம் சேர்த்து நிவேதனம் செய்யவேண்டும்.

அருள்மிகு சுவேதாரண்யேஸ்வரர் திருக்கோயில்

மூலவர்:சுவேதாரண்ய சுவாமி
உற்சவர்:
பிரமவித்யாநாயகி அம்மன்/தாயார்: -
தல விருட்சம்: வடவால், கொன்றை, வில்வம்
தீர்த்தம்:முக்குளம் (சூரிய, சந்திர, அக்கினி தீர்த்தங்கள்)
ஆகமம்/பூஜை :-
பழமை:1000-2000 வருடங்களுக்கு முன்
புராண பெயர்:ஆதிசிதம்பரம், திருவெண்காடு
ஊர்:திருவெண்காடு
மாவட்டம்: நாகப்பட்டினம்
மாநிலம்: தமிழ்நாடு
பாடியவர்கள்: அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்க வாசகர் வாரப்பதிகம்
கண்காட்டு நுதலானும் கனல்காட்டும் கையானும் பெண்காட்டும் உருவானும் பிறைகாட்டும் சடையானும் பண்காட்டும் இசையானும் பயிர்காட்டும் புயலானும் வெண்காட்டில் உறைவானும் விடைகாட்டும் கொடியானே. -திருஞானசம்பந்தர் தேவாரப்பாடல் பெற்ற காவிரி வடகரைத்தலங்களில் இது 11வது தலம்.

திருவிழா:மாசி மாதம் - இந்திரப் பெருவிழா - 13 நாட்கள் திருவிழா - பிரம்மோற்சவம் - இந்திரனால் நடத்தப்படும் விழா என்ற ஐதீகம் பெற்ற சிறப்புடையது இந்த திருவிழா. காவிரிப்பூம்பட்டினத்தில்இந்திர விழா நடைபெற்றதைச் சிலப்பதிகாரத்தில் கூறப்பட்டிருக்கிறது என்பது குறிப்பிடத்தக்கது.
இத்தலத்தில் இத்திருவிழா மிகவும் சிறப்புற நடக்கும் என்பது குறிப்பிடத்தக்கது.
ஆயிரக்கணக்கான பக்தர்கள் இத்திருவிழாவில் கலந்து கொள்வர். சித்திரை திருவோணத்தில் நடராஜர் அபிசேகமும், வைகாசியில் வெள்ளை

யானைக்கு சாப விமோசனம் அளித்தலும், ஆனி உத்திரத்தில் நடராஜருக்கு அபிசேகமும், ஆடியில் பட்டினத்தாருக்குச் சிவதீட்சை அளித்தலும், அம்பாளுக்கு ஆடிபூரம் பத்து நாள் உற்சமும், ஆவணியில் நடராஜருக்கு அபிசேகமும், கோகுலாஷ்டமி , விநாயகர் சதுர்த்தி விழாவும், புரட்டாசியில் தேவேந்திர பூஜையும், நவராத்தி விழாவும், ஐப்பசியில் கந்த சஷ்டி விழாவும், கார்த்திகையில் மூன்றாவது ஞாயிறு அன்று அகோர மூர்த்திக்கு மகாருத்ரா அபிசேகமும், கார்த்திகை தீப விழாவும், மார்கழி திருவாதிரையில் நடராஜர் தரிசனமும், தை மாதத்தில் சங்கராந்தி விழாவும் இத்தலத்தில் சிறப்புற நடைபெறுகின்றன.
பங்குனி தோறும் அகோர மூர்த்திக்கு லட்சார்ச்சானை வைபவம் சிறக்க நடைபெறும். மாதாந்திர பிரதோச நாட்களின் போது பக்தர்கள் கூட்டம் கோயிலில் பெருமளவில் இருக்கும். வருடத்தின் சிறப்பு நாட்களான தீபாவளி, பொங்கல், தமிழ், ஆங்கில புத்தாண்டு தினங்களின்போதும் கோயிலில் சிறப்பு அபிசேக ஆராதனைகளும் நடக்கும்.

தல சிறப்பு:இங்கு சிவன் சுயம்பு மூர்த்தியாக அருள்பாலிக்கிறார் நவகிரகதலத்தில் இது புதன் தலமாகும். காசியில் விஷ்ணு பாதம் உள்ளது போல இங்கு ருத்ர பாதம் வடவால் விருட்சத்தின் கீழ் உள்ளது. இவர் திருவெண்காடர், திருவெண்காட்டு தேவர், திருவெண்காடையார், திருவெண்காடுடைய நாயனார், திருவெண்காட்டு பெருமான் என பெயரும் உண்டு. காலை 6 மணி முதல் 12 மணி வரை, மாலை 5.30 மணி முதல் இரவு 9.30 மணி வரை திறந்திருக்கும்.

அருள்மிகு சுவேதாரண்ய சுவாமி திருக்கோயில், திருவெண்காடு - 609 114, நாகப்பட்டினம் மாவட்டம்.
ராஜகோபுரம் ஐந்து நிலைகளுடன் காட்சியளிக்கிறது. கிழக்கு வாயிலில் பக்கத்தில் தேவஸ்தானம் நடத்தும் மெய்கண்டார் பாடசாலையுள்ளது. உள் இடம் பரந்த இடப்பரப்பு. உள்நுழைந்ததும் இடப்பால் முக்குளத்துள் ஒன்றான அக்னி தீர்த்தம் உள்ளது. கரையில் விநாயகர், மெய்கண்டார் சந்நிதிகள் உள்ளன. பிராகாரத்தில் பக்கத்தில் அடுத்த திருக்குளமாகிய சூரியதீர்த்தமுள்ளது. கரையில் சூரியதீர்த்தலிங்க சந்நிதி உள்ளது. சுப்பிரமணியர் மண்டபம் ஆறுமுகர் சந்நிதி ஆகியவற்றை அடுத்து அம்பாள் சந்நிதி தனிக்கோயிலாகவுள்ளது. இத்தல விநாயகர் பெரியவாரணர் என்ற திருநாமத்துடன் அருள்பாலிக்கிறார்.

பிரார்த்தனை:இங்கு கல்வி, தொழிலுக்கு அதிபதியான புதனுக்கு தனி ஆலயம் உள்ளது. கல்வி மேன்மையடைய, தொழில் சிறக்க, பிணி நீங்க, பிள்ளைப்பேறு பெற புதனை வழிபட்டால் மேன்மையடைவது உறுதி. இத்தலத்தில் உள்ள வடவால் ஆல விருட்சத்தின் அடியில் ருத்ர பாதம் உள்ளது.21 தலைமுறையில் வருகின்ற பிதுர் சாபங்கள் நீங்கும். இதன் பெயர் ருத்ர கயா. காசியில் இருப்பது விஷ்ணு கயா. பூர்வ ஜென்ம பாவங்கள் நீங்கும்.குழந்தைப் பேறு , திருமண வரம் ஆகியவை இத்தலத்தில் கைகூடுகிறது. மேலும் நரம்பு சம்பந்தமான வியாதிகள் குணமாகும்,கல்வி மேன்மை, நா வன்மை ஆகியவை கிடைக்கும்.பேய் ,பிசாசு தொல்லைகள் நீங்கும். இத்தலத்தில் வழிபடுவோர்களுக்கு துயரம் நீங்கி மனஅமைதி கிடைக்கும்.மேலும் வேலை வாய்ப்பு , தொழில் விருத்தி ,உத்தியோக உயர்வு ஆகியவற்றுக்காகவும் இங்கு பிரார்த்தனை செய்தால் சுவாமி பக்தர்களது வேண்டுதல்களை நிச்சயம் நிறைவேற்றி கொடுப்பார்.

நேர்த்திக்கடன்: நவகிரக தலங்களில் இது புதனுக்குரிய தலம் ஆகும். புதன் பகவானுக்கு பச்சை வஸ்திரம் அணிவித்து வெண்காந்தள் மலர் சூட்டி,பாசிப்பருப்புப் பொடியில் காரம் சேர்த்து நிவேதனம் செய்ய வேண்டும். உடலில் நரம்பு சம்பந்தமான அனைத்து நோய்களுக்கும் புதன் பகவானை வழிபட வேண்டும்.திருமண தோசம், புத்திர தோசம் உள்ளவர்கள் புதன் பகவானுக்கு பதினேழு தீபம் ஏற்றி பதினேழு முறை வலம் வந்து வழிபடுகிறார்கள். சுவாமிக்கு மா , மஞ்சள் பொடி, திரவிய பொடி, தைலம், பால், தயிர், விபூதி ,பன்னீர், இளநீர், பஞ்சாமிர்தம், எலுமிச்சை, தேன், சந்தனம் ஆகியவற்றால் அபிசேகம் செய்யலாம். மேலும்கோயிலுக்கு வரும் பக்தர்களுக்கு அன்னதானம் படைத்தல் ஆகிவற்றை செய்யலாம். சுவாமிக்கு நைவேத்தியம் செய்து பக்தர்களுக்கு விநியோகிக்கலாம். தவிர வழக்கமான அபிசேக ஆராதனைகளும் செய்யலாம்.வசதி படைத்தோர் கோயில் திருப்பணிக்கு பொருளுதவி செய்யலாம்.

தலபெருமை:காசிக்கு சமமான தலங்கள் ஆறு. அதில் ஒன்று திருவெண்காடு.
இத்தலத்தில் மூர்த்தி, தீர்த்தம், தலவிருட்சம் எல்லாமே மூன்று.
நவக்கிரகங்களில் இது புதனுக்குரிய ஸ்தலமாகும்.
51 சக்தி பீடங்களில் இதுவும் ஒன்று. சிவனின் 64 மூர்த்தங்களுள் ஒன்றான அகோர மூர்த்தியை இத்தலத்தில் மட்டுமே காணலாம்.
இவர் நவதாண்டவம் புரிந்தார். எனவே, இதை ஆதி சிதம்பரம் என்பார்கள்.
இங்கு நடராஜ சபையும் ரகசியமும் உண்டு. சிதம்பரத்தை போல

நடராஜருக்கு அருகில் பெருமாளுக்கு தனி சன்னதி உண்டு.
இந்திரன், ஐராவதம், விஷ்ணு, சூரியன், சந்திரன், அக்னி ஆகியோர் வழிபட்டுள்ளார்கள்.
பட்டினத்தார் சிவதீட்சை பெற்றதும், மெய்கண்டார் அவதரித்ததும் இங்குதான்.

சுவேதாரண்யர் (திருவெண்காடர்) :திருவெண்காடர், திருவெண்காட்டு தேவர், திருவெண்காடையார், திருவெண்காடுடைய நாயனார், திருவெண்காட்டு பெருமான் ஆகிய பெயர்களும் இவருக்கு உண்டு. இவரே இத்தலத்தின் நாயகர். லிங்க வடிவில் சுயம்பு மூர்த்தியாக எழுந்தருளியுள்ளார்.

நடராஜர் : இங்குள்ள நடராஜரை ஆடவல்லான் என்று கல்வெட்டு கூறுகிறது. இத்தலம் ஆதிசிதம்பரம் என்றே அழைக்கப்படுகிறது. இங்கும் தில்லை சிதம்பரம் போன்றே நடராஜர் சபை அமைந்து உள்ளது.ஸ்படிக லிங்கமும், ரகசியமும் இங்கும் உள்ளது. தினந்தோறும் ஸ்படிக லிங்கத்துக்கு நான்கு அபிசேகங்களும் நடராஜ பெருமானுக்கு ஆண்டுக்கு ஆறு அபிசேகங்களும் நடைபெறுகிறது.

அகோர மூர்த்தி : ஆலயத்தின் தனிச்சிறப்புக்கு உரியவர் அகோர மூர்த்தி. இவர் மருத்துவாசுரனை அடக்குவதற்காக சிவனின் ஈசான்ய முகத்திலிருந்து தோன்றியவர். இவரது வீரக் கோலம் இங்கு சிறப்பாக இருக்கிறது. சிவபெருமான் தன் பக்தர்கள் பொருட்டு 64 வித உருவங்களில் காட்சியளித்து வருகிறார்.இது 43 வது உருவம் ஆகும்.இறைவனின் வீரச் செறிவை காட்டும் கோலம்.பெயரில் சற்று கடுமை இருந்தாலும் அருள் நிலையில் இந்த மூர்த்தி உள்ளார். மூலவரைப் போலவே உற்சவரும், நடப்பவர் ஒருவர் இடது காலை முன்வைத்து எப்படி வலது காலைப் பெயர்த்து அடியெடுத்து வைக்க முனைவாரோ அதே போல் பெருமான் தன் நடையழகைக் காட்டும் விதமாக உள்ளார் என்பது சிறப்பு. அட்ட வீரட்டதலங்களில் இத்தலம் சேராவிட்டாலும் சிவபெருமானின் வீரச்செயல் நிகழ்ந்த தலம் இது.இந்த அகோர மூர்த்தியை திருவெண்காடு தலத்தை தவிர்த்து வேறு எங்கும் கண்டு விட முடியாது.

பிரம்ம வித்யாம்பாள் : இத்தலத்தின் தன்னிகரில்லா தலைவி இவள்.திருவெண்காடரின் சக்தி வடிவம் இவள். மாதங்க முனிவருக்கு மகளாகத் தோன்றி மாதங்கி என்ற பெயருடன் சுவேதாரண்யரை நோக்கி தவம் இருந்து தன் கணவனாக பெற்றார். பிரம்மனுக்கு வித்தை கற்பித்ததால் பிரம்ம வித்தயாம்பிகை யானாள். கல்வியில் சிறந்து விளங்க இவளை வழிபாடு செய்வது சிறப்பு. நான்கு திருக்கரங்களில் இடது

மேற்கரத்தில் தாமரைப்பூ(செல்வச் செழிப்பு) வலது மேற்கரத்தில் அக்கமாலை(யோகம்) அணி செய்வதைக் காணலாம்.கீழ்க்கரம் அபய கரம்.இடது கீழ்கரம் திருவடிகளின் பெருமையை பேசுவதாகும்.பணிந்தார் எவரும் தெய்வம் போல உயரலாம் என்பதாகும்.பெருமை வாய்ந்த சக்தி பீடங்களுள் இதுவும் ஒன்று.

காளிதேவி : சுவேத வனத்தில் எழுந்தருளிய மாசக்தியாதலால் சுவேதன காளி என்று அழைக்கப் படுகிறாள். எட்டு கரங்கள், பாசம், சக்கரம், வாள், உடுக்கை, கேடயம், கபாலம் ஆகிய படைக் கலன்களை தாங்கியுள்ளார். பாவத்தில் எடுப்பும் மிடுக்கும் கொப்பளிக்கிறது. உடலின் சாய்வுக்கு ஏற்ப வலக்காலைப் பீடத்தின் மீது உயர்த்தி வைத்துக் கொண்டு இடக்காலைத் தொங்க விட்டிருக்கிறார். பக்தியோடு கலையை ஆராதிப்பவர்களுக்கு இவள் அருள் புரிகிறாள்.

துர்க்கை தேவி : துர்க்கையின் உருவைக் கண்ட மாத்திரத்தில் மேற்கண்டு அடிவைக்க மனம் வராது. மகிஷனை அழித்த இந்த மாதேவி இப்படியும் கூட அழகினளாக இருப்பாளா என்ற ஆச்சர்யம் வரும். இவள் தன் எட்டு கரங்களில் சங்கு, சக்கரம், வில், அம்பு உடையவளாக காட்சி தருகிறாள்.

**புதன் பகவான்** : வித்தயாகரகன் எனப்படும் புதன் பகவான் அன்னை வித்யாம்பிகையின் அரசாட்சிக்குட்பட்டவர் போன்றும் தாயின் அரவணைப்போடும் கூடி வீற்றிருக்கும் சேய் போன்றும் அனையர் கோயிலுக்கு இடது பாகத்தில் தன் கோயிலை அமைத்துக் கொண்டு அருள் பாலிக்கிறார். இத்தலத்தில் திருவெண்காடரை புதன் தன் அலி தோசம் நீங்கி நவகோள்களில் ஒருவரானார் என்பது புராண வரலாறு.இவர் செய்த மாதவத்தின் பயனாகவே ரிக் வேதத்தின் ஐந்தாவது காண்டத்துக்கு அதிபதி ஆனார்.திருவெண்காடு நவகிரக தலங்களில் மிகவும் புகழும் சிறப்பும் பெறக் காரணமாக அமைந்தவர்.

பிள்ளையிடுக்கி அம்மன்:திருஞான சம்பந்தர் இத்தலத்தின் வட எல்லைக்கு வந்த போது அவருக்கு ஊரெல்லாம் சிவலோகமாகவும், மணலெல்லாம் சிவலிங்கமாகவும் தோன்றின. எனவே இத்தலத்தில் காலை வைக்க பயந்து "அம்மா' என்றழைத்தார். இவரது குரலைக்கேட்ட பெரியநாயகி இவரை தன் இடுப்பில் தூக்கி கொண்டு கோயிலுக்குள் வந்தார். சம்பந்தரை இடுப்பில் தாங்கிய வடிவில் பெரியநாயகியின் சிலை அம்மன் கோயிலின் பிரகாரத்தில் உள்ளது. புதனுக்கு தனி சன்னதி: நவக்கிரகங்களில் புதன் பகவான், கல்வி, அறிவு, பேச்சுத்திறமை, இசை, ஜோதிடம், கணிதம், சிற்பம்,

மருத்துவம், மொழிகளில் புலமை ஆகியவற்றை தர வல்லவர். இவருக்கு இத்தலத்தில் தனி சன்னதி உள்ளது. புதனின் தந்தையான சந்திரனின் சன்னதியும், சந்திர புஷ்கரணி தீர்த்தமும், புதன் சன்னதிக்கு எதிரில் அமைந்துள்ளது. ஜாதகத்தில் புதன் சரியாக அமையாவிட்டால் புத்திரபாக்கியம் கிடைக்காது. அத்துடன் அறிவுக்குறைபாடும், நரம்புத்தளர்ச்சியும் ஏற்படும். இப்படி குறைபாடுகள் உள்ளவர்கள் இங்கு வந்து சந்திர புஷ்கரணி தீர்த்தத்தில் நீராடி புதன் பகவானை வழிபட்டால் தோஷ நிவர்த்தி பெறலாம். இசைக்கு அதிபதியான புதனை இசைக்கலைஞர்களும், திரைப்படக்கலைஞர்களும் வழிபட்டு பயன் பெறுகின்றனர். நவகிரகங்களில் இது புதன் சிவபெருமானை பூஜித்து பேறு பெற்ற தலம். மிகப்புகழ்பெற்ற பிரார்த்தனை தலம் இது என்பது குறிப்பிடத்தக்கது. இத்தலம் காசிக்கு இணையான ஆறு தலங்களில் முதன்மையானது.காசியில் உள்ள 64 ஸ்நானக் கட்டடங்களுக்கு இணையான மணிகர்ணிகை ஆறு இங்குள்ளது. இத்தலத்தில் மூர்த்திகள்(திருவெண்காடர், அகோரமூர்த்தி, நடராஜர்), சக்தி(துர்க்கை, காளி, பிரம்மவித்யாம்பாள்),தீர்த்தம் (அக்னி தீர்த்தம்,சூர்ய தீர்த்தம்,சந்திர தீர்த்தம்) தலவிருட்சம்(வடவால், வில்வம், கொன்றை ) என்று மும்மூன்றாக அமையப்பெற்ற சிறப்பு உள்ளது. காசியில் விஷ்ணு பாதம் உள்ளது போல இங்கு ருத்ர பாதம் வடவால் விருட்சத்தின் கீழ் உள்ளது.
அட்டவீரட்டத்தலம் போன்றே இங்கும் சிவபெருமான் மருத்துவாசுரனை சம்காரம் செய்து வீரச்செயல் புரிந்துள்ளார். ஆதி சிதம்பரம் என்ற பெயரும் பெருமையும் பெற்ற தலம் இது. சப்த விடத்தலங்களில் இத்தலமும் ஒன்று. வால்மீகி ராமாயணத்தில் இத்தலம் பற்றி குறிப்பிடப் பட்டுள்ளது.எனவே யுகம் பல கண்ட கோயில் இது. சிலப்பதிகாரத்திலும் இத்தலம் பற்றி கூறப்பட்டுள்ளது. எனவே சமண வைணவ காவியங்களில் கூறப்பட்டுள்ள சைவ சமயக் கோயில் இது என்ற பெருமை பெற்றது. பட்டினத்தார் இத்தலத்தில் வந்து திருவெண்காட்டு நாதரே அவருக்கு குருநாதராக இருந்து சிவதீட்சை தந்த தலம். இத்திருவிழா, இத்தலத்தில் இப்போதும் நடைபெறுகிறது. பட்டினத்தாருக்கு திருவெண்காடர் என்ற பெயர் பெற காரணமாக இருந்து கோயில் இது.

**தல வரலாறு**:பிரம்மனிடம் பெற்ற வரத்தால் மருத்துவன் என்னும் அசுரன் தேவர்களுக்கு துன்பத்தை விளைவித்தான். சிவபெருமான் அருளியபடி தேவர்கள் வேற்றுருவில் திருவெண் காட்டில் வாழ்ந்து வந்தனர். அசுரன் திருவெண்காட்டிற்கு வந்தும் போர் செய்தான்.அசுரன் சிவனை நோக்கி

தவம் இருந்து சூலாயுதம் பெற்று ரிடப தேவரை சூலத்தால் தாக்கி காயப்படுத்தினான்.ரிடப தேவர் சிவனிடம் முறையிட சிவன் கோபம் கொண்டார். அப்பொழுது அவருடைய ஐந்து முகங்களில் ஒன்றான ஈசான்ய முகத்தினின்று அகோர மூர்த்தி தோன்றினார்.இந்த அகோர உருவை கண்ட மாத்திரத் திலேயே அசுரன் சிவனிடம் சரணாகதி அடைந்து வணங்கினான். சரணடைந்த அசுரன் அகோர மூர்த்தியின் காலடியிலும் காயம் பட்ட ரிடப தேவர் சுவேதாரண்யவரர் சுவாமி நிறுத்த மண்டபத்திலும் இன்றும்காணலாம். தென்னிந்தியாவின் மிகப் புகழ் பெற்ற சிறப்பு வாய்ந்த பிரார்த்தனை தலம் இது.

அதிசயத்தின் அடிப்படையில்: இங்கு சிவன் சுயம்பு மூர்த்தியாக அருள்பாலிக்கிறார்.
நிறம் - பச்சை
வாகனம்- குதிரை
தானியம்-பச்சைப் பயறு
ஆட்சி- மிதுனம்.கன்னி
உச்சம்-கன்னி
நீசம்-மீனம்
திசைகாலம்- 17 ஆண்டுகள்
பகை-சந்திரன்

**புதனை பற்றிய பாடம்** இவர் தான் சோதிட சாஸ்திரத்திற்க்கு காரகம் வகிப்பவர். இவர்தான் புத்திகாரகன் என்று அழைக்கப்படுகிறார். சோதிட சாஸ்திரத்திற்க்கு நினைவாற்றல் மிக முக்கியம் இல்லை என்றால் சோதிடம் படிக்க இயலாது. அனைத்தும் நினைவில் இருந்தால் தான் ஜாதகம் பார்க்கும் போது அனைத்து பலன்களும் வந்து அருவியாக கொட்டும். இல்லை என்றால் வாடிக்கையாளாரிடம் பல்பு வாங்கவேண்டியது தான். புதன் வேறு எதற்கு எல்லாம் காரகன் ஆகிறார் என்று பார்க்கலாம். நல்ல புத்தி கூர்மைக்கு அதிபதி இவர் தான். அதனால் தான் இவரை கல்விகாரகன் என்று அழைக்கிறோம். ஜாதகத்தில் நல்ல முறையில் இருந்தால் தான் படிக்க முடியும். சில பேருக்கு புதன் நல்ல அமையும் சிறந்த அறிவாளியாக இருப்பார்கள். வியாபாரத்திற்க்கும் இவர் தான் காரகம் வகிக்கிறார். சிறந்த முறையில் ஒருவர் வியாபாரம் செய்வதற்க்கு புதன் தான் காரணம். அனைத்து தொடர்புகள் இருந்தால் தான் ஒருவர் வியாபாரத்தில் கொடிகட்டி முடியும். புதன் நல்ல முறையில்

இருக்கும் ஒருவர் அனைத்து தொடர்புகளும் கிடைக்கும். நல்ல பேச்சுக்கும் இவர் தான் காரகம் வகிப்பவர். புதன் நல்ல நிலையில் இருக்கும் போது பார்த்தால் திட்டமிடுதல் அனைத்து பேருக்கும் சிறந்த முறையில் நன்மை பயக்கும் விதத்தில் இருக்கும். நல்ல வழியில் திட்டமிடுதல் புதன் நல்ல நிலையில் இருக்கும் போது இந்த மாதிரி நடக்கும். உடலில் நல்ல தோல் நிலைக்கும் இவர் தான் காரகம் வகிக்கிறார். புதன் கெட்டால் என்ன நடக்கும். புத்தி கெட்டுவிடும் படிப்பது எதுவும் நினைவில் இருக்காது இரண்டாம் வீட்டில் கெட்டால் பேச்சு ஒழுங்காக வராது திக்கி திக்கி பேசுவார்கள் அல்லது பேச்சு சுத்தமாக வராது. அது புதன் உடன் சேரும் கிரகத்தைப் பொறுத்தது. புதன் கெட்டால் திட்டமிடுதல் அனைத்தும் வில்லங்கமாகதான் இருக்கும். புதனுடன் சேரும் கெட்ட கிரகங்களை பொருத்து வில்லங்கம் அமையும். ஞாபகம் மறதி ஏற்படும். தொழுநோய் தாக்கும்

**புதன் ஒவ்வொரு வீட்டிலும் இருந்தால் என்ன நடக்கும்**

புதன் 1 ஆம் வீட்டில் இருந்தால் அதாவது லக்கினத்தில் இருந்தால் நல்ல புத்தி உடன் இருப்பார்கள் நல்ல பேச்சு இருக்கும் பேச்சில் இனிமை இருக்கும். நல்ல உலக விஷயங்களில் சிறந்த அறிவு இருக்கும். நல்ல சுறுசுறுப்பாகவும் நல்ல தோற்றப்பொழிவுடன் இருப்பார்கள். லக்கினத்தில் இருந்து ஏழாம் வீட்டைப் பார்ப்பதால் மனைவியுடன் பிடிப்புடன் இருப்பார்கள்.

புதன் 2 ஆம் வீட்டில் இருந்தால் பேச்சு நன்றாக இருக்கும் இவரின் பேச்சுக்கு மதிப்பு இருக்கும். தந்தையிடம் இவருக்கு மதிப்பு இருக்கும் குடும்பம் சிறந்து விளங்கும். செல்வ வளம் நன்றாக இருக்கும்.

புதன் 3 ஆம் வீட்டில் இருந்தால் இளைய சகோதர சகோதரிகள் நிறைய பேர் இருப்பார்கள். அவர்களில் இரட்டை பிறப்பு உள்ளவர்களாக இருக்க வாய்ப்பு உண்டு. நல்ல ஆயுள் இருக்கும். வியாபார நுட்பம் ஏற்படும். புதன் மிதுனம் ராசிக்கும் கன்னி ராசிக்கும் அதிபதி. புதன் ஒரு இரட்டை கிரகம் இந்த ராசியில் பிறந்தவர்களைப் பற்றி பார்த்தீர்கள் ஆனால் இவர்கள் உள் ஒன்று வைத்து வெளியில் ஒரு மாதிரி பேசுவார்கள். இரட்டை வேஷம் மிகுதியாக இருக்கும். நீங்கள் இவர்களிடம் போய் எதனை கேட்டாலும் உங்களிடம் ஒன்று பேசிவிட்டு உங்கள் நண்பர்களிடம் உங்களைப் பற்றி கேட்டு தெரிந்துக்கொள்வார்கள். புதனின் இயல்பு இது. மிதுனம் கன்னி

ராசிகாரர்கள் காமத்தில் மிகுதியான ஈடுபாடு உள்ளவர்களாக இருப்பார்கள். அதனால் இவர்களுக்கு குழந்தைகள் பிறப்பது தாமதமாகிறது. முறையற்ற தொடர்பு கர்மத்தை விலை கொடுத்து வாங்குவது போல் தான் இதனை இவர்கள் தவிர்க்க வேண்டும். நான் பார்த்த இந்த ராசிகாரர்களின் ஜாதகங்களில் மிகுதியான நபர்களின் மகன் மற்றும் மகளுக்கு திருமணம் நடைபெறுவது தாமதமாகிறது.

புதன் 4 ஆம் வீட்டில் இருந்தால் நல்ல கல்வியாற்றலைத் தருவார். தாய்வழி மாமன் வகையில் உதவி கிடைக்கும். வாகனம் வகையில் நல்ல வருமானம் வரும். ஒரு வாகனம் வாங்கினால் உடனே அடுத்த வாகனம் வாங்குவார். நான்காம் வீடு வீட்டை குறிப்பதால் வீடு வாங்கும் யோகம் புதனால் கிடைக்கும். ஒரு வீட்டை வாங்க ஏற்பாடு செய்தால் இரண்டு வீடு வாங்குவார்கள். நல்ல நண்பர்கள் கிடைப்பார்கள்.

புதன் 5 ஆம் வீட்டில் இருந்தால் நல்ல கவிதை எழுதுவார். நல்ல வேடிக்கையாக பேசுவார். அரசாங்கம் மூலம் நல்ல பதவிகள் வரும். பெரியவர்கள் மூலம் நல்ல பதவி, மரியாதை கிடைக்கும். நல்ல தந்திர வேலைகள் தெரியும்.

புதன் 6 ஆம் வீட்டில் இருந்தால் மாமன் வழியில் ஒருவர் மிகபிரபலமாக இருப்பர். மாமனின் உதவி கிடைக்கும். ஆறாம் வீடு சத்ரு ஸ்தானம் என்று அழைக்கப்படுவதால் விரோதிகள் வராமல் இருக்க வைப்பார். ஆனால் சச்சரவு இருக்கும். பேச்சு சில நேரங்களில் கலவரத்தை உண்டாக்குவது போல் இருக்கும்.

புதன் 7 ஆம் வீட்டில் இருந்தால் நல்ல அழகான மனைவி அமையும். அவர் மூலம் வருமானம் வரும். வியாபாரத்தில் நல்ல நட்பு கிடைக்கும். கலைகளில் ஆர்வம் இருக்கும். நல்ல ஆயுள் கிடைக்கும். மாமன் மகள் கூட மனைவியாக வர வாய்ப்பு இருக்கிறது. அல்லது திருமண விஷயங்களில் மாமன் உதவி கொண்டு திருமணம் வரும். மாமனே பெண் பார்க்கலாம். அந்த வரிசையில் புதன் குறிக்கும் சாதி வைசியர். என்னடா கிரகங்களிலும் சாதியா என்று கேட்கலாம். ஆமாம் கிரகங்களிலும் அந்த அந்த கிரகம் ஒவ்வொரு சாதியை குறிக்கிறது. இது எதனால் என்றால் பிரசன்ன சாதகம் பார்க்கும் போது இது பயன்படும். ஒரு பொருள் திருடு போகும் போது களவு போன பொருளை திருடியவன் இந்த சாதியை சேர்ந்தவன் என்று சொல்லுவதற்க்கு பயன்படும்.

புதன் 8 ஆம் வீட்டில் இருந்தால் கல்வியில் தடை ஏற்படும். மாமன் இருக்கமாட்டார் அப்படியே மாமன் இருந்தாலும் அவர் மூலம் எந்த பயனும் இருக்காது. புதன் நல்ல முறையில் இருந்தால் உயில் மூலம் சொத்து வரும்.

புதன் 9 ஆம் வீட்டில் உள்ள இருந்தால் செல்வம் நன்றாக இருக்கும். குழந்தை பாக்கியம் இருக்கும். நன்றாக கவர்ந்து இழுக்கும் பேச்சு திறன் இருக்கும். நன்றாக உயர்கல்வி படித்திருப்பார்கள். உயர்கல்வியில் சிறந்த விளங்க உதவி செய்வார்.

புதன் 10 ஆம் வீட்டில் இருந்தால் அரசாங்க வேலையில் இருப்பார்கள். சொத்துகள் சேரும் ஏஜென்சி தொழில் லாபம் தரும். ஆடம்பர பொருட்கள் வீடு தேடி வரும். தொழில்கள் நிறைய செய்யவைப்பார். மாமன் மூலம் தொழில் அமையும். அறிவுக்கு முக்கியம் கொடுத்து செய்யும் தொழிலில் செய்வார்.

புதன் 11 ஆம் வீட்டில் இருந்தால் பெரும் பணக்காரராக இருப்பார்கள் பெண்கள் மூலம் வசதி வாய்ப்பு வரும். மூத்த சகோரர் மூலம் வருமானம் வரும். நல்ல புத்திசாலி உள்ள நண்பர்கள் கிடைப்பார்கள்.

புதன் 12 ஆம் வீட்டில் இருந்தால் படிப்பறிவு இல்லாமல் போகும். வாழ்க்கையில் கஷ்டபடுவார்கள் தோல்வியாதி உள்ள பெண்ணிடம் தொடர்பு இருக்கும். பெண்கள் மூலம் விரையம் ஏற்படும். நல்ல துப்பறியும் திறன் இருக்கும். மேலை சொன்ன பலன்கள் பொதுவானவைதான். புதன் நல்ல முறையில் இருக்கும் போது இந்த பலன்கள் நடைபெறலாம். புதன் கெட்டால் இதற்க்கு நேரமாறான பலன்கள் நடைபெறும்.

**புதன் (படிப்பும், அறிவும் பெற)**

ஓம் கஜத்வஜாய வித்மஹே
சுகஹஸ்தாய தீமஹி
தன்னோ புதஹ் ப்ரசோதயாத்
ஓம் சோமபுத்ராய வித்மஹே
மஹாப்ரஜ்ஞாய தீமஹி
தன்னோ புதஹ் ப்ரசோதயாத்
ஓம் சந்திரசுதாய வித்மஹே
சௌம்யக்ரஹாய தீமஹி

தன்னோ புதஹ் ப்ரசோதயாத்
ஓம் ஆத்ரேயாய வித்மஹே
சோமபுத்ராய தீமஹி
தன்னோ புதஹ் ப்ரசோதயாத்

***************************************************************************************************

# 27 நட்சத்திர பொதுப் பலன்கள்

**அசுவினி**
நீங்கள் இந்த நட்சத்திரத்தில் பிறந்திருப்பதால், நல்ல புத்திசாலியாகவும், பலராலும், விரும்பி நேசிக்கப்பட்டவராகவும், செல்வந்தராகவும், நன்கு வளர்க்கப்பட்டவராகவும் விளங்குவீர்கள். அத்துடன் பிறருக்கு மரியாதை காட்டும் பண்பாடும் உண்மைபேசும் குணமும், எப்போதும் மகிழ்ச்சியுடன் இருப்பதான சுபாவமும் உங்களிடம் காணப்படும். நீங்கள் உங்கள் தொழிலில், பயிற்சி பெற்றவராக விளங்குவீர்கள். நண்பர்கள் மற்றும் உறவினர்களுடன், நீங்கள் நல்ல உறவுகளைப் பராமரித்து வருவீர்கள். நீங்கள் நல்ல உடையுடுத்திடுவதிலும் ஆபரணங்களிலும் ஆசை கொண்டவர். .

**பரணி**
பரணி நட்சத்திரம் தரணி கட்டி ஆள்வார்கள் என்பது ஜோதிட வாக்காகும்.நல்ல முயற்சியான உழைப்பு இருந்தால் இது சாத்தியமாகும். நீங்கள் இந்த நட்சத்திரத்தில் பிறந்திருப்பதால், உங்களைப் பற்றி தவறாக யார் சொன்னாலும் அதை பொருட்படுத்தாமல் வாழ்வில் வெற்றி பெற போராடுவீர்கள்.சில நேரங்களில் உங்களது போராட்டங்களில் பின்னடைவு ஏற்பட்டாலும் இறுதியில் வெற்றி கிட்டும்.

**கார்த்திகை**
இந்த நட்சத்திரத்தில் நீங்கள் பிறந்தவராதலால், இள வயதிலேயே கஷ்டங்களையும்,போராட்டங்களையும் சந்திக்கவேண்டி வரும்.யாருடைய வழிகாட்டுதலும் இல்லாமல் முன்னேறக்கூடியவர்கள். உங்கள் பண நிலைமை, சிறப்பாக இராது.உங்களுக்கு பளிச்சென்ற நல்ல தோற்றமிருக்கும் நீங்கள் பரவலாகப் புகழ்பெற்று விளங்குவீர்கள். நேர்மையும்,நாணயமும் கொண்டவர்கள். உங்களுக்கு ஒதுக்கப்படும் வேலைகளை முடித்துக் கொடுக்கும் திறமை, உங்களுக்கு இருக்கிறது.

**ரோகிணி**
நீங்கள் இந்த நட்சத்திரத்தில் பிறந்தவராதலால், நீங்கள் தெய்வ ஈடுபாடு கொண்டிருப்பீர்கள். உங்களுக்கு விவசாயம் முலமாகத்தான், முக்கியமாக வருமானம் கிடைக்கும். நீங்கள், நல்ல அழகிய தோற்றமுடையவராகவும், புத்திசாலியாகவும், புதிர்களுக்கு விடை கண்டுபிடிப்பதில் மிகுந்த சாமர்த்தியசாலியாகவும் விளங்குவீர்கள்

**மிருகசீரிசம்**
நீங்கள் இந்த நட்சத்திரத்தில் பிறந்தவராதலால், போரிலும், போர்சார்ந்த உத்திகளிலும், தந்திரங்களிலும் வெற்றி காண்பீர்கள். மற்றவர்களிடம் மரியாதையோடும் பண்போடும் பழகுவீர்கள் உணர்ச்சி வெறியுடைய உங்களுக்கு, அரசு உயர் அதிகாரிகள் நல்ல மதிப்பும் மரியாதையும் அளிப்பார்கள். நேர்த்தியானவற்றை நன்கு உணர்ந்து பாராட்டக்கூடிய நீங்கள் எப்போதுமே, சரியான பாதையைத்தான் தெரிந்தெடுப்பீர்கள்.

**திருவாதிரை**
நீங்கள் இந்த நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் உணமைக்கு மாறாக எதையும் செய்ய மாட்டார்கள். அறிவுத் திறன்பெற்ற புத்திசாலியாக இருப்பீர்கள். பிறருக்கு தர்மம் செய்துஅதில் மகிழ்ச்சிகாண முயலும் நீங்கள், பல சமயங்களில், முன் கோபம் கொண்டவராகவும், வருங்காலத்தில் நல்ல நம்பிக்கை கொண்ட தைரியசாலியாகவும் விளங்குவீர்கள். உங்கள் வாழ்க்கையில், சாதாரணமாக பல வசதிகளும் சுகபோகங்களும் இராது நீங்கள் கடினமான வாழ்க்கை நடத்த வேண்டியிருக்கலாம் நீங்கள் செலவாளியாக இருப்பதுடன், துன்பங்கள்நேரிடும்போதும், மனம் கலங்காமல் இருப்பவர்.

**புனர்பூசம்**
நீங்கள் இந்த நட்சத்திரத்தில் பிறந்தவராதலால், நீங்கள் பொறுமைசாலியாகவும், அமைதியான சுபாவமுடையவராகவும் இருப்பீர்கள் நல்ல குணத்துடன், நண்பர்கள் மற்றும் உறவினர்களின் அன்புக்கும், பிரியத்துக்கும் பாத்திரமானவராக விளங்குவீர்கள். உங்களுக்கு மதிப்பும், மரியாதையும் கிடைக்கும் நீங்கள் தாராள சிந்தையுடையவராக இருப்பீர்கள். குழந்தைகள் முலம் மன நிறைவு பெற்று, நல்ல செல்வந்தராக விளங்குவீர்கள். மதிப்பு வாய்ந்த ரத்தினக் கற்களில் உங்களுக்கு மிகுந்த ஈடுபாடு இருக்கும் சொந்தத்தில் சொத்துக்களும் இருக்கும். நீங்கள் விரிவாக, பல இடங்களில் பயணம் செய்வீர்கள்.

**பூசம்**
நீங்கள் இந்த நட்சத்திரத்தில் பிறந்தவராதலால், உங்கள் விருப்பங்கள்மீது, உங்களுக்குக் கட்டுப்பாடு இருக்கும் பொதுவாக பலரும் உங்களை விரும்பி நேசிப்பார்கள் சமய ஈடுபாடும், தாராள சிந்தையும், மற்றவர்களுக்கு உதவிடும் மனப்பான்மையும், உங்களிடம் காணப்படும். நீங்கள், நன்கு படித்த புத்திசாலியாகவும், தெய்வ நம்பிக்கையுடன், உண்மையில் உறுதி கொண்டவராகவும் இருந்து, வசதியான வாழ்க்கை நடத்துவீர்கள். நீங்கள் மிகுந்த அதிருஷ்டசாலியாகவும், செல்வந்தராகவும், நல்ல உடல்கட்டு அமைந்தவராகவும் விளங்குவீர்கள்.

**ஆயில்யம்**
நீங்கள் இந்த நட்சத்திரத்தில் பிறந்தவராதலால்,வசதியான குடும்பத்தில் பிறந்தாலும் கூட எளிமையாக இருப்பார்கள் . உங்கள் தந்தை, தாய் அல்லது உங்கள் வயதுடைய மற்றவர்கள் மிகுந்த மரியாதை வைத்திருப்பீர்கள்.நண்பர்கள் மற்றும் உறவினர்களுடன் உதவிக்காக போய் நிக்க மாட்டீர்கள்.மதுபழக்கம் வராமல் பார்த்துகொள்வது நல்லது.சில சில சிரமங்களை அனு8பவித்தாலும் யாரிடமும் வெளியில் காட்டிகொள்ளமாடீர்கள்.

**மகம்**
நீங்கள் இந்த நட்சத்திரத்தில் பிறந்திருப்பதால், நல்ல செல்வந்தராகவும், புத்திசாலியாகவும், பிறரிடம் கருணை காட்டி உதவி செய்பவராகவும் இருப்பீர்கள். நீங்கள் வியாபாரத்தில் வெற்றி காண்பதுடன், சுகபோகமான வாழ்க்கையொன்றும் நடத்துவீர்கள். உங்களுக்கு பல பணியாட்கள் இருப்பார்கள்

தெய்வகாரியங்களில் உங்களுக்கு ஈடுபாடு இருக்கும். உங்கள் மனைவியுடன் சுமுகமான உறவுகளை கொண்டிருப்பீர்கள். உங்கள் பெற்றோர்களிடம், கடமைப் பற்றுடன் நடந்து கொண்டாலும், எதிலும் கண்டிப்பாக இருக்கக்கூடிய, ஒரு கடும் சுபாவம், உங்களிடம் குடிகொண்டிருக்கும். உங்கள் எண்ணமும் செயலும், தெளிவானதாய், திட்டவட்டமானதாக அமைந்திருக்கும்.

**பூரம்**

நீங்கள் இந்த நட்சத்திரத்தில் பிறந்திருப்பதால், மென்மையாக பேசும் குணம் உடையவராகவும், சமயப்பற்றும், துணிச்சலும், தாராள சிந்தையும், பகைவர்களை வெற்றி கொள்ளும் சாதுர்யமும், தந்திரபுத்தியும் கொண்டவராக இருப்பீர்கள். நீங்கள், காமவெறி உணர்ச்சியும், கர்வமும் கொண்டிருப்பீர்கள். நிதிநிலை, அவ்வளவு வசதியாக இராது.

**உத்திரம்**

நீங்கள் இந்த நட்சத்திரத்தில் பிறந்தவராதலால், நீங்கள், கருணை உள்ளம் நிறைந்தவராகவும், பொறுமை மிக்கவராகவும், நல்ல பண்பாடான நடத்தை கொண்டவராகவும், பலராலும் விரும்பி நேசிக்கப்படுபவராகவும் விளங்குவீர்கள். நீங்கள், உங்கள் சொந்த சம்பாதிப்புடன், சுகபோகமாக வாழ்க்கை நடத்துவீர்கள். உங்கள் உடல் எடை அதிகரித்திடலாம் கவனம் தேவை

**அஸ்தம்**

நீங்கள் இந்த நட்சத்த்திரத்தில் பிறந்திருப்பதால், மிகுந்த விவேகியாகவும், தாராள மனம் கொண்டவராகவும், செல்வந்தராகவும், பலராலும் விரும்பி நேசிக்கப்படுபவராகவும் விளங்குவீர்கள். துறவிகளிடம் உங்களுக்கு நம்பிக்கை இருக்கும். 30 லிருந்து 32 வயது வரையான காலத்தில் நீங்கள் முன்னேறுவீர்கள்

**சித்திரை**

நீங்கள் இந்த நட்சத்திரத்தில் பிறந்தவராதலால், தரம சிந்தனை இருக்கும்.அன்பான குணம் கொண்டவர்களைமிகவும் விரும்புவீர்கள். போர், உத்திகள் பற்றிய பல விஷயங்கள், உங்களுக்குத் தெரிந்திருக்கும். படிப்பும், அறிவும், பணமும் படைத்தவரான நீங்கள், சத்திய வாதியாக விளங்குவீர்கள். உங்கள் மனைவியும் குழந்தைகளும், உங்களுக்கு மன மகிழ்ச்சி தருவார்கள். நல்ல வசதியான வாழ்க்கை நடத்தப்போகும் நீங்கள் கடின உழைப்பாளியாகவும், துணிச்சல் மிக்கவராகவும், பொருள் ஆர்வம் கொண்டவராகவும் விளங்குவீர்கள். கட்டிடங்கள் கட்டுவது, வைத்தியம், ஜோதிடம் ஆகியவற்றில், உங்களுக்கு நல்ல அறிவாற்றல் இருக்கும். நீங்கள் சமயப்பற்றும், தெய்வ பக்தியும் கொண்டிருப்பீர்கள். நீங்கள் பணம் சம்பாதித்தாலும் பணம் சேர்த்து வைத்திட முடியாது.

**சுவாதி**

நீங்கள் இந்த நட்சத்த்திரத்தில் பிறந்திருப்பதால், நல்ல அழகிய தோற்றத்துடனும், மகிழ்ச்சியான சுபாவத்துடனும், விளங்குவீர்கள் உங்களுக்கு சமயப்பற்று இருக்கும் தர்ம காரியங்களுக்காக நன்கொடை அளிப்பீர்கள். நீங்கள், உங்கள் உணர்ச்சிவெறிகளை கட்டுப்படுத்தி வைத்திடும் ஆற்றல் பெறுவீர்கள் .மனதில் ஏற்படும் காம எண்ணங்களை குறைத்துகொள்வது நல்லது.வியாபாரத்தில்

தேர்ச்சி பெற்றவராக விளங்குவதுடன், நண்பர்கள் மற்றும் உறவினர்களுடனும் நல்லுறவுகளைப் பராமரிப்பீர்கள்.

**விசாகம்**
நீங்கள் இந்த நட்சத்திரத்தில் பிறந்திருப்பதால், சமயப் பற்றும், தெய்வ பக்தியும் கொண்டவராக இருப்பீர்கள் ஆனால் பொறாமையும், பகைமை உணர்வும் உங்களிடம் இருக்காது.இயற்கையிலேயெ ஞானமும்,அறிவும் இருக்கும் உங்கள் மனநிலை சில நேரம் சஞ்சலம் கொண்டதாக இருந்தாலும் பின் தெளிவாகிவிடுவீர்கள்.

**அனுஷம்**
நீங்கள் இந்த நட்சத்திரத்தில் பிறந்திருப்பதால், இள வயதிலேயே சிரமப்பட்டாலும்,பிற்காலத்தில் நல்ல செல்வந்தராகவும், பெரும்பாலும் அயல் நாட்டில் வசிக்கக் கூடியவராகவும் இருப்பீர்கள். பயணம் செய்வதில் உங்களுக்கு நல்ல விருப்பமிருக்கும். நீங்கள் நன்கு படித்துத் தேர்ச்சி பெற்றவராகவும், பணம் ஈட்டுவதில் படுசாமர்த்தியசாலியாகவும் இருப்பதுடன், நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும், உதவியும் செய்வீர்கள்.

**கேட்டை**
இந்த நட்சத்திரத்திரத்தில் பிறந்தவராதலால், அழகான குணமும்,மனதில் அன்பும் இருக்கும்.பலவிதமான கலைகளை கற்பார்கள்.போராட்டமான வாழ்வு அமைந்தாலும் பிற்காலத்தில் மிகுந்த புகழ் பெற்றவராக இருப்பார்கள்.யாரையும் பொருபடுத்தாமல் வாழ்க்கூடியவர்கள்.

**மூலம்**
நீங்கள் இந்த நட்சத்திரத்தில் பிறந்தவராதலால், நீங்கள் பணக்காரராகவும், மகிழ்ச்சி நிறைந்தவராகவும் இருப்பீர்கள். நீங்கள், மற்றவர்களுக்கு தீங்கு விளைவித்திடமாட்டீர்கள் மிகவும் உறுதியான கருத்துக்களைக் கொண்டிருப்பீர்கள். நீங்கள், தாராள சிந்தை கொண்டிருப்பீர்கள். பிறரால் விரும்பி நேசிக்கப்படுவீர்கள் நண்பர்களும் உறவினர்களும், உங்களுக்கு மதிப்பும் மரியாதையும் தருவார்கள். டாம்பீகமான சொகுசு வாழ்க்கையை நீங்கள் வாழ்வதுடன், பதட்டப்படாத அமைதியான சுபாவம் ஒன்றையும் கொண்டிருப்பீர்கள்.

**பூராடம்**
நீங்கள் இந்த நட்சத்திரத்தில் பிறந்திருப்பதால், நீங்கள், புத்திசாலியாகவும், கர்வமுடையவராகவும், மற்றவர்களுக்கு உதவியளித்து, நண்பர்களிடம் மிகுந்த ஒட்டுதலாகவும் இருப்பீர்கள். உங்கள் விருப்பத்துக்கு இசைவான மனைவியும் உங்களுக்கு கிடைப்பாள் நீங்கள் உறுதியான கருத்துக்களைக் கொண்டிருப்பீர்கள். குழந்தைகள் மற்றும் நண்பர்கள் முலம் உங்களுக்கு மன மகிழ்ச்சி கிட்டும்.

**உத்திராடம்**

நீங்கள் இந்த நட்சத்திரத்தில் பிறந்திருப்பதால், கடமைப்பற்றுடன் கீழ்ப்படிந்தும், நல்ல குணம் படைத்தவராகவும், பல நண்பர்களைக் கொண்டவராகவும் விளங்குவீர்கள். நீங்கள் நன்றியுடையவராகவும், அன்புள்ளம் நிறைந்தவராகவும் இருப்பதுடன், உங்களுக்கு கிடைத்த உதவிக்கு நன்றிக் கடனும் செலுத்துவீர்கள். நீங்கள், மிகுந்த தந்திர புத்தியுடைய சாமர்த்தியசாலியாகவும், முயற்சியில் வெற்றி காண்பவராகவும் விளங்குவீர்கள். உங்களுக்கு பல செல்வந்தர்களைத் தெரிந்திருக்கும் உங்கள் முதலாளிகள் உங்களை மதித்து மதிப்புக் கொடுப்பார்கள். இசையிலும் நடனத்திலும் உங்களுக்கு அபார ஆசை இருக்கும்.

**திருவோணம்**

நீங்கள் இந்த நக்ஷத்திரத்தில் பிறந்தவராதலால், நல்ல சுபிட்சத்தோடும், படித்தவராகவும், புத்திசாலியாகவும் விளங்குவீர்கள். இசை, ஜோதிடம், கணிதம் - ஆகியவற்றில் உங்கள் மிகுந்த ஆர்வம் இருக்கும். உங்கள், அதீதமான, நல்ல சக்திவாய்ந்த உள்ளுணர்வு ஒன்று இருக்கும். உங்களுக்கு கவர்ச்சிமிக்க, தாராள மனம் படைத்த மனைவி/கணவன் கிடைப்பார்.

**அவிட்டம்**

நீங்கள் இந்த நட்சத்திரத்தில் பிறந்தவராதலால் இசையில் ஆழ்ந்த விருப்பம் கொண்டிருப்பீர்கள். தாராள சிந்தையும், செல்வவளமும், நல்ல தீர உணர்வும் கொண்டவராக நீங்கள் விளங்குவீர்கள். பிறர் உங்களை மதித்து மரியாதை, தருவார்கள் உங்கள் கணவன்/மனைவி உங்களை மிகவும் விரும்பி நேசிப்பார். நீங்கள் தைரியமானவராக இருப்பீர்கள் உங்கள் சகோதரர்கள் மற்றும் உறவினர்களை, நீங்கள் மிகவும் விரும்பி அன்பு காட்டுவீர்கள்.

**சதயம்**

நீங்கள் இந்த நக்ஷத்திரத்தில் பிறந்தவராதலால், தர்மசிந்தை உடையவராகவும், செல்வவளமும், தாராள மனமும், சுயேச்சையான கருத்தும், புத்திசாலித்தனமும், அறிவாற்றலும் நிறைந்தவராகவும் விளங்குவீர்கள். உங்கள் பகைவர்களை ஒடுக்கி வெற்றி காண்பீர்கள். உங்களைப் பலரும், மதித்து மரியாதை காட்டுவார்கள் உங்களுக்கு நல்ல அந்தஸ்தும் அதிகாரமும் இருக்கும். நீங்கள் எதையும் ஒளிவு மறைவின்றி வெளிப்படையாகச் சொல்லிவிடக் கூடியவர் ஆனால் உண்மை பேசுபவர்/ நீங்கள் கஷ்டங்களை அனுபவிப்பீர்கள்.

**பூரட்டாதி**

நீங்கள் இந்த நட்சத்திரத்தில் பிறந்தவராதலால், பணம் சம்பாதிப்பதில் வெற்றி காண்பீர்கள் அதிகமாகப் பேசக்கூடிய நீங்கள், நன்கு படித்தவர் தேர்ச்சிபெற்றவர். நண்பர்களுடன் உங்களுக்கு நல்ல உறவுகள் இருந்து வரும். நீங்கள் தெளிவாகப் பேசுவீர்கள். உங்கள் வாழ்க்கைத் துணை, பெரும்பாலும் ஒரு பணக்காரக் குடும்பத்திலிருந்து வந்தவராக இருப்பார். நீங்கள், வெகு எளிதில், எதிர்பாலைச் சேர்ந்தவர்களால் ஈக்கப்படுகிறீர்கள். குழந்தைகள் உங்களுக்கு மகிழ்ச்சியைத் தருவார்கள். உங்களுக்கு,

**உத்ரட்டாதி**

நீங்கள் இந்த நட்சத்திரத்தில் பிறந்தவராதலால், ஒரு சிறந்த மேடைப் பேச்சாளராகவும், மகிழ்ச்சி நிறைந்தவராகவும், நற்குணமும், எதிரிகளை ஒடுக்கி வெற்றி கொள்ளும் திறனும் மிக்கவராகவும் விளங்குவீர்கள். நீங்கள், தாராள சிந்தையுடையவராகவும், செல்வவளமும், அறிவாற்றலும் நிறைந்தவராகவும் இருப்பீர்கள். உங்களுக்கு கவர்ச்சிகரமான, வசீகர உடற்கட்டு இருக்கும்.

**ரேவதி**

நீங்கள் இந்த நட்சத்திரத்தில் பிறந்தவராதலால், நல்ல சுபாவம் உடையவராகவும், பணக்காரராகவும், நன்னம்பிக்கையும், அறிவாற்றலும் படைத்தவராகவும், நியாயமான வழிகளில் பணம் சம்பாதிப்பவராகவும் நீங்கள் விளங்குவீர்கள். நீங்கள், வயதில் பெரியவர்களுக்கும் பெற்றோர்களுக்கும் பணிந்து நடப்பதுடன், மரியாதையும் அளிக்கிறீர்கள்.

# கிரகங்கள் சேர்க்கை

**கிரக சேர்க்கை** 1. சூரியனுக்கு: சந்திரன், செவ்வாய், குரு இம் மூன்றும் நட்புக் கிரகங்கள். சுக்கிரன், சனி, ராகு, கேது இந்த நான்கும் பகைக் கிரகங்கள் புதன் மட்டும் சமக் கிரகம் (Neutral Planet)
2.சந்திரனுக்கு: சூரியனும் புதனும் நட்புக் கிரகங்கள் ராகுவும், கேதுவும் பகைக் கிரகங்கள்செவ்வாய், குரு, சுக்கிரன், சனி இந்நான்கும் சமக் கிரகங்கள்
3. செவ்வாய்க்கு: சூரியன், சந்திரன், குரு இம் மூன்றும் நட்புக் கிரகங்கள். புதன், ராகு, கேது இம்மூன்றும் பகைக் கிரகங்கள் சுக்கிரனும், சனியும் சம்க் கிரகங்கள்
4. புதனுக்கு: சூரியனும் சுக்கிரனும் நட்புக் கிரகங்கள் சந்திரன் மட்டுமே பகைக் கிரகம்செவ்வாய், குரு, சனி, ராகு, கேது இவ்வைந்தும் சமக் கிரகங்கள்
5. குருவுக்கு: சூரியன், சந்திரன், செவ்வாய் இம் மூன்றும் நட்புக் கிரகங்கள். புதனும், சுக்கிரனும் பகைக் கிரகங்கள் சனி, ராகு, கேது இம்மூன்றும் சமக் கிரகங்கள்
6. சுக்கிரனுக்கு: புதன், சனி, ராகு, கேது இந்த நான்கும் நட்புக் கிரகங்கள் சூரியனும், சந்திரனும் பகைக்கிரகங்கள் செவ்வாயும், குருவும் சமக் கிரகங்கள்
7. சனிக்கு: புதன், சுக்கிரன், ராகு, கேது இந்நான்கும் நட்புக் கிரகங்கள் சூரியன், சந்திரன், செவ்வாய் இம்மூன்றும் பகைக் கிரகங்கள் குரு மட்டும் சமக் கிரகம்
8. இராகுவுக்கும், கேதுவுக்கும்: சுக்கிரனும், சனியும் நட்புக் கிரகங்கள் சூரியன், சந்திரன், செவ்வாய் இம்மூன்றும் பகைக் கிரகங்கள் புதனும், குருவும் சமக் கிரகங்கள்

**கிரகங்கள் சேர்க்கை பலன்கள்**

* லக்னத்திற்கு 4,7 ஆகிய கேந்திரங்களில் சுபக் கிரகங்கள் சேர்ந்து நிற்கப் பிறந்த ஜாதகன் பொன் பொருள் மற்றும் கோடி ரூபாய் சம்பாதிக்கும் திறம் பெற்று சிறப்புடன் வாழ்வான். பலவித வாகனம் பெற்று பெருமை அடைவான்.
* லக்னத்திற்கு 4ம் இடம் சர ராசியாக அமைய அதில் ஒரு கிரகம் நின்றால் அந்த ஜாதகன் அரசனுக்குரிய ஆடம்பர வாழ்க்கை பெற்று யோகவானாக விளங்குவான். பெரியவர்களின் தொடர்பு பெற்று அரசாங்கத்தால் விருது மற்றும் பொருள் பெறுவான். இனிய மனைவி அமைந்து சுக ஜீவனம் செய்வான்.
* செவ்வாய், சனி, ராகு இவர்கள் ஒரே வீட்டில் கூடி நின்றால் பெண்களால் தன லாபம் உண்டாகும். வீடு கட்டை சுகத்துடன் வாழ்வான். எனினும் தீய தசைகள் நடக்கும் போது இந்த சேர்க்கையினால் சிற்சில துன்பங்களும் உண்டாகும்.
* பத்தாம் இடத்தில் 3 கிரகங்கள் இருக்கப்பெற்ற ஜாதகன் உலகம் புகழும் சன்னியாசியாக விளங்குவான். இரண்டு கிரகங்கள் இருந்தால் அந்த ஜாதகன் தபசியாகவும் ஞானியாகவும் யோகியாகவும் இருந்து மக்களுக்கு அருள் புரிவான்.

*   4ம் வீட்டிற்கு அதிபதியும் சந்திரனுக்கு நான்கிற்குடையோனும் எந்த ராசியில் கூடி நின்றாலும் மேலும் சுக்கிரன் பலம் பெற அந்த ஜாதகன் தேவி பராசக்தியாகிய துர்கையின் மீது பற்று கொண்டு பூஜை செய்து தேவி அனுக்கிரகம் பெறுவான். கொடியவர்களில் சூழ்ச்சிகள் இவனிடம் பலிக்காமல் இவன் வெற்றி கொள்வான்.

*   ஒரு ராசியில் சுபக்கிரகத்துடன் 4 கோள்கள் நிற்க அதற்கு 4லில் இன்னொருவன் இருக்க அந்த ஜாதகன் தீர்க்க ஆயுளுடன் சுகமாக வாழ்வான். குதிரை, யானை பெற்ற அரசனைப் போல அனேகர் புகழ பொன் பொருள் பெற்று சிறப்பான்.

*   8க்குடையவன் 12க்குடையவன் செவ்வாய் ஆகிய மூவரும் எந்த இடத்தில் கூடி நின்றாலும் அந்த ஜாதகன் அன்னிய தேசம் செல்வான். அதே சமயத்தில் இவர்களை சந்திரன் பார்த்தால் சில காலம் வெளிநாட்டில் அதிக பணம் ஈட்டி பின்னர் சொந்த தேசத்திற்கு வந்து சுகமுடன் வாழ்வான்.

*   சனி, செவ்வாய், ராகு இவர்கள் லக்னத்திற்கு இரண்டாம் இடத்தோனுடன் கூடி நின்றால் அந்த ஜாதகன் சிவ பூஜையில் பிரசித்தி பெற்றவனாவான். மேலும் ஐயனார், காளி, வீரபத்திரன் போன்ற தெய்வங்களை வணங்கி தேவதை அருள் பெற்று வசியம் செய்யும் வித்தையும் அறிந்தவனாவான்.

*   குருவும் சனியும் ராகுவும் சரம் மற்றும் உபய ராசிகளில் நின்றால் அந்த ஜாதகன் சொந்த இருப்பிடத்தை விட்டு தேச சஞ்சாரம் செய்வான். அதே சமயத்தில் லக்னாதிபதி வலுப்பெற்று இருந்தால் சொந்த ஊரிலேயே பலகாலம் வசிப்பான்.

*   சிம்ம ராசியில் அசுர குருவான சுக்கிரனும் செவ்வாயும் கூடியிருந்தால் அந்த ஜாதகன் வித்தைகளில் தேர்ச்சி பெற்று சிற்ப சாஸ்திரத்தில் வல்லமையும் புத்தக ஆராய்ச்சியில் ஈடுபடுபவனாகவும் இருந்து அதிக பொருள் சேர்ப்பான். அன்றியும் அவன் விதவைக்கு வாழ்வளிப்பவனாய் விளங்குவான்.

*   குருவுடன் செவ்வாயும் சுக்கிரனும் சேர அந்த ஜாதகன் நிறைந்த தனங்கள் பெற்று அரசாங்க மரியாதையும் புகழும் அடைவான். செவ்வாயும் புதனும் இணைந்தால் அவன் செல்வச் செழிப்பு மிக்க பண்டிதனாக விளங்குவான். ஆனால் செவ்வாய் புதன் இவர்களுடன் சுக்கிரன் செர்ந்து எங்கு இருந்தாலும் அவனுக்கு அங்க குறைபாடு ஏற்படும்.

*   குரு, சந்திரன், புதன் இவர்கள் சேர்ந்து எங்கு இருந்தாலும் நல்ல அழகும் ஆயுளும் பெற்று செல்வந்தனாகத் திகழ்வான். சுக்கிரன், சந்திரன், புதன் ஆகியோர் சேர துஷ்டனாகவும் காமியாகவும் விளங்குவான்.

*   இரண்டாம் இடத்தில் விரய ஸ்தானதிபதி நின்றால் அந்த ஜாதகன் மாட மாளிகை ஆகிய வீடுகள் கட்டி சிறந்து விளங்குவான். மேலும் லக்னாதிபதியாக குரு, சந்திரன், புதன், சுக்கிரன் இவர்கள் சுபஸ்தானங்களில் நிற்க பொன், பொருள் சேரும். இவர்கள் தசா, புக்தியில் நற்பலன்கள் தருவார்கள்.

*   சூரியனும் சந்திரனும் சேர்ந்து ஓரிடத்தில் நிற்க அவன் தனவானாகவும் மனைவியிடம் அன்பு கொண்டவனாகவும் இருப்பான். சூரியனும் குருவும் சேர அரசாங்க செல்வாக்கு பெற்று ஐஸ்வர்யத்துடன் வாழ்வான். சூரியனும் சுக்கிரனும் சேர நல்ல மனைவி அமையப்பெற்று தாம்பத்தியம் அனுபவிப்பதில் சிறந்து விளங்குவான். சனியுடன் சுக்கிரன் கூடினால் கணவன் பேச்சை கேட்காத மனைவி வாய்ப்பாள்.

*   சந்திரன், செவ்வாய், புதன், சூரியன், குரு ஆகியோர் சேர்ந்து இருந்தால் தீய பலன்களே உண்டாகும். அவன் பிறரையும் கெடுப்பான். மேலும் சூரியன், செவ்வாய், சனி, சுக்கிரன்

ஒரே வீட்டில் கூடினாலும் ஜாதகன் வறுமையில் உழன்று பிச்சை எடுத்து உண்ணும் கதிக்கு ஆளாவான்.

* புதன், குரு இவர்களுடன் சந்திரன், சுக்கிரன் இவர்கள் பலம் பெற்று சேர்ந்து நிற்க அதிக செல்வமும் பூமியும் பொன்னும் பொருளும் பெற்று சுகமுடன் வாழ்வான். மேற்கண்ட கிரகங்களுடன் சனி சேர அங்க குறைவு ஏற்படும்.

* குரு, சுக்கிரன், சூரியன், புதன் இவர்கள் இணைந்து நின்றவன் அதிக திரவியங்கள் பெற்று சுக போகங்களை அனுபவிப்பான். குரு, சுக்கிரன், சூரியன், செவ்வாய் இவர்கள் சேர அவனும் செல்வாக்கு படைத்த தலைவனாகவும் தீர்க்க தரிசியாகவும் செல்வம் மிகுந்து வாழ்வான்.

* செவ்வாய்க்கு 4, 7 ஆகிய இடங்களில் சுக்கிரன் நின்றாலோ அல்லது சுக்கிரனுக்கு 5,7,11 ஆகியவற்றில் செவ்வாய் நின்றாலோ அந்த ஜாதகன் பூமியில் சிறந்து விளங்குவான். மேலும் லக்னாதிபதி கேந்திர, கோணத்தில் இருக்க வாகன சேர்க்கையும் சொந்தத் தொழில் மூலம் அனைத்து பாக்கியங்கள் அடைதலும் உண்டாகும். விளை நிலங்களும் சேரும். இதனை இவர்களின் தசா, புக்தி காலங்களில் கொடுப்பார்கள்.

* குரு, சனி, செவ்வாய், புதன் சேர்ந்து நிற்க சந்திரன், சுக்கிரன் இவர்கள் இணையப்பெற்ற ஜாதகன் புவியியல் சாஸ்திரங்கள் அறிந்தவனாக விளங்குவான்.

* சந்திரன், சுக்கிரன் ஒன்றுசேர குரு, புதன், செவ்வாய் ஒரிடத்தில் நிற்க அந்த ஜாதகன் பாக்கியசாலி ஆவான். அனேக திரவியமும் செல்வாக்கும் அடைவான். பலரை ஆதரித்து எல்லோராலும் புகழப்படுவான்.

* குரு, புதன், சனி, செவ்வாய், சந்திரன் ஆகியோர் ஒரே இடத்தில் நிற்கப் பிறந்தவன் துன்பங்களை அனுபவித்து கஷ்ட ஜீவனம் செய்வான்.

**குறிப்பிட்ட இடங்களில் கிரகங்கள் நிற்கப் பலன்கள்**

பாக்கிய ஸ்தானாதிபதி அந்த ஸ்தானத்திற்கு திரிகோணங்களான 1, 5, 9 ல் இருக்க அமைந்த ஜாதகனுக்கு பொருள் சேர்க்கையும் நிலம், தோப்பு மற்றும் அரண்மனை போன்ற வீடு இவை அமைந்து மகிழ்வுடன் வாழ்வான். தான தருமம்மற்றும் கோயில் பணிகள் செய்து பேரும் புகழும் அடைவான்.

அதே சமயத்தில் லக்னாதிபதி 6, 8, 12 ல் மறைய தனவிரயமும் பூர்வீக சொத்துக்கள் நஷ்டமும் உண்டாகும்.

குரு, சந்திரன், சுக்கிரன் ஆகியோர் 5ல் நிற்க அமையப் பெற்ற ஜாதகன் இவ்வுலகில் சிறப்புடன் வாழ்வான். யோகங்கள் உண்டு.

குரு 5ல் தனித்து நிற்க புத்திர பாக்கியம் குறைவு.

சந்திரன் 5ல் தனித்திருக்க பெண் குழந்தைகள் உண்டு.

மேற்சொன்ன மூவரும் 2, 11ம் இடங்களில் இருந்தால் அந்த ஜாதகன் உத்தமனாகவும் கீர்த்திமானாகவும் விளங்குவான். பல வாகனங்களும் சேரும். பல வித்தைகளில் சிறந்து விளங்குவான். புதையலும் தனமும் கிட்டும். சுக்கிரன் கேந்திர ஸ்தானமான 4ல் இருந்தால் யோகங்கள் அதிகம் உண்டாகும். வாகனங்கள் சேரும். பூமி லாபம் பெறுவான். சுக போகங்களை அனுபவிப்பான்.

அதே சமயத்தில் பாவக்கிரகமான சனி 10ம் இடத்தில் இருந்தால் அந்த ஜாதகனுக்கு பிரபல யோகம் உண்டாகும்.

சந்திரனுக்கு 6, 7, 8 ஆகிய இடங்களில் சுபக் கிரகங்கள் நிற்கப் பிறந்த ஜாதகன் சிறந்த பலன்களும் நலமான வாழ்வும் அடைவான். மந்திர சக்தியும் பெறுவான்.
அரசாங்க நன்மைகளும் உண்டாகும். இருப்பினும் லக்னாதிபதி வலுப்பெறாவிட்டால் மேற்கண்ட யோகங்கள் உண்டாகாது.

சூரியன், சனி, பாக்கியாதிபதி இவர்கள் 6ம் இடத்தில் நிற்க அந்த ஜாதகனுக்கு திரவியம் அதிகம் உண்டு. மற்ற இடங்களில் இருந்தாலும் நகைச்சுவை, நடிப்பு போன்ற துறைகளில் சிறந்து விளங்குவான் என்பதாகும்.

குருவுடன் புதன் சேர நல்ல பாக்கியங்கள் அடைந்து உத்தமனாவான்.

சுக்கிரனுடன் புதன் சேர்ந்தால் பெரியோர்கள் நட்பு பெற்றவனாகவும், சிறந்த பாடகனாகவும் விளங்குவான்.

சனியோடு புதன் சேர பெரிய தனவானாவன். மேலும் எதிரி பயமோ விஷ பயமோ இல்லாமல் அதிக பொருள் சேர்ப்பான். இவர்கள் சேர்க்கை சுப ஸ்தானங்களில் இருக்க நன்மை பயக்கும்.

சனி, செவ்வாய், சந்திரன், புதன் இவர்கள் சேர ஜாதகனுக்கு நீண்ட ஆயுள் உண்டு. எனினும் சோம்பேறியாகவும்,வருமானம் இல்லாதவனாகவும் அலைச்சல் அடைவான். சொந்த வீடு இருக்காது. இவர்களை குரு பார்க்க மேற்கண்ட துயரங்கள் நீங்கி நற்பலன்கள் உண்டாகும்.

சூரியன், புதன் இவர்கள் சேர்ந்து 1,4,8 ஆகிய இடங்களில் நிற்க குருவும் 10ம் அதிபதியும் நோக்க அந்த ஜாதகன் பெரும் செல்வம் அடைந்து புகழடைவான்.
பூமி, வாகனம் அமைந்து ஏவலாட்கள் பணி செய்வர்.

5, 6 க்குடைய கிரகங்கள் 3 ல் நிற்க அவர்களைப் பாவர் நோக்க அந்த ஜாதகனுக்கு பிள்ளைகள் இருக்காது. ஆனால் குரு பகவான் பார்வை பெற குழந்தைகள் உண்டாகும்.

சூரியன், சனி, பாக்கியாதிபதி இவர்கள் 6ம் இடத்தில் நிற்க அந்த ஜாதகனுக்கு திரவியம் அதிகம் உண்டு. மற்ற இடங்களில் இருந்தாலும் நகைச்சுவை, நடிப்பு போன்ற துறைகளில் சிறந்து விளங்குவான் என்பதாகும்.

சனியோடு புதன் சேர பெரிய தனவானாவன். மேலும் எதிரி பயமோ விஷ பயமோ இல்லாமல் அதிக பொருள் சேர்ப்பான். இவர்கள் சேர்க்கை சுப ஸ்தானங்களில் இருக்க நன்மை பயக்கும்.

சனி, செவ்வாய், சந்திரன், புதன் இவர்கள் சேர ஜாதகனுக்கு நீண்ட ஆயுள் உண்டு. எனினும் சோம்பேறியாகவும்,வருமானம் இல்லாதவனாகவும் அலைச்சல் அடைவான். சொந்த வீடு இருக்காது. இவர்களை குரு பார்க்க மேற்கண்ட துயரங்கள் நீங்கி நற்பலன்கள் உண்டாகும்.

# கிழமை, கரண, யோக, திதிகளில் பிறந்தவன் பலன்

இவை அனைத்தும் பொது பலன்களே. ஜாதக கிரக அமைப்பை பொருத்து இவை மாறுபடும்,

**கிழமைகளில் பிறந்தவர் பலன்**

1) ஞாயிற்றுக்கிழமையில் பிறந்தவன்.செல்வம் உடையவனாய்இருப்பான்
2) திங்கள்கிழமையில் பிறந்தவன்,புகழ் உடையவனாய் இருப்பான்
3) செவ்வாய்க்கிழமையில் பிறந்தவன். தந்திரக்காரனாய் இருப்பான்
4) புதன் கிழமை பிறந்தவன், கல்வி உடையவனாய் இருப்பான்.
5) வியாழக்கிழமை பிறந்தவன்,அறநெறியில் விருப்பம்உடையவனாய் இருப்பான்
6) வெள்ளிக்கிழமை பிறந்தவன், உயர்ந்த காரியங்களைச்செய்பவனாய் இருப்பான்
7) சனிக்கிழமை பிறந்தவன், பிறரை ஏமாற்றுவதில்திறமைசாலியாக இருப்பான்

**பிறந்த கரணங்களில் பலன்**

1) பவ கரணத்தில் பிறந்தவன்.அச்சம் இல்லாதவனாய் இருப்பான்
2) பாலவ கரணத்தில் பிறந்தவன், பல நற்குணங்களைஉடையவனாய் இருப்பான்.
3) கௌலவ கரணத்தில் பிறந்தவன், நல்ல ஒழுக்கங்களைஉடையவனாய் இருப்பான்
4) தைதுலை கரணத்தில் பிறந்தவன்,உத்தியோகத்தில் ஆர்வம்உள்ளவனாய் இருப்பான்
5) கரசைக் கரணத்தில் பிறந்தவன்,பிற மாதரிடம் பிரியம்உள்ளவனாய் இருப்பான்
6) வணிசைக் கரணத்தில் பிறந்தவன்.இனிக்கப் பேசும் இயல்புஉடையவனாய் இருப்பான்
7) பத்திரைக் கரணத்தில் பிறந்தவன், எதிலும் விரைவில் சலிப்புஅடைபவனாய் இருப்பான்,
8) சகுனிக் கரணத்தில் பிறந்தவன், நல்ல அறிவாளியாகவிளங்குவான்,
9) சதுஷ்பாத கரணத்தில் பிறந்தவன்.தத்துவ நூல்களில் விருப்பம்உடையவனாய் இருப்பான்.
10) நாகவ கரணத்தில் பிறந்தவன், மிக்க மானம் உள்ளவனாய்இருப்பான்

**பிறந்த யோகங்களில் பலன்**

விஷ்கம்ப யோகத்தில் பிறந்தவன், உறவினர்களிடம் அன்புஉள்ளவனாய் இருப்பான்
பிரீதி யோகத்தில் பிறந்தவன், துணிவு உடையவனாய் இருப்பான்,
ஆயுஷ்மான் யோகத்தில் பிறந்தவன், ஒழுக்கம் உடையவனாய்இருப்பான்
சௌபாக்கிய யோகத்தில் பிறந்தவன், தெய்வபக்தி உடையவனாய்இருப்பான்.
சோபன யோகத்தில் பிறந்தவன்,மானம் உள்ளவனாய் இருப்பான்.
அதிகண்ட யோகத்தில் பிறந்தவன்,புகழ் உடையவனாய் இருப்பான்.
சுகர்ம யோகத்தில் பிறந்தவன், புண்ணியங்களைச் செய்வதில்விருப்பம் உடையவனாய் இரு
திருதி யோகத்தில் பிறந்தவன், இனிய சொற்களைப் பேசுபவனாய்இருப்பான்.
சூல யோகத்தில் பிறந்தவன், கருணை உடையவனாய் இருப்பான்.

கண்ட யோகத்தில் பிறந்தவன், கர்வம் உடையவனாய் இருப்பான்.
விருத்தி யோகத்தில் பிறந்தவன், செல்வந்தர்களிடத்தில் நட்புஉடையவனாய் இருப்பான்.
துருவ யோகத்தில் பிறந்தவன், பெரியோரிடம் பக்திஉடையவனாய் இருப்பான்.
வியாகாத யோகத்தில் பிறந்தவன், அடிக்கடி வெளியூர் செல்வதில்விருப்பம் உடையவனாய் இருப்பான்.
ஹர்ஷண யோகத்தில் பிறந்தவன்,அறிவாளியாக இருப்பான்.
வஜ்ரயோகத்தில் பிறந்தவன், வேளாண்மையில் விருப்பம்உடையவனாய் இருப்பான்.
சித்தியோகத்தில் பிறந்தவன், எல்லாருக்கும் நல்லவனாகவிளங்குவான்.
வரீயான் யோகத்தில் பிறந்தவன்,பகைவரை ஒடுக்குவதிலேயேஆர்வம் உள்ளவனாய் இருப் பான்.
வாரீயன் யோகத்தில் பிறந்தவன்,உண்மையை மறைப்பதில்திறமை உள்ளவனாய் இருப்பா ன்.
பரிக யோகத்தில் பிறந்தவன், பிறரை ஏமாற்றுவதில்கெட்டிக்காரனாய் இருப்பான்
சிவயோகத்தில் பிறந்தவன், பெற்றோர்களைப் பேணுவதில் பிரியம்உள்ளவனாய் இருப்பான்.
சித்தி யோகத்தில் பிறந்தவர், செல்வ செல்வாக்கு உள்ளவர்
சாத்திய யோகத்தில் பிறந்தவர், கலைகளில் வல்லுநனாய்இருப்பான்.
சுபயோகத்தில் பிறந்தவன், பெண்களிடம் பிரியம் உள்ளவனாய்இருப்பான்.
சுப்ரயோகத்தில் பிறந்தவன், முன்கோபக்காரனாய் இருப்பான்
பிராம்ய யோகத்தில் பிறந்தவன், பிறருக்கு உதவுவதிலேயேநாட்டம் உடையவனாய் இருப்பா ன்
.

**பிறந்த திதிகளில் பலன்**

பிரதமையில் பிறந்தவன்,எதையும் ஆழமாகச் சிந்தித்துப் பார்ப்பான்.
துவிதியையில் பிறந்தவன், பொய் பேச வெட்கப்படுவான்.
திருதியையில் பிறந்தவன், நினைத்த காரியத்தை முடிப்பான்.
சதுர்த்தியில் பிறந்தவன், மந்திர சித்தியில் விருப்பம்உடையவனாய் இருப்பான்.
பஞ்சமியில் பிறந்தவன், பெண்களிடத்தில் ஆசை உடையவனாய்இருப்பான்.
சஷ்டியில் பிறந்தவன், செல்வர்களால் விரும்பப்படுவான்.
சப்தமியில் பிறந்தவன், இரக்கம் உடையவனாய் இருப்பான்.
அஷ்டமியில் பிறந்தவன்,குழந்தைகளிடத்தில் பிரியம் உள்ளவனாய்இருப்பான்.
நவமியில் பிறந்தவன்,புகழில் நாட்டம் உடையவனாய் இருப்பான்.
தசமியில் பிறந்தவன், ஒழுக்கம் மிக்கவனாய் இருப்பான்.
ஏகாதசியில் பிறந்தவன், பொருள் ஈட்டுவதில் நாட்டம்
உள்ளவனாய் இருப்பான்.
துவாதசியில் பிறந்தவன்,புதுமையான தொழில்களில் ஈடுபடுவான்.
திரயோதசியில் பிறந்தவன்,உறவினர்களோடு ஒட்டிவாழமாட்டான்.
சதுர்த்தசியில் பிறந்தவன்,பிறர் செய்த சிறு தவறுகளையும்மன்னிக்கமாட்டான்
பௌர்ணமியில் பிறந்தவன்,மிகவும் தெளிவான சிந்தனா சத்திஉடையவனாய் இருப்பான்.
அமாவாசையில் பிறந்தவன், தன் அறிவையும், ஆற்றலையும்மேலும் பெருக்கிக்கொள்வதில ேயே ஆர்வம் உடையவனாய்இருப்பான்.

# உப நட்சத்திராதிபதிகள் புரியும் உன்னதங்கள்

கடும் பணிச்சூழல் காரணமாக தாமதமாகவும் அறிவிக்கப்பட்ட தலைப்புக்கு மாறுபட்ட ஆய்வுக்கட்டுரை வெளியாகிறது. அறிவிக்கப்பட்ட தலைப்பை எதிர்பார்த்துக் காத்திருந்தவர்களுக்கு எனது மன்னிப்பைக் கோருகிறேன்.

ஒவ்வொரு மனிதனின் படைப்பிற்கும் ஒரு காரணம் உண்டு. இறைவனின் படைப்பில் யார் எப்போது எந்த நிலையில் இருந்து செயல்படவேண்டும் என்பதெல்லாம் மனிதர்களுக்கு மட்டுமல்ல உயிரினங்களுக்கும் பிறக்கும்போதே தீர்மானிக்கப்பட்டது. படைப்பின் காரணங்களை ஆன்மிகம் மூலமும் ஜோதிடம் மூலமும் ஆழ்ந்து அறிந்தவர்கள், எல்லாம் அவன் செயல் என்று அமைதிபெறுகிறார்கள். இயற்கை எனும் இறைவன் வகுத்த நியதிகளை மீற முயல்கிறான் மனிதன். முடியாதபோது சோர்வுறுகிறான் அல்லது தனது ஏமாற்றத்தை தாங்கிக்கொள்ள இயலாமல் பிற மனிதனையும் நாசம் செய்யத்துணிகிறான். இன்றைய உலக வன்முறைகளுக்கும் தீவிரவாதத்திற்கும் இதுவே அடிப்படை.

கே.பி. முறை ஜோதிடத்தில் நட்சத்திராதிபதிகள், உப நட்சத்திராதிபதிகள் மற்றும் உப உப நட்சத்திராதிபதிகள் முறையானது மிகவும் நுணுக்கமான பல விஷயங்களை அறிய உதவுகிறது. ஒருவரது வாழ்வில் என்ன சம்பவங்கள் நடக்கும் என்பதையும் அவை எப்போது நடக்கும் என்பதையும் அறிய உப நட்சத்திராதிபதிகளை ஆராய வேண்டியது அவசியம். அஷ்ட வர்க்கம், யோகங்கள், ஷட்பலம், ஷோடஷாம்சம் போன்றவை பாரம்பரிய ஜோதிடத்தின் பலம் எனில் நட்சத்திராதிபதி, உப நட்சத்திராதிபதி, உப உப நட்சத்திராதிபதி போன்றவை கே.பி முறையின் முக்கிய பலம் எனலாம்.

நட்சத்திராதிபதி கிரகம் ஒரு வேலைக்குப் பொறுப்பாளி என்றால் உப நட்சத்திராதிபகி கிரகமே அக்குறிப்பிட்ட பணியை செய்யும் கிரகமாகும். உப உப நட்சத்திராதிபதி கிரகம் அக்குறிப்பிட்ட பணிக்கு உறுதுணையாக இருக்கும் கிரகமாகும்.

பின்வரும் ஜாதகத்தை கவனியுங்கள். பெரும்பாலான ஜோதிட ஆய்வாளர்களுக்குத் தெரிந்த ஜாதகம் இது.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | 05.09.1888 | | சனி ராகு |
| கே | 7.05 AM திருத்தணி | | சூரியன் சந்திரன் |
| | குரு, செவ், மா | | ல பு, சுக் |

| கிரகம் | நட்சத்திராதிபதி | **உப நட்சத்திராதிபதி** | உப உப நட்சத்திராதிபதி |
|---|---|---|---|
| லக்னம் | சூரியன் | **புதன்** | சுக்கிரன் |
| சூரியன் | சுக்கிரன் | **குரு** | புதன் |
| சந்திரன் | கேது | **ராகு** | குரு |
| செவ்வாய் | சனி | **சனி** | கேது |
| புதன் | சூரியன் | **குரு** | குரு |
| குரு | சனி | **புதன்** | குரு |
| சுக்கிரன் | சூரியன் | **புதன்** | சூரியன் |
| சனி | புதன் | **சூரியன்** | சுக்கிரன் |
| ராகு | சனி | **புதன்** | சுக்கிரன் |
| கேது | சூரியன் | **புதன்** | சந்திரன் |

**உப நட்சத்திராதிபதி உச்சமாக வந்துவிட்டால் அக்கிரகம் உச்ச பலனை தனது திசா - புக்திகளில் தரவேண்டும்**.இந்த ஜாதகத்தில் லக்னாதிபதியே உச்சமாகியுள்ளார். அப்படி உச்சமான லக்னாதிபதி புதன் ஐந்து கிரகங்களுக்கு உப நட்சத்திரமாகியுள்ளது இந்த ஜாதகத்தின் ராஜ யோகங்களுக்கு காரணமாகிறது.

வித்யாகாரனான லக்னாதிபதி புதன் லக்னத்தில் உச்சம். லக்னத்தில் நீசமான வாக்கு ஸ்தானாதிபதி சுக்கிரனையும் புதன் தனது உச்ச பலத்தால் நீச பங்கப்படுத்துகிறார்.சுக்கிரனின் உப நட்சத்திராதிபதியும் புதன் என்பது இங்கு சுக்கிரனுக்கு கூடுதல் பலம். **உச்சனுடன் இணையும் நீச கிரகம் நீச பங்கப்படும் என்பதோடு உச்சனை உப நட்சத்திராதிபதியாகக் கொண்ட நீச நிலையிலிருக்கும் கிரகங்களும் நீச பங்கமடையும் ராஜ யோகத்தை தரும் என்பது ஒரு முக்கிய விதி**. (K.P முறையில் ஜோதிட ஆய்வு செய்பவர்கள் இதை நன்கு உணரலாம்.) லக்னம் அமைந்த நட்சத்திராதிபதி சூரியன் என்பதும் அதன் உப நட்சத்திராதிபதி புதன் என்பதும் ஜாதகர் தம் வாழ்வில் ஒரு சிறந்த தலைவராக பின்னாளில் தேர்ந்தெடுக்கப்படுவார் என்பது ஜாதகருக்கு இறைவன் நிர்ணயித்த கர்மா என்பதை அறியலாம்.

லாப ஸ்தானமான 11 ஆமிடத்தில் சனியுடன் இணைந்து நின்ற **ராகு சனியைப் போன்று செயல்படுபவர்** என்பது அனைவரும் அறிந்ததே. மேலும் ராகுவின் நட்சத்திராதிபதி சனி என்பதும் உப நட்சத்திராதிபதி உச்சனான புதன் என்பதும் இங்கு கவனிக்கத்தக்கது.

வித்யாகாரகன் புதன் உச்சமானதால், ஜாதகர் புதனின் அம்சமாகவே - ஆசிரியராக வாழ்ந்து அத்தொழிலுக்கு சிறப்பு செய்தார். லக்னாதிபதியும் உச்சனுமான புதனை உப நட்சத்திரமாகக்கொண்ட ராகு திசையின் இறுதியில் ஜாதகர் சுதந்திர இந்தியாவின் முதல் துணை ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு பத்தாண்டுகள் (1952 - 1962) அப்பணிக்கு சிறப்பு சேர்த்தார். பிறகு இந்தியாவில் இரண்டாவது ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு (1962 - 1967) போற்றுதலுக்குரிய ஜனாதிபதியாக அறியப்பட்டார். ராகு திசையை அடுத்து வந்த பரம சுபக்கிரகமான குரு திசை ஜாதகரின் அறிவை உலகிற்குப் பறைசாற்றி புகழடையச் செய்தது. குருவின் உப நட்சத்திராதிபதியும் லக்னாதிபதியான உச்ச புதனே என்பதும் இங்கு முக்கியமாகக் குறிப்பிடத்தக்கது.

கால சர்ப்ப யோகத்தின் விளைவுகளை எடைபோட இன்றும் ஜோதிட ஆய்வாளர்கள் ஆராய்ந்துகொண்டிருக்கும் ஜாதகம் இது.

விரையாதிபதி கிரகமானாலும் சூரியன் ராசிக்கு அதிபதியாக வந்துவிட்டதால் தனது காரகப்படி ஜாதகரை தலைமைப்பதவிக்கு உயர்த்தவேண்டும் எனும் விதிப்படி சூரியனும் ஜாதகர் தனது வாழ்வின் மிக உயர்ந்த பதவியை எட்ட உதவினார் என்பது இங்கு கவனிக்கத்தக்கது.



ஜாதகர் நம் மதிப்பிற்குரிய முன்னாள் ஜனாதிபதி பாரத ரத்னா, இந்தியாவின் தலைசிறந்த தத்துவஞானி டாக்டர் சர்வபள்ளி ராதாகிருஷ்ணன் ஆவார். ஆசிரியர் தொழிலுக்குச் சிறப்பு செய்ததால் அவரது பிறந்த நாளை நாம் ஆசிரியர் தினமாகக் கொண்டாடுகிறோம் என்பதும் நாமனைவரும் அறிந்ததே.

கீழே மற்றொரு ஆணின் ஜாதகம்.

| | (சனி) | சந் | |
|---|---|---|---|
| ரா | 17.10.1970 | | |
| | 9.40 AM பெங்களூரு | | கேது |
| | ல சு | குரு சூ, மா | புதன் செவ் |

| கிரகம் | நட்சத்திராதிபதி | **உப நட்சத்திராதிபதி** | உப உப நட்சத்திராதிபதி |
|---|---|---|---|
| லக்னம் | புதன் | **புதன்** | குரு |
| சூரியன் | செவ்வாய் | **புதன்** | புதன் |
| சந்திரன் | சூரியன் | **ராகு** | செவ்வாய் |
| செவ்வாய் | சூரியன் | **சனி** | ராகு |
| புதன் | சந்திரன் | **சூரியன்** | ராகு |
| குரு | ராகு | **சூரியன்** | சுக்கிரன் |
| சுக்கிரன் | குரு | **ராகு** | ராகு |
| சனி(வ) | சூரியன் | **சந்திரன்** | குரு |
| ராகு | செவ்வாய் | **சந்திரன்** | சூரியன் |
| கேது | கேது | **ராகு** | புதன் |

**ஒருவர் விளையாட்டுத் துறையில் ஜொலிக்க வேண்டும் எனில் மூன்றாவது பாவம், அதன் அதிபதி, விரைவாக சிந்தித்து செயல்பட சந்திரனின் பலமும், சாதுரியமான செயல்பாட்டிற்கு புதனின் பலமும் அவசியம்.**

ஜாதகத்தில் சந்திரனும் புதனும் உச்சம். லக்னம் உச்ச புதனின் கேட்டை நட்சத்திரத்தில் அமைந்துள்ளது. அதன் உப நட்சத்திராதிபதியும் புதனே என்பது மிகச் சிறப்பு. லக்னாதிபதி செவ்வாய் புத்திகாரகன் புதனுடன் இணைந்து லாப ஸ்தானத்தில் அமைந்தது ஒருவகையில் சிறப்பென்றாலும் இரண்டும் பகைக் கிரகங்கள் என்பது மறுவகையில் குறையே. ஜாதகத்தில் மூன்றாமதிபதி சனி நீசமடைந்து வக்ரமானதால் நீச பலம் குறைகிறது. முக்கியமாக சனியின் உப நட்சத்திராதிபதி உச்ச சந்திரன் என்பதால் சனி

முழுமையாக நீசபங்கமடைந்து ராஜயோகத்தை தரவேண்டியவராகிறார். ஒரு விளைடாட்டு வீரனுக்குரிய அமைப்புகள் அனைத்தும் ஜாதகத்தில் உள்ளன.

ஜாதகர் இந்திய கிரிக்கெட் அணிக்காக விளையாடி பல சாதனைகளைப் புரிந்தவர். முக்கியமாக ஒரே இன்னிங்க்ஸில் 10 விக்கெட்டையும் வீழ்த்தி பிரம்மிக்கத்தக்க உலக சாதனை படைத்தவர்.

ஏழாமிடத்தில் உச்சமான சந்திரனின் உப நட்சத்திராதிபதி ராகு என்பதாலும் 7 ஆமிடாதிபதியும் களத்திர காரகனுமான சுக்கிரனின் உப நட்சத்திராதிபதியும் ராகு என்பதாலும் ஜாதகர் குழந்தையுடன் விவாகரத்தான பெண்ணை மறுமணம் செய்து வாழ்வளித்தார். சந்திரன் 7 ஆமிடத்தில் உச்சமானாலும் அவர் களங்கத்தைக் குறிக்கும் தேய்பிறைச் சந்திரன் என்பது இங்கு முக்கியமாகக் கவனிக்கத்தக்கது.

**ராகுவின் காரகத்துவங்களுள் களங்கம் மற்றும் விவாகரத்து போன்றவற்றை முக்கியமானவையாகும்**. (ஜோதிடர்கள் மறுமணங்கள் சாதாரணமாக நடக்கும் இன்றைய கால கட்டத்தில் இத்தகைய அமைப்புகளை பொருத்தம் பார்க்கும்போது ஆராய்வது அவசியம்). சுகஸ்தானமான நான்கமிடத்தில் ராகு நின்று குடும்ப காரகன் குரு விரையத்தில் அமைந்து சனியால் பார்க்கப்படுவது போன்றவை ஜாதகரின் திருமண நிகழ்வை படம் பிடித்துக் காட்டுகின்றன.

லக்னாதிபதி செவ்வாய் தலைமைப் பண்புகளுக்குரிய சூரியனின் உத்திர நட்சத்திரத்தில் அமைந்து உச்ச புதனுடன் இணைந்ததால் அணியை வழிநடத்தும் தலைமைப் பதவிக்கும் உயர்ந்தார் என்பது இங்கு கவனிக்கத்தக்கது.



ஜாதகர் இந்திய கிரிக்கெட் அணியின் முன்னாள் தலைவர் அணில் கும்ப்ளே.

******************************************************************************************

# தசாபுத்தி பலன்கள்

**லக்கினாதிபன் தசை /புத்தி**

லக்கினாதிபன் லக்கினத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் உடல் நலமும் பிரகாசமும் மகிழ்ச்சியும் உண்டாகும் மனத்திற்கு உற்காக மளிக்கத்தக்க நன்மைகளும் சுபகாரியங்களும் நடைபெறும், புகழும் பெருமையும் உண்டாகும் நினைத்த காரியங்கள் நன்மை பெறும் லக்கினாதிபனுடைய பலத்திற்குத் தகுந்தபடி செல்வமும், வசதியும் உடைய வாழ்க்கை அமையும்.

லக்கினாதிபன் இரண்டாம் இடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் மனைவியால் யோகம் உண்டாகும். குடும்ப சுகம் பெருகும் நல்வாக்கும், கௌரவமும் வாக்கினால் இலாபங்களும் உண்டாகும்.

லக்கினாதிபன் மூன்றாம் இடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் சகோதரர்களால் நன்மையும் தனக்கு வேண்டிய காரியங்களை செய்வதற்குத் தக்க துணைவர்கள் மற்றும் உதவியாட்கள் தாமாகவே உண்டாவதும் தமது மனோ தைரியத்தால் வெற்றியும் புகழும் அமைவதும் யோக சுகத்தில் லயிப்பும் சகோரரர்களுக்கு நன்மையும் உண்டாகும்.

லக்கினாதிபன் நான்காம் இடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் தாயால் அல்லது மாமன் வர்க்கத்தாரால் நன்மைகளும் வித்தையும் வீடுவாகனங்கள் சேர்வதும் அவற்றால் இலாபங்கள் உண்டாவதும் தன் சகோதரர்களுக்குப் பொருள் இலாபங்கள் ஏற்பட்டு அதனால் தானும் லாபங்கள் அடைதலும் வியாபார விருத்தியும் தொடர்ந்து மேன்மைகளும் உண்டாகும்.

லக்கினாதிபன் ஐந்தாம் இடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் புத்திரர்களால் லாபங்களும் தன் புத்தியாலும் வித்தைகளாலும் மேலான புகழ் இவற்றை அடைவதும் மற்றும் உபதேசம் பெறுவது வீடு வாகனங்களால் லாபங்கள் உண்டாவதும் ஆகும். லக்கினாதிபன் ஐந்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் தசை ஆரம்பத்தில் புத்திரசோகம் ஏற்படும் என்பது சிலர் கருத்து.

லக்கினாதிபன் ஆறாம் இடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் அக்காலத்தில் பகை,

வம்புகுகள், கடன்கள் நோய்கள் முதலியவற்றால் பலவிதமான கஷ்டங்களும் துக்கங்களும் உண்டாகும். மனைவியை இழக்க நேரிடும். தன் மக்களின் சம்பாத்தியத்தால் வாழ்க்கை நடத்த நேரிடும் தாயாதிகளால் குடும்ப சிக்கல்கள் பாகப் பிரிவினை போன்ற தொல்லைகளும் உண்டாகும். கோயில் சொத்துக்களை அனுபவிக்கவும் அவ்வழியாகவே நஷ்டங்களை அடையவும் நேரிடும்.

லக்கினாதிபன் ஏழாம் இடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் திருமணம் மகப்பேறு போன்ற நன்மைகள் உண்டாகும் அல்லது தன் மகளுக்கு மணம் செய்து கொடுத்து பேரப்பிள்ளைகளை அடைவதும் கூடும். கூட்டு வியாபாரம் அமையும். வழக்குகளில் வெற்றி பெற்று தன் பகைவரின் சொத்துக்களை அடையவும் கூடும் பிராயணங்களால் இலாபங்கள் உண்டாகும்.

லக்கினாதிபன் எட்டாம் இடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் மரண பயம் அல்லது அதற்குச் சமமான கண்டங்கள் உண்டாகும். கடனால் அவமானங்கள் ஏற்படும். திருடர்களுடன் சம்பந்தம் ஏற்படும். அதனால் சிறை தண்டனைகள் அனுபவிக்கும் படியாகவும் நேரலாம். பலவிதமான கஷ்ட நஷ்டங்களும் துன்பங்களும் உண்டாகும்.

லக்கினாதிபன் ஒன்பதாம் இடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் தந்தை வழி சொத்துக்கள் கிடைக்கும். மனைவியால் பாக்கிய விருத்தியும் சொத்துச் சேர்க்கையும் உண்டாகும். சகல விதங்களிலும் மேலான சுகங்கள் நிறைந்த வாழ்க்கை உண்டாகம் தன் சகோதரனுக்கும் நன்மை உண்டாகும்.

லக்கினாதிபன் பத்தாம் இடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் தொழில் மேன்மை வியாபார விருத்தி தன் பெயர் நாலாதிசைகளிலும் பரவுதல், அந்நிய நாடுகளிலும் வியாபாரத் தொடர்புகள் ஏற்படல், வியாபார நிமித்தமாகவும் தீர்த்தயாத்திரை ஸ்தல தரிசனம் போன்ற காரியங்களுக்காவும் பிரயாணங்கள் முதலியவை ஏற்படும்.

லக்கினாதிபன் பதினொன்றாம் இடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் பலவிதங்களிலும் பொருள் லாபம் ஏற்படும். தன் மூத்த சகோதரர்ருக்கு லாபங்கள் சுகபாக்கிய விருத்திகளும் உண்டாகும். தன் பிள்ளைகளுக்கு திருமண பாக்கியம் மகப்பேறு முதலியன உண்டாகும். பெண் தொடர்பு ஏற்படும், தாய்க்கு மரணம் ஏற்படும்.

லக்கினாதிபன் பன்னிரெண்டாம் இடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் சொத்துக்களை துறந்து பற்றற்ற வாழ்க்கையும் மோட்ச மார்க்கத்தில் மனம் செல்வதும் மந்திர வித்தைகள் இரகசியமான விஷயங்கள் மற்றும் பிறவிக்கு அப்பாற்பட்ட விஷயங்களையும் அறிய முற்படுதலும் போன்ற பலன்கள் உண்டாகும். பக்தி சிரத்தை அதிகமாகும். லக்கினாதிபன் கெட்டுப்போயிருந்தால் கஞ்சத்தனமும் பெரும் சூது, கபடத்தனம் முதலானவற்றின் மூலம் பணம் சேர்க்க முயற்சியும் அதனால் சில

தோல்விகளும் நஷ்டங்களும் அன்னியர் மனைவியின் சேர்க்கையும் அதனால் அவமானம் பொருட்செலவுகளும் உண்டாகும்.

மேற்படி பலன்களை மற்ற திசைகளில் லக்கினாதிபனுடைய புத்தி நடைபெறும் காலங்களுக்கும் இணைத்துத் பலன் அறிந்து கொள்ள வேண்டும். ஒரு கிரகத்திற்கு இரண்டு ஆதிபத்தியம் ஏற்பட்டால் அந்த இரண்டில் எந்த வீட்டில் அமைந்துள்ளதோ அதற்குரிய பலனையே விசேஷமாக செய்யும் அப்படித் தன் சொந்த வீடுகளில் ஒன்றியிருக்காமல் வேறு வீடுகளில் இருக்கும்போது லக்கினத்தை எண்ணும்போது முதலாவதாக வரும் ஸ்தானத்தின் பலனை தன் திசை அல்லது புத்தி நடைபெறும் காலத்தில் பாதிவரையிலும் நடத்திப் பிறகு இரண்டாவதாக வரும் ஸ்தானத்தின் பலனை நடத்துவார். லக்கினாதிபன் அஷ்டமாதிபதியாகவும் ஆகும் பொழுது (மேஷ லக்கினத்தில் பிறந்தவர்களுக்கு செவ்வாய், துலாலக்கனத்தில் பிறந்தவர்களுக்கு சுக்கிரன்) தன் திசையின் பிற்பகுதியிலும் லக்கினாதிபனுக்குரிய யோக பலன்களை நடத்துவர்.

**இரண்டாமாதிபன் தசை/புத்தி**

இரண்டாமாதிபன் லக்கினத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் பண விஷயங்களிலேயே அதிகமான கவனமாக இருக்கவேண்டும் இல்லையென்றால் பிறர் கண்டனங்களுக்கு ஆளாக நேரிடும். குடும்பத்தை விருத்தி செய்து மேலான நிலைமைக்கு கொண்டு வருவதற்காக பலமான முயற்சிகள் எடுத்துக்கொள்வது. அதனால் நன்மைகளும் உண்டாகும். பிறர் காரியங்களை நிர்வாகம் செய்யும் பொறுப்பு அதாவது மைனர் சொத்துக்களுக்கு கார்டியன் ஆகுதல் அல்லது மற்றவர்களுடைய பண்ணைகள் எஸ்டேட்டுகள் போன்றவற்றை நிர்வாகம் செய்வது போன்ற பொறுப்புகள் உண்டாகும்.

இரண்டாமாதிபன் இரண்டில் இருந்து திசை நடைபெற்றால் பலவிதமான தனலாபங்களும் இரண்டு அல்லது மூன்று செயல்பாடுகளை மேற்கொள்வதும், குடும்பங்கள் உண்டாவதும் தன் வாக்கினால் தொல்லை உண்டாவதும் ஏற்படும்.

இரண்டாமாதிபன் மூன்றாம் இடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் அன்னியரின் சொத்துக்கள் மனைவியர் முதலான அனுபவித்தலும் தெய்வ நிந்தை செய்வதும் சகோதரர்களுக்கு பொருட் செலவும் மற்றும் ஜாதகருக்கு தைரிய குறைவும் உண்டாகும். மேற்படி இரண்டாமாதிபன் சுபனாக இருந்தால் அரசியல் கிளர்ச்சிகளில் ஈடுபட்டு பொது நன்மைக்காக பாடுபடுவார். இரண்டாமாதிபன் செவ்வாயாக இருந்து மூன்றாம் இடத்தில் பாவரோடு சேர்ந்து அல்லது பார்க்கப்பட்டு இருந்தால் தைரியமிக்க கொள்ளைக்காரனாவான்.

இரண்டாமாதிபன் நான்காம் இடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் ஆசிரியத் தொழில் அல்லது வாகனத் தொழில் மூலம் தன லாபங்கள் உண்டாகும். தாயாரின்

சொத்தை அடைவான். குடும்ப சுகமும் நன்மைகளும் உண்டாகும். தன் சகோரர்களை ஆதரிக்க வேண்டியதாக அல்லது அவர்களுக்காகச் செலவு செய்ய வேண்டியதாக ஏற்படும்.

இரண்டாமாதிபன் ஐந்தாம் இடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் புத்தி லாபம், வீட்டிலிருந்தே தொழில் நடத்தி அமோகமான சம்பாத்தியம் அடைதல், லாட்டரி பந்தயம் போன்றவற்றில் வெற்றிகள், தன் காலத்திலேயே தன் பிள்ளைகளுக்குச் சொத்துக்களை எழுதிவைத்தல் அல்லது அவர்களை மேலான நிலைமைக்கு கொண்டு வருதல் போன்ற பலன்கள் ஏற்படும்.

இரண்டாமாதிபன் ஆறாம் இடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் எப்பொழுதும் கடனாளியாக இருப்பதும் கடன்களால் தொல்லைகளும் வழக்குகளும் உண்டாவதும் தாய் மாமனால் சகாயமும் உண்டாகும். பகைவரால் பொருட் சேதமும் நஷ்டங்களும் உண்டாகும். முழங்கால்கள் தொடைகளில் வாத ரோகங்கள் அல்லது வேறு விதமான நோய்களும் உண்டாகும்.

இரண்டாமாதிபன் ஏழாம் இடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் அந்நியரால் தன லாபங்களும் மனைவியால் சம்பாத்தியமும் உண்டாகும். வைத்தியத் தொழிலில் அல்லது வியாபாரப்பிரதிநிதிப் போன்ற உத்தியோகங்களில் பிரயாணம் செய்வதன் மூலமாக சம்பாத்தியம் ஏற்படும். மனைவிக்கும் தாய்க்கும் அபவாதங்கள் உண்டாகும்.

இரண்டாமாதிபன் எட்டாம் இடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் வீடு வாசல் முதலான சொத்துக்கள் நஷ்டமும் தரித்திர வாழ்க்கையும் வெறும் வாய் சாமர்த்தியத்தாலேயே பிழைக்க நேர்வதும், குடும்ப சுகம் கெடுவதும், பின் சகோதரர்களுக்குப் பொருள் விரயமும் கஷ்டங்களும் உண்டாகும்.

இரண்டாமாதிபன் ஒன்பதாம் இடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் பலவிதமான வழிகளிலும் தனலாபங்களும் சுகசௌக்கியங்களும் உண்டாகும். பிதுரார்ஜித சொத்துக்கள் விருத்தியாகும். தன் சகோதரர்களுக்கு உதவியும் நன்மையும் செய்ய நேரிடும்.

இரண்டாமாதிபன் பத்தாம் இடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் தொழிலில் அமோகமான தனலாபங்களும் புது சொத்துக்களில் நிர்வாகம் தன் கைக்கு வருவதும் அதிகமான காம வேட்கையும் அதன் காரணமாக செலவுகளும் ஒன்றிரண்டு புத்திர சோகங்களும் உண்டாகும். புத்திர பாக்கியம் குறைவு என்றும் சொல்வார்கள்.

இரண்டாமாதிபன் பதினொன்றாம் இடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் முதல் இல்லாமலேயே வியாபாரம் நடத்தி அதிகமான இலாபங்களை அடைவதும், பந்தய

சூதாட்ட வியாபாரங்கள், பணத்தை வட்டிக்கு விடல் போன்றவற்றில் அதிகமான இலாபங்களும், தன் வாக்கினாலேயே லாபம் அடையும்படியான எழுத்து பேச்சுத் துறைகளால் அதிகமான செல்வப்பெருக்கும் உன்னதமான நிலைமையும் உண்டாகும்.

இரண்டாமாதிபன் பனிரெண்டில் இருந்து தசை /புத்தி நடத்தினால் செல்வம் யாவற்றையும் இழந்து தேசாந்திரம் போக நேர்வதும் அந்நியரின் பராமரிப்பில் இருப்பதும் அல்லது சிறையில் இருக்க நேர்வதும் தன் மூத்த மகனுக்கு நோயின் கஷ்டங்களும் உண்டாகும்.

மேற்படி பலன்களை மற்ற திசைகளில் இரண்டாமாதிபன் புத்தி நடைபெறும் காலங்களுக்கும் இணைத்து பலன்களை அறியவும்.

**மூன்றாமாதிபன் தசை/புத்தி**

மூன்றாமாதிபன் லக்கினத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் ஆரம்பகாலத்தில் மற்றவர்களை அண்டி தொழில் செய்து அல்லது மற்றவர்களிடம் உத்தியோகம் பார்த்து ஜீவனம் செய்து பிறகு தன் சொந்த முயற்சியாலும் மனோதைரியத்தாலும் படிப்படியாக உயர்ந்து மேல் நிலைக்கு வரமுடியும் தனக்கு எப்பொழுதும் யாராவது சகாயம் செய்ய முன் வருவார்கள் மூர்க்கத்தனமான காரியங்களில் பிரவேசமும், அதனால் கஷ்டங்களும் உண்டாகும்.

மூன்றாமாதிபன் இரண்டாம் இடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் தன் முயற்சியின்றி இருப்பதும் அன்னியருக்கு பாரமாக ஜீவனம் நடத்துவதும் அன்னியர் சொத்துக்களின் மேல் ஆசையும் நண்பர்கள் சகோதரர்களுக்கு வேண்டாதவனாக இருக்கும் நிலைமையும் எதிலும் அக்கறையற்ற தன்மையும் கோழைத்தனமும் ரோகங்களும் உண்டாகும்.

மூன்றாமாதிபன் மூன்றாம் இடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் மனோதைரியமும் எவரையும் வசப்படுத்திவிடும் தன்மையும் எங்கும் தனக்கு நண்பர்களையும் உதவிசெய்பவர்களையும் உண்டாக்கி கொள்ளும் தன்மையும் பகைவர்களை சுலபமாக வெற்றி கொள்வதும் பின் சகோதரர்களுக்கு மேன்மையும் அதிகமான சந்ததிகள் உண்டாவதும் ஆன மேலான பலன்கள் உண்டாகும்.

மூன்றாமாதிபன் நான்காம் இடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் தன் சகோதரர்களுக்கு மேன்மையும் தனக்கு வசதிகள் சுபங்கள் குறைவும் எப்பொழுதும் தான் மற்றவர்களுக்காகத் தன் சுகவசதிகளை விட்டுக் கொடுத்து அவர்களுக்காக அலைய நேர்வதும் உண்டாகும்.

மூன்றாமாதிபன் ஐந்தாம் இடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் மனைவியால்

கஷ்டங்களும் அவளால் சுகக்குறைவும் தன் பிள்ளைகளுக்கு மேன்மையும் சகோதரர்களுக்கு நன்மைகளும் உண்டாகும்.

மூன்றாமாதிபன் ஆறாம் இடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் குடும்ப கலகமும், சகோதரர்களுடன் விரோதமும் தன் பிள்ளைகளுக்குச் சம்பாத்தியம் ஏற்படுதலும் தன் வயதிலும் மூத்த பெண்களிடம் தகாத இச்சை உண்டாதலும் அன்னியர் உடைமைகள் தன் வசமாதலும் மாமன் வர்க்கத்தார்க்கு உடல் நலக்குறைவும் உண்டாகும்.

மூன்றாமாதிபன் ஏழாம் இடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் அரசாங்க விரோதம், பொதுஜனப்பகை, திருடனாக அல்லது அன்னிய ஸ்திரீகளிடம் தொடர்பு உடையவனாக வாழ்க்கை நடத்தல் பலவிதமான கஷ்டங்களும் உண்டாகும்.

மூன்றாமாதிபன் எட்டாம் இடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் சகோதர நஷ்டமும் தனக்கொரு உதவி இல்லாமல் திக்கில்லாமல் அலைதலும் கொடூர பாவ செயல்களில் விருப்பமும் அன்னியரால் அல்லது அரசாங்கத்தால் தண்டனைகளை அனுபவிப்பதும் உண்டாகும்.

மூன்றாமாதிபன் ஒன்பதாம் இடத்தில் இருந்த தசை /புத்தி நடத்தினால் சகோதரர்களுக்கு பாக்கிய விரத்தியும் தனக்கு மனைவியால் மேன்மை உண்டாவதும் தகப்பனுக்குக் கஷ்டங்களும் கெட்டப் பெயரும் பிதுர்ரார்ஜித சொத்துக்கள் விரயமும் உண்டாகும்.

மூன்றாமாதிபன் பத்தாம் இடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் மனைவியால் தொல்லைகளும் மற்றவர் சகாயத்தால் தொழிலில் மேன்மை அடைவதும் பிறர் சொத்துக்களும் தன் வசமாதலும் அன்னியப் பெண் ஒருத்தியின் தொடர்பு உண்டாவதுமான பலன்கள் நடைபெறும்.

மூன்றாமாதிபன் பதினொன்றாம் இடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் பலவிதமான தன லாபங்களும் எப்பொழுதும் காமவேட்கையும் அதனால் பொருட் செலவும் உடல் நலக்குறைவும் உண்டாகும், அன்னியரிடம் வேலை செய்வதால் அல்லது அன்னியரால் தன லாபங்கள் உண்டாகும்.

மூனறாமாதிபன் பனிரெட்டாம் இடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் கெட்ட வழிகளில் சம்பாத்தியமும் பெண்களால் லாபங்களும் மகிழ்ச்சியற்ற வாழ்க்கையும் தந்தைக்குத் திருட்டு பட்டம் அல்லது கெட்டப் பெயரும் உண்டாகும்.

மேற்படி பலன்களை மற்ற திசைகளில் மூன்றாமாதிபன் புத்தி நடைபெறும் காலங்களுக்கும் இணைத்து பலன் அறிந்து கொள்ள வேண்டும்.

**நான்காமாதிபன் தசை/புத்தி**

நான்காமாதிபன் லக்கினத்தில் தசை /புத்தி நடத்தினால் உயர்ந்த கல்வியை அடைவதும் தாயால் சுகமும் எப்பொழுதும் சொந்த வீடு வாகனம் முதலான வசதிகள் உடைய வாழ்க்கை உண்டாவது, தன்னுடைய கல்வி செல்வம் முதலானவற்றை விளம்பரப்படுத்தி கொள்ளாமல் அடக்கமாகப் போகும் சுபாவமும் உண்டாகும்.

நான்காமாதிபன் இரண்டாம் இடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் நிலம் வீடு வாகனங்கள் முதலானவற்றிலிருந்து வருமானங்களும் தான் கற்ற வித்தையால் நல்ல சம்பாத்தியமும் உண்டாகும். ஆசை நாயகிகள் ஏற்படுவர் கெட்ட சகவாசங்களும் உண்டாகும். சகல வசதிகளும் உடைய வாழ்க்கை அமையும்.

நான்காமாதிபன் மூன்றாம் இடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் தன் சகோதரர்களுக்கு சுகபாக்கியங்கள் விருத்தியாகும். செல்வமும் வசதிகளும் இல்லாத வாழ்க்கையை அனுபவிக்க நேரிடும்.

நான்காமாதிபன் நான்காம் இடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் மேலான கல்வியும் ஞானமும் புத்தியும் உண்டாகும். மந்திரி பதவி போன்ற பெரிய பதவிகள் உண்டாகும். பலவிதமான சுகங்களும் சௌக்கியங்களும் உண்டாகும் உற்றார் உறவினர், சகோகரர்கள் பந்துக்கள் புடை சூழ எல்லோருக்கும் இனியவனாக வாழ்க்கை நடத்துவான்.

நான்காமாதிபன் ஐந்தாம் இடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் மிகவும் மேலான வாழ்க்கையே உண்டாகும் பக்தியும் மேலான விஷயங்களில் ஈடுபாடும் சொந்த சம்பாத்தியங்களால் மேன்மையும் உண்டாகும்.

நான்காமாதிபன் ஆறாம் இடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் பகைவர்களால் சுபக்குறைவும் தன் வீடு முதலான சொத்துக்கள் அன்னியர்களால் அபகரிக்கப்படுதலும் தன் தாயே தன் விரோதமாதலும் திருட்டுத்தனம் போன்ற கெட்ட காரியங்களில் பிரவேசமும் பில்லி சூனியம் போன்றவைகளால் கஷ்டங்களும் உபாதைகளும் உண்டாவதுமாகும்.

நான்காமாதிபன் ஏழாம் இடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் தன் மனைவியால் சுகபாக்கியங்கள் அடைய நேரிடும். மாமனார் வீட்டு மாப்பிள்ளையாக ஆகிவிடுவதும் உண்டு. மற்றவர் முன்னிலையில் ஊமைப்போல் இருக்கும்படியான நடத்தையும் ஏற்படும். வித்தை வாகனம், புகழ் எல்லா வசதிகளம் உண்டாகும்.

நான்காமாதிபன் எட்டாமிடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் ஏதாவத ஒரு முயற்சியில் சுகங்களைத் தியாகம் செய்து வாழ நேரிடும். பெரிய விஞ்ஞானிகள்,

புதுமைகளைக் கண்டு பிடிப்பவர்கள் யாத்ரீகர்கள் மலை ஏறிகள் ஞானிகள் முதலியவர்களின் ஜாதகங்களில் இப்படிப்பட்ட கிரக அமைப்பு ஏற்படுவதுண்டு.

நான்காமாதிபன் ஒன்பதாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் பித்ரு பாக்கியத்தினால் சுகபாக்கியங்களை அடைவதும் கல்வி மேன்மையும் வாகனசுகமும், தந்தையின் தொழில் அல்லது அவரால் ஸ்தாபிக்கப்பட்ட வியாபார ஸ்தாபனத்தால் மேன்மையும் சகல சுகங்களும் உண்டாகும். டாக்ஸி, பஸ் தொழில்கள் மேன்மையடையும்.

நான்காமாதிபன் பத்தாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் தொழில் மேன்மையால் சுகபாக்கியங்களை அடைவான். தன் சொந்த முயற்சியால் ஒரு தொழிலை ஸ்தாபித்து பிரபலமாக மேன்மைக்கு கொண்டு வர முடியும் தீர்த்த யாத்திரை ஸ்தலதரிசனம் போன்ற புண்ணிய லாபங்களும் ஏற்படும்.

நான்காமாதிபன் பதினொன்றாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் தன் முயற்சி இன்றியே சகல சுகபோகங்களும் வந்தடைவதும் பொழுது போக்காக செய்யும் தொழில்களாலும் நல்ல லாபங்களும் ஆயினும் மனதில் ஏதாவது ஒரு குறை இருந்து கொண்டே இருப்பினும் இளமையிலேயே தாயை இழந்து விட நேர்வதும் உண்டு.

நான்காமாதிபன் பனிரெண்டாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் எப்போதும் நோயாளியாக இருப்பான். தன் சொந்த முயற்சியில் சுயராஜ்ஜித சொத்துக்களைச் சம்பாத்திப்பான் பலவித தான தர்மங்களைச் செய்து புகழடைவான். எவ்வளவு சம்பாதித்த போதிலும் தான் ஒரு சுகத்தையும் அனுபவிக்க முடியாமல் மனக்குறையுடன் இருக்கும்படி நேரிடும்.

**ஐந்தாமாதிபன் தசை/புத்தி**

ஐந்தாமாதிபன் லக்கினத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் தன் சொந்த முயற்சியாலும் தாயாதிகள் ஆதரவாலும் முன்னுக்கு வருவான் இரகசியங்களை அறியக்கூடிய சாமர்த்தியமும் திறமையும் உண்டாவதால் சோதிடம் மாந்திரீகம் போன்றவற்றில் திறமையும் புகழும் ஏற்படும். சூரியன் அல்லது புதனாக இருந்தால் துப்பறியும் வேலை பூமிக்கு அடியில் புதைந்துள்ள பொருள்களை கண்டு பிடித்தல் போன்ற திறமைகளும் உண்டாகும். செல்வமும் புகழும் ஏற்பட்டு மேலான வாழ்க்கை அமையும்.

ஐந்தாமாதிபன் இரண்டாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் எதிர்பாராத தனலாபங்கள் உண்டாகும். பந்தயம் சூதாட்டம் ஹேஷ்ய வியாபாரங்கள் முதலியவற்றில் லாபங்கள் உண்டாகும். வெகு செல்வந்தராகவும் முன்கோபியாகவும் இருக்க நேரிடும்.

ஐந்தாமாதிபன் மூன்றாம் இடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் எப்பொழுதும் பொருள் இலாபம், காமசுகம் முதலியவை பற்றிய சிந்தனையாக இருப்பதும் வெகுகாலம் கழித்து புத்திர பாக்கியம் உண்டாதலும் தன் பிள்ளைகளிலோன்று பிரபலம் அடைந்து தனக்கு உதவியாக அமைவதும் உண்டாகும். புத்திர தோஷங்களும் ஏற்படும்.

ஐந்தாமாதிபன் நான்காம் இடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் தனமும், புகழும் சுக வாழ்க்கையும் உண்டாகும். பெண்ணாக இருந்தால் நீண்டகாலம் தாய் வீட்டிலேயே இருந்து சகல சௌக்கியமாக இருப்பாள். மந்திரி பதவி அல்லது பெரிய ஆசிரியர் பதவியும் உண்டாகும். கல்வி மேன்மையால் புகழும் இலாபங்களும் உண்டாகும். பெரிய பதவியும் கிடைக்கும்.

ஐந்தாமாதிபன் ஐந்தாமிடத்திலேயே இருந்து தசை /புத்தி நடத்தினால் அத்திசையின் ஆரம்பத்தில் புத்திர தோஷங்கள் உண்டாகும். மேலான அறிவும் ஞானமும் உலகம் புகழத்தக்க குரு பதவியை அடைவதும் உண்டாகும் கல்விச் செருக்கால் சட்டென்று கோபம் கொள்பவராக இருப்பார்.

ஐந்தாமாதிபன் ஆறாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் தன் பிள்ளைகளே தனக்குச் சத்துரு ஆதலும் அவர்களால் மனோ வியாகூலங்களும் உண்டாகும். பிள்ளைகள் சுய சம்பாத்தியத்தால் முன்னுக்கு வருவார்கள்.

ஐந்தாமாதிபன் ஏழாமிடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் பலவிதமான தன லாபங்களும் தன் எதிரிகளையும் வசப்படுத்தி நடத்தும் திறமையும் மேலான பதவியும் புகழும் மேலும் மேலும் முன்னேற்றங்களும் உண்டாகும்.

ஐந்தாமாதிபன் எட்டாம் இடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் காசநோய் அல்லது வயிற்று நோய்களால் பலத்தத் தொல்லைகளும் நல்ல மனமில்லாதவராக வெறுக்கத் தக்க நடத்தையும் புத்திரசுகம் இல்லாமையும் உண்டாகும். பெரும்பாலும் பெண் குழந்ததைகளே உண்டாகும்.

ஐந்தாமாதிபன் ஒன்பது அல்லது பத்தாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் சகல பாக்கியங்களும் நிறைந்த மேலான வாழ்க்கை உண்டாகும், எல்லோராலும் புகழ்ந்து பாராட்டத்தக்க பெரிய ஆசிரியர் அல்லது கவிஞராகப் புகழ் பெறுவார். அரசர்களுக்குச் சமானமான வாழ்க்கை உண்டாகும். தன் குழந்தைகளும் மேலுக்கு வந்து புகழும் பெருமையும் எல்லோராலும் கொண்டாடத்தக்க நிலையும் அடைவார்கள்.

ஐந்தாமதிபன் பதினொன்றாம் இடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் வெகு செல்வமும் அநேக புத்திரர்களும், அதிகமான புகழும் உண்டாகும். ஜனத் தலைமையும்

புகழும் உண்டாகும்.

ஐந்தாமாதிபன் பன்னிரெண்டாம் இடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் தனக்குப் புத்திரர் இல்லாமல் தத்து எடுத்து அல்லது விலைக்கு ஒரு பிள்ளையை வாங்கி வளர்க்க நேரிடும். புத்திரபாக்கியம் ஏற்பட்ட போதிலும் தன் மக்கள் தன்னை விட்டுப் பிரிந்தோ, மறைந்தோ, போகும்படியாக நேரிடும் தனக்கும் பிள்ளைகளுக்கும் சரியான உறவு இருக்காது. பிள்ளைகளால் கஷ்டங்களும், நஷ்டங்களும் உண்டாகும், சதாகலமும் காமசிந்தையாய் பொருள் விரயம் செய்ய நேரிடுவது உண்டு.

**ஆறாமாதிபன் தசை/புத்தி**

ஆறாமாதிபன் லக்கினத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் எப்பொழுதும் நோயளியாக அல்லது கடனாளியாக இருப்பதும் விபத்துக்குள்ளாக நேர்தலும் வழக்கு வியாஜ்ஜியங்களில் மனோ துக்கம் அடைதலும் மரணத்திற்குச் சமமானகண்டங்களும் ஏற்படும்.

ஆறாமாதிபன் இரண்டாம் இடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் நிலையான தனமில்லாது அவதிபடுதல் தன் சொத்துக்கள் அன்னியரால் கவரப்படல் வாக்கினால் விரோதங்கள் ஏற்படுதல் குடும்ப சுகமின்மை முதலான தீயபலன்கள் நடைபெறும் பகைவர் அல்லது கள்வராலும் நோய்களாலும் பொருள் நஷ்டங்கள் உண்டாகும்.

ஆறாமாதிபன் மூன்றாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் பொருள் லாபங்களும் அன்னியர் பொருள்களை தான் அபகரித்தலும் நண்பர்கள் சகோதரர்களுடன் விரோதங்களும் பொய் வஞ்சகம் கோள் சொல்லுதல் போன்ற கெட்ட குணங்களும் உண்டாகும்.

ஆறாமாதிபன் நான்காம் இடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் தரித்திரம் எவ்விதத்திலும் சுகம் இல்லாமை சரியான கல்வி இல்லாததால் கீழான வேலைகளைச் செய்து பிழைத்தல் கஷ்ட ஜீவனம் முதலானவை உண்டாகும்.

ஆறாமாதிபன் ஐந்தாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் புத்திர நஷ்டங்களும் புத்திர விரோதங்களும் உண்டாகும் அதிகமான கல்வி வசதியோ சூட்சும அறிவோ ஏற்படாத போதிலும் குறுக்கு வழிகளில் பணம் சம்பாதித்தலும் திருட்டு புத்தியும் தீயவர் நேசமும் கெட்ட காரியங்களில் மனம் செல்வதும் பெண்களிடம் விரோதமும் உண்டாகும்.

ஆறாமாதிபன் ஆறாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால், முரட்டுத் தைரியமும் வீரசாகச செயல்களில் விருப்பமும் அவ்வழியே பணம் சம்பாதித்தலும் தன்னுடைய சொந்த பந்துக்களை விரோதம் செய்து கொண்டு அந்நிய பந்துக்களை அடைவதும்

சத்துரு ஜெயமும் அதனால் பணவசதிகளும் உண்டாகும் திடீரென்று கண்டங்களும் ஏற்படலாம்.

ஆறாமாதிபன் ஏழாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் மனைவிக்கு தனக்கு விரோதமாகவும் அல்லது பயத்தால் அடங்கி ஒடுங்கி நடப்பதும் பகை இல்லாமையும் கல்வி செல்வம் இருந்தபோதிலும் தொழில் முதலானவற்றிலும் ஈடுபாடு கொள்ளாமலும் யார்மேலும் நம்பிக்கை இல்லாமல் இருப்பதும், அற்ப லாபங்களும் அற்ப சுகங்களும் உண்டாகும்.

ஆறாமாதிபன் அஷ்மத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் திடீரென்று மரணபயம் உண்டாகும் அல்லது சதா ரோகத்துடன் அழுந்திக்கொண்டு கிடக்க நேரிடும். பெண்ணாக இருந்தால் கணவன் மரணமடைவான் தரித்திரமும் கஷ்டங்களும் பலவிதமான துக்கங்களும் உண்டாகும்.

ஆறாமாதிபன் ஒன்பதாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் தந்தை, தந்தையின் சொத்துக்கள் முதலானவற்றை இழக்க நேரிடுவதும் சுகபாக்கியங்கள் குறைவும் மரம் வெட்டுதல், கல் உடைத்தல் போன்ற தொழில்களைச் செய்து ஜீவிக்க நேர்வதும் உண்டாகும்.

ஆறாமாதிபன் பத்தாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் தொழில் முடக்கமும், அன்னியர் தயவால் பிழைக்க நேர்வதும் புகழ்கீர்த்தி நஷ்டமும் உண்டாகும் தொழில் அல்லது வியாபாரத்தில் கடன்காரர் அபகரித்துக் கொள்வார்கள் நோயால் பொருள் நாசம் உண்டாகும்.

ஆறாமாதிபன் பதினொன்றாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் கஷ்ட ஜீவனமும் மூத்த சகோதரனுக்கு கண்டமும் அன்னிய பெண்களின் சேர்க்கையும் அதனால் பொருள் நஷ்டங்களும் உண்டாகும். அன்னியருடைய சொத்துக்கள், பெண்கள் மேல் நாட்டமும் அவற்றைத் தனக்கு உடைமை ஆக்கிக்கொள்வதும் உண்டாகும்.

ஆறாமாதிபன் பனிரெண்டாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால், கல்நெஞ்சமும் ஜீவஹிம்சையும், பாவகாரிய சிந்தனையும் கொலை களவு காமம் போன்ற தீய வழிகளிலேயே நடப்பதும் அவ்வழியிலேயே பணத்தைச் சேர்த்துக் தானும் அனுபவிக்காமல் புதைத்து வைப்பதும் தலைமறைவாக வசிக்க நேர்வதும் உண்டாகும்.

**ஏழாமாதிபன் தசை/புத்தி**

ஏழாமாதிபன் லக்கினத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் இளமையில் பெண்களை சுற்றி அலையும் நடத்தையும் எப்பொழுது காமசிந்தனையாய் இருக்கும். மனைவிக்கு அடங்கிய கணவனாக இருப்பதும் அந்நிய பெண்களின் மேல் நாட்டமும் வெளியூர்

சஞ்சாரமும் கூட்டு வியாபாரங்களில் இலாபங்களும் உண்டாகும்.

ஏழாமாதிபன் இரண்டாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் பெண்களால் சம்பாத்தியமும் அவர்களாலேயே செலவுகளும் வழக்குகளால் பொருள் நஷ்டமும் அவமானங்கள் அபாயங்களும் உண்டாகும்.

ஏழாமாதிபன் மூன்றாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் குழந்தைகள் கர்ப்பத்திலேயே இறந்து பிறக்கும் மனைவியால் சுகம் உண்டாகாது சுமாரான இலாபங்களும் வெளியூர் சஞ்சாரமும் பிராயணங்களின் மூலம் நடக்கும் தொழில்களின் விருத்தியும் உண்டாகும்.

ஏழமாதிபன் நான்காமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் அதிகமான காம வேட்கையும் எப்பொழுதும் பெண்களே கதி என்று கிடப்பதும் தன் மனைவிக்கு கெட்டப்பெயர் உண்டாவதும் புதுக்காரியங்களில் ஈடுபாடும் அரசியல் வெற்றிகளும் உண்டாகும்.

ஏழாமதிபன் ஐந்தாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் நல்ல நடத்தையும் குணங்களும் உண்டாவதும் நற்குணமும் நன்னடத்தையும் உடைய மனைவி வாய்க்கப் பெறுவதும் மேலான நடத்தையும் சகல சம்பத்துக்களும் நிரம்பிய வாழ்க்கை உண்டாவதும் கூடும்.

ஏழாமதிபன் ஆறாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் தன் மனைவி தன்னைக்காட்டிலும் அதிகமான காமியாக இருத்தலும், அவளால் பொருள் செலவும் நோய்களும் உண்டாவதும் சுகம் இல்லாமையும் உண்டாகும்.

ஏழாமதிபன் ஏழாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் மனைவியால் புகழும் பேறும் அடைவதும், மனைவிக்கு அடங்கி கணவனாக இருப்பதும், தனக்கென்று எதுவும் இல்லாத அற்பஜீவனமும் உண்டாகும்.

ஏழாமாதிபன் எட்டாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் நோயாளியான மனைவியை அடைந்து அவளுடைய பணத்திற்காக அல்லது வேறு காரணத்தால் அடிமையைப்போல் இருக்க நேர்வதும் தன் சொத்துக்களை அன்னியரிடம் இழந்து விட நேர்வதும் பிரயாணத்தில் கஷ்டங்களும் உண்டாகும்.

ஏழாமாதிபன் ஒன்பதாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் அன்னிய ஜாதி மதங்களைச் சேர்ந்த பெண்களின் மேல் மோகமும் பெண்களால் பாக்கியம் உண்டாவதும் அவர்களாலேயே வாழ்க்கை நடைபெறுவதும் உண்டாகும். நீண்ட காலத்திற்கு நன்மை அளிக்கத்தக்க பெரும் காரியங்களிலேயே ஈடுபாடும் ஏற்படும்.

ஏழாமாதிபன் பத்தாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் வெளியூர் வாசம் அன்னியதேசச் சஞ்சாரம் முதலியன உண்டாகும். வெளியூர்களில் தொழில் உண்டாகும் மனைவி கெட்ட நடத்தை உடையவளாக கெட்ட பெயர் ஏற்படும்.

ஏழாமாதிபன் பதினொன்றாம் இடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் பெண்களால் அல்லது பெண்கள் விரும்பத்தக்கப்பொருட்களைத் தொழில் அல்லது வியாபாரங்களில் லாபங்களும் அதிகமான காமவேட்கையும் உண்டாகும்.

ஏழாமாதிபன் பன்னிரெண்டாம் இடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் சுய முயற்சியின்றி அந்நியர் சொற்கேட்டு நடப்பதும் தரித்திரமும் கஷ்டங்களும் மனைவிக்கு நோய் ஏற்பட்டு அவளால் பொருட் செலவுகளும் காமவேட்கைக் காரணமாக தன நஷ்டங்களும் உண்டாகும்.

**அஷ்டமாதிபன் தசை/புத்தி**

அஷ்டமாதிபன் லக்கினத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் மனைவி உயிருடன் இருக்கும் காலத்திலேயோ அல்லது அவளுக்கு மரணம் ஏற்படுவதாலோ இரண்டாவது விவாகம் ஒன்று நடைபெறலாம். அந்நியரால் பொருள் நஷ்டங்கள் உண்டாகும். எப்பொழுதும் பொருட் செலவுகளும் தனவிரயங்களும் ஏற்படும். தரித்திர வாழ்க்கையும் அற்ப ஜீவனமும் உண்டாகும்.

அஷ்டமாதிபன் இரண்டாமிடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் பொருள் நஷ்டங்களும் அந்நியரை நம்பிப் பிழைக்கும் படியான நிலைமையும் குடும்பத்தைவிட்டு பிரிந்து வசிப்பதும் ஆண்டி போன்ற நிலைமையும் தன் சொற்களுக்கு மதிப்பு இல்லாமையும் எல்லோராலும் பரிகாசம் செய்யத்தக்க வாழ்க்கையும் உண்டாகும்.

அஷ்டமாதிபன் மூன்றாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் சகோதர நஷ்டம், பூமி, பொருள் நஷ்டங்களும், தைரியமின்மை பலக்குறைவும் நபும்ஸகத் தன்மையும் உண்டாகும்.

அஷ்டமாதிபன் நான்காமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் தாய்க்குக் கண்டம், வீடு வாசல் வாகன நஷ்டம், தரித்திர வாழ்க்கை, உற்றார் உறவினர்களைப் பிரிந்து யாருடைய ஆதரவும் இல்லாமல் நிர்க்கதியாக இருக்கும் நிலைமை முதலியன உண்டாகும்.

அஷ்டமாதிபன் ஐந்தாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் புத்திர சோகம் உண்டாதல் பைத்தியம் சித்தப்பிரமை அல்லது புத்தி மாறாட்டம் எற்படல் வயிற்றில் ரோகங்கள், வாக்கிய நாசங்கள் மாமன் வர்கத்திற்கும் கஷ்டங்கள் முதலியன

உண்டாகும்.

அஷ்டமாதிபன் ஆறாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் சந்ததி நாசம், தனக்கும் கண்டங்கள் சர்பபயம், உயரத்திலிருந்து விழுவதால் அபாயம், வாதரோகத்தால் கால்கள் முடக்கம், பொருள் நஷ்டங்கள் சகலவிதமான துன்பங்களும் உண்டாகும் மரணமும் ஏற்படக்கூடும்.

அஷ்டமாதிபன் ஏழாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் மனைவிக்கு கண்டம், இரண்டாவது மனைவி ஏற்படல் தன் மருமகனுக்குக் கண்டம், பிரயாணங்களில் அபாயம், அந்நியரால் பொருள்கள் கவரபடல், வழக்கு வியாஜ்ஜியங்களில் தோல்வி போக சக்திக் குறைவு முதலிய பலன்கள் உண்டாகும்.

அஷ்டமாதிபன் அஷ்டமத்திலேயே இருந்து தசை /புத்தி நடத்தினால், வஞ்சனை, களவு போன்ற கெட்ட வழிகளிலும் குறுக்கு வழிகளிலும் பணம் சம்பாதித்தல் மனைவிக்கு கெட்ட பெயர் உண்டாதல் மனைவியின் சம்பாதியத்தால் அல்லது அன்னியர் தனத்தால் பிழைப்பு நடத்துவது போன்ற பலன்கள் உண்டாகும்.

அஷ்டமாதிபன் ஒன்பதாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் துணிந்து பாவங்களை செய்வதும், தர்ம விரோதமான காரியங்களில் ஈடுபடுதலும், அன்னியர் சொத்துக்கள், மனைவியர் மீது ஆசை கொண்டு கவர முயற்சிப்பதும் அதனால் கஷ்டங்களையும் அவமானங்களையும் அடைவது தர்மம், ஒழுங்கு மதம் ஆகியவற்றுக்கு எதிரான நடத்தையும் பிரச்சாரம் செய்வதும் உண்டாகும்.

அஷ்டமாதிபன் பத்தாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் தொழில் நாசம், பெயர் மங்குதல் மரணச் சடங்குகளில் கலந்து கொள்ள அல்லது அவற்றைச் செய்ய நேர்தல் நாடுவிட்டுச்செல்லல் சென்றவிடத்தில் எல்லாம் கஷ்டங்கள், பிச்சைக்காரனுக்குச் சமமான வாழ்க்கை முதலியன உண்டாகும்.

அஷ்டமாதிபன் பதினொன்றாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் மூத்த சகோதரன் மரணம், தான் சம்பாதித்த எல்லாப் பொருள்களையும் இழந்து தரித்திரமடைதல், தன் பிள்ளைகளுக்குத் திருமணம் முதலான சுபகாரியங்களைச் செய்து வைக்க முடியாத கஷ்டங்கள், அதனால் மனோதுக்கம் முதலியவை உண்டாகும்.

அஷ்டமாதபன் பனிரெண்டாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் பலவிதமான கஷ்டங்கள் மனோதுக்கங்களும் ஆண்மைக் குறைவும், நித்திரை இல்லாது தவிக்கும் படியான நிலைமையும், கெட்ட நடத்தையும் பாவ காரியங்களில் ஈடுபாடும் உண்டாகும்.

**ஒன்பதாமாதிபன் தசை/புத்தி**

ஒன்பதாமாதிபன் லக்கினத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் தன் முயற்சியின்றியே பாக்கியங்கள் உண்டாதலும் பொருள் லாபங்கள் சொத்துக்கள் விருத்தி குடும்பசுகம் அதிகரிப்பதும், எண்ணிய காரியங்களில் விருப்பமும் தர்ம சிந்தை மேலான எண்ணங்கள் புகழ் முதலியன விருத்தியாவதும் ஆக மிகவும் மேன்மையான பலன்கள் நடைபெறும். குடும்பத்தில் சுபகாரியங்கள் நடைபெறும். ஆலயம் கட்டுதல், குளம் வெட்டுதல் போன்ற அறப்பணிகளில் ஈடுபாடு உண்டாகும்.

ஒன்பதாமாதிபன் இரண்டாம் இடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் மேலும் மேலும் பொருட்சேர்க்கையும், சகல வித்தைகளிலும் பண்டிதனாகி புகழும் பெருமையும் அடைவதும் கதா காலட்சேபம் அல்லது ஆன்மீகப் பிரசங்கங்கள் மூலம் தனமும் புகழும் சேர்வதும் மனைவியிடம் அதிகமான பிரியமும் புத்திரபாக்கியங்களும் உண்டாகும்.

ஒன்பதாமாதிபன் மூன்றாம் இடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் சகோதரர்கள் உண்டாவர். சகோதரர்களுக்கு நன்மை உண்டாகும். செல்வம் சொத்துக்களின் மேல் அதிகமான இச்சையும் அவற்றை அடைவதற்கான கடும் முயற்சியும் உண்டாகும். தந்தை வழி சொத்துக்களுக்குச் சில விரயங்கள் ஏற்படும்.

ஒன்பதாமாதிபன் நான்காமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் கல்வியில் மேன்மையும் அழகாகப் பேசும் சாமர்த்தியமும் பெரிய அதிகாரியாக அல்லது தொழிலதிபராக அல்லது இராஜ்யாதிகாரியாக உயர்வு பெறுவதும் அரசாங்க கௌரவங்களும், புகழும் பாராட்டும் மகோன்னதமான நிலைமையும் உண்டாகும்.

ஒன்பதாமாதிபன் ஐந்தாமிடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் தர்ம காரியங்களிலேயே மனம் செல்வது மேலும் மேலும் பாக்கிய விருத்தியும் திருமணம் மக்கட்பேறு போன்ற சுகங்கள் உண்டாவதும் குடும்பத்தில் சுப காரியங்கள் நடப்பதும் குருபூஜை சிவபூஜை முதலான காரியங்களில் ஈடுபடுதலும் தீர்த்தயாத்திரையும் தயாள குணமும் நீடித்து நிற்கும் படியான தர்மகாரியங்களை செய்து வைத்தலும் அதனால் புகழ் நிலைத்திருக்கும்படியாகச் செய்வதும் உண்டாகும்.

ஒன்பதாமாதிபன் ஆறாம் இடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் பித்ரு பாக்கியத்தை இழந்து இளமையிலேயே தரித்திரத்தை அடைவதும் அம்மான்மாரால் வளர்க்கப்படுவதும் நோய்களாலும் பகைவராலும் சொத்துக்கள் அழிவும் கஷ்டங்களும் உண்டாகும்.

ஒன்பதாமாதிபன் ஏழாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் நல்ல மனைவியும் அவளால் சுகபாக்கியங்களை அடைவதும் உண்டாகும். அவன் திசையில் மேலும் மேலும் பொருள் இலாபங்களும் முயற்சிகளில் வெற்றியும் பிரயாணங்களால் நன்மைகளும் புகழும் சந்தோஷமும் உண்டாகும்.

ஒன்பதாமாதிபன் எட்டாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் இளமையிலிருந்தே வறுமை அனுபவிக்க நேரும். தந்தைக்கு மரணம், தந்தை வழி சொத்துக்கள் நாசம், மூத்த சகோதரர்களுக்குக் கஷ்டங்கள் எவ்வித பாக்கியமும் இன்றி பிறர் கையை எதிர்பார்த்து வாழும்படியான நிலை, மேலும் மேலும் துக்கம் முதலானவை உண்டாகும்.

ஒன்பதாமாதிபன் ஒன்பதாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் பல வழிகளிலும் சொத்து சுகங்கள் உண்டாவதும் இராஜ்யாதிகாரி அல்லது மடாதிபதி போன்ற உயர்ந்த பதவி ஏற்பட்டு புதுச்சொத்துக்களை நிர்வாகம் செய்யும்படியான வாய்ப்புக்கள் உண்டாவதும் தான தர்மங்களால் வெகு புகழை அடைவதும் குடும்பத்தில் சகல நன்மைகளும் ஏற்படுவதும், தன் சகோதரர்களுக்கு நன்மையும் உண்டாகும்.

ஒன்பதாமாதிபன் பத்தாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் அற நிலையங்களில் உத்தியோகம் அல்லது அவற்றின் நிர்வாக பொறுப்பை ஏற்றல் கிராமம் நகரம் அல்லது நாட்டின் தலைவராதல் வெகு புகழ் வெகு சம்பாத்தியம் சன்மானங்கள் முதலான சகல நன்மைகளும் உண்டாகும்.

ஒன்பதாமதிபன் பதினொன்றாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் அநேகவித சன்மானங்களை அடைவதும் பந்தயம் சூதாட்டம், லாட்டரி போன்றவைகளில் வெற்றியும் காதல் கேளிக்கைகளில் விருப்பமும் தயாளகுணமும் உண்டாகும்.

ஒன்பதாமதிபன் பன்னிரேண்டாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் தந்தைக்கு மரணம், தந்தையின் சொத்துக்கள் விரயமாதல் தரித்திர வாழ்க்கை, மிகவும் கஷ்ட ஜீவனம் முதலியவை உண்டாகும்.

**பத்தாமாதிபன் தசை/புத்தி**

பத்தாமதிபன் லக்கினத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் கவித்துவ சக்தியும் தான் இருந்த இடத்திலிருந்தே தொழிலும் புகழும் அடையும் படியான யோகமும் மேலும் மேலும் செல்வமும் புகழும் விருத்தியாவதும் உண்டாகும்.

பத்தாமாதிபன் இரண்டாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் எழுத்தாளர் அல்லது பிரசங்கியாக புகழும் பொருளும் அடைதலும் தொழில் விருத்தியும் குடும்ப சுகங்களும் உண்டாகும்.

பத்தாமாதிபன் மூன்றாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் தொழில் விருத்திக் குறைவும் தன் சகோதரர்களை அண்டிப்பிழைக்கும் நிலைமையும், அல்லது சொத்துக்களால் வரும் வருமானத்தைக் கொண்டு ஜீவனமும் சிறு சிறு தொழில்களை ஆரம்பித்துவிட்டு விடுதலும் எதிலும் நிலையற்ற தன்மையும் உண்டாகும்.

பத்தாமாதிபன் நான்காமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் கல்வி மேம்பாட்டால் உயர்ந்த பதவி அடைதலும் வாகன லாபம் அல்லது வாகன சம்பந்தமான விருத்தியும், குருபக்தி, தெய்வபக்தி, முதலானவைகளும் தாய் தந்தையரிடம் விஸ்வாசமும் அவர்களுக்கு நன்மையும் ஏற்படுதலும் புகழ் பராக்கிரமம் பாக்கியம் ஆகியவை விருத்தியாவதும் உண்டாகும்.

பத்தாமாதிபன் ஐந்தாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் பலவிதமான தனலாபங்களும் பல தொழில்கள் ஆரம்பித்து நடத்தி வெற்றியடைதலும் தொழிலிலே கவனமாக இருப்பதும் தொழில் சம்பந்ததப்பட்டதையும் வெகு விரைவில் கிரகித்து கொள்ளும் தன்மையும் புத்திர லாபமும் தன் மக்கள் தனக்கு மீறிய அறிவும் செல்வமும் உடையவராதலும் அல்லது தன் பிள்ளைகளிலோருவன் தனக்கு அடங்காமல் பிரிந்து போய் விடுவதுமான பலன்கள் நடைபெறும்.

பத்தாமாதிபன் ஆறாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் தன் தொழில் புகழ் முதலியவற்றை எதிரிகள் கைகொள்வதும் அல்லது அவற்றை வேறொருவனுக்கு விற்றுவிட்டு தான் புதிய தொழிலை ஆரம்பிக்க முயல்வதும் தொழில் இல்லாமல் அலைய நேர்வதும் பிற்பகுதியில் தொழில் வாய்ப்பும் சுகமும் உண்டாவதும் உண்டாகும். மொத்தத்தில் அலைச்சலும் கஷ்டங்களுமே அதிகமாக இருக்கும்.

பத்தாமாதிபன் ஏழாம் இடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் வெளியூர் அல்லது அன்னிய நாட்டில் தொழில் ஏற்படுவதும் மனைவியின் சொத்துக்களை நிர்வாகம் செய்யும் பொறுப்புகள் உண்டாவதும் மனைவியின் பணத்தைக்கொண்டு தொழில் நடத்தி மேலான நிலைக்கு வருதல் போன்ற பலன்கள் உண்டாகும். பாபக்கிரமாக இருந்தால் கெட்ட வழிகளில் சம்பாத்தியம் ஏற்படும்.

பத்தாமாதிபன் எட்டாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் நோயின் காரணமாக தொழில் முடக்கம் ஏற்படும். அபவாதம், கெட்டப் பெயர், தொழில் நஷ்டங்கள் பலத்த நஷ்டம் முதலானவை ஏற்படலாம். எவ்வித தொழிலும் இல்லாமலும் அன்னியரை அண்டிப் பிழைக்கும் படியான நிலைமையும் தேசாந்திரம் போகும்படியான நிலைமைகளும் உண்டாகும்.

பத்தாமாதிபன் ஒன்பதாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் அன்னை தந்தையர் தெய்வகுருபக்தி அவர்களுக்கு சுகமும் ஞானமும் கல்வியும் ஒழுக்கமும் நெறிதவறாத நடத்தையும் ஏற்படுவதும், அதிகமான பாக்யம் புகழ் இல்லாத அடக்கமான வாழ்க்கையும், துறவு பூணும்படியான அல்லது சன்யாச மனப்பான்மையும் உண்டாகும்.

பத்தாமாதிபன் பத்தாமிடத்தலிருந்து தசை /புத்தி நடத்தினால் கல்வி மேன்மையும் மேலான தொழிலில் தலைமை ஸ்தானமும் புகழும் உண்டாகும். தொழிலில்

நேர்மையும் முறை பிசகாத பண்பும் சத்திய நெறி நடத்தலும் புகழும் கௌரவமும் உண்டாகும்.

பத்தாமாதிபன் பதினொன்றாம் இடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் தொழிலில் மேலான நிலைமையும் தன் முயற்சி இன்றியே லாபங்கள் உண்டாதலும் பலவிதமான வருமானங்களால் சொத்து சுகம் ஏற்பட்டு எப்பொழுதும் மகிழ்ச்சிகரமான வாழ்க்கையை அனுபவித்தலும், புத்திரலாபங்களும், புத்திரர்க்கு சுகங்களும் உண்டாவதுமாகும்.

பத்தாமாதிபன் பன்னிரெண்டாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் தொழில் நஷ்டங்களும் எவ்விதத் தொழிலும் செய்ய சக்தியில்லாதவனாக இருப்பதும் தொழிலில் பகைவரால் நஷ்டங்களும் அடிமைப் பிழைப்பும் உண்டாகும்.

**பதினொன்றாமாதிபன் தசை/புத்தி**

பதினொன்றாமாதிபன் லக்கினத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் தன் பெயர் புகழ் முதலானவற்றைக் கொண்டே சம்பாத்தியங்கள் உண்டாவதும் மிகவும் உயர்ந்த உன்னதமான வாழ்க்கையும் நல்ல குணமும் எல்லோரையும் சமமாக பாவிக்கும் பரந்த நோக்கமும் நாவன்மையும் எழுத்து பேச்சுத் திறமைகளால் பொருள் லாபங்களும் உண்டாகும்.

பதினொன்றாமாதிபன் இரண்டாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் பந்தயசூதாட்ட வியாபாரங்களில் லாபங்களும் புதையல் கிடைத்தது போல் சொத்துக்கள் வந்து சேர்வதும் தன் வாக்கினாலேயே லாபங்களை அடைவதும் உண்டாகும்.

பதினொன்றாமாதிபன் மூன்றாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் எடுத்த காரியங்களில் எல்லாம் வெற்றி உண்டாகும். தானாக பொருள் வந்து சேரும். தீர்த்த யாத்திரை மகான்களின் சேர்க்கை முதலியன உண்டாகும். சகோதரர்களுக்கு லாபங்கள் உண்டாகும். ஆலயங்களைக் கட்டுதல், அற நிலையங்களை ஸ்தாபித்தல் போன்ற பொறுப்புக்களையும் ஏற்று நிதி திரட்டி அவற்றை நடத்தி வைக்கும் படியான பாக்கியமும் உண்டாகும்.

பதினொன்றாமாதிபன் நான்காமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் கல்வியால் மிக உயர்ந்த பதவியை அடைதல், ஞானியாதல் எல்லாவிதங்களிலும் சுகசௌக்கியங்கள் நிறைந்த வாழ்க்கையும் சகல நன்மைகளும் உண்டாகும்.

பதினொன்றாமாதிபன் ஐந்தாமிடத்தில் இருந்து தசை /புத்தி நடத்தினால் புத்திர லாபங்கள் ஏற்படுவதும், தனக்குத் தன் புத்திரர்களால் லாபங்கள் உண்டாவதும் மேலும் மேலும் சொத்த சுகங்கள் விருத்தியாவதும் சகலசித்திகளும் நடைபெறும் மாந்திரீகப் ஜோதிடம் போன்ற வித்தைகளும் அறியும் சக்தியும் உண்டாகும்.

பதினொன்றாமாதிபன் ஆறாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் பலவிதமான நோய்களால் பாதிக்கப்படுவதும் பகைவரால் தொல்லைகளும் அன்னிய தேசத்தில் அன்னியரிடம் கைகட்டி பிழைக்கும் படியான நிலைமையும் சொத்து சுகம் இல்லாத பரதேசி போன்ற வாழ்க்கையும் உண்டாகும்.

பதினொன்றாமாதிபன் ஏழாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் மனைவிக்கு மரணமும் இரண்டாவது அல்லது மூன்றாவது விவாகம் ஏற்படும். அன்னிய தேசங்களில் சஞ்சரிப்பதன் மூலம் லாபங்கள் உண்டாகும். அதிகமான காமவேட்கையும் அன்னிய ஸ்திரீகளை அடைவதும் உண்டாகும்.

பதினொன்றாமாதிபன் எட்டாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் தன்னுடைய சக்தி யுக்தி உழைப்பு முதலியவற்றால் அன்னியரே லாபம் அடைவார்கள் தனக்கு அற்ப லாபங்களே உண்டாகும். குடும்பத்தில் மனைவிக்கு அடங்கி நடக்கும் படியான நிலைமையும் உண்டாகும். எப்பொழுதும் எதற்காவது ஏங்கிக் கொண்டே இருக்கும கேவலமான வாழ்க்கை உண்டாகும்.

பதினொன்றாமாதிபன் ஒன்பதாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் தான தர்மங்கள் யாக எக்கியங்கள் செய்து புண்ணிய லாபங்களை அடைவதும் அரசர்களாலும் பிரபுக்களாலும் பூஜிக்கத் தக்க நிலைமையும் தர்மம் தவறாத வாழ்க்கையும் மதியூகமும் உண்டாகும்.

பதினொன்றாமாதிபன் பத்தாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் தொழில் மேதையாக விளங்குவதும் தான் கூறும் ஆலோசனைகளுக்காகவே லாபங்களை அடைதலும் தொழிற் திறமைக்காக எல்லோராலும் மதிக்கப்படத்தக்க நிலைமையும் சகல சுகங்களும் உண்டாகும்.

பதினொன்றாமாதிபன் பதினொன்றாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் பலவிதமான லாபங்களும் சுகபாக்கியங்களும் தாமே வந்தடைதலும் அழகிய இளம்பெண்களின் சகவாசமும் கலைத்திறமைகளும் கல்வியால் பிரகாசமும் உண்டாகும்.

பதினொன்றாமாதிபன் பன்னிரெண்டாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் அதிகமான காதல் வேட்கையும் பெண்களை சுலபமாக வசீகரம் செய்யும் சக்தியும் காமலீலைகளால் பொருள் விரயமும் உண்டாகும்.

**பன்னிரண்டாமாதிபன் தசை/புத்தி**

பன்னிரண்டாமாதிபன் லக்கினத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் உடல் நலக்குறைவும் கபம் சம்பந்தமான ரோகங்களும் கல்வியும் செல்வமும் இல்லாத தரித்திர வாழ்க்கையும் உண்டாகும் ஆண்மைக்குறைவு, தாம்பத்திய சுகம் இலலாமையும் உண்டாகும் தன்னம்பிக்கை இன்மையும், சுயமுயற்சி இன்மையும் வாழ்க்கையில் விரக்தியும் உண்டாகும்.

பன்னிரெண்டாமாதிபன் இரண்டாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் தரித்திர வாழ்க்கையும், தன்னுடைய வீடு மனைவி எல்லாவற்றையும் பிரிந்து சுற்றி அலையும் வாழ்க்கையும் விஷ்ணு பக்தியும் தயாள சிந்தையும் உண்டாகும்.

பன்னிரெண்டாமாதிபன் மூன்றாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் கோழைத்தனமும் எதிலும் அக்கறையற்ற தன்மையும் சகோதரர் இல்லாமையும் தனக்கு உதவி இல்லாமையும் தானே தனியாக வயிறு வளர்த்துக்கொண்டு போகும் அவல நிலைமையும் உண்டாகும்.

பன்னிரெண்டாமாதிபன் நான்காம் இடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் தாய்க்கு கண்டமும் தரித்திர வாழ்க்கையும் வீடு வாசல் சொத்து சுகங்களை இழந்து விடும்படியான நிலைமையும் கஷ்டங்களும் துக்கங்களும் உண்டாகும்.

பன்னிரெண்டாமாதிபன் ஐந்தாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் தாம்பத்திய வாழ்க்கையில் அக்கறை இல்லாமையும் புத்திர நஷ்டங்களும் புத்திர பாக்கியக் குறைவும் கல்வி இன்மையும் கெட்ட வழிகளில் செல்லும் மனப்போக்கும் தன்புத்திக்குறைவால் தன்னிடம் இருந்த சொத்துக்களையும் இழந்து விடுதலும் மந்த புத்தியின் காரணமாக தன்னுடைய சுகபாக்கியங்கள் எல்லாவற்றையும் இழந்து அலையும்படியான வாழ்க்கையும் உண்டாகும்.

பன்னிரெண்டாமாதிபன் ஆறாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் அன்னிய ஸ்திரீகளைச் சுற்றி அலைவதும் பாவசிந்தையும் புத்திர சோகங்களும் அன்னியரின் சொத்துக்களைத்தான் அடைதலும் உண்டாகும்.

பன்னிரெண்டாமாதிபன் ஏழாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் மனைவியை இழந்து விடுதலும் அல்லது மனைவியிடம் விருப்பமின்மையும் உடல் நலக்குறைவும் சக்தி இன்மையும் பொருள் நஷ்டங்களும் உண்டாகும்.

பன்னிரெண்டாமாதிபன் எட்டாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் கெட்ட நடத்தையும் பெண்களால் பொருள் விரயமும் பாவகாரியங்களில் மனம் பிரவேசித்து அலைதலும் நரகத்தை அடையும் படியான பாவங்களைச் செய்தலும் உண்டாகும்.

பன்னிரெண்டாமாதிபன் ஒன்பதாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் தந்தைக்கு மரணம், தந்தை வழி சொத்துக்களை இழத்தல், பெரிய காரியங்களில் ஆர்வமும் முயற்சியும் இல்லாமை கிடைத்தது போதும் என்ற அக்கறை இல்லாமல் வாழ்க்கையை நடத்திக்கொண்டு போகும் தன்மை, முதலானவை உண்டாகும்.

பன்னிரெண்டாமாதிபன் பத்தாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் அன்னியர் காரியங்களைச் செய்வதன் மூலம் லாபம் உண்டாகும். புத்திரபாக்கியம் இராது. தனக்கென்று தொழில், புகழ் சொத்துக்கள் முதலாவை இல்லாமல் இன்னொருவர் ஆதரவில் வாழ்க்கை நடத்தும் படியாக நேரிடும்.

பன்னிரெண்டாமாதிபன் பதினொன்றாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் தாம்பத்திய சுகம் இல்லாமலும் புத்திரபாக்கியம் இல்லாமலும் வாழ்க்கை நடத்த நேரிடும் சொத்து சுகம் இருந்த போதிலும் அனுபவிக்க வாய்ப்பு ஏற்படாது.

பன்னிரெண்டாமாதிபன் பன்னிரெண்டாமிடத்திலிருந்து தசை /புத்தி நடத்தினால் அன்னியருடைய சொத்துக்கள் மனைவியரை அடைவதும் பாவச் செயல்களில் நாட்டமும் அவற்றில் வெற்றியும் உண்டாகும் தன் பிள்ளைகளால் துக்கமும், பொருள் நாசமும் உண்டாகும் மனைவி மக்களுடன் விரோதமும் குடும்பத்தை விட்டு பிரிந்து அன்னிய ஸ்திரீயிடம் போய் சேர்ந்து விடும்படியான நிலைமையும் ஏற்படும்.

**************************************************************************************************************

## உங்களுக்கான தொழிலை தேர்ந்தெடுப்பது எப்படி?

தசாம்சமும் தொழிலும்

பாவச் சக்கரத்தைப் பற்றி எழுதிய போதே வர்க்கச் சக்கரங்களைப்பற்றி எழுதுமாறு பல்வேறு வாசகர்கள் வேண்டுகோள் விடுத்தனர். கிரகங்கள் நம் வாழ்வின் ஒவ்வொரு அங்கத்திலும் எப்படி செயல்படும் என்பதை அளவிடவே வர்க்கச் சக்கரங்கள். இவற்றில் 16 வகை சக்கரங்கள் முதன்மையானவை. இவற்றை சோடசாம்சம் என்பர். ஒரு குறிப்பிட்ட சக்கரத்திலிருந்து அது தொடர்புடைய விஷயத்தை மட்டுமே ஆராயவேண்டும் என இச்சக்கரங்களின் பயன்பாட்டை வரையறுத்த மகரிஷி பராசரர் தனது பராசர ஹோராவில் குறிப்பிட்டுள்ளார். ஆனால் திருமணம் தொடர்புடையவற்றிற்காக மட்டும் ஆராய வேண்டிய நவாம்சத்தை கிரக வலுவை மதிப்பிட இன்று ஜோதிடர்கள் அனைவரும் பயன்படுத்துகிறோம். (பயன்பாட்டிலும் இது சரியாகவே வருவது இங்கு குறிப்பிடத்தக்கது.)

**பத்தாமிடாதிபதியின் வலுவை அளவிட நவாம்சச் சக்கரத்தோடு தசாம்சச் சக்கரத்தையும் கவனிக்கவேண்டும். தசாம்சமானது ஒருவரது சுய முயற்சியால் வேலையில் பெறும் மகிழ்ச்சியையும் ஜாதகரது கர்மாவையும் குறிப்பிடும்**.

தசாம்சச் சக்கரத்தின் விசேஷங்கள்.

1.தசாம்ச சக்கரத்தில் முயற்சியைக் குறிக்கும் மூன்றாவது பாவமும் அதன் கேந்திரங்களான 6, 9, 12 ஆம் பாவங்களும் முக்கியமானவை. இதன் அதிபதிகளும் இந்த பாவங்களில் அமையும் ராசிக்கட்டத்தின் 3 மற்றும் 10 ஆமதிபதிகளும் மிகுந்த நன்மையைச் செய்யும்.

2.**தசாம்சக் கட்டத்தில் 10 ஆமிடத்தில் அமையும் கிரகங்கள் அவை சுபக்கிரகங்களானாலும் பாவக் கிரகங்களானாலும் நன்மையையே செய்யும்**.

3. கேந்திர ஸ்தானம் எனப்படும் நன்மை செய்யும் சுகஸ்தானமான நான்காமிடம் தொழிலைப் பொறுத்தவரை தடைகளையும் தாமதத்தையும் உருவாக்குவதாகும். காரணம் நான்காமிடம் சுகத்தைக் குறிப்பது 10 ஆமிடம் செயலைக் குறிப்பது. ஒருவர் செயல்படாமல் சுகமாக அமர்ந்துவிட்டால் அங்கு அவரது செயல்பாடு பாதிக்கப்படும் என்பது இதன் அடிப்படையாகும். **தசாம்ச சக்கரத்தில் நான்காமிடத்தில் அமையும் பாவக் கிரகங்கள் தீமையையே செய்யும்**.

16 வகை சோடச வர்க்கச் சக்கரங்களில் எந்த சக்கரத்திலிருந்து எதை அறிவது என்பதை காண்போம்.

1.ராசி - மெய், நிறம், தோற்றம்
2.ஹோரா - செல்வநிலை
3.திரேக்காணம் - சகோதரன், சகோதரி
4.சப்தாம்சம் - குழந்தைகள்
5.நவாம்சம் - கணவன் அல்லது மனைவி
6.தசாம்சம் - தொழில்
7.துவாதசாம்சம் - பெற்றோர்
8.திரிம்சாம்சம் - விதி
9.சோடசாம்சம் - வாகனம்
10.சஷ்டியாம்சம் - பொதுப்பலன் (தசாபுக்தி பலன்)
11.சதுர்த்தாசம் - அதிஷ்டம்
12.விம்சாம்சம் - கடவுள் நம்பிக்கை, குலதெய்வம், பக்தி
13.சதுர்விம்சாம்சம் - கல்வி
14.பம்சாம்சம் - உடல் வலிமை
15.சுவேதாம்சம் - சுகம்
16.அக்ஷவேதாம்சம் - குணம்

| | | | |
|---|---|---|---|
| | | ல<br>ராகு | மா |
| | ராசி | | |
| | 08.10.1983<br>10.10 pm | | சுக்<br>செவ் |
| | குரு<br>கேது | சனி<br>சந் | சூ<br>பு |

| | | | |
|---|---|---|---|
| | சந் | | சுக் |
| பு<br>கேது | நவாம்சம் | | சூ<br>செவ் |
| சனி<br>மா | | | ராகு |
| | குரு | | ல |

| | | | |
|---|---|---|---|
| கேது | சந் | | |
| | தசாம்சம் | | பு |
| சனி | | | |
| சூ | செவ்<br>குரு | சுக்<br>மா | ல<br>ராகு |

நான்காமிடம் ஒருவரின் இருப்பிடத்தைக் குறிக்கிறது. 12 ஆமிடம் அயனம் எனப்படும் நகர்தலைக் குறிப்பிடும். மேற்கண்ட ஜாதகத்தில் ராசிக்கட்டத்தில் 12 ஆமிடாதிபதி செவ்வாய் வாகன காரகன் சுக்கிரனோடு

சேர்ந்து நான்காமிடத்தில் சிம்மத்தில் உள்ளது. இதனால் ஜாதகர் ஓரிடத்தில் நிலையாக அமர்ந்து தொழிலை செய்ய இயலாது என்பது இதன் பொருளாகும். ஜீவன காரகன் சனி விரைவான செயல்பாட்டைக் குறிக்கும் சர ராசியாதிபதி சந்திரனுடன் இணைந்துள்ளார். ஜாதகர் வாகனச் சுற்றுலா தொழிலை மேற்கொண்டுள்ளார்.

இதை தசாம்சச் சக்கரத்தை வைத்து ஆராய்வோம்.

தசாம்சச் சக்கரத்தில் முயற்சியைக் குறிக்கும் மூன்றாமிடத்தில் ஆன்மீகக் கிரகங்களான குருவும் கேதுவும் நன்கு அமைந்துள்ளனர். (ஜாதகர் திருப்பதிக்கு பக்தர்களை அழைத்துச் செல்லும் ஆன்மீக சுற்றுலா நிறுவனம் நடத்துகிறார். மேலும் குரு ராசி, நவாம்சம் & தசாம்சத்திலும் வர்கோத்தமத்தில் உள்ளது கவனிக்கத்தக்கது. மூன்றாமதிபதி செவ்வாய் ஆட்சியில் உள்ளது சிறப்பு. 6 ஆமதிபதி சனி பகவான் 6 க்கு 12 ல் அமர்ந்தாலும் ஆட்சியில் உள்ளார். 2 மற்றும் 9 ஆமதிபதியும் வாகனம், சுற்றுலா இவற்றிற்கு காரகனுமான சுக்கிரன் பணவரவைக் குறிக்கும் இரண்டாவது பாவமான துலாத்தில் ஆட்சியில் உள்ளது இந்த வகையில் வருமானம் வரவேண்டும் என்பதை உறுதி செய்கிறது. துலாராசியும் ஒரு சர ராசி என்பது இங்கு கவனிக்கத்தக்கது. 12 ஆமதிபதியும் விரையாபதியுமான சூரியன் 3 ஆவது பாவத்திற்கு கேந்திராதிபதியாவதால் நன்மையைச் செய்யவேண்டும் ஆனால் தசாம்சத்தில் 4 ஆவது பாவத்தில் அமையும் பாவக்கிரகம் தீமையைச் செய்ய வேண்டும் என்பதால் சூரியன் தீமையையும் கலந்தே செய்யவேண்டியவராகிறார்.

ராசிச்சக்கரத்தின் 3 ஆம் பாவாதிபதி சந்திரன் தசாம்சத்தில் 8ல் மறைந்தாலும் சுக்கிரனின் பார்வை பெறுவது சிறப்பு அத்துடன் சந்திரனுக்கு கேந்திரத்தில் லக்னாதிபதியும் 10 ஆமதியுமான புதன் அமைந்தது ஜாதகரின் தொழில் ரீதியிலான முயற்சி, விருப்பம் மற்றும் கர்மாவையும் தெளிவாக விளக்குகிறது.

வர்க்கச் சக்கரங்களைப் போடவும் ஆராயவும் மிகுந்த நேரம் பிடிக்கும் என்பதாலும் அப்படி கால அவகாசமெடுத்து கணிக்குமளவுக்கு ஜோதிடனுக்கு தட்சிணை தரப்படுவதில்லை என்பதாலும் 90 சதவீத ஜோதிடர்கள் ராசி மற்றும் நவாம்சத்தோடு நின்றுவிடுகின்றனர். இன்று ஜாதகங்களைக் கணிக்க கணினிகள் பயன்படுகின்றன என்பதால் ஜோதிடர்கள் இனி வர்க்கச் சக்கரங்களைப் பயன்படுத்தலாம்.

ஆனால் இப்படி வர்க்கச் சக்கரங்களைப் பயன்படுத்துவதிலும் ஒரு சிக்கல் உண்டு. ராசிக்கட்டதில் ஒரு லக்னம் மாறும் கால இடைவெளி தோராயமாக 2 மணி நேரமாகும். நவாம்ச சக்கரத்தில் 12 நிமிடத்திற்கு ஒருமுறை லக்னம் மாறும். ஆனால் வர்க்கச் சக்கரங்களில் ஓரிரு நிமிடங்களிலேயே லக்னமும் கிரகங்களும் மாறும். எனவே ஜனன நேரம் துல்லியமான ஜாதகங்களுக்கு மட்டுமே இவற்றைப் பயன்படுத்துவது பயன் தரும். இதில் ஜனன நேரத்தில் வித்தியாசமிருக்குமென சந்தேகமேற்பட்டால் அதை சரிசெய்ய (For birth time rectification) தசாம்ச சக்கரத்தை ஜோதிட ஆராய்ச்சியாளர்கள் பயன்படுத்துவது இங்கு குறிப்பிடத்தக்கது.

எப்படியெனில் ஜாதகர் முப்பது முப்பத்தைந்து வயதில் தொழில் ரீதியாக நிலைத் தன்மை பெற்று இருப்பார். அப்போது அவரது தொழிலுக்கேற்ப தசாம்ச சக்கரம் பொருந்தும் வகையில் ஒருசில நிமிடங்களை முன்னும் பின்னும் சரி செய்து துல்லியமான ஜனன நேரத்தை காண்பது என்பது வழக்கமாகிவருவது இங்கு குறிப்பிடத்தக்கது.

**************************************************************************************************************

# லக்னமும் தொழில் அமைப்பும்

**மேஷம் லக்னமும் தொழில் அமைப்பும்**

மேஷ லக்னத்தில் பிறந்தவர்களுக்கு ஜீவன ஸ்தானாதிபதி சனி பகவானாவார். பொதுவாக, தொழில் காரகன் என வர்ணிக்கப்படக்கூடிய சனி பகவான் இந்த லக்னத்திற்கு10ம் அதிபதி என்பதால் அவர் சுக்கிரன், புதன், குரு போன்றகிரகங்களின் சேர்க்கை பெற்று பலமாக அமையப் பெற்றால், சொந்தத் தொழில் செய்து அதன் மூலம் சம்பாதிக்கக்கூடிய யோகம் உண்டாகும்.

மேஷ லக்னத்தில் பிறந்தவர்களுக்கு ஜீவனாதிபதி சனியே பாதகாதிபதியாகவும் இருப்பதால், வேலையாட்களிடமும் ஸ்பெகுலேஷன் சார்ந்த தொழில் விஷயங்களிலும் முதலீடு செய்கின்ற போது முன்னெச்சரிக்கையுடன் இருந்து நிலையான விஷயங்களில் மட்டும் முதலீடு செய்தால்,லாபங்களை அடைய முடியும். 10ம் அதிபதி சனி பலமாகஅமையப் பெற்று சுபர் பார்வையுடனிருந்தால் இரும்பு,எந்திரங்கள், வண்டி, வாகனங்களில் மூலம் அனுகூலங்கள்,பழைய பொருட்களை விற்பனை செய்யும் தொழில், கடின உடல் உழைப்பு சார்ந்த தொழில்கள் போன்றவற்றை செய்ய நேரிடும்.

சனி சுக்கிரனுடன் புதனும் இருந்தால் ஒன்றுக்கும் மேற்பட்ட தொழில் யோகம், பலரை நிர்வாகம் செய்து சொந்த தொழில் செய்யக்கூடிய யோகம் உண்டாகும்.அதுமட்டுமின்றி வணிகம், வியாபாரம், ஏஜென்ஸி கமிஷன் தொடர்புடைய தொழில்களும் ஏற்றத்தை ஏற்படுத்தும். சனி பகவானுடன் குரு சேர்க்கைப் பெற்று பலமாக இருந்தால் வெளியூர், வெளிநாட்டு தொடர்புடையவைகளாலும்,கொடுக்கல், வாங்கல், ஏஜென்ஸி கமிஷன் போன்ற வற்றாலும் சம்பாதிக்கும் வாய்ப்பு உண்டாகும். இதுமட்டுமின்றி மற்றவர்களுக்கு ஆலோசனைகள் வழங்கும் துறை, வக்கீல் பணி, நீதித்துறை, இன்சூரன்ஸ் போன்றவைகளில் சம்பாதிக்கும் வாய்ப்பு உண்டாகும்.குருபகவானுக்கு 10ம் வீடு நீச ஸ்தானம் என்பதனால் குரு வக்ரம் பெற்றிருந்தாலோ, உடன் சனி அமைந்திருந்தாலோ மட்டும்தான் கௌரவமான பணிகள் செய்யக்கூடிய வாய்ப்பு உண்டாகும். மேற்கூறியவாறு குரு அமையப் பெற்றுபுதனுடன் இணைந்திருந்தால் பள்ளிகல்லூரிகளில் ஆசிரியர், பேராசிரியர்களாக பணியுரியக்கூடிய வாய்ப்பு,மற்றவர்களுக்கு ஆலோசனைகள் வழங்குவதில் வல்லவராக விளங்கக்கூடிய வாய்ப்பு, வங்கி பணி போன்றவற்றின் மூலம் சம்பாதிக்க முடியும்.

மேஷ லக்னத்திற்கு லக்னாதிபதியான செவ்வாய்க்கு 10ம் வீடு உச்ச ஸ்தானமாகும். செவ்வாய் 10ல் அமைந்து உச்சம்,திக் பலம் பெற்று இருந்தால், மிகச் சிறந்த நிர்வாகியாக விளங்கக்கூடிய அமைப்பு, போலீஸ், இராணுவம் போன்ற

துறைகளில் பணிபுரியக்கூடிய வாய்ப்பு, பேருந்து, ரயில்வே துறை போன்றவற்றில் உயர் பதவிகளை வகிக்கும் அமைப்பு, அதிகாரமிக்க பதவிகளை அடையும் வாய்ப்புஉண்டாகும். செவ்வாய் சூரியன் சேர்க்கைப் பெற்றிருந்தால் அரசு, அரசு சார்ந்த துறைகளில் சம்பாதிக்கும் அமைப்பைக் கொடுக்கும். உடன் சனியும் பலம் பெற்றிருந்தால் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட உயர் பதவிகள் தேடிவரும். 10ல்செவ்வாய் அல்லது சூரியன் அமையப் பெற்று உடன் சந்திரன் ராகு அல்லது கேது சேர்க்கை பெற்றால் மருத்துவத் துறையில் பணிபுரியக்கூடிய வாய்ப்புஉண்டாகும். சூரியன் செவ்வாயுடன் குரு சேர்க்கை அல்லது பார்வையிலிருந்தால் கௌரவமான உத்தியோகம் கிடைக்கும்.

சனி பகவான் ராகு அல்லது கேது சேர்க்கைப் பெற்றால் வாழ்வில் பல்வேறு வகையில் சோதனைகள், சட்ட சிக்கல்கள் நிறைந்த துறைகளில் பணிபுரியக்கூடிய வாய்ப்புஉண்டாகும். அதிலும் சுபர் பார்வையின்றி இருந்தால் மற்றவர்களை ஏமாற்றிப் பிழைக்கும் அவலநிலை உண்டாகும். சனி பகவான் பலமிழந்திருந்தால் நிலையான வேலை, நல்ல வருமானம் இல்லாமல் பல்வேறு துறைகளில் கடைநிலை ஊழியராக பணிபுரியும் நிலை,அடிமைத் தொழில் செய்யக்கூடிய சூழ்நிலை உண்டாகும்.

**ரிஷபம் லக்னமும் தொழில் அமைப்பும்**

ரிஷப லக்னத்தில் பிறந்தவர்களுக்கு ஜீவன ஸ்தானாதிபதி சனி பகவானாவார். சனி 9,10 க்கு அதிபதியாகி தர்மகர்மாதிபதி என்பதாலும், லக்னாதிபதி சுக்கிரனுக்குநட்புக் கிரகம் என்பதாலும் மிகச்சிறந்த யோககாரகனாவார். ரிஷப லக்னகாரர்களுக்கு சனி ஆட்சி உச்சம் பெற்றோ,திரிகோண ஸ்தானங்களில் அமையப்பெற்றோ, திரிகோண ஸ்தானங்களில் அமையப்பெற்றோ இருந்தால், கொரவமானபதவிகளை வகிக்கும் யோகம், அதன் மூலம் நிலையான வருமானம் உண்டாகும். சனி பலம் பெற்று சுக்கிரன், புதன் போன்ற நட்புக் கிரகங்களின் சேர்க்கையுடனிருந்தால் சொந்தத் தொழில் செய்யக்கூடிய யோகம், நிலையானவருமானம், ஒரு சிறந்த முதலாளியாகி பலருக்கு வேலை கொடுக்கும் யோகம் உண்டாகும்.

மேற்கூறிய கிரகங்களில் ஏதாவது ஒரு கிரகத்தின் திசை நடைபெற்றால் எண்ணிப்பார்க்க முடியாத அளவிற்கு சம்பாதிக்கும் வாய்ப்பு, சுகமான வாழ்க்கை வாழக்கூடிய யோகமும் உண்டாகும். 10ம் அதிபதி சனி என்பதனால் இரும்பு சம்பந்தப்பட்ட தொழில், எந்திரங்கள்,வேலையாட்களை வைத்து தொழில் செய்யும் அமைப்பு,பழைய பொருட்களை வாங்கி விற்பதன் மூலம் அனுகூலங்கள் உண்டாகும்.

சனி பகவான் சுக்கிரனின் சேர்க்கையைப் பெற்றால் வண்டி வாகனங்கள் மூலமும், டிராவல்ஸ் போன்றவற்றிலும்,பெண்கள் உபயோகிக்கும் அழகு சாதனப் பொருட்கள்விற்பனை, கட்டிடத் துறைகளில் சாதிக்கும் அமைப்பு உண்டாகும். ரிஷப லக்னாதிபதி சுக்கிரன் சந்திரனின் சேர்க்கை பெற்று இந்த இரு கிரகங்களில் ஒரு கிரகம் ஆட்சிப் பெற்றாலும் பரிவர்த்தனை பெற்றாலும் கலை,இசை, சங்கீதம், சினிமா போன்ற துறைகளில் தங்களை ஈடுபடுத்தி சாதிக்கக்கூடிய அமைப்பு உண்டாகும். நல்ல வருவாய் அமையும்.

சனி பகவான் புதன் சேர்க்கைப் பெற்றிருந்தால் சொந்தமாக வியாபாரம் செய்யக்கூடிய அமைப்பு, சிறந்த வியாபாரியாக செயல்பட்டு வாழ்வில் முன்னுக்கு வரக்கூடியவாய்ப்பு உண்டாகும். இது மட்டுமின்றி கணிதம், கம்ப்யூட்டர், பங்குச் சந்தை போன்ற துறைகளிலும் ஈடுபாடு உண்டாகும். புதன்10 ல் அமையப் பெற்று குரு சேர்க்கை பெற்றால் சிறந்த அறிவாளியாக விளங்கி, மற்றவர்களை வழி நடத்துவது,ஆலோசனை கூறுவது, தாங்கள் கற்றதை பிறருக்கு கற்றுக் கொடுக்கும் தொழில் போன்றவற்றின் மூலம் சம்பாதிக்கும் வாய்ப்பு அமையும். சனி பகவான் குரு சேர்க்கையுடனிருந்தால் ஏஜென்ஸி, கமிஷன் சார்ந்த வியாபாரம், கொடுக்கல் வாங்கல் போன்றவற்றில் ஈடுபட்டு,சம்பாதிக்கும் யோகம் உண்டாகும்.

சனி பகவான் செவ்வாய் சேர்க்கையுடனிருந்தால் கூட்டுத் தொழில் செய்யும் அமைப்பு, பூமி, மனை போன்றவற்றால் சம்பாதிக்கும் வாய்ப்பு, அதிலும் சுக்கிரனுடன் இருந்தால் கட்டிடங்களை கட்டி விற்கும் துறை, கட்டிட வல்லுநராகவிளங்கக்கூடிய வாய்ப்பு உண்டாகும். சனி, செவ்வாய் இணைந்து உடன் சந்திரன் அல்லது ராகு இருந்தாலும் அல்லது ரிஷப லக்னத்திற்கு 9,12 ல் ராகு பகவான் அமையப் பெற்றாலும் வெளியூர், வெளிநாட்டு தொடர்புடைய தொழில், கடல் கடந்து அயல்நாடுகளுக்குச் சென்று சம்பாதிக்கும் வாய்ப்பு உண்டாகும். சனி பகவான் ராகு சேர்க்கை பெற்று சாதகமான ஸ்தானங்களில் அமையப் பெற்றால், எதிர்பாராத திடீர் யோகங்கள் அதிலும் குறிப்பாக பல்வேறு மறைமுகத் தொழில்களில் ஈடுபட்டு கோடி கோடியாக சம்பாதிக்கும் யோகம் உண்டாகும். அதுவே பலஹீனமாக அமைந்து விட்டால் ஒரு நிலையான வருமானம் இல்லாமல் கஷ்டப்பட வேண்டியிருக்கும்.அடிமையாக வேலை செய்யக்கூடிய அனுகூலமற்ற சூழ்நிலை உண்டாகும்.

பத்தாம் அதிபதி சனி பகவானுக்கு சூரியன், செவ்வாய் போன்றோர் பகை கிரகங்கள் என்பதனால் அரசுத்துறை யில் சம்பாதிக்கக்கூடிய வாய்ப்புகள் குறைவாகவே இருக்கும். கும்பராசியில் (10 ம் வீடு) அமையும் சூரியன், செவ்வாய்,ராகுவின் நட்சத்திரமான சதயத்தில் அமைந்து விடாமல் செவ்வாயின் நட்சத்திரமான அவிட்டத்திலோ, குருவின் நட்சத்திரமான பூராட்டத்திலோ அமைந்து இருந்தால் அரசு,அரசு சார்ந்த துறைகளில் பணிபுரியக்கூடிய அமைப்பு,அதிலும் குரு பார்வையுடன் அமைந்து இருந்தால் உயர் பதவிகள், அரசு துறையில் பதவி வகிக்கும் யோகம் உண்டாகும். சூரியன், செவ்வாய், சனியுடன் சேர்க்கை பெற்று கேந்திர திரிகோண ஸ்தானங்களில் இருந்தாலும் அரசு வழியில் நல்ல பணியினை அடைய முடியும். சூரியன், செவ்வாய் பலம் பெற்று உடன் சந்திரனோ,ராகுவோ இருந்தால் மருத்துவத்துறையில் சாதிக்கும் வாய்ப்பு உண்டாகும்.

**மிதுனம் லக்னமும் தொழில் அமைப்பும்**

மிதுன லக்னத்தில் பிறந்தவர்களுக்கு ஜீவன ஸ்தானாதிபதி குரு பகவானாவார். குரு பகவான் ஆட்சி பெற்று வலுப்பெற்றால் செல்வம், செல்வாக்கு, உயர் பதவிகளைவகிக்கக்கூடிய யோகம் மற்றும் மற்றவர்களை வழி நடத்துவதிலும் ஆலோசனை கூறுவதிலும் கைதேர்ந்தவர்களாக விளங்கக்கூடிய அமைப்பும் உண்டாகும். வங்கியில் பணிபுரியும் அமைப்பு, மக்களுக்கு சேவை செய்யக்கூடிய இடங்களில் பணிபுரியக்கூடிய வாய்ப்பு உண்டாகும். தனக்காரகன் குரு என்றாலும்

மிதுனலக்னத்திற்கு குரு பாதகாதிபதி என்பதால் கொடுக்கல்,வாங்கல் விஷயத்தில் கவனத்துடன் இருப்பது நல்லது.

இது மட்டுமின்றி கூட்டுத் தொழிலில் ஈடுபடாமல் தனித்து செயல்பட்டால்தான் லாபத்தை பெற முடியும். 10ம் அதிபதி குரு பகவான், சூரியன், செவ்வாய் சேர்க்கைப் பெற்றாலும்10ல் சூரியன். செவ்வாய் அமையப் பெற்று திக் பலம்பெற்றாலும் அரசு, அரசு சார்ந்த துறைகளில் கௌரவமானப் பதவிக¬ள் வகிக்கக்கூடிய யோகம், சிறந்த நிர்வாகியாக விளங்கி பலரை வழி நடத்தும் அமைப்பு உண்டாகும். சனி பகவானும் பலம் பெற்றிருந்தால் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட உயர் பதவிகளை வகிக்கும் உன்னத அமைப்பு உண்டாகும். 10ல் அமையக்கூடிய சூரியன்,செவ்வாயுடன் புதன் சேர்க்கைப் பெற்றால் பொறியியல் துறைகளில் பணிபுரியும் வாய்ப்பு கம்ப்யூட்டர் துறைகளில் சிறந்து விளங்கக்கூடிய அமைப்பு உண்டாகும்.

குரு பகவான் செவ்வாய் சேர்க்கை பெற்று பலமாக இருந்தால் பூமி மனை, ரியல் எஸ்டேட் துறைகளில் அனுகூலங்கள் உண்டாகி சம்பாதிக்கும் வாய்ப்பு உண்டாகும். அதிகாரமிக்க பதவிகளை அடையும் வாய்ப்பும் உண்டாகும். குரு சந்திரனுடன் சேர்க்கைப் பெற்றால் ஏஜென்ஸி, கமிஷன், உணவு வகைகள், ஜல தொடர்புடையதொழில்களில் பணிபுரியும் வாய்ப்பு ஏற்படும். குருவுடன் சந்திரன் இணைந்து உடன் புதன் அல்லது செவ்வாய் இருந்தால் கடல் சார்ந்த துறைகளில் பணிபுரியும் வாய்ப்பு,உணவகம் நடத்தும் வாய்ப்பு அமையும்.

குரு பகவான் புதனுடன் சேர்க்கை பெற்று பலமாக இருந்தால் சிறந்த அறிவாற்றலுடன் பள்ளி, கல்லூரிகளில் பணிபுரியக்கூடிய வாய்ப்பு, மற்றவர்களை வழி நடத்தக்கூடிய உன்னத திறன், வழக்கறிஞராகக் கூடிய அமைப்பு, பத்திரிகை துறை, எழுத்துத் துறைகளில் பணியாற்றும் வாய்ப்பு உண்டாகும்.

குரு சுக்கிரனுடன் சேர்க்கை பெற்று 10ல் இருந்தால் ஆடை,ஆபரணத்தொழில்கள், கலை சம்பந்தப்பட்ட பொருட்களை வியாபாரம் செய்வது, பெண்கள் உபயோகிக்கக்கூடியபொருட்கள் விற்பனை போன்றவற்றின் மூலம் சம்பாதிக்கக்கூடிய வாய்ப்பு உண்டாகும். குரு சுக்கிரனுடன் சனியும் சேர்க்கை பெற்றால் வண்டி, வாகனங்கள்,டிராவல்ஸ் தொடர்புடைய தொழில், வெளியூர், வெளிநாட்டு தொடர்புடைய தொழில்களால் அனுகூலங்கள் உண்டாகும். குரு சுக்கிரனுடன் புதன் அல்லது சந்திரனும் சேர்க்கைப் பெற்றால் கலைத்துறை, சினிமாத்துறை, சினிமா சார்ந்த உட்பிரிவுத் துறைகளில் பணிபுரியும் வாய்ப்பு, ஒன்றுக்கும் மேற்பட்ட தொழில்கள் செய்து அதன் மூலம் சம்பாதிக்கக்கூடிய வாய்ப்பு உண்டாகும். வீடு,பங்களாக்களை கட்டி விற்பனை செய்யும் வாய்ப்பு உண்டாகும். செவ்வாய், ராகு அல்லது கேது சேர்க்கைப் பெற்றால் நவீனகரமான பொருட்களை வியாபாரம் செய்வது, தகவல் தொடர்புத்துறை, மருந்து கெமிக்கல்,இராசாயணம் தொடர்புடைய தொழில்களில் சம்பாதிக்கும் வாய்ப்பு உண்டாகும்.

குரு பகவான் பலவீனமாக இருந்து சனி, ராகு போன்ற பாவகிரகங்களின் சேர்க்கை பெற்றால் நிலையான வருமானங்களை அடையக்கூடிய தொழில்கள் அமையாமல் கஷ்ட ஜீவனம் அடைய நேரிடும். சனி ராகு சேர்க்கை 10ம் வீட்டில் அமைந்து

சுபர் பார்வையின்றி இருந்தால் சட்ட சிக்கல்கள் நிறைந்த தொழில்கள் மூலம்சம்பாதிக்க நேரிடும்.

**கடகம் லக்னமும் தொழில் அமைப்பும்**

கடக லக்னத்திற்கு ஜீவனாதிபதி செவ்வாயாவார். ஜீவன ஸ்தானத்திற்கு அதிபதியான செவ்வாய் ஐந்தாம் அதிபதியாகவும் விளங்குகிறார். கேந்திர திரிகோணத்திற்குஅதிபதியான செவ்வாய் லக்னாதிபதி சந்திரனுக்கு நட்புக் கிரகம் என்பதால், இந்த லக்னத்திற்கு மிகச்சிறந்த யோக காரகனாவார். செவ்வாய் நிர்வாக காரகன் என்பதினால்,பொதுவாகவே கடக லக்னத்தில் பிறந்தவர்கள் சிறந்த நிர்வாகத் திறமை கொண்டவர்களாகவும் அதிகார குணம் மிக்கவர்களாகவும் இருப்பார்கள். அரசு, அரசு சார்ந்த துறைகளுக்கு காரகனாக சூரியன், கடக லக்னத்திற்கு 10ம் வீடான மேஷத்தில் உச்சம் பெற்று உடன் செவ்வாய் சேர்க்கை பெற்றால் அரசு, அரசு சார்ந்த துறைகளில் உயர் பதவிகளை வகிக்கக்கூடிய யோகம் உண்டாகும்.

சூரியன், செவ்வாய் இணைந்து குரு பார்வைப் பெற்றால் அரசுத் துறையில் சிறந்த நிர்வாகியாக விளங்கும் அமைப்பு,போலீஸ், ராணுவம், பாதுகாப்புத் துறைகளில் பணிபுரியும் அமைப்பு, பலருக்கு உதவி செய்யும் பண்பு உண்டாகும். சூரியன், செவ்வாய் 10 ல் அமையப் பெற்று சனி பகவானும் பலம் பெற்றிருந்தால் மக்களால் தேர்ந்தெடுக்கப்படக்கூடிய உயர் பதவிகளை வகிக்கக்கூடிய யோகம் உண்டாகும்.சூரியன், செவ்வாய் உடன் இணைந்து சந்திரன், ராகு அல்லது கேது சேர்க்கையோ, சாரமோ பெற்றால் மருத்துவத்துறையில் அறுவை சிகிச்சை நிபுணராக விளங்கக்கூடிய அமைப்பு உண்டாகும். சூரியன், செவ்வாய்,புதன் சேர்க்கைப் பெற்றிருந்தால் கட்டிடப் பொறியாளர் கம்ப்யூட்டர் பொறியாளராக விளங்கக்கூடும்.

செவ்வாய், சந்திரன், ராகு அல்லது கேது சேர்க்கைப் பெற்றால் மருந்து, கெமிக்கல் ரசாயன தொடர்புடையத் துறை, வேளாண்மை, உணவு வகைகள், ஓட்டல் எனவும்,மேற்கண்டவற்றுடன் இணைந்து குரு பார்வையும் பெற்றால் அரசுத் துறையில் கௌரவமான பதவிகளை வகிக்கக்கூடிய யோகம் உண்டாகும். பொதுவாகவே செவ்வாய் தனக்கு நட்பு கிரகங்களான சூரியன், சந்திரன், குரு போன்றவர்களின் சேர்க்கை பெற்று பலம் பெற்றிருந்தால் செய்யும் தொழில் உத்தியோக ரீதியாக உயர்வுகளையும்,அரசு வழியில் உதவிகளையும் சிறப்பாகப் பெற முடியும்.

செவ்வாய், குரு, புதன் சேர்க்கைப் பெற்று வலுவாக அமையப் பெற்றால் ஒன்றுக்கும் மேற்பட்ட தொழில் செய்யும் யோகம், வங்கிப் பணிகள், வெளியூர், வெளிநாடு தொடர்புடைய தொழில், பணம் கொடுக்கல் வாங்கல், பங்குச் சந்தை மற்றும் ஏஜென்ஸி, கமிஷன் போன்றவற்றின் மூலமாக லாபங்கள் உண்டாகும். குரு, புதன் போன்றவர்கள்10ல் அமையப் பெற்றால் சிறந்த அறிவாளியாக விளங்கிமற்றவர்களை வழி நடத்தக்கூடிய யோகம், பள்ளி,கல்லூரிகளில் ஆசிரியர், பேராசிரியர்களாக விளங்கக்கூடிய அமைப்பு உண்டாகும்.

குரு புதனுடன் சனியும் பலம் பெற்றால் வக்கீல் பணி,நீதித்துறையில் பணிபுரியக்கூடிய வாய்ப்பு உண்டாகும். செவ்வாய், சனி இணைந்தோ, பரிவர்த்தனை பெற்றோ அமையப் பெற்றால் கூட்டுத் தொழில் மூலமாக அனுகூலம், கட்டிடக்கலை ரியல் எஸ்டேட்

போன்றவற்றில் சம்பாதிக்க முடியும். செவ்வாய், சுக்கிரன் சேர்க்கை பெற்று உடன் சந்திரனும் இருந்தால் கலை, இசை சம்பந்தப்பட்டதுறைகளில் நல்ல வருமானம் அமையும்,

செவ்வாய் சுக்கிரனுடன் புதன் அல்லது சனி சேர்க்கை பெற்றால் சொந்தத் தொழில் செய்யக்கூடிய யோகம்,ஒன்றுக்கும் மேற்பட்ட தொழில்களில் வருமானம் ஈட்டக்வடிய அமைப்பு உண்டாகும். செவ்வாய், சனி, ராகு சேர்க்கைப் பெற்று சுபர் பார்வையின்றி இருந்தால் சட்ட சிக்கல்கள் நிறைந்த தொழில் உண்டாகும். 10ம் வீட்டில் சனி நீசம் பெறுவதால் சனி 10ல் அமைந்து உடன் ராகு அல்லது கேதுவின் சேர்க்கைப் பெற்றால் அடிமைத் தொழில், நிலையான வருமானமற்ற நிலை ஏற்படும்.செவ்வாய் புதனுடன் சேர்க்கை பெற்று பலமாக இருந்தால் கணக்கு, கம்ப்யூட்டர் போன்ற துறைகளில் அனுகூலங்கள்,சம்பாதிக்கக்கூடிய வாய்ப்பும், கடக லக்னத்தில் பிறந்தவர்களுக்கு பூமி, மனை மூலமும், உடன் பிறந்தவர்களின் ஒத்துழைப்புடன் சம்பாதிக்கும் யோகமும் உண்டாகும்.

**சிம்ம லக்கினமும் தொழில் உத்தியோக அமைப்பும்**

சிம்ம லக்னத்தில் பிறந்தவர்களுக்கு ஜீவனாதிபதி சுக்கிர பகவானாவார். சுக்கிரன் சுக காரகன் என்பதால் அவர் கேந்திர திரிகோண ஸ்தானங்களில் அமையப் பெற்று தனக்கு நட்பு கிரகங்களான சனி, புதன் போன்றவர்களின் சேர்க்கையுடன், சுபர் பார்வையும் பெற்றிருந்தால் நல்ல நிலையான ஜீவனம் செய்து சம்பாதிக்கக்கூடிய வாய்ப்பு,அதன் மூலம் சுக வாழ்வு, சொகுசு வாழ்வு வாழக்கூடிய யோகம் உண்டாகும். அதிலும் இப்படி சேர்க்கைப் பெற்று பலம் பெற்ற புதன், சனி, சுக்கிரன் போன்ற கிரகங்களின் தசா புக்தி காலங்களில் சிறப்பான வருமானமும், கூட்டுத் தொழில், சொந்த தொழில் செய்து சம்பாதித்து மிகப் பெரியஅளவில் செல்வந்தராகக்கூடிய அற்புதமான அமைப்பும் உண்டாகும்.

சிம்ம லக்னத்திற்கு 10ம் அதிபதி சுக்கிரன் கலை காரகன் என்பதாலும், சுக்கிரனே 3ம் வீட்டிற்கு அதிபதியாக இருப்பதாலும் இந்த லக்னத்தில் பிறந்தவர்களுக்கு கலை,இசை சம்பந்தப்பட்ட விஷயங்களில் ஈடுபாடு அதிகம்இருக்கும். சுக்கிரன் பலமாக அமைந்து சுபர் பார்வையுடனிருந்தால் ஆடை, ஆபரணங்கள், பெண்கள் உபயோகப்படுத்தக்கூடிய பொருட்களைக் கொண்ட தொழிலில சம்பாதிக்க முடியும். சுக்கிரன் தன லாப அதிபதியான புதனின் சேர்க்கை பெற்றிருந்தால் மற்றவர்களை வழி நடத்தும் திறன், அறிவாற்றல்,பேச்சாற்றல், எழுத்தாற்றல், கதை, கவிதை எழுதக்கூடிய கற்பனை ஆற்றல், சினிமாத் துறைகளில் உள்ள உட்பிரிவுகளில் பணிபுரியக்கூடிய வாய்ப்பு அமையும். அதிலும் 10ல் புதன் பலம் பெறும் போது சிம்ம லக்னத்தில் பிறந்தவர்களுக்கு பத்திரிகைத் துறை, புத்தக பதிப்பு,சொந்தமாக தொழில் செய்து சம்பாதிக்கக்கூடிய வாய்ப்புஉண்டாகும். சுக்கிரன் புதன், குருவுடன் சேர்க்கைப் பெற்றிருந்தால் ஆசிரியர் பணி, மற்றவர்களுக்கு ஆலோசனை வழங்கக்கூடிய பணி, தனது அறிவாற்றலால்முன்னேறும் வாய்ப்பு, பள்ளி கல்லூரிகளில் பணிபுரியக்கூடிய வாய்ப்பு உண்டாகும்.

லக்னாதிபதி சூரியன் 10ம் வீட்டில் பலம் பெற்று செவ்வாய் சேர்க்கைப் பெற்றிருந்தால் நல்ல நிர்வாகத் திறமை,கௌரவமான பதவிகள் தேடி வரக்கூடிய வாய்ப்பு, உயர் பதவிகளை வகிக்கும் யோகம் உண்டாகும். செவ்வாய் பலமாக அமைந்திருந்தால் நல்ல

நிர்வாகியாக பணிபுரிந்து எந்தத் துறையில் செயல்பட்டாலும், அதில் மற்றவர்களை வழி நடத்துவதில் வல்லவராக விளங்க முடியும். சுக்கிரன்,சூரியன், செவ்வாய் சேர்க்கை பெற்றால் அரசு, அரசு சார்ந்த துறைகளில் நல்ல வேலை அமையும். 10 ல் சூரியன், குரு சேர்க்கை பார்வையுடனிருந்தால் நல்ல வேலை அமைந்து அதன் மூலம் சம்பாதித்து வாழ்வில் முன்னேற்றமடைய முடியும்.

சுக்கிரன் சனி சேர்க்கை பெற்றிருந்தால் கூட்டுத் தொழிலில் சம்பாதிக்கும் அமைப்பு, வண்டி வாகனங்கள் மற்றும் டிராவல்ஸ் மூலம் சம்பாதிக்கும் அமைப்பு உண்டாகும். நல்ல வேலையாட்களும் கிடைக்கப்பெற்று அவர்களாலும் முன்னேற்றமான பலன்கள் அமையும். சுக்கிரன் சந்திரன் சேர்க்கை பெற்று 9,12 ல் ராகு அமையப் பெற்றால் வெளியூர், வெளிநாடு சம்மந்தமுடைய தொழில்கள் மூலம் முன்னேற்றம் உண்டாகும். இதுமட்டுமின்றி சந்திரன் 10ல் உச்சம் பெற்றுஅமைந்திருந்தால், கடல் சார்ந்த பணிகளில் பணிபுரியும் அமைப்பு, ஜல சம்பந்தப்பட்ட தொழில், உணவு வகைகள் சம்பந்தப்பட்ட தொழில், உணவகம் நடத்தும் வாய்ப்பு உண்டாகும். சுக்கிரன், செவ்வாயுடன் இணைந்து பலமாக அமையப் பெற்றிருந்தால், மனை, பூமி, கட்டிடத்துறை, ரியல் எஸ்டேட் தொடர்புடைய தொடர்புடைய தொழில்களில் பணிபுரிய நேரிடும். சந்திரன் சேது சேர்க்கை பெற்றால் மருந்து, கெமிக்கல், ரசாயன தொடர்புடைய தொழிலில் யோகம் உண்டாகும். சுக்கிர பகவான் கேந்திர திரிகோண ஸ்தானங்களில் பலமாக அமையப் பெற்று சனி, புதனுடன் இணைந்திருந்தால் சொந்தத் தொழில் மூலம் சம்பாதிக்கும் யோகம் அமையும்.

அதுவே சுக்கிரன் மறைவு ஸ்தானங்களிலிருந்தாலோ சிம்ம லக்னத்திற்கு பாதக ஸ்தானமான 9ம் வீட்டில் இருந்தாலோ உத்தியோகம் செய்யக்கூடிய வாய்ப்பே அமையும். அதிலும் குறிப்பாக சுக்கிரன் பலமிழந்து சனி, ராகு சேர்க்கை பெற்றுபகை வீடுகளில் அமைந்தால் நிலையான ஜீவனம் இல்லாமல அடிமைத் தொழில் செய்யக்கூடிய அமைப்பு,சட்டத்திற்கு புறம்பான செயல்களில் ஈடுபடக்கூடியசூழ்நிலை உண்டாகும்.

**கன்னிலக்கினமும் தொழில் உத்தியோக அமைப்பும்**

கன்னி லக்னத்தில் பிறந்தவர்களுக்கு 10 ம் அதிபதி புதன் பகவானாவார். லக்னாதிபதி புதன் பகவானே ஜீவனாதிபதியாகவும் இருப்பது மிகவும் அற்புதமானஅமைப்பாகும். பொதுவாகவே, கன்னி லக்னத்தில் பிறந்தவர்கள் சிறந்த அறிவாளியாகவும் எதிலும் சிந்தித்து செயல்படுபவர்களாகவும் இருப்பார்கள். கன்னி லக்னத்தில் பிறந்தவர்களுக்கு புதன் ஆட்சி உச்சம் பெற்று தனக்கு நட்புகிரகங்களான சுக்கிரன், சனி போன்றவர்களின் சேர்க்கை பெற்று, குரு போன்ற சுபகிரகங்களின் பார்வைப் பெற்றால் சமுதாயத்தில் சிறப்பான உயர் நிலையினை அடைவார்கள். அதிகாரமிக்க பதவிகளை அடையக்கூடிய வாய்ப்பும் உண்டாகும். புதன் வலுப்பெறுவது மட்டுமின்றி உடன் செவ்வாய் சூரியன் சேர்க்கை உண்டானால் அரசு, அரசு சார்ந்த துறைகளில் உயர்வான பதவிகளை அடைய கூடிய யோகம் அமையும். இத்துடன் சனியும் பலம் பெற்று அமைந்து விடுமாயின் மக்களால் தேர்ந்தெடுக்கக்கூடிய உயர் பதவிகள் ஜாதகரைத் தேடி வரும். இது மட்டுமின்றிபுதன் கேந்திர திரிகோணங்களில் சூரியன் சேர்க்கை பெற்று சந்திரனும் பலமாக அமைந்த குரு பார்வை செய்தாலும் அரசு, அரசு சார்ந்த

துறைகளில் பணிபுரியக்கூடிய வாய்ப்பும் அதன் மூலம் பொருளாதார மேன்மைகளும் பெற்றுவாழ்வில் உயர்வு உண்டாகும்.

புதன் பகவான் சுக்கிரன், சனி போன்ற நட்பு கிரக சேர்க்கைப் பெற்று வலுவாக அமையப் பெற்றால் சொந்தத்தொழில் செய்யும் யோகம், வியாபாரத்தில் கொடி கட்டி பறக்கும் அற்புத நிலை உண்டாகும். புதனுடன் சுக்கிரன், சந்திரன் சேர்க்கை உண்டாகி 9,12 ல் ராகு பகவான் அமையப் பெற்றால் ஜாதகர் கடல் கடந்து வெளிநாடு சென்று சம்பாதிக்கும் வாய்ப்பு உண்டாகும்.

புதனுடன் சந்திரன் அமைந்து சுக்கிரனும் சேர்க்கை பெற்றால், பயிர் தொழிலில் செய்யக்கூடிய அமைப்பு,புதனுடன் செவ்வாய் சேர்க்கைப் பெற்றால் பூமி,வேளாண்மை, விவசாய தொடர்புடைய பணிகள் அமையும். புதன், சுக்கிரன் சேர்க்கைப் பெற்று வலுப்பெற்றிருந்தால் கலை, இலக்கியம், சங்கீத துறையில் புகழ் பெறும் அமைப்பு உண்டாகும்.
புதன், சுக்கிரன் சேர்க்கை பெற்று, கேந்திர திரிகோணங்களில் அமையப் பெற்று, உடன் குரு பார்வையும் இருந்தால் பெண்கள் வழியிலும், பெண்கள் சம்பந்தப்பட்டதொழில்களிலும் சம்பாதிக்கக்கூடிய (பெண்கள் உபயோகிக்கும் பொருட்கள் ) வாய்ப்பு அமையும். இது மட்டுமின்றி கணிதம், கம்ப்யூட்டர் துறையில் வல்லவராகத் திகழ்வார். புதன் தனித்து பலம் பெற்று குரு போன்றசுபகிரகங்களின் பார்வை இருந்தால் ஆசிரியர் பணி,பதிப்பகம், பத்திரிகைத் தொழில், புத்தகம் வெளியிடும் பணி,வக்கீல் தொழில், வாக்கால் பேச்சால், முன்னேறக்கூடிய தொழில் போன்றவற்றில் அனுகூலங்கள் உண்டாகும். புதன் தனக்கு நட்பு கிரகங்களான சுக்கிரன், சனி சேர்க்கை பெறுவதும், சுக்கிரன், சனி வீடுகளில் அமைவதும் கல்விக்கு சம்பந்தமில்லாத துறைகளில் முன்னேற்றத்தை கொடுக்கும்.
சனி, புதன் சேர்க்கை பெற்று வலு இழந்திருந்தால் அடிமைத்தொழில் அமைப்பு, சனி, ராகு அல்லது கேது சேர்க்கை பெற்றிருந்தால் இழிவான வேலைகளைச்செய்யக்கூடிய அமைப்பு உண்டாகும். புதனுக்கு 7ல் சனி,செவ்வாய், ராகு கேது போன்ற பாவிகள் இருந்தால்,எவ்வளவு திறமை இருந்தாலும் வாழ்வில் மேன்மை அடைய இடையூறுகள் உண்டாகும். அது போல புதனுக்கு இருபுறமும் பாவிகள் இருந்தாலும் வாழ்வில் முன்னேற்றம் உண்டாக தடை ஏற்படும். கன்னி லக்னத்தில் பிறந்தவர்களுக்கு 7ம் இடம் பாதக ஸ்தானம் என்பதால் முடிந்தவரை கூட்டு சேர்ந்து தொழில் செய்வதை தவிர்த்து எதிலும் தனித்து செயல்படுவதும், பிறரை சார்ந்து உத்தியோகம் செய்வதும் நல்லது-.

**துலாம் லக்கினமும் தொழில் உத்தியோக அமைப்பும்**
துலாம் லக்னத்தில் பிறந்தவர்களுக்கு ஜீவன ஸ்தானாதிபதி சந்திர பகவானாவார். இவர் ஒரு வீட்டு ஆதிபத்யம் கொண்டவர். சந்திரன் ஆட்சி உச்சம் பெற்று குரு போன்ற சுபகிரக சேர்க்கையுடன், நட்பு கிரக வீடுகளில் அமையப் பெறுவாரேயானால், அந்த ஜாதகருக்கு சமுதாயத்தில் கௌரவத்துடன் வாழக்கூடிய அற்புதமான அமைப்பு,தொழில் ரீதியாக கை நிறைய சம்பாதித்து சுக வாழ்க்கை வாழக்கூடிய யோகம் உண்டாகும்.

சந்திரன் ஜல காரகன் என்பதால், அவர் துலாம் லக்னத்திற்கு 9,12 க்கு அதிபதியாக விளங்கக்கூடிய புதன் பகவானின் சேர்க்கை பெற்று 9 அல்லது 12 ல் அமையப் பெறுவாரேயானால், அந்த ஜாதகர் கடல் கடந்து அந்நிய நாடுகளுக்குச் சென்று

தொழில், உத்தியோகம் செய்து சம்பாதிக்கக்கூடிய வாய்ப்பும், அந்திய நாட்டவர்களால் அனுகூலங்களும் உண்டாகும். குரு, சந்ஙதிரன் ஆட்சி உச்சம் பெற்று 10 ம் வீட்டில் பலமாக அமையப் பெற்றிருந்தால் அரசு, அரசு சார்ந்த பணிகளில் உயர் பதவிகள் வகிக்கக்கூடிய யோகம் உண்டாகும். குரு சந்திரன் பலம் பெற்று சனி, புதன் வீட்டில் இருந்தாலும்,துலாம் லக்னத்திற்கு கேந்திர திரிகோணாதிபதியாகி யோக காரகனாகிய சனி பலம் பெற்று அமைந்திருந்தாலும்,அரசாங்க அதிகாரியாகவும், அரசுத் துறையில் பணிபுரிபவராகவும் இருக்கக்கூட வாய்ப்பு உண்டாகும். அதுபோல சந்திரனுக்கு நட்பு கிரகங்களாகிய சூரியனும்குருவும் பலம் பெற்று அமைந்தாலும் அரசுத் துறையில் பணியுரியக்கூடிய வாய்ப்பு அமையும்.

துலாம் லக்னத்திற்கு ஜீவன ஸ்தானத்தில் அந்த வீட்டதிபதியான சந்திரன் தனித்து ஆட்சிப் பெற்று பலமாக அமைந்திருந்தால் ஜல சம்பந்தப்பட்ட தொழில், உணவுசம்பந்தப்பட்ட தொழில், ஹோட்டல் தொழில் போன்றவற்ல் நல்ல லாபம் அமையும். மேலே குறிப்பிட்டது போல சந்திரன் ஜல காரகன் என்பதால், கடல் சார்ந்த துறைகளில்கூட பணி புரியக்கூடிய வாய்ப்புகள் உண்டாகும். சூரியன்,செவ்வாய் 10ல் பலம் பெறுகின்றபோது அரசு துறைகளில் பணிபுரியும் அமைப்பு, நல்ல நிர்வாகத் திறன் உண்டாகும். குரு 10ல் பலம் பெற்றிருந்தால் சிறந்த ஆலோசகராக விளங்கக்கூடிய வாய்ப்பு, தொழில் ரீதியாக முன்னேற்றம்,வாக்கால் பேச்சால் சம்பாதிக்கக்கூடிய யோகம், வக்கில் பணி, ஆசிரியர் பணி போன்றவை உண்டாகும். சுக்கிரன் பலம் பெற்று உடன் சந்திரன் 10ல் அமையப் பெற்றால் கலை, இசை, சினிமாத்துறை போன்றவற்றின் மூலம் சம்பாதிக்கக்கூடிய யோகம் உண்டாகும். சந்திரன், செவ்வாய் பலம் பெற்று 10ல் அமையப் பெற்றால் கலை, இசை,சினிமாத்துறை போன்றவற்றின் மூலம் சம்பாதிக்கக்கூடிய யோகம் உண்டாகும்.

சந்திரன், செவ்வாய் பலம் பெற்று 10ல் அமைந்தால் பூமி,மனை சம்பந்தப்பட்ட தொழிலில் சம்பாதிக்கக்கூடிய வாய்ப்பு உண்டாகும்.

புதன் பலம் பெற்று 10ல் அமைந்து குரு பார்வை இருக்குமேயானால் கணக்கு, கம்ப்யூட்டர், தொழில் மற்றும் வணிக தொடர்புடைய தொழிலில் சம்பாதிக்க முடியும். புதன், சந்திரன் சேர்க்கை பெற்று 10ல் கேது சந்திரன் சேர்க்கை பெற்றால் மருந்து, கெமிக்கல் தொடர்புடைய தொழில் வருமானம் ஈட்டக்கூடிய வாய்ப்பு உண்டாகும். சந்திரன் ஆட்சி உச்சம் பெற்று சுபர்சேர்க்கையுடன்அமைந்து 10ம் வீட்டிற்கும் குரு பார்வை இருந்தால் நிலையான வருமானம் உண்டாகும். அதுவே சந்திரன் பலமிழந்து சனி 10 ம் வீட்டில் அமைந்தாலும் சனி, ராகு போன்ற பாவகிரகங்கள் 10ம் வீட்டில் அமையப் பெற்றாலும் அடிமைத் தொழில் செய்யக்கூடிய நிலை, சில சட்டத்திற்கு விரோதமான தொழில்கள் செய்து சம்பாதிக்கக்கூடிய சூழ்நிலை உண்டாகும். சனி பார்வை 10 ம் வீட்டிற்குஇருந்தாலும், சந்திரனுக்கு இருந்தாலும் தொழில் ரீதியாக நிறைய போரட்டங்களைச் சந்திக்க நேரிடும். குறிப்பாக சந்திரன் தேய்பிறை சந்திரனாக இருந்து சனி, ராகு போன்ற பாவ கிரகங்களின் சேர்க்கைப் பெற்றால் நிலையானதொழில் என்பது அமையாமல் வாழ்க்கையானது போராட்டகரமாகவே இருக்கும்.

## விருச்சிகம் லக்கினமும் தொழில் உத்தியோக அமைப்பும்

விருச்சிக லக்னத்தில் பிறந்தவர்களுக்கு நவகிரகங்களில் முதன்மை கிரகமாக விளங்கக்கூடிய சூரிய பகவான் 10ம் அதிபதியாவார். 10ம் அதிபதி சூரியனானவர் ஒரு வீட்டு அதிபத்யம் கொண்டவர். நவகிரகங்களுக்கெல்லாம் அரசனாக விளங்கக்கூடிய சூரிய பகவானை ஜீவன ஸ்தானாதிபதியாக பெற்ற பெருமை விருச்சிக லக்னத்தில் பிறந்தவர்களுக்கு மட்டுமே உண்டு.

சூரியன் ஆட்சி உச்சம் பெற்று லக்னாதிபதி செவ்வாயின் சேர்க்கையுடன் குரு பார்வை பெற்றிருந்தாலும், தனக்கு நட்பு கிரகங்களான செவ்வாய், சந்திரன் குரு போன்றவற்றின் வீடுகளில் அமைந்திருந்தாலும் சமுதாயத்தில் கௌரவமான பதவிகளை வகிக்கக்கூடிய யோகம், அரசு,அரசு சார்ந்த துறைகளில் அதிகாரமிக்க பதவிகளைவகிக்கக்கூடிய வாய்ப்பு சிறப்பாக அமையும். சூரிய பகவான் குரு, செவ்வாய் சேர்க்கையுடன் கேந்திர திரிகோண ஸ்தானங்களில் பலம் பெற்று அமைந்திருந்தாலும்மேற்கூறிய நற்பலன்களை அடைய முடியும். 10ம் வீட்டில் சுக்கிரன், சந்திரன் இணைந்திருந்தாலும் சூரியன், சுக்கிரன்,சந்திரன் போனற் கிரக சேர்க்கைகள் 9,10,12 ம் வீடுகளில் அமையப்பெற்றிருந்தாலும் கடல் கடந்து அந்நியநாடுகளுக்குச் சென்று சம்பாதிக்கக்கூடிய வாய்ப்பு அமையும்.
சூரியன் சுக்கிரன் சேர்க்கைப் பெற்று 10ல் அமைந்து குரு பார்வை பெற்றால் கூட்டுத் தொழில் முலம் சம்பாதிக்கும் வாய்ப்பு அமையும். சுக்கிரன் 10ல் அமையப் பெற்றால் ஆடை, ஆபரணம், கலைத்துறை, பெண்கள் உபயோகிக்கும் பொருட்கள் போன்றவற்றால் சம்பாதிக்கும் வாய்ப்பு உண்டாகும்.
சூரியன் , புதன் சேர்க்கையுடன் குரு பார்வை பெற்று 10ல் அமையப் பெற்றால் கணக்கு வழக்கு தொடர்புடைய தொழில், வணிக தொழிலில் ஏற்றம் ஏற்படும்.
சூரியன், செவ்வாய் சேர்க்கைப் பெற்று பலம் பெற்றால் நிர்வாகத் தொடர்புடைய தொழில், அதிகார பதவி,பூமி,மனை, ரியல் எஸ்டேட் போன்ற துறைகளில் ஏற்றம்உண்டாகும். சூரியன், செவ்வாய் பலமாக சேர்க்கை பெறுவதுடன் சனி பகவானும் ஆட்சி உச்சம் பெறுவாரேயானால் மக்களால் தேர்ந்தெடுக்கக்கூடிய உயர் பதவி தேடி வரும். சூரியன், சந்திரன், செவ்வாய், கேது போன்ற நட்பு கிரக சேர்க்கை பெற்றிருந்தால் மருத்துவத்துறையில் பல சாதனைகள் செய்யக்கூடிய அமைப்பு ஏற்நபடும்.
குரு, புதன் இணைந்து 10ம் வீட்டில் அமையப் பெறுமேயானால் வாக்கால், பேச்சால் சம்பாதிக்கக்கூடிய வாய்ப்பு அமையும். 10 ம் வீட்டில் சந்திரன், ராகு அல்லது சந்திரன் கேது சேர்க்கை பெற்றிருந்தால் மருந்து, கெமிக்கல் போன்ற துறைகளில் சம்பாதிக்கக்கூடிய வாய்ப்பு உண்டாகும்.
விருச்சிக லக்னத்திற்கு ஜீவனாதிபதியாகிய சூரியன் கேந்திர திரிகோணங்களில் அமைந்து சுபர் பார்வையுடனிருந்ஙதால் சமுதாயத்தில் கௌரவமான நிலை, கை நிறைய சம்பாதிக்கக்கூடிய யோகம் உண்டாகும்.
அதுவே 10ம் அதிபதி சூரியன் தனக்கு பகை கிரகங்களான சனி, ராகு சேர்க்கைப் பெற்றால் சட்டத்திற்கு புறம்பான தொழில் செய்யும் அமைப்பு, அதிலும் சுபர் பார்வையின்றி இருந்து விட்டால் சட்டத்திற்கு விரோதமான வகையில்சம்பாதிக்கக்கூடிய சூழ்நிலை உண்டாகும். சனி, ராகு சேர்க்கையுடன் சூரியன் 8,12 ஆகிய மறைவு ஸ்தானங்களில்

அமைந்தாலும் ஜாதகருக்கு நிலையானவருமானமில்லாமல் கஷ்ட ஜீவனம் நடத்தக்கூடிய சூழ்நிலை உண்டாகும்.

**தனுசுலக்கினமும் தொழில் உத்தியோக அமைப்பும்**

தனுசு லக்னத்தில் பிறந்தவர்களுக்கு புதன் 10ம் அதிபதியாவார். பொதுவாகவே ஒருவர் ஜாதகத்தில் புதன் ஆட்சி உச்சம் பெற்று சுபர் பார்வையுடன் பலமாகஅமைந்திருந்தால் அவருக்கு நல்ல அறிவாற்றல்,நினைவாற்றல், எதிலும் சிந்தித்து செயல்படக்கூடிய திறன்போன்ற யாவும் சிறப்பாக இருக்கும். புதனேஜீவனாதிபதியாக விளங்குவதால் அவர் பலம் பெற்றிருந்தால் செய்யும் தொழில், உத்தியோக ரீதியாக சிறப்பான உயர்வினை அடைய முடியும். புதன் பகவான் தனக்கு நட்பு கிரகமான சுக்கிரன், சனி சேர்க்கையுடன் லக்னாதிபதி குருவின் பார்வையும் பெற்று அமைவாரேயானால் அவருக்கு நிலையான தொழிலும்,சமுதாயத்தில் ஓர் உன்னதமான நிலையும் உண்டாகும். புதன் பலம் பெற்று சூரியன், செவ்வாய் 10 ல் அமையப் பெற்றால் அரசு, அரசு சார்ந்த துறைகளில் உயர் பதவிகளை வகித்து சிறப்பான வருமானத்தை ஈட்ட முடியும். மக்கள் செல்வாக்கு காரகன் என வர்ணிக்கக்கூடிய சனி வலிமை பெற்று, 10 ல் சூரியன் செவ்வாய் இருந்தால் அரசாங்கத்தில் மக்களால் தேர்ந்தெடுக்கக்கூடிய கௌரவமானப் பதவிகள் தேடி வரும். அதிகாரமிக்க பதவிகள் அமையும். மக்களிடம் செல்வம், செல்வாக்கு உயரும். 10ல் சூரியன் செவ்வாய் இருந்தாலும் புதன் சூரியன், செவ்வாய் சேர்க்கை பெற்றாலும் அரசு, அரசு சார்ந்த துறைகளில் பணிபுரியக்கூடிய வாய்ப்பு உண்டாகும்.

புதனுடன் 9,12 க்கு அதிபதிகளான சூரியன், செவ்வாய் இணைந்து 9,12 ல் சந்திரன், ராகு போன்ற கிரகங்கள் அமையப் பெற்றால், கடல் கடந்து அந்நிய நாடுகளுக்குச் சென்று சம்பாதிக்கக்கூடிய அற்புத அமைப்பு உண்டாகும். அதுபோல புதன் பலம் பெற்று உடன் சனி, சுக்கிரன் சேர்க்கையுடன் வலிமையாக அமையப் பெற்றால், சொந்தத் தொழில் செய்யக்கூடிய யோகம், வியாபாரத்தில் லட்ச லட்சமாக சம்பாதித்து கொடி கட்டி பறக்கும் யோகம் உண்டாகும்.

புதன், செவ்வாய் சேர்க்கை பெற்றால் பூமி, வேளாண்மை,விவசாய தொடர்புடைய தொழில், பாதுகாப்பு சம்பந்தப்பட்ட துறைகளில் பணிபுரியக்கூடிய வாய்ப்பு உண்டாகும். 10ல் புதன் சந்திரன் சேர்க்கை பெற்று பலம் பெற்றால் ஜலதொடர்புடைய தொழில் செய்யக்கூடும்.

புதனுடன் சனி சேர்க்கைப் பெற்றால் இரும்பு சம்பந்தப்பட்ட தொழில் செய்யக்கூடிய வாய்ப்பும், சனி பலமிழந்திருந்தால் அடிமைத் தொழில் செய்யக்கூடிய சூழ்நிலையும் உண்டாகும். புதன், குரு சேர்க்கை பெற்றால் வக்கீல் தொழிலில் அரசாங்க ஜீவனம் உண்டாகும். புதன் சுக்கிரன் சேர்க்கை பெற்று கேந்திர திரிகோணங்களில் அமையப் பெற்று குரு பார்த்தால் பெண்கள் வழியில் முன்னேற்றம்,நல்ல தன லாபத்தை அடையக்கூடிய வாய்ப்பு உண்டாகும.புதன், சுக்கிரன், சந்திரன் இணைந்து ரிஷபம், கடகம்,துலாமில் அமையப் பெற்றால் கலை, இசை,இலக்கியத்துறைகளில் புகழ்பெறக்கூடிய வாய்ப்புஉண்டாகும்.

புதன் அதிபலம் பெற்றால் கம்ப்யூட்டர், கணிதம், வங்கிப் பணி, பங்குச் சந்தை போன்றவற்றில் அனுகூலமும், குரு போன்ற சுபர் பார்வை பெற்றால்

நூல் ஆசிரியர், பதிப்பகம்,பத்திரிகைத் துறை, புத்தக வெளியீடு, ஆசிரியர் பணிபோன்ற துறைகளில் புகழ் பெறக்கூடிய யோகமும் அமையும். ஆகவே, புதன் பகவான் பலமிழந்தாலும் பாவிகளுக்கிடையே அமையப் பெற்றாலும், புதனுக்கு 7ல் சனி, செவ்வாய், ராகு, கேது போன்ற பாவிகள் இருந்தாலும் வாழ்வில் மேன்மையடைய இடையூறுகள் உண்டாகும். ராகு, கேது போன்ற பாவிகளின் சேர்க்கைப் பெற்றால்சட்டத்திற்கு புறம்பான தொழிலில் ஈடுபடக்கூடிய அவலநிலை ஏற்படும்.
தனுசு லக்னம் உபய லக்னம் என்பதாலும், புதன் 10ம் அதிபதி மட்டுமின்றி 7ம் அதிபதியாகவும் இருப்பதாலும்,உபய லக்னத்திற்கு 7ம் அதிபதி பாதகாதிபதி என்பதாலும்,திரிகோணங்களில் அமைந்தால் மட்டும் கூட்டால் நற்பலனை பெறமுடியும். தனுசு லக்னத்திற்கு 7ம் இடம் பாதக ஸ்தானம் என்பதால், கூட்டுத் தொழில் செசய்வதைத் தவிர்த்து, எதிலும் தனித்து செயல்படுவது, உத்தியோகம்செய்வது உத்தமம்.

**மகரம்லக்கினமும் தொழில் உத்தியோக அமைப்பும்**

மகர லக்னததில் பிறந்தவர்களுக்கு ஜீவன ஸ்தானாதிபதி சுக்கிரனாவார். 10ம் வீட்டிற்கு அதிபதியான சுக்கிரபகவானே5ம் வீட்டிற்கும் அதிபதியாகி, லக்னாதிபதி சனிக்கும் நட்பு கிரகமாக விளங்குவது அற்புதமான அமைப்பாகும். 10ம் அதிபதி சுக்கிரன் தனக்கு நட்பு கிரகங்களான புதன், சனி சேர்க்கை பெற்று உடன் ராகும் இணைந்து இருந்தால் ஜாதகருக்கு செல்வம், செல்வாக்கு, தொழில் ரீதியாக உயர்வுகள், பெயர், புகழ் போன்ற யாவும் சிறப்பாக அமைந்துசுகவாழ்க்கை வாழக்கூடிய யோகம் உண்டாகும். சனி, புதன்,சுக்கிரன் சேர்க்கையோ, சுக்கிரன், புதன் இணைந்து குரு பார்வையோ அமைந்து சுக்கிரன், புதன், சனி போன்றவற்றில் ஏதாவது ஒரு கிரகத்தின் திசை நடந்தால், ஜாதகர்சொந்தமாக தொழில் செய்து, மிகச் சிறந்த செல்வந்தராக வாழக்கூடிய யோகம் உண்டாகும். பொருளாதார ரீதியாக உயர்வும், சமுதாயத்தில் ஓர் கௌரவமான நிலையும்கிட்டும். அரசு, அரசு சம்பந்தப்பட்ட துறைகளுக்கு காரகனான சூரியன் மகர லக்னத்திற்கு 10ம் வீடான துலாமில் நீசம் பெறுவதால் இந்த லக்னத்தில்பிறந்தவர்களுக்கு அரசுத் துறையைவிட தனியார் துறைகளிலும், சுய தொழில்களிலும் சம்பாதிக்க கூடிய வாய்ப்பே அதிகமாக இருக்கும். 10ல் சூரியன் நீசம்பெற்றாலும் உடன் சுக்கிரன் ஆட்சிப் பெற்று அமைந்து நீசபங்க ராஜயோகம் உண்டானால் அரசு சம்பந்தப்பட்ட துறைகளில் ஓரளவுக்கு அனுகூலத்தை அடைய முடியும். சூரியன், செவ்வாய் சேர்க்கைப் பெற்று உடன் சுக்கிரனும்10ல் இருந்தால் அரசு பணி அமையக்கூடிய வாய்ப்புகள் அமையும். சனி புதன், சுக்கிரன், சேர்க்கை பெற்று 10 ல் அமைந்தால் ஒன்றுக்கும் மேற்பட்ட தொழில்கள் செய்து அபரிமிதமான செல்வ சேர்க்கையினை பெறக்கூடிய அமைப்பு உண்டாகும். சந்திரன், சுக்கிரன் சேர்க்கைப் பெற்றால் கூட்டுத் தொழில், கலை, இசை போன்றவற்றின் மூலமாக அனுகூலங்கள், சுக்கிரன் சந்திரனுடன், புதனும்குருவும் சேர்க்கை பெற்றால் வெளியூர், வெளிநாடுகள் மூலம் தொழில் செய்யக்கூடிய வாய்ப்பு, சுக்கிரன, புதன் சேர்க்கைப் பெற்றால் கணக்கு, கம்ப்யூட்டர் சம்பந்தப்பட்ட துறை, எழுத்துத் துறை போன்றவற்றில் சம்பாதிக்கும் யோகம், சுக்கிரன் குரு சேர்க்கைப் பெற்றால் மற்றவர்களுக்கு ஆலோசனைகள் வழங்கக்கூடிய துறைகளில் உயர்வான அந்தஸ்து

அமையும். சுக்கிரன்வலுவாக அமையப் பெற்றால் ஆடை, ஆபரணங்கள்,பெண்கள் உபயோகப்படுத்தும் பொருட்கள் போன்றவற்றின் மூலம் சம்பாதிக்கக்கூடிய வாய்ப்பு உண்டாகும். மகரலக்னத்திற்கு 10ல் மக்கள் செல்வாக்கு காரகனாகிய சனி பகவான் உச்சம் பெறுவதால் ஒருவரின் ஜாதகத்தில் சனி உச்சம் பெற்று சூரியனும், செவ்வாயும் பலமாக அமைந்திருந்தால் மக்களால் தேர்ந்தெடுக்கக்கூடிய உயர் பதவிகள் தேடி வரும். சந்திரன், செவ்வாய், சூரியன் சேர்க்கை பெற்று 10ல் இருந்தால் மருத்துவத்துறையில் சாதனை செய்ய முடியும். சந்திரன், ராகு சேர்க்கைப் பெற்றிருந்தால் மருந்து, கெமிக்கல் துறையில் வல்லுனராக முடியும். 10ம் வீட்டில் குரு, புதன் இணைந்திருந்தால் வாக்கல், பேச்சால் சம்பாதிக்கும் யோகம்,ஆசிரியர் பணி, வக்கீல் தொழில் அமையும்.

அதுவே, சுக்கிரன் வலு இழந்து சனி, ராகு சேர்க்கை பெற்று சுபர் பார்வையின்றியிருந்தால் சட்டத்திற்குப் புறம்பான செயல்களில் சம்பாதிக்கக்கூடிய சூழ்நிலை, சுக்கிரன்,பலமிழந்து செவ்வாய் ராகு, கேது சேர்க்கை பெற்றால் அடிமைத் தொழில் செய்யும் நிலை, சுக்கிரன் பலமிழந்து சனி, செவ்வாய், ராகு, கேது சேர்க்கைப் பெற்றால் தவறான பழக்க வழக்கங்களுக்கு ஆளாகி பொய் சொல்லக்கூடியசூழ்நிலையால் தொழிலில் நிறைய இழப்புகளை சந்திக்க நேரிடும். 10ல் பாவிகள் அமையப் பெற்று சுபர் பார்வையின்றி இருந்தால் பொய் பித்தலாட்டம் செய்துசம்பாதிக்கக்கூடிய அவல நிலை உண்டாகும்.

## கும்பம்லக்கினமும் தொழில் உத்தியோக அமைப்பும்

கும்ப லக்னத்திற்கு ஜீவன ஸ்தானாதிபதி செவ்வாயாவார். செவ்வாய் பகவான் ஆட்சி உச்சம் பெற்று குரு போன்ற சுப கிரகங்களில் பார்வை பெற்றால் சமுதாயத்தில் ஓர் கௌரவமான நிலையினை அடையக்கூடிய யோகம் உண்டாகும். நவகிரகங்களில் நிர்வாகத்திற்கு காரகனான செவ்வாய் சிறந்த நிர்வாகத் திறமைக்கும, போலீஸ்இராணுவம் பாதுகாப்பு போன்ற துறைகளில் உயர் பதவிகள் வகிப்பதற்கும் காரண காத்தாவாக விளங்குகிறார். செவ்வயர் பலமாக அமைந்து சூரியன் சேர்க்கை பெற்று சுபர் பார்வையுடன் அமையப் பெற்றால் அரசு, அரசு சம்பந்தப்பட்ட துறைகளில் உயர் பதவிகளை வகிக்கும் யோகம், உடன் குருவும் சேர்க்கை பெற்றால் அரசாங்கஅதிகாரியாகும் யோகம், பலரை வழி நடத்திச் செல்லக்கூடிய அமைப்பு உண்டாகும். குறிப்பாக செவ்வாய்,சூரியன், குரு சந்திரன் போன்ற நட்பு கிரகங்களின் சேர்க்கை பெற்று பலமாக இருந்தால் சமுதாயத்தில் மற்றவரால் மதிக்கப்படக்கூடிய அளவில் பதவிகளை வகிக்கும் யோகம் உண்டாகும்.

செவ்வாய், சூரியன் சேர்க்கைப் பெற்று உடன் சந்திரன் ராகுவும் அமையப் பெற்றால் மருத்துவத்துறையில் சாதனை செய்யக்கூடிய அமைப்பு, சிறந்த அறுவை சிகிச்சை நிபுணராக விளங்கக்கூடிய வாய்ப்பு உண்டாகும். செவ்வாய்,சந்திரன், ராகு அல்லது கேது சேர்க்கை பெற்றிருந்தால் மருந்து கெமிக்கல், இராசாயனம் தொடர்புடைய துறைகளிலும், வெளியூர், வெளிநாட்டு தொடர்புடைய தொழில்களிலும் சம்பாதிக்கும் யோகத்தை கொடுக்கும்.

செவ்வாய் பலமாக அமைந்தவர்களுக்கு இயற்கையிலேயே அதிகாரமிக்க குணம் இருக்கும் என்பதால் செவ்வாய்,சந்திரன், குரு சேர்க்கை

பெற்றிருந்தாலும்,ஒருவருக்கொருவர் கேந்திர திரிகோணங்களில் அமையப்பெற்றாலும் அதிகாரமிக்க உயர் பதவிகளை வகிக்கக்கூடிய அற்புத யோகம் உண்டாகும்.
செவ்வாய், சூரியன், புதன் சேர்க்கைப் பெற்றிருந்தால் சிறந்த பொறியாளராகும் யோகம், கம்ப்யூட்டர் துறைகளில் சாதனை செய்யக்கூடிய திறன் உண்டாகும். செவ்வாய், சுக்கிரன் சேர்க்கை பெற்று கேந்திர திரிகோணங்களில் பலமாக அமையப் பெற்றால் கலை, வியாபாரம், சொந்தத் தொழில் மூலம் சம்பாதிக்கும் யோகமும், செவ்வாய் சுக்கிரனுடன்,சந்திரன் சேர்க்கை பெற்றால் வெளியூர் வெளிநாடுகளில்மூலம் சம்பாதிக்கக்கூடிய வாய்ப்பும், 10 ல் குரு அமைந்து உடன் புதன் சேர்க்கையும் ஏற்படுமேயானால் மற்றவர்களுக்கு உபதேசம் செய்யும் வாய்ப்பு, பள்ளி,கல்லூரிகளில் பணி புரியும் வாய்ப்பு உண்டாகும்.
அதுவே செவ்வாய், ராகு, கேது போன்ற பாவிகள் சேர்க்கை பெற்று சுபர் பார்வையின்றி இருந்தாலும், செவ்வாய் பலமிழந்திருந்தாலும் சனி பார்வை 10ம் வீட்டிற்கு இருந்தாலும் வாழ்வில் ஒரு நிலையான தொழில் இல்லாமல் எதிலும் எதிர்நீச்சல் போட்டே முன்னேற வேண்டி இருக்கும். 10ல் ராகு அமைந்து உடன் சனி இருந்து சுபர் பார்வையின்றி இருந்தால் சட்டத்திற்குப் புறம்பான தொழில் செய்து சம்பாதிக்க வேண்டியிருக்கும்.

**மீனம்லக்கினமும் தொழில் உத்தியோக அமைப்பும்**

மீன லக்னத்தில் பிறந்தவர்களுக்கு லக்னாதிபதி குரு பகவானே பத்தாம் அதிபதியாகவும் இருப்பது சிறப்பாகும்.10ம் அதிபதி குரு பகவான் ஆட்சி உச்சம் பெற்று பலமாக அமைந்து விட்டால் செல்வம், செல்வாக்கு, சமுதாயத்தில் கௌரவமான பதவியினை அடையும் யோகம் உண்டாகும். அது மட்டுமின்றி மற்றவர்களுக்கு ஆலோசனை கூறுவதில் வல்லவராகவும் வழி நடத்துவதில் கைதேர்ந்தவர்களாகவும்இருப்பார்கள். பேச்சால், வாக்கால் சம்பாதிக்கும் யோகம்,ஆசிரியர் பணி, கல்வி நிறுவனங்களில் பணபுரியக்கூடிய வாய்ப்பு, வங்கிப் பணி போன்றவை சிறப்பாக அமையும்.10ல் குரு, புதன் சேர்க்கை பெற்றாலும் மேற்கூறிய பலன்களே உண்டாகும்.

10ம் அதிபதி குரு பகவான் தனக்கு நட்பு கிரகங்களான சூரியன், செவ்வாய் சேர்க்கை பெற்றாலும் 10ல் சூரியன்,செவ்வாய் திக் பலம் பெற்று அமைந்திருந்தாலும் அதிகாரமிக்க பதவிகளை அடையும் வாய்ப்பு, அரசு அரசுசார்ந்த துறைகளில் பணிபுரியக்கூடிய வாய்ப்பு உண்டாகும். அதுபோல சூரியன், செவ்வாய் சேர்க்கை பெற்று கேந்திர திரிகோண ஸ்தானங்களில் அமையப் பெற்றால்கௌரவமான பதவிகள் தேடி வரும். குரு, சனி, செவ்வாய் சேர்க்கை பெற்றிருந்தாலும் குரு, சனி, செவ்வாய் சேர்க்கை பெற்றிருந்தாலும் குரு, சனி, சந்திரன் சேர்க்கை பெற்றிருந்தாலும் பிறந்த ஊரை, விட வெளியூர்,வெளிநாடுகள் மூலம் அனுகூலங்கள், பயணங்கள் மூலம் சம்பாதிக்கக்கூடிய யோகம் உண்டாகும்.

குரு, சந்திரன், கேது சேர்க்கை பெற்று 10 ல் இருந்தாலும் திரிகோண ஸ்தானங்களில் இருந்தாலும் சமூக நலப் பணிகளில் ஈடுபாடு, மற்றவர்களுக்கு உதவி செய்யக்கூடிய பணிகள் செய்யும் அமைப்பு, ஆன்மீக, தெய்வீக காரியங்களில் ஈடுபட்டு பணிபுரியும் வாய்ப்பு உண்டாகும்.

மக்கள் தொடர்புக்கு காரகனான சனி பகவான் 10ல் அமையப் பெற்று குரு, சூரியனும் பலம் பெற்றால் மக்களால் தேர்ந்தெடுக்கப்படக்கூடிய அளவிற்கு உயர்ந்தபதவிகளை அடைய முடியும். இது மட்டுமின்றி சொந்த தொழில் செய்யக் கூடிய வாய்ப்பு, இரும்பு, விவசாயம்,எண்ணெய், தொடர்புடைய தொழில், பல வேலையாட்களைவைத்து வேலை வாங்கக்கூடிய வாய்ப்பு உண்டாகும்.

சூரியன் 10ல் அமைந்தால் அரசு சார்ந்த துறைகளிலும்,செவ்வாய் 10 ல் அமைந்தால் நிர்வாகத் தொடர்புடையத் துறைகளிலும் மற்றும் பூமி, மனை, ரியல் எஸ்டேட்,போன்றவற்றிலும் சம்பாதிக்கும் வாய்ப்பு உண்டாகும். சுக்கிரன் 10ல் அமைந்தால் குருவுக்கு சுக்ஙகிரன் பகை கிரகம் என்றாலும் ஆடை, ஆபரணம், கலை, இசை துறைகளிலும், பெண்கள் உபயோகிக்கக்வடிய பொருட்கள்,டிராவல்ஸ் போன்றவற்றின் மூலமாகவும் சம்பாதிக்கும் வாய்ப்பு அமையும். ராகு 10ல் இருந்தால் மருந்து, கெமிக்கல் தொடர்புடையவற்றிலும் 10 ல் சந்திரனுடன் ராகு அல்லது கேது சேர்க்கைப் பெற்றிருந்தால் மருத்துவத் துறையிலும் முன்ன«ற்றம் கொடுக்கும். 10 ல் புதன் அமைந்தால் கணக்கு,கம்ப்யூட்டர் தொடர்புடைய துறைகளிலும் சம்பாதிக்கும் யோகம் உண்டாகும்.

10 ல் புதன் அமைந்தால் புதன் 7ம் அதிபதி என்பதால் நெருங்கியவர்களுடன் கூட்டு சேர்ந்து தொழில் செய்வது அல்லது உத்தியோகம் செய்வது நல்லது. குறிப்பாக மீன லக்னம் உபய லக்னம் என்பதால் கூட்டுத் தொழில் செய்வதைத் தவிர்ப்பது நல்லது. அப்படியே செய்ய வேண்டியிருந்தாலும் மேலே கூறியது போல மனைவி மற்றும் மிக நெருங்கியவர்களுடன் கூட்டு சேர்ந்து தொழில் செய்வது உத்தமம். அதுவே, குரு பகவான் பகை நீசம் பெற்று பாவ கிரக சேர்க்கையுடன் பலமிழந்திருந்தாலும்,அஸ்தங்கம் பெற்றிருந்தாலும், 6,8,12 ல் மறைந்திருந்தாலும் நிலையான வருமானம் இல்லாமல் கஷ்ட ஜீவனம் செய்யவேண்டியிருக்கும். அதிலும் குறிப்பாக 10ம் வீட்டையோ10ம் அதிபதி குருவையோ சனி பார்வை செய்தால் தகுதிக்கு குறைவான வேலை கிடைக்கப் பெற்று வாழ்க்கையில் பல சிரமங்களை எதிர்கொள்ள நேரிடும்.

## கிரகங்களால் அமையும் தொழில்

10ல் கேது தனித்து இருந்தால் நல்ல வேலை கிடைப்பது கடினம்
சோம்பலாக இருப்பர்.எதிலும் அக்கரை இருக்காது எதிலும் கவலை இருக்காது
10ல் ராகு கேது இருந்து 6,8,12 க்குடையவர் சேர்ந்திருந்தால் ஜாதகம் சரியான உத்தியோகமிருக்காது.
10ல் சூரியன் குரு நல்ல உத்தியோகத்தை தரும்

ஒருவரது ஜீவனஸ்தானமாகிய 10 மிடத்தில் சூரியன் சம்பந்தப்பட்டால் அரசு உத்யோகம் அரசியல் வருமானம் ஏற்படும்.நகைத் தொழில், தோல் உற்பத்தி, தோல் பதனிடுவது, தோல் பொருள் உற்பத்தி, விற்பனை, வைத்தியம், எலெக்ட்ரிகல் பொருள்கள் உற்பத்தி மற்றும் விற்பனை, மின்துறையில் பணிபுரிதல் அல்லது மின்துறை சார்ந்த பணிகளை காண்ட்ராக்ட் எடுப்பது போன்ற வழிகளில் வருமானம் வரும்

பத்தாமிடத்தில் சந்திரன் சம்பந்தப்பட்டால் நீர் வசதியுடன் கூடிய விவசாயம் மற்றும்

விவசாயம் சார்ந்த துறைகளில் ஈடுபடுதல் மூலமும், குளிர்பானங்கள் தயாரிப்பு, ஐஸ்க்ரீம், மினரல் வாடர் உற்பத்தி மற்றும் விற்பனை, ஏ.சி. மெஷின் தயாரிப்பு, விற்பனை, மெக்கானிக், எந்த
பொருளையும் விற்கும் டீலர்ஷிப் , கப்பல் கட்டுவது, கப்பல் கட்டும் துறை சார்ந்த பணிகள், மாலுமியாகி கப்பலை இயக்குவது முதலியன.

சுக்கிரன் 2ல் இருந்தால் கவிஞன், எழுத்தாளர் இவர்களது பேச்சு ரொம்ப இனிமையா இருக்கும். ஆனால் இத்துடன் சனி,செவ்வாய் சம்பந்தபடாது
இருக்க வேண்டும்

சுக்கிரன்,4 ல் இருந்தால் இசைத்துறையில் ஈடுபடுவர்.
சனி,11 ல் இருப்பது- சிற்பம்,சித்திரம் போன்ற தொழில் சினிமாவில் ஆர்ட் டைரக்டர்

சனி,சுக்கிரன் 10 ல இருப்பது கலைத்துறை
புதன்,சுக்கிரன் 10 ல் சினிமா, அழகு சாதனம்,ஆடம்பர பொருள் விறபனை

சந்திரன்,குரு 7ல் இருப்பது ஆன்மீகம்,பாட்டு எழுதுவது,கவிஞன்
சந்திரனுக்கு 10ல் புதன் இருப்பது ஒரு தொழில் திறமையாக செய்து சம்பாதிப்பார்.

2 ஆம் அதிபதி பலம் பெற்று கேந்திர,கோணம் பெற்று குருவின் சம்பந்தம் பெற்றால் மக்களை கவரும் நல்ல பேச்சாற்றல் இருக்கும்
புதன் இருந்தா வக்கீல் மாதிரி பேசுவார். குரு இருந்தா அருமையா புத்திமதி சொல்வார். சனி இருந்தா கண்டபடி பேசுவார். செவ்வாய் இருந்தா மத்தவங்களை அதிகாரம் பண்ணும் பேச்சு இருக்கும்
சந்திரன் 10 ல் இருந்தா நல்ல மருத்துவர். நீர் வசதியுடனான விவசாயம்...

சுக்கிரன்,குரு,செவ்வாய் இவர்களில் ஒருவர் 2 ஆம் பாவகத்தில் இருந்தால் சுக்கிரன் தனுசு,மீனம்,ரிசபம்,துலாத்தில் 2,11,10 ஆம் பாவகத்தில் இருந்தால் ஃபைனான்ஸ் செய்யலாம்

ரியல் எஸ்டேட் செய்ய பலம் பெற்ற செவ்வாய் .2,11 ல் நில ராசியில் இருக்க வேண்டும்..

வழக்கறிஞர்: குரு,புதன் இணைந்து 2,10,11 ல் இருக்க

எழுத்தாளர்: புதன் அல்லது குருவிற்கு 1,5,9 அதிபதிகள் சம்பந்தமடைந்திருக்க

இஞ்சினியர்:செவ்வாய் 10 ல் சம்பந்தப்பட

சிறந்த மேனேஜர்: 8,10 ஆம் அதிபதிகள் சம்பந்தம்மடைந்திருந்தால்

ரியல் எஸ்டேட் வியாபாரத்தில் நல்ல லாபம் கிடைக்க செவ்வாய் பலமாக இருக்க வேண்டும் அத்துடன் 4மிடமும் 10 மிடமும் செவ்வாயுடன் பொருந்தி வர வேண்டும் அப்படி யிருந்தால் ரியல் எஸ்டேட் வியாபாரத்தில் நல்ல லாபம் சம்பாதிக்க முடியும். ஜாதகத்தில் குறைபாடு இருக்கமானால்

பவளம் (செவ்வாய்),கோமேதகம் (ராகு) அணியலாம். ராகுவை போல கொடுப்பவனும் இல்லை. கேதுவைப்போல் கெடுப்பவனும் இல்லை. தந்திரம், முரட்டுத்தனம், குறுக்குவழி அனைத்து சட்ட ஓட்டைகளும் அறிந்தவர் ராகு பகவான். பல மிகப்பெரிய அரசியல் ஊழல்களுக்கு காரணமாக இருப்பதும்
இந்த ராகுவே காரணம்.

6மிடம் நோய்
8மிடம் அவமானம்
12 மிடம் துக்கம் துயரம்
ஒருவருக்கு லக்னாபதி 6,8,12ல் இருந்தால் அவர் சொகுசாக உட்கார்ந்து வேலை பார்க்க முடியாது

**வெளிநாடு யோகம்** யாருக்கு அமையும்?

1. குரு, சனி, சந்திரன், சுக்கிரன் ஆகியோர் கெடாமல் வலுவாக இருக்க வேண்டும்.

2. வாயு கிரகங்களான குருவும், சனியும்,
நீர்கிரகங்களான சந்திரன், சுக்கிரன் ஆகியோர் கெடாமல்
நீர் ராசிகளான கடகம், விருச்சிகம், மீனம் ஆகியவற்றில் அமைந்தால் வெளிநாட்டு யோகம் அமையும்.

3. 9, 12க்குடையவர்கள் ஜாதகத்தில் நல்ல விதமாக சம்பந்தப்பட்டால் வெளிநாட்டு யோகம் அமையும்.

4. ராகு - கேதுக்கள் 3,6,11 ஆமிடங்கள் மற்றும் 5,7,9 ஆம் இடங்களில் இருந்தால் வெளிநாட்டு யோகம் அமையும்

சனி நிற்றல் நடத்தல் உடல் உழைப்பு விவசாயம் உணவு பயிர்கள் ஹோட்டல் மெடிக்கல் ரேப் முதலியன.

அவமானம் தந்து வெகுமானம் தரும் தொழில்
குரு அமர்தல் நீதியாக நடத்தல்
சூரியன் வெயில் படுதல் அரசு உத்தியோகம்
சுக்ரன் கலையம்சம் கொண்ட தொழிலில் ஈடுபடுதல் ஆடம்பர தொழிலில் ஈடுபடல்.

ஜவுளி தொழில், சாப்பட்வேர் தொழில்
புதன் அறிவுசார்ந்த புத்திகூர்மை தொழிலில் ஈடுபடுதல்
ராகு\கேது அதுசார்ந்து இருக்கும் கிரகத்தை பொருத்தது
சந்திரன் நீர் மனசு சார்ந்த தொழில்

செவ்வாய் ராணுவம் போலீஸ் வீரம் சார்ந்த தொழில்

**************************************************************************************************************

# ஏழரைச் சனி

இந்த ஏழரைச் சனி என்னதான் செய்யும் என்பதை பார்க்கலாம்...

மற்ற கிரகங்களையும்விட சனி கிரகம் பலமான- சக்தி பெற்ற கிரகம் மட்டுமல்ல; ஒரு ராசியில் அதிக காலம்- இரண்டரை வருடம் தங்கிப் பலன் செய்யும் கிரகம். அதனால் அவருக்கு மந்தன் என்றும் முடவன் என்றும் பல பெயர்கள் உண்டு. ஒரு ராசியில் இரண்டரை வருடம் என்ற விகிதத்தில் 12 ராசி களையும் ஒருமுறை சுற்றி வருவதற்கு 30வருடங்கள் ஆகும். அந்த முப்பது ஆண்டுகளில் பொதுவாக மனித வாழ்க்கையிலும் நாட்டிலும் தொழில்துறை என எல்லாவற்றிலும் ஏதாவது ஒரு மாற்றம் ஏற்படுவது இயல்பு. அதனால்தான் முப்பது வருடத்துக்குமேல் சேர்ந்தாற்போல் யோகத்திலே திளைத்தவர்களும் இல்லை; கஷ்டத்திலேயே இளைத்தவர்களும் இல்லை என்பார்கள்.

அவரவர் ராசிக்கு (சந்திரன் நிற்கும் இடம் ராசி எனப்படும். அதற்கு) 12-ஆம் இடத்தில் சனி வரும்போது ஏழரைச் சனி ஆரம்பம். அது முதல் கட்டச் சனி. அங்கு இரண்டரை வருடம் இருக்கும் சனி **விரயச் சனி**எனப்படும். அடுத்து ஜென்ம ராசிக்கு மாறும் சனி (2-ஆம் கட்டம்) ஜென்ம ராசியில் இரண்டரை வருடம் இருக்கும். அது **ஜென்மச் சனி**எனப்படும்.

அதைவிட்டு விலகி ஜென்ம ராசிக்கு 2-ஆமிடத்தில் சனி வரும்போது (மூன்றாம் கட்டச் சனி) இரண்டரை வருடம் **பாதச் சனி**, குடும்பச் சனி,வாக்குச் சனி எனப்படும். இப்படி மூன்று கட்ட மாக வரும் சனியின் மொத்த காலம்தான் ஏழரைச் சனியின் காலம் எனப்படும். ஜாதகரீதியாக ஒருவருக்கு வரக்கூடிய சனி தசை என்பது வேறு;கோட்சாரரீதியாக வரும் ஏழரைச் சனி என்பது வேறு.

சிறு வயதில் வரும் முதல் சுற்றை (7.5 ஆண்டு) மங்கு சனி என்றும்,வாலிப மற்றும் மத்திம வயதின்போது வரும் இரண்டாம் சுற்றை (7.5ஆண்டு) பொங்கு சனி என்றும், கொஞ்சம் வயதான காலத்தில் வரும் மூன்றாம் சுற்றை (7.5 ஆண்டு) அந்திம சனி என்றும் அழைப்பர்.

பிறந்ததிலிருந்து முப்பது வயதுக்குள் ஏற்படும் ஏழரைச்சனியின் தாக்கத்தை மிகத் தெளிவாகக் காணலாம். சனியின் முழுத் திறனும் தெரியும். முதல் சுற்று முடக்கி முயற்சியை தூண்டும். 'படிப்பில் கவனம் செலுத்தவில்லை, காதல், கவன சிதறல், உறவினர்கள் மரணம், வேலையில்லா திண்டாட்டம்' என்பதுபோல பலவிதத்தில் பாதிப்புகள் இருக்கும். குழந்தைப் பருவம் முதல் டீன் ஏஜ் வரையிலான இந்த சுற்றில்

பெற்றோருக்குள் கருத்து மோதல், பிரிவு, சந்தேகத்தால் சண்டை என்று பிரச்னைகள் வந்து நீங்கும்.
பன்னிரெண்டு வயதிற்கு மேல் சனிப்பிடித்தால் குழந்தையின் கவனம் சிதறும். சரியான கவனத்தைப் படிப்பில் செலுத்தாது. Drop out from Schoolகேசாகிவிடும். பத்து, ப்ளஸ் டூ வகுப்பில் பெயிலாகும் குழந்தைகளில் பெரும்பாலோனருக்கு ஏழரைச் சனி நடந்து கொண்டிருக்கும்.. சிலருக்கு படிப்பு, மற்றும் வித்தைக்குரிய கிரகமான புதன் ஜாதகத்தில் பலவீனமாக இருந்து அதனால் அவர்கள் தோல்வியுற நேரலாம். அவை விதிவிலக்கு.

கணவன் - மனைவிக்குள் நேரடியாக எந்தப் பிரச்னையும் இருக்காது. மூன்றாவது நபர் தலையீட்டால்தான் பிரச்னை உருவாகும். குடும்பத்திற்கு வழக்கமில்லாத உணவு வகைகளை குழந்தைகள் எடுத்துக் கொள்வார்கள். மந்தம், மறதி, தூக்கம் என்று இருப்பார்கள். ஏழரை சனியில் பெறும் அனுபவங்களும், அவமானங்களும்,காயங்களும், வடுக்களும் வாழ்க்கை முழுதும் மறக்காதபடி இருக்கும்."ரெண்டு மார்க் அதிகமா எடுத்திருந்தா தலையெழுத்தே மாறியிருக்கும். இன்னும் கொஞ்சம் பொறுப்பா படிச்சுருக்கலாமே" என்று ரிசல்ட் வந்தபிறகு புலம்ப வைப்பார். இப்படி வருத்தப்பட வைத்தே வாழ்க்கையை வளர்ப்பார், சனி தர்மதேவன். அதர்மத்தில் திருப்பி விட்டு சோதிப்பார். வலையில் மாட்டாது வெளியேற வேண்டும்.
2வது சுற்று சனியை பொங்கு சனி என்று சொல்வார்கள். அவருடைய வேலையே இதுதான். அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்வதுதான் இவர் வேலை. திருமணம், குழந்தை பாக்கியம், வீடு,மனை, வாகன வசதிகள் என எல்லாவற்றையும் 2வது சனியாக பொங்கு சனி கொடுப்பார். அதனால் தைரியமாக வாங்கலாம்.
முப்பது வயதுக்கு மேல் யாருக்கு ஏழரைச் சனி நடந்தாலும் அதற்கு பொங்கு சனி என்று பெயர். பறித்தல், பாதுகாத்தல், பலமடங்காக பெருக்கித் தருதல். இதுதான் இரண்டாவது சுற்றின் கான்செப்ட். உள்ளுக்குள் கிடந்த திறமைகளை பூவானம் போல பொங்க வைக்கும். செல்வத்தை அள்ளிக் கொடுக்கும். ஆனால், கொஞ்சம் கெடுக்கும். அதனால், கொடுத்துக் கெடுப்பவர்; கெடுத்து கொடுக்கிறவர் என்ற பெயர் சனிக்கு உண்டு. , இந்த இரண்டாவது சுற்றின்போது சிலர்,மிதமிஞ்சிய செல்வ வளத்தால் பிரச்னைகளை உருவாக்குவார்கள்."நான் யார் தெரியுமா?" என்று செல்வாக்கை நிரூபிக்கத் துணிவார்கள். தான்தான் பெரிய ஆள் என்று தன்னடக்கமற்ற மனோநிலையில் திரிவார்கள். அப்படி மாறிய அடுத்த நிமிடமே, ஆட்டம் காண வைக்கும் முயற்சியில் இறங்குவார் சனி. பழைய நிலைக்கே கொண்டு செல்லத் திட்டமிடுவார். ஆகவே, கவனமாக இருங்கள். பேச்சிலோ, செயலிலோ கர்வக் கொம்பு முளைத்தால் கொடுத்ததைப் பிடுங்க தயங்க மாட்டார். சனி பகவான் வந்தால்தான் நம் அறிவுக்கும், சக்திக்கும் அப்பாற்பட்ட பல விஷயங்கள் இருக்கின்றன என்பதை உணர்வோம். "நம்ம கையில எதுவும் இல்லை" என்கிற சரணாகதி தத்துவமும் புரியும். ஏழரைச் சனியின்போது முடிந்தவரை கோர்ட், கேஸ் என்று போகக் கூடாது. பத்து லட்ச ரூபாய் பொருளுக்காக காக்கிக்கும், கறுப்புக்கும் இருபது லட்ச ரூபாய் செலவு செய்வீர்கள். வசதி வரும்போது எதையும் தலையில் ஏற்றிக் கொள்ளாமல் இருங்கள். கூழ் கிடைத்தாலும் குடியுங்கள். இந்த இரண்டாவது சுற்றில்தான் வியாபாரம் விருத்தியாகும். அதனால் தைரியமாக தொழில் தொடங்கலாம்."ரெண்டாவது ரவுண்டுல ரெட்டிப்பு வருமானம்" என்றொரு

வாக்கியம் உள்ளது. ஆனால் பாதை மாறினால், அதலபாதாளம்தான். இன்னொரு விஷயம்... நம்பிக்கை துரோகம் செய்தவர்களை பார்த்து துடிக்காதீர்கள். டென்ஷன் ஆகாதீர்கள். ஆரோக்கியம் பாதிக்கும். ஏழரை சனியில் யார் உங்கள் காசை சாப்பிட்டாலும், அது ஏற்கனவே நீங்கள்பட்ட கடன் என்று நினைத்துக் கொள்ளுங்கள். அது பூர்வஜென்மத் தொடர்பு என்பதாகவே எடுத்துக் கொள்ளுங்கள்.

சனி பகவானுக்கு சூரிய சந்திரர்கள் என்றாலே ஆகாது. ஏழரைச் சனி நடப்பில் இருக்கும் போது சூரிய திசையோ, சந்திர திசையோ நடக்குமானால் சனியின் கடுமை இன்னும் அதிகமாக இருக்கும். கவனமுடன் இருக்க வேண்டும்.
ராகு தசை நடக்கும் போதும் ஏழரைச் சனி நடைபெற்றால் சற்று மோசமான பலன்களே நடைபெறுகின்றன. துலாம் சனிக்கு உச்ச ராசியாகும். அதனால் பாதிப்பு அதிகம் தரமாட்டார் என்றாலும் ஜென்மத்தில் பகை வீட்டிலோ... கோளாறான இடத்திலோ இருந்தால் தன்னை மறந்து ஒரு பிடிபிடித்து விடுவார். ஒருவருடைய ஜாதகத்தில் சனி உச்சம் பெற்றுறிருந்தால் 71/2 சனி
பாதிப்பு குறையும். ஒருவரது ஜாதகத்தில் சனி மகரம் அல்லது கும்பத்தில் ஆட்சி பெற்றாலும், 71/2 சனி கெடுதல் செய்யாது . ஜனன காலத்தில் ஜன்ம லக்னத்திற்கு 3,6,10,11-ல் சனி அமர்ந்தாலும் 71/2 சனி கெடுதல் குறையும். மகரம் அல்லது கும்ப லக்னத்தில் பிறந்த ஒருவருக்கு சனியும் லக்னத்தில் இருந்தால் 71/2 சனியும் கெடுதல் குறையும் , தவிர அவருக்கு சுகமான வாழ்வு கிட்டும் . சனி உச்சம் பெற்று துலா ராசியில் இருந்தால் அது கேந்திரம் அல்லது திரிகோணம் என்று இருந்தால் அவருக்கு கெடுதல் குறையும்

**அவருடைய தொல்லைகளில் இருந்து தப்பிக்க**

அந்த மூன்று ராசிகளிலும் அஷ்டவர்க்கப் பரல்கள் 30ற்குமேல் இருந்தால்,
அவருடைய தொல்லைகள் தடுக்கப்பெற்றுவிடும். அந்த மூன்று ராசிகள் என்றில்லை. அவற்றில் ஒன்றில் 30 பரல்கள் இருந்தால் கூட அந்தப் பகுதிக்கு உரிய இரண்டரை வருடங்கள் ஜாதகன் நிம்மதியாக இருக்கலாம்.

திருநள்ளாறு தலத்திலும், திருவாரூர் - திருத்துறைப்பூண்டி பாதையிலுள்ள திருக்கொள்ளிக்காடு தலத்திலும் பேரருள் புரிகிறார். இந்த தலங்களுக்கு சென்று வாருங்கள். பிரச்னைகளெல்லாம் எப்படித் தீர்கிறது என்று பாருங்கள்.

சனிக்கிழமைகளில் ஆஞ்சநேயருக்கு நெய் தீபம் ஏற்றி தொல்லைகளில் இருந்து விடுவிக்கும்படி மனமுருக வேண்டி வழிபடலாம்.

சனி பகவானை திருப்தி படுத்த மாற்றுத் திறனாளிகள், (குறிப்பாக பார்வை இழந்தவர்கள், நடக்க இயலாதவர்கள்) வயதானவர்,ஆதரவற்றவர்களுக்கு உதவலாம்.

**சனி வரலாறு**

நவகிரகங்களில் முதன்மையான ஆதிகிரகம் சூரியன். துவஷ்டாவின் மகள் சஞ்ஞிகை என்பவள் (உஷா என்றும் ஒரு பெயர்) சூரியனை விரும்பித் திருமணம் செய்துகொண்டாள்.

வைவஸ்வதமநு, யமன் (மகன்கள்); யமுனை (மகள்) என்ற மூன்று பிள்ளைகளைப் பெற்றாள். இருந்தும் சூரியனுடைய வெப்பத்தைத் தாங்க முடியாமல் தவித்தாள். அதனால் சூரியனுக்குத் தெரியாமல் தன்னுடைய நிழலையே தன் மாதிரி பெண்ணாக்கி சூரியனுடன் குடும்பம் நடத்தும்படி கூறி விட்டுத் தன் தகப்பனார் வீட்டுக்குப் போய்விட்டாள். அப்படி உருவாக்கப்பட்டவளே சாயாதேவி. பிரத்யுஷா என்றும் இன்னொரு பெயர். சஞ்ஞிகையின் வேண்டுகோளின்படிதான் வேறு ஒருத்தி என்ற ரகசியத்தை வெளியிடாமல் சூரியனுடன் அவன் முதல் மனைவி போலவே வாழ்ந்தாள் சாயாதேவி அவளும் மூன்று பிள்ளைகளைப் பெற்றாள். சாவர்ணீமனு என்ற ஆண் மகனும், அடுத்து சனி பகவா னும் பிறகு பத்திரை என்ற பெண் மகளும் பிறந்தனர். சாயாதேவிக்கு குழந்தைகள் பிறந்ததும் சஞ்ஞிகையின் குழந்தைகளை சக்களத்திப் பிள்ளைகளாகக் கருதி கொடுமைப்படுத்த ஆரம்பித்தாள். இதை அறிந்த சூரியனின் மூத்த தாரத்து இளைய குமாரன் யமன் (தர்ம ராஜன்) சாயாதேவியை மிரட்டி அடிக்கப் போனான். சனி தன் தாய்க்குப் பரிந்து கொண்டு சஞ்ஞிகையை "ஓடிப்போனவள்" என்று உதாசீனமாகப் பேசவே, யமன் கோபங்கொண்டு தன்னுடைய தண்டத்தால் சனியின் முழங்காலில் அடித்தான். அதனால் சனி பகவானின் வலதுகால் ஊனமானது

****************************************************************************************************

# நவகிரகங்கள்- சனிபகவான்

சனி கிரகம் சூரியனுக்கு சுமார் 88,66,000 மைல்கள் அப்பால் இருந்து சூரியனை சுற்றி வருகிறது. ஒரு தடவை சுரியனை சுற்றி வர 29 வருடகாலம் ஆகிறது. சனி ஆயுள்காரகன் என அழைக்கப்படுகிறார். அளவற்ற துன்பங்களுக்கு இவரை காரணம் ஆகிறார். சனி பகவான் நிறைய துன்பங்கள் கொடுத்தாலும் இவர் சிறந்த நீதிமான் ஆவார். அளவற்ற துன்பத்தை அளிப்பது போலவே அளவற்ற நன்மையும் செய்வார். சனி கொடுத்த செல்வத்தை அவராலே கூட பிடுங்க முடியாது அந்த அளவுக்கு நன்மையை தருவார். சனிபகவானுக்கு 3,7,10 என்ற பார்வை உண்டு. இரவில் வலிமை,எருமை,யானை,அடிமை வாழ்வு,எண்ணெய்,வீண்கலகம்,கள்ளத்தனம்,கருநிறமுள்ள தானியம்,இரும்பு,கல்,மண்,சுடுகாடு, மதுகுடித்தல்,கஷ்டகாலம்,சிறைவாழ்வு ஆகியவற்றுக்கு காரணம் ஆகிறார். சனிபகவான் மகர ராசிக்கும், கும்ப ராசிக்கும் அதிபதி. அனுஷம், பூசம், உத்திரட்டாதி நட்சந்திரங்களுக்கு நாயாகன். துலாம், சனிபகவானுக்கு உச்ச வீடு. மேஷம் நீசம், நீசம் பெற்ற சனிபகவான் நன்மை தரமாட்டார். உச்சம் பெற்ற சனிபகவான் நன்மைகளை வாரி வழங்குவார். சனிபகவான் பார்வை கொடியது. சனிபகவானுக்கு சுபகிரகங்கள் பார்வை நன்மை செய்யும் இடமான 3,6,10,15,9 அகிய இடங்களில் இருந்தால் அதிர்ஷ்ட வாய்ப்புகளுக்கு பஞ்சமில்லை. நீண்ட கால வாழ்வுக்கும், மரணத்திற்க்கும் காரகன் சனிபகவான். வாகனம் காகம். கலி,காரி,முடவன் என்ற பல பெயர்கள் உண்டு. ஒருவர் ஜாதகத்தில் சனி நீசம் பெற்று வக்கிரம் பெறாமல் பலம் இழந்த நிலையில் இருந்தால் வாத நோயை ஏற்படுத்தும். சனிபகவான் பலம் பெற்ற ஜாதகர் சர்வ சக்திகளையும் பெறவாய்ப்பு உண்டு. ஜாதகத்தில் நல்ல நிலையில் சனி இருந்தால், அந்த ஜாதகர் ஒரு நாட்டுக்கே தலைவராகவும் வாய்ப்பு உண்டு. வறுமை, நோய், கலகம், அவமரியாதை, இரும்பு, எண்னை, கருமைநிறம், பெரிய இயந்திர தொழிற்சாலை, தொழிலாளர் வர்க்கம் இவைகளுக்கு காரகன். சனிபகவான் பலம் பெற்று அமைந்தால் ஜாதகருக்கு அவர் சம்மந்தபட்ட இனங்களில் பொன்னையும், பொருளையும் வாரி வழங்குவார்.

சூரியனுக்கும் சாயாதேவிக்கும் பிறந்த சூரிய

குமரனே சனி. யமனின் தமயன் இவன். நீண்ட ஆயுளுக்கும், மரணத்திற்கும் அதிபதி சனியே. சனி ஜாதகத்தில் அசுபனாக இருந்தால் ஒருவன் எல்லாவித துன்பங்களையும் அனுபவிக்க நேரிடும். சனி நல்ல பலம் பெற்றிருந்தால் சர்வ நலன்களையும் அடைய வாய்ப்பு உண்டு. ஏழரை நாட்டு சனி என்றழைக்கப்படும் எழரை ஆண்டுகளில் இவனைத் துதித்து வழிபட்டால் நலம் பெறலாம். எண்ணெய், கறுப்பு தானியங்களுக்கு சனியே அதிபதி. கருமை இவனுக்கு உகந்த நிறம். இயந்திரம் சம்பந்தபட்ட அனைத்திற்கும் ஆதிபத்யம் சனிக்கே உண்டு. உடலில் நரம்பு இவன். தாமச குணத்தோன். ஒற்றைக் கால் சற்று குட்டையாக இருப்பதால் மந்த நடையை உடையவன். ஆகவே மந்தன் என்றும் அழைக்கப்படுவான். மேற்குத்திசை சனிக்கு உரியது. திருநள்ளாறு சனிக்கு உரிய தலம். சனிக்கு அதி தேவதை யமன். பிரத்யதி தேவதை பிரஜாபதி. நீலம் இவருக்கு உகந்த ரத்தினம். காகமே சனியின் வாகனம். சனி பகவான் படைக்கலன்கள் ஏதுமின்றி பரமானந்த சொரூபமாக விளங்குகிறார். சனித்தொல்லையால் வாடும் எவரும் திருநள்ளாறை அடைந்து நளதீர்த்தத்தில் மூழ்கி சனி பகவானின், பாதம் பணியலாம். சனீஸ்வர பகவானுக்கு கருங்குவளை மாலை அணிவித்து நல்லெண்ணை தீபம் ஏற்றி வந்தால் வறுமைகள், துன்பங்கள் நீங்கி தொழில் சிறப்புரும்

திருநள்ளாறு

இறைவர் திருப்பெயர் : தர்ப்பாரண்யேஸ்வரர், திருநள்ளாற்றீசர்

இறைவியார் திருப்பெயர் : போகமார்த்த பூண்முலையாள், பிராணாம்பிகை

தல மரம் : தர்ப்பை

தீர்த்தம் : நளதீர்த்தம், சிவகங்கை

வழிபட்டோர் : திருமால், பிரமன், இந்திரன், அகத்தியர், புலஸ்தியர், அர்ச்சுனர், நளச் சக்கரவர்த்தி, திக்குப் பாலகர்கள், வசுக்கள், போஜன், முசுகுந்தச் சக்கரவர்த்தி

தேவாரப் பாடல்கள் :

1. சம்பந்தர் -

1. பாடக மெல்லடிப் பாவை,
2. போகமார்த்த பூண்முலையாள்,
3. ஏடுமலி கொன்றையர,
4. தளிரிள வளரொளி.

2. அப்பர் -

1. உள்ளாறாததோர் புண்டரிகத் திரள்,

2. ஆதிகண்ணான் முகத்திலொன்று.
3. சுந்தரர் - செம்பொன் மேனிவெண் ணீறணி.

தல வரலாறு இது, நளன் பூஜித்தக் காரணத்தால், நள்ளாறு எனப்படுகிறது. இறைவனருளால், நளன் சனியின் இடர் நீங்கப்பெற்றான். திருஞானசம்பந்தர், திருஆலவாயில் (மதுரை) சமணரோடு நடத்திய அனல் வாதத்தின்போது, இத்தலப் பதிகமான போகமார்த்த பூண்முலையாள் என்ற பதிகத்தை அனலில் இட, அது தீப்பற்றாமல், பச்சைப் பதிகமாய் நின்று, சைவத்தை நிலைநாட்டியது.

சிறப்புக்கள் இது, முசுகுந்தச் சக்கரவர்த்தி எழுந்தருளுவித்த சப்த விடங்கத் தலங்களுள் ஒன்று (தியாகராஜர்-நகவிடங்கர்;நடனம்-உன்மத்த நடனம்). இது, சனி தோஷம் நீங்கும் சிறப்புடைய தலம். இத்தலத்தில் சிவபெருமானை வழிபட்ட பின்னரே சனிபகவான் சன்னிதிக்குச் செல்ல வேண்டும். இத்தலத்தின் போகமார்த்த பூண்முலையாள் என்ற மேலே குறிக்கப்பட்டுள்ள பதிகத்தைப் பாடி சிவபெருமானை வழிபட சனி தோஷம் விலகும்..
இது,தருமை ஆதீனக் கோவிலாகும். சோழர்காலக் கல்வெட்டுகள் இரண்டு உள்ளன.

அமைவிடம்: மாநிலம் : தமிழ் நாடு
இது, பேரளம் - காரைக்கால் இரயில் பாதையில் உள்ள நிலையமாகும். இரயில் நிலையத்திற்கு அருகிலேயே கோவில் உள்ளது. காரைக்கால், நாகை, மயிலாடுதுறை, திருவாரூர் ஆகிய இடங்களிலிருந்து பேருந்து வசதி உள்ளது.

அருள்மிகு தர்ப்பாரண்யேஸ்வரர் திருக்கோயில்
மூலவர்:தர்ப்பாரண்யேஸ்வரர், திருநள்ளாற்றீஸ்வரர்
உற்சவர்
அம்மன்/தாயார்:பிராணேஸ்வரி, பிராணாம்பிகை, போகமார்த்த பூண்முலையாள்
தல விருட்சம்:தர்ப்பை
தீர்த்தம்:நளதீர்த்தம், பிரம்மதீர்த்தம், வாணி தீர்த்தம். இது தவிர அன்னதீர்த்தம், கங்கா தீர்த்தம் (நள தீர்த்தக்கரையிலுள்ள நளவிநாயகர் கோயிலில் உள்ள கிணறு), அஷ்டதிக்பாலகர் தீர்த்தங்கள் எனப்படும் எட்டு தீர்த்தங்கள் இருந்தன.
ஆகமம்/பூஜை
பழமை:1000-2000 வருடங்களுக்கு முன்
புராண பெயர்:திருநள்ளாறு

ஊர்:திருநள்ளாறு
மாவட்டம்:காரைக்கால்
மாநிலம்:புதுசேரி
பாடியவர்கள்: திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர்
தேவாரபதிகம்
போகம் ஆர்த்த பூண்முலையாள் தன்னோடும் பொன்னகலம்
பாகம் ஆர்த்த பைங்கண் வெள்ஏற்று அண்ணல் பரமேட்டி,
ஆகம் ஆர்த்த தோல் உடையன், கோவண ஆடையின்மேல்
நாகம் ஆர்த்த நம்பெருமான், மேயது நள்ளாறே. -திருஞானசம்பந்தர்
தேவார பாடல் பெற்ற காவிரி தென்கரை தலங்களில் இது 52வது தலம்.

திருவிழா: மகா சிவராத்திரி, மார்கழி திருவாதிரை, ஐப்பசி அன்னாபிஷேகம்.

தல சிறப்பு:இங்கு தர்ப்பாரண்யேஸ்வரர் சுயம்பு மூர்த்தியாக அருள்பாலிக்கிறார்.
(மூலவர் தர்ப்பையில் முளைத்த சுயம்பு மூர்த்தி) சிவலிங்கத்தின்மீது முளைத்த தழும்பு உள்ளது.இது சப்தவிடங்கத் தலங்களுள் ஒன்று.
இத்தலத்தில் நந்தியும், பலிபீடமும் சுவாமிக்கு எதிரே இல்லாமல் சற்று ஒதுங்கியிருப்பதைக் காணலாம்.
காலை 5 மணி முதல் 12மணி வரை, மாலை 4.30 மணி முதல் இரவு 9 மணி வரை திறந்திருக்கும்.
அருள்மிகு தர்ப்பாரண்யேஸ்வரர் திருக்கோயில், திருநள்ளாறு, காரைக்கால் மாவட்டம். புதுச்சேரி-609 606.
இது சிவத்தலமாயினும் சனிபகவான் சந்நிதி மிகவும் பிரசித்தி பெற்றது.
இத்தல விநாயகர் சொர்ணவிநாயகர் என்னும் திருநாமத்துடன் அருள்பாலிக்கிறார். திருமால், பிரமன், இந்திரன், திசைப்பாலர்கள், அகத்தியர், புலஸ்தியர், அர்ச்சுனன்,நளன் முதலியோர் வழிபட்டு பேறுபெற்ற தலம்.
கோயிலின் தென்புறம் இடையனார் கோயில் உள்ளது. இங்கு இடையன், அவன் மனைவி, கணக்கன் ஆகியோர் உருவங்கள் உள்ளன.
சனித்தொல்லை நீங்க நள தீர்த்தத்திலும், முந்தைய சாபங்கள் ஒழிய பிரம்ம தீர்த்தத்திலும், கவி பாடும் திறன் பெற வாணி தீர்த்தம் எனப்படும் சரஸ்வதி தீர்த்தத்திலும் நீராடி பிரார்த்தனை செய்துகொள்கின்றனர். பிரார்த்தனை நிறைவேறியதும் இறைவனுக்கு அபிஷேகம் செய்தும், வஸ்திரம் அணிவித்தும் நேர்த்திக்கடன் செலுத்துகின்றனர்.

தலபெருமை:சோமாஸ்கந்தமூர்த்தி வடிவத்தின் பிறப்பிடம்: திருநள்ளாறு தர்ப்பாரண்யேஸ்வரரும், அம்பிகை பிராணேஸ்வரியும் குழந்தை இல்லாத

தம்பதியருக்கு அருள் புரிவர். திருமாலுக்கு குழந்தையில்லாமல் இருந்த வேளையில் அவர் தர்ப்பாரண்யேஸ்வரரை வணங்கி மன்மதனை மகனாகப் பெற்றார். அதற்கு பரிசாக முருகப்பெருமானை சுவாமி, அம்பாள் இடையே அமர்த்தி சோமாஸ்கந்தமூர்த்தி என்ற புதிய வடிவை உருவாக்கினார். இந்த வடிவத்தை தேவலோகத்துக்கு எடுத்துச் சென்று வழிபட்ட இந்திரன், ஜெயந்தன், ஜெயந்தி என்ற குழந்தைகளைப் பெற்றான். ஒரு கட்டத்தில் வாலாசுரன் என்பவன் தேவேந்திரனுடன் போருக்கு வந்த போது, முசுகுந்தன் சோழ மன்னன் உதவியுடன் அவனை வென்றான் இந்திரன். இதற்கு பரிசாக அந்த சோமாஸ்கந்த மூர்த்தியைப் பெற்று வந்தான். அதை திருவாரூரில் பிரதிஷ்டை செய்தான். அதே போல மேலும் ஆறு மூர்த்திகளைப் படைத்தான். அதில் ஒன்றை திருநள்ளாறில் வைத்தான். அதுவே தற்போது "தியாகவிடங்கர்' என வழங்கப்படுகிறது. தியாகவிடங்கருக்கு இங்கே தனி சன்னதி இருக்கிறது. தியாகவிடங்கரை வணங்கினால் குழந்தையில்லாதவர்களுக்கு குழந்தை பாக்கியம் கிட்டும் என்பது நம்பிக்கை.

வாசல்படிக்கு மரியாதை கொடுங்கள் : திருநள்ளாறு செல்பவர்கள் ராஜகோபுரத்தை வணங்கி உள்ளே நுழைந்ததும், முதல் படியை தொட்டு வணங்க வேண்டும். ஏனெனில், இந்த வாசல்படி மாடத்தில் சனீஸ்வரன் தங்கியிருப்பதாக ஒரு நம்பிக்கை. நளன் தர்ப்பாரண்யேஸ்வரர் கோயிலுக்குள் நுழைந்ததுமே, நியாயத்துக்கு புறம்பாக செயல்பட்டதற்காக இறைவனிடம் தண்டனை அடைய வேண்டி வருமோ என்று பயந்த சனீஸ்வரன் வாசல்படியோடு நின்று, அவனை விட்டு நீங்கி விட்டதாக சொல்வர். ஆனால், இறைவன் சனீஸ்வரனின் நிலையைப் பாராட்டி ஈஸ்வரப் பட்டம் வழங்கி, தன் கோயில் முகப்பிலேயே வைத்துக் கொண்டார்.

தீர்த்தங்கள் : திருநள்ளாறு என்றாலே தீர்த்த ஸ்தலம் என்பதே நிஜம். தற்போது கோயிலைச் சுற்றி நளதீர்த்தம், பிரம்மதீர்த்தம், வாணி தீர்த்தம் ஆகியவை உள்ளன. இதில் நள தீர்த்தத்தில் குளித்தால் சனித்தொல்லை நீங்கும். பிரம்ம தீர்த்தத்தில் குளித்தால் முந்தைய சாபங்கள் ஒழியும். வாணி தீர்ததம் எனப்படும் சரஸ்வதி தீர்த்தத்தில் நீராடினால் மூடன் கூட கவி பாடுவான் என்று நம்பிக்கை. இது தவிர அன்னதீர்த்தம், கங்கா தீர்த்தம் (நள தீர்த்தக்கரையிலுள்ள நளவிநாயகர் கோயிலில் உள்ள கிணறு), அஷ்டதிக்பாலகர் தீர்த்தங்கள் எனப்படும் எட்டு தீர்த்தங்கள் இருந்தன. ஒரு காலத்தில் உலகிற்கு ஏதேனும் கேடு நேர இருக்குமானால் கங்கா, பிரம்ம

மற்றும் நள தீர்த்தங்களின் நீர் சிவப்பாக மாறிவிடுமாம். இதை எச்சரிக்கையாக எடுத்துக் கொண்டு தகுந்த பரிகார பூஜைகள் செய்து மக்கள் தப்பித்திருக்கிறார்கள் என்கின்றனர்.

**சனீஸ்வரனை வணங்கும் முறை** : காலை 5 மணிக்கு நள தீர்த்தத்தில் நீராடி, கரையிலுள்ள நளவிநாயகர் மற்றும் பைரவரை வணங்க வேண்டும். கோயிலுக்குள் உள்ள கிணறான கங்காதீர்த்தத்தை தரிசித்து, கோபுர வாசலுக்கு வந்து ராஜகோபுர தரிசனம் முடித்து, உள்ளே நுழையும் போது முதல் படிக்கட்டை வணங்கி முதல் பிரகாரத்திற்கு செல்ல வேண்டும். இந்த சுவரில் வரையப்பட்டுள்ள நள சரிதத்தை பக்திப்பூர்வமாக பார்த்த பிறகு, காளத்திநாதரை வணங்க வேண்டும். பின்னர் சுவாமி சன்னதிக்குள் சென்று மூலவர் தர்ப்பாரண்யேஸ்வரரை வணங்கி, தியாகவிடங்கர் சன்னதிக்கு செல்ல வேண்டும். இங்குள்ள மரகதலிங்கத்தை வணங்கிய பிறகு, அர்த்தநாரீஸ்வரர், துர்க்கை, சண்டிகேஸ்வரரை வணங்கிய பின் வெளிப்பிரகாரம் செல்ல வேண்டும். அங்குள்ள தெய்வங்களை தரிசித்து கட்டைக் கோபுர வாசல் சென்று அம்பிகை பிராணேஸ்வரியை வழிபட வேண்டும். பிறகு தான் சனீஸ்வரர் சன்னதிக்கு செல்ல வேண்டும். சிலர் முதலிலேயே சனீஸ்வரனை தரிசிக்க சென்று விடுகின்றனர். இது சரியான வழிபாட்டு முறையல்ல. இங்குள்ள இறைவனை பார்த்த பிறகு சனீஸ்வரனைக் கண்டால் தான் சனிதோஷ விமோசனம் கிடைக்கும்.

தங்கக்கவசம் :சனிப்பெயர்ச்சி மற்றும் முக்கிய காலங்களில் சனீஸ்வரன் தங்க காக வாகனத்தில் தங்கக்கவசம் அணிந்து பவனி வருவது கண்கொள்ளாக்காட்சியாக இருக்கும். சனீஸ்வரனைக் கண்டால் எல்லாருமே ஓட்டம் பிடிக்கும் நிலைமையில், இங்கே தங்கக்கவச சனீஸ்வரனைத் தரிசிக்க கூட்டம் அலை மோதும். தமிழகத்தை தவிர கன்னட மக்களுக்கு சனீஸ்வரன் மீது நம்பிக்கை அதிகம். எனவே, தமிழ் மக்களுக்கு ஈடாக கர்நாடக மாநில மக்களும் இங்கு அதிக அளவில் வருகிறார்கள்.

சனீஸ்வரன் வரலாறு : சூரியனுக்குரிய மனைவியரில் ஒருத்தி உஷா. இவள் சூரியனின் வெப்பம் தாளாததால் தன் நிழலையே ஒரு பெண்ணாக்கி சாயாதேவி என்ற பெயரில் தங்கியிருந்தாள். சாயாதேவிக்கு சனீஸ்வரன் பிறந்தார். பின்னர் உண்மை தெரிந்தது. சூரியன் தன்னை ஏமாற்றிய மனைவியைக் கடிந்து கொண்டார். அவளுக்கு பிறந்த சனீஸ்வரனை வெறுத்து ஒதுக்கி விட்டார். சனி காசிக்கு சென்று விஸ்வநாதரை வணங்கி நவக்கிரக மண்டலத்தில் இடம் பெற்றார்.

சனி-அறிவியல் தகவல் : இந்த கிரகத்தை இத்தாலி விஞ்ஞானி கலிலியோ வானமண்டலத்தில் இருந்ததை முதன் முதலாக பார்த்தார். பூமியில் இருந்து 128 கோடி கி.மீ., தூரத்தில் உள்ளது. சில சமயத்தில் பூமியிலிருந்து விலகிப் போனால் 164 கோடி கி.மீ., தூரம் இருக்கும். பூமியை விட 750 மடங்கு பெரியது. சூரியனை சுற்றும் கிரகங்களில் மிகப்பெரிய கிரகம் வியாழன். அதற்கடுத்த இடத்தை சனி பெறுகிறது.

**சனீஸ்வரனுக்கு உரியவை**

ராசி-மகரம், கும்பம்
திசை-மேற்கு அ
திதேவதை-எமன்
நிறம்-கருப்பு
வாகனம்-காகம்
தானியம்-எள்
பால்-அலி
நட்பு-புதன்,சுக்கிரன்,இராகு.கேது.
பகை- சூரியன்,சந்திரன்.செவ்வாய்
சமம்-குரு
திசைகாலம்-19 வருடங்கள்
மலர்-கருங்குவளை
நட்சத்திரங்கள்- பூசம்,அனுஷம்,உத்திரட்டாதி.
மலர்-கருங்குவளை
வஸ்திரம்-கருப்பு ஆடை
ரத்தினம்-நீலமணி
நிவேதனம்-எள்ளுப்பொடி சாதம்
சமித்து-வன்னி
உலோகம்-இரும்பு.

தல வரலாறு:நிடதநாட்டு மன்னன் நளன் சேதி நாட்டு இளவரசி தமயந்தியை திருமணம் செய்தான். இப்பெண்ணை தேவர்கள் மணக்க விரும்பினர். ஆனால், நளனை அவள் திருமணம் செய்ததால் பொறாமை கொண்டு, சனீஸ்வரனை நாடினர். சனீஸ்வரன் நளனின் தூய்மையான மனநிலையை அவர்களுக்கு உணர்த்த, அவனை ஏழரை ஆண்டுகள் பிடித்து துன்பப்படுத்தினார். மனைவி, மக்களையும், உடுத்தும் துணியைக் கூட இழந்து அவஸ்தைப்பட்ட மன்னன் நளன் எதற்கும் கலங்கவில்லை. ஒரு கட்டத்தில் திருநள்ளாறு தர்ப்பாரண்யேஸ்வரரை நளன் வணங்கினான்.

அப்போது சனி அவனை விட்டு நீங்கியது. அவனது வேண்டுகோளின் படி இதே தலத்தில் கிழக்கு நோக்கி அமர்ந்து ஈஸ்வர பட்டத்துடன் "சனீஸ்வரன்' என்ற பெயர் தாங்கி அருள்பாலித்தார். கிழக்கு நோக்கிய சனீஸ்வரன் என்பதாலும், சிவனருள் பெற்றவர் என்பதாலும், இவரை வழிபட்டு, சனியினால் ஏற்படும் தொல்லைகள் நீங்கப் பெறலாம். நளசரிதம் படித்தவர்களும் சனித்தொல்லை நீங்கப் பெற்று, வாழ்வில் தன்னம்பிக்கை பெறுவர்.

ஒதுங்கிய நந்தி : இத்தலத்தில் நந்தியும், பலிபீடமும் சுவாமிக்கு எதிரே இல்லாமல் சற்று ஒதுங்கியிருப்பதைக் காணலாம். இடையன் ஒருவன் அரசன் ஆணைப்படி கோயிலுக்குப் பால் அளந்து கொடுத்துவந்தான். கணக்கன் அப்பாலைத் தன்வீட்டுக்கு அனுப்பிப் பொய்க்கணக்கு எழுதி, இடையனையும் அச்சுறுத்தி வந்தான். செய்தியறிந்த மன்னன் கோபம் கொண்டான். அப்போது இறைவன், இடையனைக் காக்கவும், கணக்கனைத் தண்டிக்கவும் எண்ணி தம் சூலத்தை ஏவினார். அந்த சூலத்திற்கு வழிவிடவே இக்கோயிலில் பலிபீடம் சற்று விலகியுள்ளது. சூலம் கணக்கன் தலையைக் கொய்தது. இடையனுக்கு இறைவன் காட்சி தந்து அருள்புரிந்தார்.

அதிசயத்தின் அடிப்படையில்: இங்கு தர்ப்பாரண்யேஸ்வரர் சுயம்பு மூர்த்தியாக அருள்பாலிக்கிறார். (மூலவர் தர்ப்பையில் முளைத்த சுயம்பு மூர்த்தி. சிவலிங்கத்தின்மீது முளைத்த தழும்பு உள்ளது)

**சனி பகவான் - ஒரு சிறந்த பரிகாரம்:**

ஏழுதலைமுறைக்கு முன் செய்த பாவங்களும்,இந்த தலைமுறையில் நீங்கள் செய்த பாவங்கள் அனைத்தும் தீருவதற்கு ஒரு மிகச் சிறந்த பரிகாரம். எவர் ஒருவர் செய்த பாவங்களும், அவருக்கு பூமெராங் ஆகி திரும்ப கிடைப்பது - அவருக்கு ஜாதகப்படி மோசமான தசா, புக்தி நடக்கும் காலங்களில். அல்லது அஷ்டமச் சனி, ஜென்ம சனி நடக்கும் காலங்களில் - சனி பகவான் , தயவு , தாட்சண்யமின்றி - கொடுமையாக தண்டிக்கிறார். ஒரு சித்தர் பரிந்துரைக்கும் மிக எளிய பரிகாரம். பச்சரிசியை ஒரு கையில் அள்ளி அரிசியாக அல்லது அதை நன்கு பொடி செய்து சூரியநமஸ்காரம் செய்துவிட்டு,விநாயகப்பெருமானை மூன்று சுற்று சுற்றிவிட்டு அந்த அரிசியை விநாயகரைச்சுற்றிப்போட்டால்,அதை எறும்பு தூக்கிச் செல்லும்.அப்படித்தூக்கிச் சென்றாலே நமது பாவங்களில் பெரும்பாலானவை நம்மைவிட்டுப் போய்விடும். வன்னி மரத்தடி விநாயகராக இருந்தால் , அது இன்னும் விசேஷம். சனிக்கிழமைகளில்

இதை செய்யவும். அப்படித்தூக்கிச்சென்ற பச்சரிசி மாவை எறும்புகள் தமது மழைக்காலத்திற்காக சேமித்து வைத்துக்கொள்ளும்.எறும்பின் எச்சில் அரிசிமாவின் மீது பட்டதும் அதன் கெடும்தன்மை நீங்கிவிடும்.இந்த பச்சரிசிமாவை சாப்பிடுவதற்கு இரண்டரை வருடங்கள் எடுத்துக்கொள்ளும்.இப்படி இரண்டேகால் வருடங்கள் வரை எறும்புக்கூட்டில் இருப்பதை முப்பத்துமுக்கோடி தேவர்கள் கவனித்துக்கொண்டிருப்பார்கள்.இரண்டரை ஆண்டிற்கு ஒருமுறை கிரகநிலை மாறும்.அப்படி மாறியதும்,அதன் வலு இழந்துபோய்விடும்.இதனால்,நாம் அடிக்கடி பச்சரிசி மாவினை எறும்புக்கு உணவாகப்போடவேண்டும். ஓர் எறும்பு சாப்பிட்டால் 108 பிராமணர்கள் சாப்பிட்டதற்குச் சமம். எனவே இது எத்தனை புண்ணியம் வாய்ந்த செயல் என்று தெரிந்து கொள்ளுங்கள். இதனால்,சனிபகவானின் தொல்லைகள் நம்மைத் தாக்காது.

ஏழரைச்சனி,அஷ்டமச்சனி,கண்டச்சனி,அர்த்தாஷ்டகச்சனி - சனி மகா தசை நடப்பவர்களுக்கு , இந்த செயல் ஒரு மிக பெரிய வரப்ரசாதம் ஆகும். உடல், ஊனமுற்றவர்களுக்கு - காலணிகள், அன்ன தானம் - அளிப்பது , மிக நல்லது.

**ஒவ்வொரு வீட்டிலும் சனி இருந்தால் என்ன பலன்**

சனி 1 ஆம் வீட்டில் இருந்தால் மந்த புத்தி இருக்கும். வறுமை இருக்கும். துணைவர் மூலம் பிரச்சினை உருவாகும். நண்பர்களிடத்தில் சண்டை சச்சரவு இருக்கும். இளைய சகோதர சகோதரிகளிடத்தில் சுமுக உறவு இருக்காது. வாழ்வின் பின்பகுதி நன்றாக இருக்கும். இளம் வயதில் மூத்த வயதுபோல் தோற்றம் இருக்கும். சில நபருக்கு திருமண வாழ்வில் பிரச்சினைகள் 1 ஆம் வீட்டில் சனியால் வருகிறது.

சனி 2 ஆம் வீட்டில் இருந்தால் குடும்பத்தில் ஒற்றுமை இருக்காது. குடும்பத்தில் சண்டை சச்சரவு இருக்கும் தாயாரின் உடல் நலம் கெடும். குழந்தை பாக்கியம் இருக்காது. ஆயுள் நன்றாக இருக்கும். தார தோஷத்தை ஏற்படுத்துவார்.வீட்டில் எப்போதும் ஒரு வெறுப்பு ஏற்பட்டுக்கொண்டே இருக்கும். திருமணம் ஆனாலும் தொழில் விசயமாக துணையை விட்டு பிரிந்து சென்று வெளியில் தங்கிவிடுவார். வீட்டின் தொடர்பு மிக குறைவாகதான் இருக்கும்.

சனி 3 ஆம் வீட்டில் இருந்தால நல்ல தைரியம் இருக்கும். சகோதர்கள்

இருக்கமாட்டார்கள். அப்படியே இருந்தாலும் பகையாக இருப்பார். இந்த வீட்டில் சனி இருப்பது நல்லது தான் ஆனால் குழந்தை பாக்கியம் தள்ளி போகும். அண்டை அயலார் வீட்டுடன் சண்டை சச்சரவு இருக்கும். இசையின் மேல் அவ்வளவு ஆர்வம் இருக்காது. கடித போக்குவரத்தால் வில்லங்கம் தான் வரும். பயணம் செல்லும்போது அடிபடும்.

சனி 4 ஆம் வீட்டில் இருந்தால் தாயாரின் உடல்நிலை கெடும். சொத்துக்கள் நாசம் ஆகும். வயிற்று வலி ஏற்படும். உடலில் முதுமை தெரியும். பழைய வாகனங்கள் வாங்கினால் யோகம் உண்டு. சிலபேர் பழைய வாகனங்கள் வாங்கி விற்க்கும் தொழில் செய்யலாம். சிலபேர் வீட்டை இடித்து தரும் தொழில்கள் செய்வார்கள். நான்காம் வீடு தங்கி இருக்கும் வீட்டை குறிப்பதால் பழைமையான வீட்டில் தங்கி இருப்பார்கள்.

சனி 5 ஆம் வீட்டில் இருந்தால் கடுமையான புத்திர தோஷம் ஏற்படும்.வருமான குறைவு ஏற்படும். மனதில் நிம்மதி இருக்காது. ஐந்தில் சனி இருப்பவர்கள் வில்லங்க பார்ட்டியாக இருப்பார்கள. உணர்ச்சி வசப்படகூடியவர்கள். ஐந்தாம் வீடு புத்திர ஸ்தானத்தை குறிப்பதால் புத்திர தோஷம் ஏற்படும். திருமணத்திற்க்கு முன்பும் பின்பும் ராமேஸ்வரம் செல்ல வேண்டும். அப்பொழுது தான் குழந்தை பாக்கியம் கிடைக்கும். குழந்தை பிறந்தவுடன் வருடம் ஒருமுறையாவது ராமேஸ்வரம் செல்ல வேண்டும். சில நபர்களை நீங்கள் பார்த்து இருக்கலாம். தங்கள் பிள்ளைகளுக்கு கொள்ளி போடுவார்கள் அவர்களின் ஜாதகங்களில் எல்லாம் ஐந்தாம் வீட்டுடன் சனி சம்பந்தப்பட்டு இருப்பார். இதற்கு தகுந்த பரிகாரம் ராமேஸ்வரம் தான். ஐந்தாம் வீடு குலதெய்வத்தை குறிப்பதால் கிராம தேவதையை வணங்கலாம்.

சனி 6 ஆம் வீட்டில் இருந்தால் பகைவர்கள் இருக்கமாட்டார்கள். நல்ல வேலை ஆட்கள் கிடைப்பார்கள். வேலை ஆட்களால் பிரச்சினை ஏற்படாது. மாமன் வீட்டுடன் சுமூகமான உறவு இருக்காது. கணவன் மனைவியுடன் சிறிய தகராறு வந்து செல்லும். பிறர் பாராட்டும் படியான காரியங்களில் இறங்கி வெற்றி அடைவார்கள். பணவரவு நன்றாக இருக்கும்.காலில் அடிபட வாய்ப்பு உள்ளது.

சனி 7 ஆம் வீட்டில் இருந்தால் முதுமை தோற்றம் தெரியும். மர்ம பாகங்களில் முடி அதிகமாக தோன்றும்.திருமணம் தள்ளி போகும். துணைவருடன் எப்பொழுதும் சண்டை சச்சரவு இருக்கும். இளம்வயதில்

திருமணம் நடந்தால் துணைவர் இரண்டு அமைவர்.உடம்பில் ஊனம் ஏற்படும். வறுமை இருக்கும். முகத்தில் கவலை தோன்றும். பிறரை ஏமாற்றி பிழைப்பு நடத்துவார்கள். இவர்களுடன கூட்டு சேருபவர்கள் குள்ளமானவராக இருப்பார்கள். தாயாரின் உடல் நிலை கெடும்.

சனி 8 ஆம் வீட்டில் இருந்தால் அடிமை வேலை செய்ய வேண்டி இருக்கும். நிரம்தரமாக உடலில் நோய் இருக்கும். அதிக வாழ்நாள் இருப்பார். இறக்கும் போது மிகவும் கஷ்டபட்டு நோய்வாய் பட்டு இறப்பார். லக்கினாதிபதி ஆக இருந்து எட்டாம் வீட்டில் இருந்தால் உடல் அடிக்கடி முழு சக்தியையும் இழக்கும். அனைத்துக்கும் கஷ்டபட வேண்டி இருக்கும். சில பேர் இறப்பு சம்பந்தபட்ட தொழில்களில் இருப்பார்கள்.குழந்தை பாக்கியம் ஏற்படாது சில பேருக்கு குழந்தை பாக்கியம் தள்ளி போகும்.

சனி 9 ஆம் வீட்டில் இருந்தால் பணவரவு நன்றாக இருக்கும். தந்தையுடன் சண்டை சச்சரவு இருந்துகொண்டே இருக்கும். நல்ல வேலையாட்கள் அமைவார்கள். சிலபேருக்கு காதல் திருமணம் நடைபெறும். மூத்த சகோர சகோதரிகளிடம் கருத்து வேற்றுமை ஏற்படும். நண்பர்களால் சண்டை வரும் வாய்ப்பு உள்ளது.

சனி 10 ஆம் வீட்டில் இருந்தால் தொழில் கொடி கட்டி பறப்பார். பெரும் பணக்காரராக்குவார். சமூகத்தில் பிறர் போற்றும் படி வாழ்வார். மிக பெரும் நிறுவனத்தில் தலைமைபொறுப்பு தேடி வரும். வருமானம் போல செலவும் அதிகமாக இருக்கும். புண்ணிய இடங்களுக்கு செல்லும் வாய்ப்பு அமையும். சமயம் சார்ந்த விஷயங்களில் ஈடுபாடு இருக்கும். பழைமையை விரும்புவார்கள். மனைவியிடம் சண்டை சச்சரவு இருந்து வரும்.

சனி 11 ஆம் வீட்டில் இருந்தால் வருமானம் நிரந்தரமாக இருக்கும். தொழிலில் சிறந்து விளங்குவார். வியாபார சம்பந்தபட்ட விஷயங்களில் ஈடுபட்டு பெரும் பொருள் ஈட்டவைப்பார். இளம்வயதில் நரை தோன்றும். நல்ல ஆயுள் இருக்கும். வருமானம் அதிகமாக வந்தாலும் மனதில் கவலை தோன்ற செய்யும். சிலபேருக்கு உயில் இன்ஸ்சுரன்ஸ் மூலம் வருமானம் வரும்.

சனி 12 ஆம் வீட்டில் இருந்தால் வியாபாரத்தில் வீழ்ச்சி வரும். செலவு அதிகமாக இருக்கும். மருத்துவ செலவு அதிகம் ஏற்படும். இளைய சகோதர சகோதரிகளிடம் சண்டை ஏற்படும். தந்தையாரின் உடல் நிலை கெடும். தந்தையின் உறவு நன்றாக இருக்காது. மூத்தவர்களின் சாபத்திற்க்கு

ஆளாகலாம். சனி நல்ல நிலையில் இருந்தால் தீமை குறைந்து நல்லது நடக்கலாம். விரைய ஸ்தானமாக இருப்பதால் சுபசெலவுகளும் செய்ய வேண்டிவரும்.

சனி பகவான் (வீடு, மனை வாங்க)

ஓம் காகத்வஜாய வித்மஹே
கட்கஹஸ்தாய தீமஹி
தன்னோ மந்தஹ் ப்ரசோதயாத்
ஓம் ரவிசுதாய வித்மஹே
மந்தக்ரஹாய தீமஹி
தன்னோ சனிஹ் ப்ரசோதயாத்
ஓம் காகத்வஜாய வித்மஹே
கட்கஹஸ்தாய தீமஹி
தன்னோ சனிஹ் ப்ரசோதயாத்
ஓம் வைவஸ்வதாய வித்மஹே
பங்குபாதாய தீமஹி
தன்னோ மந்தஹ் ப்ரசோதயாத்
ஓம் சனீஸ்வராய வித்மஹே
சாயாபுத்ராய தீமஹி
தன்னோ சனிஹ் ப்ரசோதயாத்
ஓம் சதுர்புஜாய வித்மஹே
தண்டஹஸ்தாய தீமஹி
தன்னோ மந்தஹ் ப்ரசோதயாத்

****************************************************************************************************



சனி பகவான் பற்றிய சிறப்பு விவரங்கள் !

71/2 ஆண்டுகள் பற்றிய விபரம்

ஜனன காலத்தில் சந்திரன் இருக்கும் இராசியில் இருந்து கேந்திரத்தில் சனி இருந்தால் அல்லது ஏழாவது ராசியில் சந்திர ராசியில் இருந்து கணக்கிடுக .,நவாம்ச ராசியில் நல்ல பலம் பெற்று இருந்தாலும் அதிக கெடுதி தராது என்பதும் ஒரு ஜோதிட விதி ஆகும் .

சனி 30 ஆண்டுகளுக்கு ஒருமுறை 12 இராசிகளையும் நிதானமாகக் கடக்கிறார். இதில் அவர் 3, 6, 11 ஆகிய இராசிகளில் தான் சுப பலன் தருகிறார். மற்ற 9 இராசிகளில் அசுப பலன்களே ஏற்படுகின்றது.

4 இல் உள்ள சனியை அர்த்தாஷ்டமச் சனி என்றும், 7 இல் சனி கண்டச் சனி என்றும், 8 இல் உள்ள சனியை அட்டமச் சனி என்றும், இராசி மற்றும் இராசிக்கு இரு புறமும் ( 12 ஆம் இடம், 1 ஆம் மற்றும் 2 ஆம் இடம் ) ஆகியவற்றில் இருக்க ஏழரைச் சனி என்றும் கூறுகிறோம். இந்த இரண்டரை வருடம் மட்டுமே மிக அதிக அசுப பலன் தருகிறார்.

அதை எப்படி மாத வாரியாக பலனை தருகிறார் என்பதே ஆகும் .,

முதல் முறையாக வரும் சனியை மங்கு சனி என்றும்,

இரண்டாம் சுற்று பொங்கு சனி என்றும்,

மூன்றாம் சுற்று குங்கு சனி (குமுங்கு சனி ) என்றும்,

4 ஆம் சுற்று மரணச் சனி என்றும் அழைக்கிறோம்.

மங்கு சனி –

வேதனை மிகும் ,பல வித கஷ்டம் உண்டாகும் ,பல சோதனைகள் வேதனைகள் மிகும் ,இளம் பிராயமாக இருத்தலால் கல்வியில் தடைகளை ஏற்படுத்துவான்,தோல்வி ஏற்படும் ,உடல் நலம் கெடல் , அரசால் கஷ்டம், படிப்பில் தடை, சோதனைகள், ஆரோக்கியக் குறைவு மற்றும் துயரமே மிஞ்சும்.

பொங்கு சனி –

திருமணம் மற்றும் மங்கள காரியங்கள் மிகும் ,நற்கருமங்கள் ,அதாவது நல்ல தொழில் வாய்ப்பு ,உத்தியோகம் ஏற்ப்பட ஏதுவான காலம் , கடைசிப் பகுதியில், முற்பகுதியின் இழப்பைச் சரிக்கட்டும். தாய் –தந்தை பெற்றோருக்கு மாரகம் ஏற்படலாம்,

குங்கு சனி ( குமுங்கு சனி ) –

எப்போதும் மன சஞ்சலம், கவலை,துக்கம் துயரம் மிகும். ஆயுர்தாயம் முடியுமென்றால், ஜாதகருக்கே மாரகம் ஏற்படலாம்.

மரணச் சனி –

இது எதற்கும் பயனில்லை. வயது வரம்பு வகுக்கும் மரணமே என்பதாகும் ,

71/2 சனியின் அங்கசனி :–

இந்த ஏழரை வருடங்களில் 12 ல் அதாவது முதல் 2 1/2 வருடம் சனி தலையில் வருகிறான் .,

நடு 2 1/2 வருடம் (ஜென்ம சனி ) இதயத்தில் வருகிறான் .,

கடைசி 2 1/2 வருடம் (2ல் ) கால்களில் வருகிறான் .,

இதில் இதயத்தில் தான் அதிக தீமைகள் நடக்கும் .இதன் அசுப பலனை பண்டைய நூல் ஆசியர்கள் விளக்கி விவரித்துள்ள விவரம் வருமாறு .,

| இடம் ------- | மாதம் | ---------அங்கம் | ---------------பலன் |
|---|---|---|---|
| விரயம் (12)-------- | 7 | ------------- தலை | --------- கஷ்டம் |
| விரயம் (12)----- | 9 | ----------- கண்கள் | ---------- நஷ்டம் |
| விரயம் (12)---- | 8 | ------- முகம் | -------- லாபம் |
| விரயம் (12)---- | 6 | -------- கழுத்து | -------- லாபம் |
| ஜென்மம் (1)---- | 10 | ----- இதயம் | ------- லாபம் |
| ஜென்மம் (1)---- | 11 | ---- வயிறு | ------- லாபம் |
| ஜென்மம் (1)---- | 5 | ----- தொப்புள் (நாபி) | ---- பயம் |
| ஜென்மம் (1)---- | 4 | ----- குதம் (ஆசனம் ) | -- மரணம் |
| தனஸ்தானம் (2) ---- | 13 | -----முழங்கால் | ------- வெற்றி |
| தனஸ்தானம் (2) ---- | 12 | ---- தொடை | ---- சௌக்கியம் |
| தனஸ்தானம் (2) ---- | 5 | ---- பாதம் | ------- பிரயாணம் |

ஆக 90 மாதங்கள் ஏழரை வருடத்திற்கு ஒவ்வொரு சுற்றின் போதும் முழுவதும் அசுப பலனை தருவதில்லை ,முதல் 16 மாதங்கள் அசுப பலனும் அடுத்து தொடர்ச்சியாக 35 மாதங்கள் சுப பலனும் ஜென்ம சனியின் கடைசி நான்கு மாதங்கள் மிக அசுப பலனும் (இது தான் மோசமான காலம் )அடுத்து கடைசி பாதச்சனி 30 மாதம் சுப பலனும் தருவதாக கூறப்பட்டுள்ளது .,

சனி லக்கினத்தை கடக்கும் போது அது வாழ்க்கையின் முக்கிய திருப்பமெனவும் இச்சமயம் பொறுப்புகள் அதிகமாக தீவிரமாக உழைக்க வேண்டியது வரும் .பழைய தீராத முடியாத வேலைகள் இப்போது நிறைவு பெரும் .,புதிய முயற்சி திட்டம் -திட்டம் எதுவும் சற்று ஒத்தி போட்டு விடுவது நல்லது எனவும் சொல்லப்பட்டுள்ளது .,

சனி பத்தாமிடத்தை கடக்கும் போது முக்கியமான புதுப்பொருப்புகளும் ,கடமைகளும் ஏற்படும் ,குறிக்கோள்கள் முயற்ச்சிகள் வெற்றி பெறும்.,சூழ்நிலைக்கேற்ப உங்களை மாற்றி கொண்டு செயல்படுங்கள் .,உங்களின் எண்ணங்கள் ஈடேறும் எனவும் கூறுகின்றனர் .

ஏழாம் அதிபதி இருக்கும் நவாம்ச ராசியில் கோசார சனி வரும் காலம் யோகமுடைய ஜாதகமாக அமைந்து யோகாதிபதி திசை – புத்தி நடந்தால் .,வெளிநாடு செல்லும் யோகம் ஏற்படும்

7 1/2 ஆண்டு காலம் சனி 1,2,3,4,6,7,8,9,10,11,12 ஆகிய பதினோரு பாவங்களையும் ,இராசிகளுக்குள் புகுந்தும் ,பார்வையினாலும் அசுப பலனை தந்து விடுகிறார், இதில் 5 ஆவது பாவத்தை இவர் பார்வையிடுவதில்லை ,இது தான் சனியினுடைய மிகப் பெரிய தனிப்பெரும் கருணையாகும் .
7 1/2 ஆண்டுகளில் சனி மனிதனை உண்டு இல்லை உள்ளூர் ,உறவினர், மனைவி,மக்கள்,நண்பர் , மாதா ,பிதா ,குடும்பம் ,தனம் ,வழக்கு,விபத்து ,ஆதாயம்,விரயம் ,நோய் , என புகுந்து புரட்டி புடம் போட்டு எடுத்தாலும் ,ஜாதகரது பூர்வ புண்ணியம் என்று அளவிடுகிற புத்திகூர்மையையும்,பூர்வ புண்ணிய பலனாகிய முற் பிறவி நன்மைகளையும் இப் பிறப்பில் மனிதன் பெற்றுள்ள பூர்வ புண்ணிய அடிப்படையை கெடுப்பதில்லை .

71/2 ஆண்டு காலத்தில் ஒவ்வொரு ராசிக்கும் சனி பகவான் பிரவேக்கும் போதும் சனி பகவான் எந்த வாகனத்தில் வருகிறார் என்கிற கணக்கும் நூல்களில் சொல்லப்பட்டு இருக்கிறது .அதை பொறுத்து ஒவ்வொரு ஜாதகருக்கும் அதற்கு ஏற்ற படி நன்மையோ தீமையோ நடக்கும் .,
அதை நாம் எப்படி தெரிந்து கொள்வது :-

சனி பெயர்ச்சியின் போது அந்த நாளில் அன்றைய
நட்சத்திரத்தை குறித்து வைத்துக் கொண்டு இதை ஜாதகரின்
ஜன்ம நட்சத்திரம் முதல் எண்ணி வரும் தொகையில் 9 ஆல்
வகுத்த மீதி எண் என்னவோ அதன் படி.,

எண் - ----- வாகனம் ---------- பலன்

1 -------------- கழுதை ------ கெடுதி செய்வார்

2 -------------- குதிரை ------ வெற்றியை கொடுப்பார்

3 --------------- யானை -------- சௌகரியத்தை கொடுப்பார்

4 ------------- எருமை -------- மத்திம பலனை கொடுப்பார்

5 -------------- சிங்கம் ---------- சத்ரு நாசத்தை ஏற்படுத்துவார்

6 --------------- நரி -------------- சோகத்தை உண்டு பண்ணுவார்

7 ----------- காகம் ---------- கலகம் மனக்கவலை கொடுப்பார்

8 ----------- மயில் ---------- லாபத்தை உண்டு பண்ணுவார்

9 ----------- அன்னம் ------------- சுகத்தை கொடுப்பார்

இதை அறிந்து கணக்கிட்டு 71/2 சனி நடக்கும் காலத்தில் பலன்
அறிய வேண்டும்.

பரிகாரம் : -

சனி ஒருவருக்கு தான் ஈஸ்வர பட்டம் உண்டு ,பிராத்தனைக்கு செவிமடுப்பவர் ,வள்ளலார் கண்ட மனித நேய உணர்த்துபவர் சனி பகவான் .,

சனி அனுமனுக்கு சத்ரு இவரை வழிபடலாம் ,விநாயகர் ,திருமாலை வழிபடலாம் .,

1. நீச ஜாதியினருக்கு நல்வழியும் ,நல்லறிவும் தந்தால் சனி துன்பம் தருவதில்லை .,
2. உடல் ஊணமுற்றோரை ஆதிரிப்பது .,
3. நலிந்தவரை காப்பாற்றுவது .,
4. உழைப்பே உறுதுணையாக கொண்டிருக்கும் தொழிலாளர்களை ஆதரித்தால் சனி நிச்சயமாக துன்பம் தருவதில்லை .,
5. இது அனுபவத்தில் கண்ட சத்தியம் – ஆணவ பேயை மனத்திலிருந்து துரத்தி விட்டால் துன்பமே தருவதில்லை சனி .,

# கீதாசாரமும் ஜோதிடமும்

**எது நடந்ததோ, அது நன்றாகவே, நடந்தது**

**எது நடக்கிறதோ, அது நன்றாகவே, நடக்கிறது**
**எது நடக்க இருக்கிறதோ, அதுவும் நன்றாகவே நடக்கும்**

**உன்னுடையதை எதை நீ இழந்தாய்? எதற்காக நீஅழுகிறாய்?எதை நீ கொண்டு வந்தாய் அதை நீஇழப்பதற்கு?**

**எதை நீ படைத்திருந்தாய், அது வீணாவதற்கு ?எதை நீஎடுத்து கொண்டாயோ, அது இங்கிருந்தேஎடுக்கப்பட்டது.எதை கொடுத்தாயோ, அது இங்கேயேகொடுக்கப்பட்டது.**
**எது இன்று உன்னுடையதோ அது நாளைமற்றொருவருடையதாகிறது**
**மற்றொரு நாள், அது வேறொருவருடையதாகும்**

ஜோதிடம் ஓர் அறிமுகம்:
ஜோதிடம் என்பது வேதத்தின் ஒரு பகுதியாகும். நாம் முற்பிறவியில் செய்த வினைகளுக்கேற்ப இப்பிறவியில் நமக்கு ஈற்படும் ஜனன சுகதுக்கத்தை அறிய ஒரு ஜாதகம் எழுத ஆரம்பிக்கும் போது
ஜெனனி ஜென்ம சௌக்கியானாம்
வர்ததினி குல ஸம்பதாம்
பதவி பூர்வ புண்ணியானாம்
லிக்கியதே ஜன்ம பத்திரிகா.
முன் வினைப் பயனில் தான் பிறப்பு ஏற்படுகிறது. முன்வினைப் பயனில் தான் பிழைப்பு ஏற்படுகிறது. நம்முடைய பூர்வ புன்னியம் தான் இப்பிறவியல் நாம் அனுபவிக்கிற சுக துக்கங்களுக்கு காரணமாய் அமைகிறது. நாம் செய்கின்ற வினைகளே நமக்கு அடுத்தப் பிறவியைத் தோற்றவிக்கிறது என்பதனை இதன் மூலம் அறிகிறோம்.

**ஜோதிடம் பொதுவானது. யாருக்கும் சொந்தமானதில்லை**. ஒவ்வொருவரும் ஜோதிட நூல்களைப் படித்து, எழுதினால் தவறில்லை.
பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே உருவானது இந்த ஜோதிடக்கலை. இன்று அண்ணாமலை பல்கலைகழகம்,மதுரை காமராஜர் பலகலைகழகம் போன்றவையும் ஜோதிடத்துக்கு என்று பட்டயம் வழங்கி பாடம் சொல்லி தருகின்றன.இவர்கள் நடத்தும்

பாடங்கள் மிக நுணுக்கமாகவும் ,பழம்பெருமையும் ,கிரக கணக்கீடுகள் துல்லியமாகவும் இருக்கின்றன.ஜோதிடம் என்பதே கணக்குதான்.அறிவுகிரகம் புதன் வலுத்தவர்களும்,ஆன்மீக உணர்வை தருகிற ,பிறருக்கு நல்ல வழிகாட்டியாக திகழ வைக்கும் குருவும் ,வலுத்தவர்களும் தான் இக்கலையில் பிரகாசிக்க முடியும்.அதே போல மன திடம் தருகிற சந்திரனும் நன்கு அமைய வேண்டும்.இவை லக்னத்தில் இருந்து வாக்கு ஸ்தானம்,பத்தாமிடம் எனும் தொழில் ஸ்தானம் போன்றவற்றில் சிறப்பாக அமைய வேண்டும்.அவர்கள்தான் இதை படிக்க முடியும்.தொழிலாக செய்ய முடியும்

1,4,7,10 போன்ற கேந்திர ஸ்தானத்திலோ அல்லது வாக்கு ஸ்தானம் என்று சொல்லப்படும் இரண்டாம் வீட்டிலோ புதன் இருந்து ,புதன் கெட்டு போகாமல் இருந்து குருவின் பார்வையும் கிட்டிவிட்டால் அவன் மிக சிறந்த ஜோதிடனாக உருவெடுப்பான்

ஜோதிடத்தில் புலமை பெரும் ஜாதக அமைப்புகள் ;

தஸாம்ஸத்தில், நவாம்சத்தில், அல்லது இராசியில் ;

1)எந்த லக்கினத்திற்கு 1,5,9,அதிபதிகள் .அல்லது 10,11,அதிபதிகள்சம்பந்தம் பெற்று ரிஷப இராச ியில் இருப்பது .

2)லக்கினத்திற்கு இரண்டாம் அதிபதியும் புதன்பகவானும் பலம் பெற்றுகேந்திரத்தில் இருப்பது அல்லது 3,6,10,11. இருப்பது.

3) லக்கினாதிபதியுடன் சுக்கிரபகவான் பலம் பெற்று சம்பந்தம்பெறுவது.
அல்லது சுக்கிரன்பகவான...ி இரண்டாம் பாவத்தில் பலம் பெற்றுஇருப்பது.
ஐந்தாம் ஆறாம் அதிபதிகள் இணைந்து இருப்பது .

பத்தாம் அதிபதியும் பதின்னொனம் அதிபதியும் இணைந்து இருப்பது.

சூரியபகவானுக்கும் , சந்திரபகவானுக்கும் , லக்கினத்திற்கும் இதில்ஒன்று மேலே குரிப்பிட்ட துப்போல் அமையுமானால் ஜோதிடத்தில்புலமை தரும் .

4)அந்தணன் எனும் குருபகவானும் சேய் எனும் செவ்வாய்பகவானும்கூடி வலிமையான இட ங்களில் அமர்ந்திருந்தால் ஜாதகன் எந்தலக்கினத்தில் பிறந்திருந்தாலும் ஜாதகன் நற் குணங்க ள் உடையவன்கவித் திறமையுடையவன் ஜோதிடத்தில் கணிதத்தில்திறமையுடையவன் .

5)சேய் எனும் செவ்வாய்பகவானும் மதிமகன் எனும் புதன்பகவானும்கூடி வலிமையுடன் சுப ஸ்தானங்களில் அமையுப் பெற்ற ஜாதகன்செல்வந்தர்களால் மதிக்கப்படுவான் பண்டிதன் செ ல்வமுடையவன்புகழ் பெறுபவன் பிறர்மதிக்கும் அறிவாற்றலும் உடையவன் .

6)ஜனன ஜாதகத்தில் சேய் எனும் செவ்வாய்பகவானும் வெள்ளி எனும்சுக்கிரபகவானும் சேர்ந்து சுப ஸ்தானங்களில் இருந்தால் ஜாதகன்அசட்டுத்தனமான பிடிவாதமுடையவன் முட்டாள் தனமான வாதம்செய்து துன்பப்படுபவன் .

7)கதிர் எனும் சூரியபகவானும் மதிமகன் எனும் புதன்பகவானும்சேர்ந்து சுப ஸ்தானங்களில் அமைந்துள்ள ஜாதகன் பிறந்த லக்கினம்எதுவாக இருந்தாலும் சொந்த வீடுஉடையவன் செல்வ வசதிபெறுபவன்பலவித பாக்கியங்களை அடைவான்

## அடிப்படை ஜோதிட நூல்கள்

தமிழில் ஜோதிட நூல்களை பொறுத்தவரை மொத்தம் 66 உள்ளன,அவற்றில் சாதக அலங்காரம் முக்கியமானது.இதை கீரனூர்நடராஜன் எழுதினார். மங்களேஸ்வரியம், வீமகவி ஜோதிடம்,சாதகசூடாமணி, சினேந்திரமாலை, தாண்டவமாலை,சாதக சிந்தாமணி,சந்திர காவியம்,ஆனந்த களிப்பு , புலிப்பாணி ஜோதிடம்,அவசியம் படிக்க வேண்டிய நூல்கள்.

தனிப்பட்ட முறையில் யாரும் ஜோதிடத்தை உரிமை கோரக் கூடாது என்பது தான் கீதையின் *உபதேசம்*

**ஒரு நல்ல சோதிடருக்கு பின்வரும் ஐந்து அம்சங்கள் இருக்கவேண்டும்.**

1. குரு பாரம்பரியம் வேண்டும்.

இப்போது ஓய்வு பெற்ற பலர் ஒருவாறு பஞ்சாங்கம் பார்க்கத் தெரிந்து ஒன்றிரண்டு சோதிடப் புத்தகங்களைவாசித்து அறிந்துவிட்டு சோதிடராக உலா வருகின்றார்கள். இது பணம் சம்பாதிக்கமட்டுமல்...லமற்றவர்களுடைய கவனத்தை ஈர்க்கவும் ஒரு சுலபமான வழி. அடுத்தமுறை ஒரு குடும்ப ஒன்றுகூடலிலோ அல்லது விழாவிலோ நீங்கள் ஒருவருக்கு கை ரேகை சோதிடம் அல்லது எண் சோதிடம் சொல்லிப் பாருங்கள்; கொஞ்ச நேரத்தில் எத்தனை பேர் உங்களைச்சூழ்ந்து கொள்வார்கள் என்று. நீங்கள் புறப்படும்போது பலருக்கு உங்கள்தொலைபேசி இலக்கம் வேறு கொடுத்துவிட்டு வரவேண்டியிருக்கும். இதற்கு எந்தவித சோதிடமும் தெரிந்திருக்கத் தேவையில்லை.

2. வாக்கு சித்தி வேண்டும்.

இதற்கு சோதிடருடைய சாதகத்தில் இரண்டாமிடமாகியவாக்குத்தானம், அதன் அதிபதி என்பன பலம் பெற்றிருக்க வேண்டும். இது சோதிடத்துக்கு மட்டுமல்ல வைத்தியம், வர்த்தகம், அரசியல் போன்ற எல்லா துறைகளுக்கும் பொருந்தும்.

3. சோதிடருடைய சாதகத்தில் அவருக்கு சோதிடம் கை வருவதற்குரிய பலன் இருக்க வேண்டும்.

குறிப்பாக புதன் பலம் பெற்று நன்னிலையில் இருக்க வேண்டும். குரு நன்னிலையில் இருந்தாலும் சோதிடக்கலை கை வரும்.பத்தில் கேது தனித்து இருத்தல் சிறப்பு

4. தெய்வ வழிபாடு இருக்க வேண்டும்.

சோதிடம் வேதங்களின் ஆறு அங்கங்களில் ஒன்று. இது ஒரு தெய்வீகக் கலை. ( எக்கலை தெய்வீகம் இல்லை என்று கேட்காதீர்கள்) இதை பாவித்து பலன் சொல்லுபவர்கள் தினமும் தவறாது தமதுதனிப்பட்ட ஆத்மார்த்த பூசை வழிபாடுகள் செய்து ஒழுகி வர வேண்டும். ஏனென்றால் சோதிடம் ஒரு வழிகாட்டலே தவிர முடிந்த முடிபல்ல. தெய்வ சித்தம் என்பது எல்லாவற்றையும் மாற்றி அமைக்கும் வல்லமை வாய்ந்தது. இதில் பல அனுபவங்கள் உள்ளன.

5. ஆதரவாக ஆலோசனை சொல்லும் பாங்கு வேண்டும்.

சில சோதிடர்கள் உனது குடும்பம் இந்த வருட இறுதிக்குள் பிரியும் என்றும்; உனது தாயார் இந்த மாத இறுதிக்குள் காலமாவார் என்றும்;உனது துணைவி உன்னை விட்டு நீங்குவார் என்றும் சோதிடம் சொல்லி அனுப்புவதை பார்க்கிறோம். அவர்கள் கணிப்பில் தவறில்லை. ஆனால் அதை சொல்லும் விதம் தவறு.

****************************************************************************************************************

# நோய்களும் ஜோதிடமும்

**பாவங்கள் குறிப்பிடும் உடற்பாகங்கள் மற்றும் நோய்**

லக்ன பாவம்:
ஒருவரது உயரம், தோற்றம், பருமன் இவற்றைக் குறிப்பதாகும். சிறப்பாக,தலை, மூளை, ரோமம், தோலைக்குறிக்கும். நிறத்தின் தன்மையைக் குறிக்கும்.லக்னத்தில் இருக்கும் கிரகம், பார்க்கும் கிரகத்திற்கேற்ப அவரது நிறம்அமையும்.
ஆயுள் – நோய் எதிர்ப்புச் சக்தி – அல்லது இறுதி வரை ஏதாவது ஒருவியாதியால் துன்பப்படும் நிலை சக்தி – நோய் தாங்கும் சக்தி உடல் உறுதிவியாதியிலிருந்து விடுபடும் நிலை – நோய் குணமாகும் நிலை.

2ம் பாவம்:
முகம், கண்கள், பற்கள், தொண்டை, மூக்கு, குரலின் தன்மை இவற்றைக்குறிக்கும்.
இளமைக் காலத்தில் ஏற்படும் நோய்கள். அவற்றால் ஏற்படும் பாதிப்பு

3ம் பாவம்:
காதுகள், கழுத்து, தோள்பட்டை, கைகள், மூச்சுக் குழுய், அதில் ஏற்படும்அழற்சி, குரல் வளை, குரல் வளை அழற்றி.
நோய் எதிர்ப்பு சக்தி பெறும் தகுதி – நோயைத் தாங்கும் தைரியம், உடலில்ஏற்படும் சக்தி இரத்தத்தின் தன்மை, முதலியன

4ம் பாவம்:
மார்பகம், நுரையீரல், உணவுக் குழாய்.
குடும்பத்தில் வரும் பரம்பரை நோய், உணர்ச்சி வசப்படுவதால் ஏற்படும்நோய் மன வருத்தத்தால் ஏற்படும் பாதிப்பு

5ம் பாவம்:
இருதயம், ஈரல், மண்ணீரல், கணையம், சிறுகுடல் பகுதி, பித்தப்பை.
பெண்களுக்கு கர்ப்ப காலத்தில் ஏற்படும் பாதிப்பு, உணர்ச்சிகளால் ஏற்படும்பாதிப்பு

6ம் பாவம்:
கிட்னி, குடல் பகுதி.
வியாதிகளைக் குறிப்பிடும் இடம். விபத்துக்களால் ஏற்படும் பாதிப்பு,அதனால் ஏற்படும் காயம், துன்பம் முதலியன

7ம் பாவம்:
கர்ப்பப் பை, கர்ப்ப பைக்குச் செல்லும் குழாய் (ஃபெலோபியன் டியூப்), கருமுட்டை மலக்குடல்

, அடி வயிறு.
உடல் உறவால் ஏற்படும் வியாதிகள்.

8ம் பாவம்:
வெளிப்புற ஜெனன உறுப்புக்கள், ஆசனவாய் (மலத்துவாரம்).
தீராத வியாதிகள் கண்டு பிடிக்க இயலாத வியாதிகள். அவற்றால் ஏற்படும்துன்பம், இழப்பு

9ம் பாவம்:
இடுப்பு, தொடைப்பகுதி.
இறையருளால் பெறும் உடல் நலம்.

10ம் பாவம்:
முழங்கால் மூட்டுப்பகுதி.
உடலின் சக்தி, செயல் திறன், செயலாற்றும் தகுதிக்கானச் சக்தி பெறும்நிலை

11ம் பாவம்:
கால், கண்.
வியாதிகளிலிருந்து விடுபடும் நிலை. நோய் குணமாகுமா? என்பதையும்தெரிவிக்கும் பாவம்

12ம் பாவம்:
பாதம், கண்.
மருத்துவ மனையில் இருக்கும் நிலை. குடும்பத்தை விட்டு தனித்திருக்கும்நிலை தொற்று ந
ோய் பாதிப்பால் தனி விடுதியில், மருத்துவ மனையில்தனிப்பகுதியில் இருக்கும் நிலை

**ராசி நிலையில் உடல் உறுப்புக்கள்**

| | | | |
|---|---|---|---|
| பாதம் | தலை, முகம் | கண், காது, மூக்கு, வாய், தொண்டை | கழுத்து தோள்பட்டை |
| கணுக்கால் | | | மேல் மார்பு நுரையீரல் |
| கால் மூட்டு | | | இருதயம் மார்பு |
| தொடை | பிறப்புறுப்பு, மலத்துவாரம் | கருப்பை, சிறுநீரகம், ஜீரண உறுப்புகள் | இடுப்பு, முதுகெலும்பு |

ஒருவரது ஜாதகத்தில் லக்னத்திற்கு ஆறாமிடம் ரோக ஸ்தானம் எனப்படும். இந்த ஆறாமிடம் மூலம் குறிப்பிட்ட ஜாதகர் எத்தகைய நோய்களுக்கு ஆட்படுவார் என்பதை

அறியலாம். ஆறாமிடத்தில் அமர்ந்துள்ள கிரகங்கள் மூலமும், ஆறாமிடத்தை பார்வை செய்யும் கிரகங்கள் மூலமும், அந்த ஜாதகர் எத்தகைய நோய்களுக்கு ஆட்படுவார் என்பதையும் அறிய இயலும். இந்த நோய்களின் தாக்குதல் எப்போது பலமாக தன் இயல்பைக் காட்டும், எந்த காலக் கட்டங்களில் கட்டுப்பாட்டில் இருக்கும் என்பதையும் அறியலாம்.

**சூரியன்**: மலச்சிக்கல், அஜீரணம், தூக்கமின்மை, கண் நோய்கள், ரத்த அழுத்தம், இதய நோய், ஆஸ்துமா, வயிற்றில் பூச்சிகள் போன்ற நோய் களையும் ஜுரம் போன்றவை.

**சந்திரன்**: மனநோய்கள், உணர்ச்சி வசப்படுதல், அதிவேக இதயத் துடிப்பு, ரத்த அழுத்தம், காச நோய், ரத்த சோகை, சளி, கபம், பாலியல் நோய்கள் இரைப்பைப் புண், நீரிழிவு, குடல் புண் போன்றவை.

**செவ்வாய்**: மூலநோய், நீரிழிவு, இரைப்பை மற்றும் குடல் நோய்கள், மன அழுத்தம், தோல் வியாதிகள், இதய நோய், நரம்புத் தளர்ச்சி, அம்மை, விபத்து மற்றும் ஆயுதங்களால் பாதிப்புகள்.

**புதன்**: இதய நோய்கள், ரத்த அழுத்தம், வயிற்றுப்புண், புற்றுநோய், தோல் நோய்கள், நரம்பு தளர்ச்சி, இரைப்பை புண் போன்றவை.

**குரு**: தொண்டை சம்பந்தமான நோய்கள், தைராய்டு, அம்மை, முடக்கு வாதம், காமாலை, நரம்பு சம்பந்தப்பட்ட வியாதிகள், பக்க வாதம், கீழ் வாதம், நீரிழிவு போன்றவை.

**சுக்கிரன்**: கண், காது, மூக்கு நோய்கள். நுரையீரல் நோய், இருமல், குடல்புண், இருதய நோய், ரத்த அழுத்தம், பாலியல் தொடர்பு வியாதிகள் போன்றவை.

**சனி**: மனநோய், கை கால் வலிப்பு, மூளை பாதிப்பு, தோல் நோய், நீண்ட கால வியாதிகள், சிறுநீரக நோய், பித்தம், குடல் நோய், விபத்தால் பாதிப்பு போன்றவை.

**ராகு**: அதிக அமிலம் சுரத்தல், வயிறு கோளாறுகள், அஜீரணம், தூக்கமின்மை, மூளை நோய், குடல் புண், தோல் வியாதிகள் போன்றவை

**கேது**: புற்றுநோய், வாதம், தோல் நோய்கள், காலரா, நரம்புத் தளர்ச்சி, சிறுநீரகக் கோளாறு போன்றவை.

************************************************************************************************************

ஜோதிடம் பார்க்கிற எல்லோரும், பஞ்சாங்கம் னு ஒன்னு வச்சு இருப்பாங்க.. இல்லையா?
பஞ்சாங்கம் னா என்ன? பஞ்சாங்கம்னா ஐந்து அங்கங்கள்னு அர்த்தம்.

அந்த ஐந்து அங்கங்கள்:

**1.வாரம் / நாள் 2 திதி 3. நட்சத்திரம் 4. யோகம் 5. கரணம்**

ஞாயிற்றுக்கிழமை முதல் சனிக்கிழமை வரை உள்ள ஏழு நாட்கள்தான் வாரம்.
------------------------------------------------------------
திதி என்பது வளர்பிறைப் பிரதமை முதல் பௌர்ணமி
வரை உள்ள பதினைந்து நாட்களும், தேய்பிறைப்
பிரதமை முதல் அமாவாசை வரை உள்ள பதினைந்து
நாட்களும், அதாவது அந்த முப்பது நாட்களும் திதியாகும்
திதியில் இருந்து பிறந்ததுதான் தேதி

வானவெளியில் சூரியனுக்கும், சந்திரனுக்கும் உள்ள தூரத்தைச் சொல்வதுதான் திதி

விரதங்கள் இருப்பவர்கள், இறைவனுக்கு அபிஷேகம் செய்பவர்கள் இந்தத் திதி பார்த்துத்தான் செய்வார்கள்

அதேபோல் புதுக் கணக்குப் போடுபவர்கள் அதிகம் விரும்புவது தசமித் திதி

3. திருமணம், இடம் வாங்குவது போனற சுப காரியங்களைச் செய்பவர்கள் அஷ்டமி, நவமி திதியில் செய்வதில்லை.

4. ஒரு மனிதனின் மரணத்தை திதியை வைத்துதான் குறிப்பிடுவார்கள். ஒருவன் ஐப்பசி மாதம் வளர்பிறை நவமி திதியில் காலமானால், ஒரு ஆண்டு கழித்து அல்லது வருடா வருடம் அவனது சந்ததியினர்அதே ஐப்பசி மாதம் வளர்பிறை நவமி திதியில் தான் அவனுக்கு நினைவுச் சடங்குகளைச் செய்வார்கள்.கிராமங்களில் தங்கள் வீட்டில் படையல் போடுவார்கள். இதுபோன்று இன்னும் பல பழக்கங்கள் இந்தத் திதியை வைத்துப் பல சமூகங்களில் பலவிதமாக உள்ளது.

| 30 திதிகள் | | | |
|---|---|---|---|
| வளர்பிறைத் திதிகள் | | தேய்பிறைத் திதிகள் | |
| 1 | பிரதமை | 16 | பிரதமை |
| 2 | துதியை | 17 | துதியை |
| 3 | திருதியை | 18 | திருதியை |
| 4 | சதுர்த்தி | 19 | சதுர்த்தி |
| 5 | பஞ்சமி | 20 | பஞ்சமி |
| 6 | சஷ்டி | 21 | சஷ்டி |
| 7 | சப்தமி | 22 | சப்தமி |
| 8 | அஷ்டமி | 23 | அஷ்டமி |
| 9 | நவமி | 24 | நவமி |
| 10 | தசமி | 25 | தசமி |
| 11 | ஏகாதேசி | 26 | ஏகாதேசி |
| 12 | துவாதசி | 27 | துவாதசி |
| 13 | திரயோதசி | 28 | திரயோதசி |
| 14 | சதுர்த்தசி | 29 | சதுர்த்தசி |
| 15 | பௌர்ணமி | 30 | அமாவாசை |

நட்சத்திரம் என்பது அஸ்வினி முதல் ரேவதி வரையுள்ள 27 நட்சத்திரங்கள். பூமியை சுற்றி சந்திரன் செல்லும் பாதையில் எந்த நட்சத்திரம் உள்ளதோ அதுதான் அன்றைய ந்ட்சத்திரம். 27 நாட்களில் சந்திரன் வானவெளியில் ஒரு சுற்றை முடித்துவிட்டு அடுத்த சுற்றை அரம்பித்துவிடும்

தினசரி ஒரு நட்சத்திரம் என்பதால் ஒவ்வொரு நாளும் சந்திரனை வைத்துப் பிறந்த நட்சத்திரம் மாறும், அதேபோல 2.25 நாட்களுக்கு ஒருமுறை பிறந்த ராசியும் மாறும்.
மொத்தம் இருக்கிற 27 நட்சத்திரங்களைப் பற்றி நாம் ஏற்கனவே பார்த்து இருக்கிறோம்.. இல்லையா?

=============================================================

கரணம் - என்பது திதியில் பாதி தூரத்தைக் குறிக்கும்.
கரணங்கள் மொத்தம் 11-ஆகும். அவையாவன:1. பவ, 2. பாலவ, 3. கெலவ, 4. தைதூலை, 5. கரசை, 6. வணிசை, 7. பத்தரை, 8. சகுனி, 9. சதுஷ்பாதம், 10. நாகவம், 11. கிம்ஸ்துக்னம்.

வானவெளியில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் இருந்து சூரியனும், சந்திரனும் செல்கிற மொத்த தூரத்தைக் குறிப்பது யோகம்.

நல்ல நாளா , இல்லையா? னு ஜோசியரைப் பார்த்து நாள் குறிக்கிறப்போ, இதை எல்லாம் பார்த்துத் தாங்க சொல்லணும்.

யார் வர்றாங்களோ, அவருக்கு லக்கினத்தில் இருந்து 9 ஆம் வீட்டுக்கு அதிபதி யாரோ, அவருக்கு உரிய கிழமை தேர்ந்து எடுத்து , நல்ல நேரம் பார்த்து சொன்னா, சிறப்பா இருக்கும்.

சில நாட்களை காலண்டரில் பார்த்தாலே போட்டு இருப்பார்கள் - சித்த யோகம், மரண யோகம், அமிர்த யோகம் என்று...

சில கிழமைகளுடன் சில நட்சத்திரங்கள் சேரும்போது, அது ஒவ்வாத நாளாகிவிடும்.

**ஞாயிறு: அவிட்டம், கார்த்திகை**
**திங்கள் : அஸ்விணி, உத்திராடம்**
**செவ்வாய்: பூரட்டாதி, ரோகிணி, விசாகம், திருவாதிரை**
**புதன் கிழமை: ஹஸ்தம்**
**வியாழக்கிழமை: கார்த்திகை, திருவாதிரை, உத்திரம், சதயம், அனுஷம்**
**வெள்ளிக்கிழமை: ரோகிணி , ஆயில்யம், மகம்,திருவோணம்,**
**சனிக்கிழமை: ஆயில்யம், பூரட்டாதி, சித்திரை, உத்திரம்**

மேற்கண்ட கிழமைகளில், குறிப்பிட்டுள்ள இந்த நட்சத்திரங்கள் சேர்ந்துவந்தால் அன்று மரணயோகம்.

மரணயோகத்தன்று சுப காரியங்களைச் செய்ய மாட்டார்கள்.
அன்று செய்யும் முக்கியமான செயல்கள் விருத்தி அடையாது.

உதாரணத்திற்கு, மரணயோகத்தன்று நீங்கள் ஒரு இடத்தை வாங்குகிறீர்கள் என்று வைத்துக்கொள்ளுங்கள். நிலம் உங்களிடம் தங்காது. கையை விட்டுப் போய்விடும். அல்லது சிக்கல் மிகுந்த இடமாகி உங்கள் பணம் மாட்டிக் கொண்டுவிடும். மரண யோகத்தன்று ஒருவர் புதிதாக ஒரு வியாபாரத்தைத் தொடங்கினால், அது அபிவிருத்தியாகாது. வியாபாரம் செழிப்படையாது. அன்றையத் தேதியில், திருமணம் செய்து கொண்டால், மண வாழ்க்கை கசப்பில் முடிந்துவிடும். பிரிவில் முடிந்துவிடலாம்.
பணி மாற்றத்தில் வேறு ஒரு ஊருக்குச் செல்கிறீர்கள். சென்று அங்கு பணியில் சேரும் நாள், மரண யோக நாளாக இருந்தால், அங்கே நீங்கள் பல பிரச்சினை களைச் சந்திக்க நேரிடும்.
மரணயோகத்தன்று யாருக்கும் கடன் கொடுக்காதீர்கள். கொடுத்தால் அது வராக் கடனாகிவிடும். ( **நம்ம ஏங்க சார் கடன் கொடுக்கிற நிலைமை லெ இருக்கோம் னு கேக்கிறீங்களா ? ஒன்னு பண்ணலாம்.. ... நீங்க வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுப்பதற்கு அந்த நாளைப் பயன்படுத்தலாம். கடன் தீர்ந்துவிடும். அந்த நபரிடமோ, அல்லது அந்த வங்கியிலோ மீண்டும் கடன் ஏற்படாது.. ட்ரை பண்ணித்தான் பாருங்களேன்..** .)

இதுபோல முடிவிற்குக் கொண்டுவர , கழட்டி விட வேண்டும் என்று நினைக்கும் செயல்களை, அன்று செய்யலாம்.

இதற்கு எதிரிடையாக , சில கிழமைகளுடன் சில நட்சத்திரங்கள் சேரும்போது, அது அமிர்தயோக நாளாகிவிடும்.

**ஞாயிறு: உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி, திருவோணம், பூசம், மூலம்**
**திங்கள் : சுவாதி, புனர்பூசம்,ரோகிணி, மிருகசீரிடம்**
**செவ்வாய்: உத்திரம், மூலம்**
**புதன் : உத்திராடம், பூரம், பூராடம், பூரட்டாதி, உத்திரம்**
**வியாழன் : சுவாதி, மூலம்**
**வெள்ளி : அஸ்விணி, பூசம், ஹஸ்தம், மூலம்**
**சனி: மகம், சதயம், கார்த்திகை, சுவாதி**

அமிர்தயோகத்தன்று சுப காரியங்களைச் செய்யலாம். நமக்குச் சாதகமான விளைவுகளை ஏற்படுத்தக்கூடிய பணிகளைச் செய்யலாம். சுருக்கமாகச் சொன்னால், மரண யோக தினங்களில் எது எதைச் செய்யக்கூடாது என்று சொன்னேனோ, அதையெல்லாம் இந்த நாட்களில் செய்யலாம்......

மேல சொன்ன ரெண்டும் முக்கியமான யோகங்கள்.முக்கியமா மனசிலே ஞாபகம் இருக்கட்டும். மற்றது , இல்லேன்னா கூட பரவா இல்லை.

சுபா சுப யோகம்; சித்த யோகமும் அமிர்த யோகமும் சுபகருமங்களுக்கு உரிய சுப யோகங்களாகும்.

மரண யோகம், நாச யோகம், உற்பாத யோகம், பிரபலா நிஷ்ட யோகம், திரிபுஷ்கர யோகம் எனபன சுப கருமங்களுக்கு விலக்கப்படும் அசுப யோகங்களாகும்.

ஒரு ஜோதிடரா உங்க கிட்டே மக்கள் என்ன எதிர் பார்ப்பாங்க.... ஒன்னு , ஜாதகம் பார்த்து , பலன் தெரிஞ்சுக்கிடுறது.. அப்புறம்.. எதாவது நல்லது , கேட்டது நடக்கிறப்போ - நாள், நேரம் பார்த்து , குறிச்சுக் கொடுக்க சொல்லுவாங்க இல்லையா? அதுக்கு தான் , நீங்க பஞ்சாங்கம் தெளிவா பார்க்க தெரியணும்.. சரி, பஞ்சாங்கப்படி , நீங்க இன்னும் தெரிந்துகொள்ள வேண்டிய தகவல்கள் பற்றி .. கொஞ்சம் பார்க்கலாம். பஞ்சாங்கம் சொல்றது தவிர, நம்ம கருத்துக்களும் இடையிலே போடுறதாலே , இந்த பதிவு - ரொம்பவே நீண்டு விட்டதாலே ... இரண்டு / மூன்று பதிவா போடுறேன்... ஓகே வா..?

*எந்த மாசத்தில் பூர்ணிமை, அமாவாஸ்யை இல்லையோ அந்த மாஸத்துக்கு விஷமாசம் என்று பெயர்.
* எந்த மாசத்தில் இரண்டு பூர்ணிமையோ, இரண்டு அமாவாஸ்யையோ வருகிறதோ அதற்கு மலமாசம் என்று பெயர்.
* விஷ மாசத்திலும், மல மாசத்திலும் சுபகார்யங்களை விலக்க வேண்டும்.
* ஆனால் சித்திரை, வைகாசி, மாதத்தில் இவை நிகழுமானால் அந்த இரு மாதங்களுக்கும் இந்த தோஷம் கிடையாது.

**அயனங்கள்**
ஒரு வருடம் இரண்டு அயனங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. சூரியன் மகர ராசியில் பிரவேசிக்கும்போது உத்தராயனம் தொடங்குகிறது. கடக ராசியில் பிரவேசிக்கும் போது தக்ஷிணாயனம் தொடங்குகிறது.

தைமாதம் தொடங்கி ஆனி முடிய 6 மாதங்கள் உத்தராயன காலமாகும். இக்காலகட்டத்தில் எல்லா நல்ல காரியங்களும் செய்யலாம். கும்பாபிஷேகம், க்ரஹப்பிரவேசம் போன்றவை இக்காலகட்டத்தில் நிகழ்வது உத்தமம்.
ஆடி மாதம் தொடங்கி மார்கழி ஈறாக 6 மாதங்கள் தக்ஷிணாயனம் ஆகும். இக்காலகட்டத்தில் நல்ல காரியங்களைத் தொடங்குவதை தவிர்க்க முடியுமானால் தவிர்ப்பது நல்லது.

**ருதுக்கள் - 6**
ஒரு வருடம் 6 ருதுக்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது.
சித்திரை, வைகாசி - வஸந்த ருது
ஆனி, ஆடி, - க்ரீஷ்ம ருது
ஆவணி, புரட்டாசி - வர்ஷ ருது
ஐப்பசி, கார்த்திகை - சரத் ருது
மார்கழி, தை - ஹேமந்த ருது
மாசி, பங்குனி - சிசிர ருது

**கிழமைகள் - 7**
ஒரு நாள் என்பது 60 நாழிகைகள் கொண்டது. ஸூர்ய உதயத்திலிருந்து மறுநாள் ஸூர்யோதயம் வரை ஒரு நாளாகும்.
சாயா க்ரஹங்கள் இரண்டு நீங்கலாக மீதமுள்ள ஏழு க்ரஹங்களுக்குரியதாக ஏழு நாட்கள் கொண்ட கால அளவு ஒரு வாரம் என்று தமிழில் அறியப்படுகிறது.
ஒரு நாளைக்குரிய பெயராக வாஸரம் என்ற சொல் ஸங்கல்பத்தில் பயன்படுத்தப்படுகிறது.
நடைமுறைப் பெயர் ஸங்கல்பத்தில் கூற வேண்டியது

ஞாயிறு - பானு வாஸரம்
திங்கள் - இந்து வாஸரம்
செவ்வாய் - பௌம வாஸரம்
புதன் - ஸௌம்ய வாஸரம்
வியாழன் - குரு வாஸரம்
வெள்ளி - ப்ருகு வாஸரம்
சனி - ஸ்திர வாஸரம்

ருதுக்கள் , நாட்கள் எல்லாம் ஒரு பெரிய விஷயமானு கேட்கலாம் . நீங்க ஒரு ஜாதகம் பார்க்கிறீங்க.. அதுலே ஜனனம் - ப்ருகு வாஸரம் , னு போட்டிருந்தா , முழிக்க கூடாது இல்லையா?

**இராகு காலம் :**

**கிழமை = இராகு காலம்**

ஞாயிறு = 04.30 - 06.00
திங்கள் = 7.30 - 9.00
செவ்வாய் = 03.00 - 04.30
புதன் = 12.00 - 01.30
வியாழன் = 01.30 - 03.00
வெள்ளி = 10.30 - 12.00
சனி = 09.00 - 10.30

"சார், ஒவ்வொரு நாளும் காலண்டரைப் பார்த்துதான் - ராகு காலம் தெரிஞ்சுக்கனுமா? ஈசியா எப்படி ஞாபகம் வைச்சுக்கிறது?"
உங்களுக்கு சொல்லலைனா எப்படி?
கீழே சொல்லி இருக்கிற மாதிரி, ஒரு வரிப் பாட்டு ஞாபகத்திலே வைச்சுக்கோங்க. ..... ஒவ்வொரு வார்த்தையிலும் வரும் முதல் எழுத்து ---- அந்த கிழமை -- வரிசைலே ஒரு ஆர்டரா வரும். ......

**திருவிழா சந்தையில் வெளியில் புகுந்து விளையாட செல்வது ஞாயமா?**

நம்ம வாசகர்கள் கிட்டே திரும்ப , திரும்ப சொல்ற விஷயம் இதுதான். உங்களுக்கு வர்ற கஷ்டங்கள் மறைஞ்சு , நீங்க ஒரு நல்ல நிலைக்கு வரணும்னு விரும்பினால் - ராகு கால நேரத்தில் , அம்மன் வழிபாடு செய்யுங்க. லலிதா சகஸ்ரநாமம், அல்லது மகிஷாசுர மர்த்தனி ஸ்தோத்ரம் சொல்லுங்க. சொந்த தொழில், வியாபாரம் பண்றவங்க தினம் கூட பண்ணலாம். முழுசா ஒண்ணரை மணி நேரம் முடியாட்டாக் கூட , கடைசி அரை மணி நேரம் பண்ணுங்க.. உங்க வீடு, அலுவலகம் - இப்படி உங்களுக்கு தோதான இடங்களிலே பண்ணலாம் . அம்மன் படத்திற்கு மாலை போட்டு, தீபம் ஏற்றி பண்ணுங்க.. நீங்க இருக்கும் இடத்து கிட்டே , இருக்கிற அம்மன் ஆலயம் நீங்க போய் வழிபட முடிஞ்சா இன்னும் நல்லது.. அந்த ஆலயம் ஒரு 200 / 300 வருடம் 00 பழமையான ஆலயமா இருந்தால் ரொம்ப விசேஷம்..

சொந்த தொழில் இல்லாதவங்க தினம் கோவிலுக்கு போக முடியாது . நீங்க , ஞாயித்துக் கிழமை சாயங்காலம் , மிஸ் பண்ணாமல் செய்யுங்க. மற்ற நாட்களில் உங்க வீட்டுலே இருக்கிறவங்க , போக முடிஞ்சா போய்ட்டு வரட்டும்.
உங்களுக்கு ஒரு கஷ்டம் வந்தா முதல் ஆளா , துடிக்கிறது உங்க அம்மா தான்.. அப்பா , நீங்க ரொம்ப , ரொம்ப கஷ்டப்பட்ட பிறகு தான் , நீங்க கெஞ்சுனா தான், உங்களுக்கு உதவி செய்வார். இல்லையா? அம்மா, நீங்க கேட்கிறது, அவங்களாலே கொடுக்க முடிஞ்சா , உடனே கொடுத்திடுவாங்க இல்ல? உங்க விதிப்பயன்படி, உங்களுக்கு கிடைக்க வேண்டிய நல்ல விஷயங்கள் உடனடியா கிடைக்க , ராகு கால அம்மன் வழிபாடு - ரொம்ப சுலபமான முறை.
நான் கோவிலுக்கு போய் சாமி கும்பிடுறேன்லேன்னு, பெத்த தாயை நீங்க கவனிக்காம போட்டால்... அந்த லோக மாதா கூட மனசு கல்லாகிடுவா.. அதையும் ஞாபகம்

**எமகண்டம்**
இதேபோல எமகண்ட காலம் எப்போது என்பதனை அறிய ஒரு வரிப்பாட்டு உண்டு.
**விழாவுக்கு புதிதாக சென்று திரும்பும் ஞாபகம் சற்றும் வெறுக்காதே**
**கிழமை : எமகண்டம் :: பகல் பொழுதில்**
ஞாயிறு : 12.00 - 01.30
திங்கள் : 10.30 - 12.00
செவ்வாய் : 09.00 - 10.30
புதன் : 07.30 - 09.00
வியாழன் : 06.00 - 07.30

வெள்ளி : 03.00 - 04.30
சனி : 01.30 - 03.00

**கிழமை : எமகண்டம் :: இரவுப் பொழுதில்**

ஞாயிறு : 06.00 - 07.30
திங்கள் : 03.00 - 04.30
செவ்வாய் : 1.30 - 03.00
புதன் : 12.00 - 01.30
வியாழன் : 10.30 - 12.00
வெள்ளி : 09.00 - 10.30
சனி : 07.30 - 09.00

இராகு காலம், எமகண்டம் ஆகிய நேரங்களில் சுபச் செயல்களை நீக்க வேண்டும். குளிகை காலத்தில் அசுபச் செயல்களை நீக்க வேண்டும்.

**குளிகை**

**கிழமை = குளிகை நேரம் :: பகல் பொழுதில்**

ஞாயிறு = 03.00 - 04.30
திங்கள் = 01.30 - 03.00
செவ்வாய் = 12.00 - 01.30
புதன் = 10.30 - 12.00
வியாழன் = 09.00 - 10.30
வெள்ளி = 07.30 - 09.00
சனி = 06.00 - 07.30

**கிழமை = குளிகை நேரம் :: இரவுப் பொழுதில்**

ஞாயிறு = 09.00 - 10.30
திங்கள் = 07.30 - 09.00
செவ்வாய் = 06.00 - 07.30
புதன் = 03.00 - 04.30
வியாழன் = 01.30 - 03.00
வெள்ளி = 12.00 - 01.30
சனி = 10.30 - 12.00

**ஏர் உழ**

அனுஷம், ஹஸ்தம், சித்திரை, ஸ்வாதி, ரோகிணி, அவிட்டம், மகம், அசுவனி, உத்திரம், உத்திராடம், உத்திராட்டாதி, ரேவதி, மூலம், ஆகிய நக்ஷத்திரங்கள்.
ஞாயிறு, செவ்வாய், புதன், வெள்ளி ஆகிய கிழமைகளில் பூமியில் ஏர் உழுவதற்கு ஆரம்பம் செய்ய உத்தமம்.
திங்கள் மத்யமம்.
ப்ரதமை, அமாவாஸ்யை, வைத்ருதி, வ்யாகாதம், வ்யதீவாதம் ஆகிய யோகங்கள், பத்ர கரணம் ஆகியவற்றைத் தவிர்த்து மற்றைய சுபதினங்களில் ஏர் உழ ஆரம்பித்தல் நலம்.

**பயிர் செய்ய**

விசாகம், ஹஸ்தம், ம்ருகசீர்ஷம், மகம், புனர்வசு, ரோஹிணி, அசுவனி, திருவோணம், அவிட்டம், சதயம், உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி, மூலம், ரேவதி, சுவாதி, அனுஷம், பூரம் ஆகிய 18 நக்ஷத்திரங்களில் - செவ்வாய், வியாழன், ஞாயிறு ஆகிய கிழமைகளில் ரிஷபம், மீனம், மிதுனம்.

**குழந்தையைத் தொட்டிலில் விடுதல்**

உடல் வளர்ச்சிக்கு ஓய்வு அவசியம். குழந்தைகளுக்கு இறைவனாலேயே ஏற்படுத்தப்பட்ட உடற்பயிற்சிதான் கை-கால்களை அசைத்துக் கொள்ளுவது. அவ்வுடற்பயிற்சிக்குப் பின்னர் ஓய்வு கொள்ள கண் வளர வேண்டும். குழந்தைப் பிறந்த 10, 12, 16 மற்றும் 22-ம் நாளில் தொட்டிலில் இடுவது வழக்கம். இதற்கு

ரோகிணி, திருவாதிரை, பூசம், உத்திரம், உத்திராடம், அவிட்டம், சதயம், உத்திரட்டாதி, த்விதியை, திருதியை, பஞ்சமி, சப்தமி, தசமி, ஏகாதசி, திரயோதசி சுபகோள்கள் பார்த்த லக்னமும் எட்டாமிடம் சுத்தியும் ஏற்றது.

**அரைஞாண் அணிவிப்பது**
வெள்ளி அல்லது பொன் அரை ஞாண் - புண்ணியாஹ வசனம் செய்யும் நாளன்று அல்லது ஐந்தாவது மாதத்தில் கட்டலாம். அவ்வரைஞாணுடன் கருகமணி, செப்புக்காசு, (தொப்புள் கொடி விழுந்ததும் அதனை தாயத்து போன்றும் ஒரு சிலர் அணிவிக்கின்றனர்.) கட்டினால் தோஷங்கள் நீங்கும் எனப் பெரியவர்கள் கூறுவார்கள். சுபதிதிகள், சுபநட்சத்திரங்கள், அஷ்டம் சுத்தியுள்ள சுபலக்னத்தில் அரைஞாண் அணிவித்தால் குழந்தை ஆரோக்கியத்துடனும் நீண்ட ஆயுளுடன் இருக்கும். எருக்கங்செடியின் நாரினால் அரைஞாண் கட்டினால் குழந்தை அடிக்கடிப் பாலைக்கக்குவது நிற்கும் என பாட்டி வைத்தியமும் கூறுகிறது.

**அன்னப்ராஸனம் - அமுதூட்டல்**
தாயமுதால் வளரும் குழந்தைக்கு சிறந்த உணவுப் பழக்கத்தை ஏற்படுத்தச் சிறந்த நாளைத் தேர்ந்தெடுப்பது மரபு. இது 6, 8, 9 அல்லது 12-வது மாதத்தில் அஸ்வினி, மிருகசீர்ஷம், புனர்வசு, பூசம், உத்திராடம், ஹஸ்தம், சித்திரை, சுவாதி, அனுஷம், திருவோணம், அவிட்டம், சதயம், உத்திரட்டாதி, ரேவதி ஆகிய நட்சத்திரங்களில் த்விதியை, திருதியை பஞ்சமி, ஸப்தமி, தசமி, ஏகாதசி, துவாதசி, திரயோதசி ஆகிய திதிகளில் திங்கள், புதன், வியாழன், வெள்ளி ஆகிய கிழமைகளில் ரிஷபம், மிதுனம், கடகம், கன்னி, துலாம், தனுசு, மகர, கும்பமாகிய லக்னங்களில் செய்வது உத்தமம். இதற்கும் எட்டாமிடம் சுத்தமாக இருக்க வேண்டும். லக்னம் பலம் வாய்ந்ததாக இருந்தல் அவசியம்.

**கேச கண்டமென்னும் முடியிறக்குதல்:**
நல்ல உடல் நலத்துடன் நீண்ட ஆயுளுடன் வாழ, இச்சடங்கு மேற்கொள்ளப்படுகிறது. 3 அல்லது 5-ம் ஆண்டு செய்வது வழக்கம். வளர்பிறை மிகவும் ஏற்றது. த்விதியை, திருதியை, பஞ்சமி, சப்தமி, தசமி, ஏகாதசி, திரயோதசி ஆகிய திதிகள் அஸ்வினி, ரோகிணி, மிருகசீர்ஷம், புனர்வசு, பூசம், உத்திரம், அஸ்தம்,சித்திரை, சுவாதி, உத்திராடம், திருவோணம், அவிட்டம், உத்திரட்டாதி, ரேவதி ஆகிய நட்சத்திரங்கள். திங்கள், புதன், வியாழன், வெள்ளிக்கிழமைகள். ரிஷபம், மிதுனம், கன்னி, துலாம், மகரம், மீனம் ஆகிய லக்னங்கள் ஏற்றது. எட்டாமிடம் சுத்தமாக இருத்தல் அவசியம். எழில் சூரியன், செவ்வாய் இருக்கக் கூடாது.

**கர்ண பூஷணம் - காது குத்துதல்:**
ஆக்யூபங்க்சர் என்னும் முறை இன்று மிகவும் பிரபலமாகியுள்ளது. உடல் நலத்துக்கும், வளர்ச்சிக்கும், நோய் நிவாரணத்துக்கும் இம்முறை சிறந்ததாகக் கருதப்படுகிறது. எல்லாவற்றிலும் மிகவும் உயர்ந்த நிலையை எட்டிய நமது முன்னோர்கள் இதனைக் கருத்தில் கொண்டே காது குத்தும் நிகழ்ச்சியைக் குழந்தைப் பருவத்திலேயே செய்வித்தனர். 6, 7 அல்லது 8-வது மாதத்தில் பகலில் செய்ய வேண்டும். இரண்டு திதிகள், இரண்டு நட்சத்திரங்கள் கொண்ட நாட்களைத் தவிர்க்க வேண்டும். மிருகசீர்ஷம், திருவாதிரை, புனர்பூசம், பூசம், உத்திரம், ஹஸ்தம், சித்திரை, உத்திராடம், திருவோணம், அவிட்டம், உத்திரட்டாதி, ரேவதி ஆகிய நட்சத்திரங்கள் த்விதியை, திருதியை, பஞ்சமி, சஷ்டி, சப்தமி, தசமி, ஏகாதசி, திரயோதசி ஆகிய திதிகள். ரிஷபம், கடகம், கன்னி, துலாம், தனுசு, மீனம் ஆகிய லக்னங்கள் ஏற்றது. எட்டாமிடம் சுத்தமாக இருந்தல் அவசியம்.

**அக்ஷராப்யாஸம் - கல்வி புகட்டுதல்:**
கல்வியின் சிறப்பைக் கூறுமிடத்து எண்ணும் எழுத்தும் கன்ணெனத் தகும் என்பார். ஐந்தாவது வருடத்தில் ஐந்தாவது மாதத்தில் ஐந்தாவது நாளில் செய்வது உத்தமம் எனப் பெரியோர்கள் கூறுவார்கள். அஸ்வினி, ரோகினி, திருவாதிரை-புனர்வசு, பூசம் உத்திரம், ஹஸ்தம், சித்திரை, சுவாதி, அனுஷம், திருவோணம்,அவிட்டம், சதயம், உத்திரட்டாதி, ரேவதி ஆகியனவும்.
துவிதியை, திருதியை, பஞ்சமி, சஷ்டி, சப்தமி, தசமி, ஏகாதசி, துவாதசி, மிதுனம், கடகம், மகரம், மீனம் ஆகியனவும் ஏற்றது. நான்கு, எட்டு ஆகிய இடங்களில் கிரகங்கள் இருக்கக் கூடாது. லக்னத்தையும் நான்காமிடத்தையும் சுபகோள்கள் பார்த்தல் உத்தமம்.

**நிஸ்சயதார்த்தம் அல்லது நிச்சயதாம்பூலம்:**
த்விதியை, திருதியை, பஞ்சமி, சப்தமி, தசமி, ஏகாதசி, திரயோதசி. ஞாயிறு, புதன், வியாழன், வெள்ளி, அஸ்வினி, ரோகினி, மிருகசீர்ஷம், புனர்வசு, பூசம், அஸ்தம், சித்திரை, சுவ ாதி, அனுஷம், மூலம், உத்திராடம், திருவோணம், அவிட்டம், உத்திரட்டாதி, ரேவதி ஆகியன ஏற்றாது. கேந்திரகோணங்களில் பாவக்கோள்கள் இல்லாத லக்னமாக அமைய வேண்டும்.

**திருமாங்கல்யம் செய்ய:**
அஸ்வினி, ரோகினி, மிருகசீர்ஷம், புனர்வசு, பூசம், மகம், உத்திராடம், அஸ்தம், சுவாதி, அனுஷம், திருவோண ம், அவிட்டம், சதயம், ரேவதி, த்விதியை, திருதியை. பஞ்சமி, சஷ்டி, சப்தமி, தசமி, ஏகாதசி, துவாதசி மற்றும் திரயோதசி, ரிஷபம், மிதுனம், கடகம், கன்னி, துலாம், தனுசு, மீனம், இரண்டாமிடம் சுத்தமான லக்னமும் ஏற்றது.

**கர்ப்பமான பெண்ணை தாய் வீட்டுக்கு அழைத்து வரல்:**
த்விதியை, திருதியை, பஞ்சமி, சப்தமி, தசமி, திரயோதசி, திங்கள், புதன், வியாழன், சனிக்கிழமைகளிலும் பொதுவான சுப நட்சத்திரங்களில் பெண்ணுக்கு தாராபலமுள்ள நாளில், பிரயாணத்துக்கு உகந்த நாட்களில் வாரசூலை, சுக்கிரன், எதிரில் இல்லாத நாளில் அழைத்து வரல் வேண்டும். ஏழாவது அல்லது எட்டாவது மாதத்தில் அழைத்து வர வேண்டும்.

**குழந்தை பெற்ற பின்னர் மாமியார் வீட்டுக்கு அனுப்புதல்:**
குழந்தைக்கு 3, 5, 7, 9, அல்லது 11-வது மாதத்தில் அனுப்பலாம். மூன்றாவது அல்லது ஐந்தாவது மாதம் அனுப்புதல் சிறந்தது.
துவிதியை, திருதியை, சதுர்த்தி, சப்தமி, தசமி, ஏகாதசி, திரயோதசி, திதிகள், அஸ்வினி, ரோகினி, மிருகசீர்ஷம், புனர்வசு, பூசம், உத்திரம், ஹஸ்தம், சித்திரை, அனுஷம், மூலம், உத்திராடம்,திருவோணம், அவிட்டம், சதயம், உத்திரட்டாதி, ரேவதி, குழந்தை-தாய் இருவருக்கும் தாராபலமுள்ள நாட்கள் ஏற்றன. ஆனந்தாதி யோகப்படி நல்ல நாள் ஆகியவற்றை பார்க்க வேண்டும்.

**கிணறு வெட்டும் திசையின் பலன்:**
வீடுக்கு கிழக்கு - விபத்து, தென்கிழக்கு - புத்திர நாசம், தெற்கு - மனைவிக்குப் பீடை, கெண்டம். தென்மேற்கு - எஜமானனுக்கு ஆபத்து, மேற்கு - உடல் ஆரோக்கியம், வடமேற்கு - ஆயுத பயம், வடக்கு - செல்வம் சேரும். வடகிழக்கு - சுபீட்சமான வாழ்வு. நல்ல நாட்கள்

**பஞ்சாங்கம் சொல்லும் சில பொதுவான குறிப்புக்கள்** :

1. விநாயகரை துளசியால் அர்ச்சனை செய்யக் கூடாது. (விநாயக சதுர்த்தியன்று மட்டும் ஒரு தளம் போடலாம்)
2. பரமசிவனுக்குத் தாழம்பூ உதவாது. தும்பை, பில்வம், கொன்றை முதலியன விசேஷம். ஊமத்தை, வெள்ளெருக்கு ஆகியனவற்றாலும் அர்ச்சிக்கலாம்.
3. விஷ்ணுவை அக்ஷதையால் அர்ச்சிக்கக் கூடாது.
4. அம்பிகைக்கு அருகம்புல் உகந்ததல்ல.
5. லட்சுமிக்குத் தும்பை கூடாது.
6. பவளமல்லியால் சரஸ்வதியை அர்ச்சனை செய்யக் கூடாது.
7. விஷ்ணு சம்பந்தமான தெய்வங்களுக்கு மட்டுமே துளசி தளத்தால் அர்ச்சனை செய்யலாம். அதுபோல, சிவ சம்பந்தமுடைய தெய்வங்களுக்கே பில்வார்ச்சனை செய்யலாம்.
8. துலுக்க சாமந்திப்பூவை கண்டிப்பாக உபயோகப்படுத்தக் கூடாது.
9. மலரை முழுவதுமாக அர்ச்சனை செய்ய வேண்டும். இதழ் இதழாக கிள்ளி அர்ச்சனை செய்யலாகாது.
10. வாடிப்போன, அழுகிப்போன, பூச்சிகள் கடித்த மலர்களை உபயோகிக்கக் கூடாது.
11. அன்றலர்ந்த மலர்களை அன்றைக்கே உபயோகப்படுத்த வேண்டும்.
12. ஒரு முறை இறைவன் திருவடிகளில் சமர்ப்பிக்கப்பட்ட மலர்களை எடுத்து, மீண்டும் அர்ச்சனை செய்யக் கூடாது. பில்வம், துளசி ஆகியவற்றை மட்டுமே மறுபடியும் உபயோகிக்கலாம்.

13. தாமரை, நீலோத்பலம் போன்ற நீரில் தோன்றும் மலர்களை தடாகத்திலிருந்து எடுத்த அன்றைக்கே உபயோகப்படுத்த வேண்டும் என்ற விதி இல்லை.
14. வாசனை இல்லாதது: முடி, புழு ஆகியவற்றோடு சேர்ந்திருந்தது. வாடியது: தகாதவர்களால் தொடப்பட்டது; நுகரப்பட்டது: ஈரத்துணி உடுத்திக் கொண்டு வரப்பட்டது. காய்ந்தது. பழையது. தரையில் விழுந்தது ஆகிய மலர்களை அர்ச்சனைக்கு உபயோகப்படுத்தக் கூடாது.
15. சம்பக மொக்குத் தவிர, வேறு மலர்களின் மொட்டுகள் பூஜைக்கு உகந்தவை அல்ல.
16. மலர்களை கிள்ளி பூஜிக்கக் கூடாது. வில்வம். துளசியைத் தளமாகவே அர்ச்சிக்க வேண்டும்.
17. முல்லை, கிளுவை, நொச்சி, வில்வம், விளா - இவை பஞ்ச வில்வம் எனப்படும். இவை சிவபூஜைக்கு உரியவை.
18. துளசி, முகிழ் (மகிழம்) செண்பகம், தாமரை, வில்வம், செங்கழுநீர், மருக்கொழுந்து, மருதாணி, தர்பம், அருகு, நாயுரவி, விஷ்ணுக்ராந் தி, நெல்லி ஆகியவற்றின் (இலை) பத்ரங்கள் பூஜைக்கு உகந்தவை.
19. பூஜைக்குரிய பழங்கள் நாகப்பழம், மாதுளை, எலுமிச்சை, புலியம்பழம், கொய்யா, வாழை, நெல்லி, இலந்தை, மாம்பழம், பலாப்பழம்.
20. திருவிழாக் காலத்திலும், வீதிவலம் வரும் போதும், பரிவார தேவதைகளின் அலங்காரத்திலும், மற்றைய நாட்களில் உபயோகிக்கத் தகாதென விலக்கப்பட்ட மலர்களை உபயோகிக்கலாம்.
21. அபிஷேகம், ஆடை அணிவிப்பது, சந்தன அலங்காரம், நைவேத்யம் முதலிய முக்கிய வழிபாட்டுக் காலங்களில் கட்டாயமாகத் திரை போட வேண்டும். திரை போட்டிருக்கும் காலத்தில் இறை உருவைக் காணலாகாது.
22. குடுமியுள்ள தேங்காயைச் சமமாக உடைத்து, குடுமியை நீக்கிவிட்டு நிவேதனம் செய்ய வேண்டும்.
23. பெருவிரலும் மோதிரவிரலும் சேர்த்துத் திருநீறு அளிக்க வேண்டும். மற்ற விரல்களைச் சேர்க்கக் கூடாது.
24. கோயில்களில், பூஜகர்களிடமிருந்துதான் திருநீறு போன்ற பிரசாதங்களைப் பெற வேண்டும். தானாக எடுத்துக் கொள்ள கூடாது.
25. பூஜையின் துவக்கத்திலும், கணபதி பூஜையின் போதும்; தூப தீபம் முடியும் வரையிலும் பலிபோடும் போதும் கை மணியை அடிக்க வேண்டும். மணியின் சப்தமில்லாவிடில் அச்செயல்கள் பயனைத் தரமாட்டா
26. ஒன்று, மூன்று, ஐந்து, ஒன்பது, பதினொன்று அடுக்குகள் கொண்ட தீபத்துக்கு மஹாதீபம் அல்லது மஹாநீராஜனம் என்ற பெயர்.

**பொதுவான கடமைகள்**

1. வாரத்துக்கு ஒரு நாளேனும், குடும்பத்துடன் கோயிலுக்குச் செல்ல வேண்டும்.
2. தியானம் பழக வேண்டும்.
3. பஜனை, சத்சங்கம், கதாகாலட்சேபம், சமயப் பேருரை நிகச்சிகளுக்குச் செல்ல வேண்டும்.
4. துறவிகள், ஞானிகள், மாடாதிபதிகளைத் தரிசனம் செய்ய வேண்டும்.
5. வீட்டில், நாம சங்கீர்த்தனம், சிறப்பு வழிபாடு போன்றவற்றை, அண்டை அயலார்களின் ஒத்துழைப்புடன் நிகழ்த்த வேண்டும்.
6. வீட்டில் ஓம் படம் மாட்டி வைக்கவும்.
7. இந்து தர்ம பிரசார இயக்கங்கள் பத்திரிகைகளுக்கு ஆதரவு அளிக்கவும்.
8. புராண, இதிஹாஸ, தேவார, திவ்யபிரபந்த நூல்கள் கட்டாயமாக ஒவ்வொரு இந்துவின் வீட்டிலும் இருக்க வேண்டும்.
9. இந்து பண்டிகைகளை, வெறும் விழாக்களாகக் கருதாமல் தெய்வங்களோடு ஒட்டுறவு கொள்ளும் தருணங்களாக மதித்துக் கொண்டாட வேண்டும்.
10. அருகிலுள்ள அனாதை இல்லம், முதியோர் இல்லம், கண் பார்வையற்றோர், செவிகேளாதோர் சேவை இல்லங்களுடன் தொடர்பு கொண்டு, இயன்ற உதவிகளைச் செய்ய வேண்டும்.
11. பெற்றோர்களைத் தெய்வமாகப் போற்றிப் பணிந்து பணிவிடை செய்தல் வேண்டும்.
12. வீட்டில், தரக்குறைவான சினிமாப் பாடல்கள் ஒலிக்க அனுமதிக்கக் கூடாது. பாலுணர்வு, வன்முறை, பழிக்குப்பழி, பேராசை ஆகிய தீய உணர்வுகளைப் பாராட்டும் புதினங்கள் - புத்தகங்களை வாங்கக் கூடாது.

**இந்துக்களின் தினசரிக் கடமைகள்:**

1. தினமும் சூரியன் உதிப்பதற்கு முன் படுக்கையிலிருந்து எழுந்திருக்கவும்.

2. காலையில் எழுந்தவுடனும், நீராடிய பின்னும், உணவு கொள்ளும் போதும் இஷ்ட தெய்வத்தைச் சிந்திக்கவும்.
3. நெற்றியில் இந்து சமயச் சின்னம் (திருநீறு, குங்குமம், சந்தனம், திருநாமம் - ஏதேனும்) அணியாமல் இருக்கக் கூடாது.
4. இறைவழிபாட்டுக்கு என, தனியே இடம் ஒதுக்கித் தவறாது வழிபாடு செய்யவும். காலை - மாலையில் விளக்கேற்றி நறுமணப் புகை பரவச் செய்யும்.
5. சமய நூல்களை படித்தல் வேண்டும்.
6.படுக்கும்போது தெய்வத்தின் நினைவோடு படுக்க வேண்டும்.

உலகங்களை உற்பத்தி செய்து பரிபாலித்து வரும் பகவானுடைய அரசாங்கம்தான் மிகப்பெரிய அரசு ஆகும். முப்பத்து முக்கோடி தேவர்களும் பித்ருக்களும் ஈசுவரனுடைய அரசாங்கத்தின் அதிகாரிகள் ஆவர். வடக்கில் உள்ள தேவலோகமும் தெற்கில் உள்ள பித்ரு லோகமும் அவர்களுடைய இருப்பிடம் என்று மறைகள் கூறுகின்றன.
இந்த இறைவனது அரசுக்கு நாம் செலுத்தும் வரிகள் - தேவர்கடனும் பிதுர் கடனும்.
நம்மையெல்லாம் காக்கின்ற அவ்வதிகாரிகளின் ஜீவனத்துக்கு என்ன வழி-வகை செய்துள்ளார், ஸர்வேசுவரன்?
நாம் செய்யும் தேவ யக்ஞுங்களும் பித்ரு யக்ஞுங்களுமே அவர்களை காப்பாற்றுகின்றன
<Got from www>

## பாவச் சக்கரத்தை பயன்படுத்துவது எப்படி?

ஜோதிடத்தில் ராசி மற்றும் நவாம்ச கட்டங்களுக்கு அளிக்கும் முக்கியத்துவத்தை பாவக் கட்டத்திற்கு பெரும்பாலான ஜோதிடர்கள் அளிப்பதில்லை. காரணம் பாவச்சக்கரத்தை போடுவதற்கு சற்றே தேர்ந்த நுணுக்கம் தேவை. மேலும் ராசி நவாம்சத்தைவிட பாவச்சக்கரம் நுணுக்கமாக எதையும் தெரிவித்துவிடாது என்ற எண்ணமும் ஒரு காரணம். அதனால் ஆய்வு ஜோதிடர்கள் மட்டுமே பாவத்தை அதிகம் பயன்படுத்துகின்றனர். தற்காலத்தில் ஜோதிடர்களுக்கு உதவ கணினிகள் வந்துவிட்ட சூழ்நிலையில் பாவச்சக்கரத்தை பயன்படுத்துவது **ராசியும் நவாம்சமும் குறிப்பிடாத விஷயங்களைக் கண்டுபிடிக்க பெரிதும் உதவும்.**

பின்வரும் ஜாதகத்தைக் கவனியுங்கள்.

| | | | |
|---|---|---|---|
| ரா (சனி) | | | |
| சந் | ராசி | | மாந் |
| | 04.10.1968 | | கு செவ் |
| | | சு (பு) | ல சூ கே |

| | | | |
|---|---|---|---|
| ரா சந் | (சனி) | | |
| | பாவம் | | |
| | | | செவ் மா |
| | | சு (பு) சூ | ல கு கே |

ராகு திசை இருப்பு: 3 வருஷம் 0 மாதம் 8 நாட்கள்.

ஜாதகத்திற்கு உரியவர் ஒரு ஆண்.

கன்னி லக்ன ஜாதகத்தில் லக்னத்தில் விரயாதிபதி சூரியன் கேதுவுடன் உள்ளார். சுக்கிரன் 2 ஆம் பாவத்தில் ஆட்சியில் உள்ளார். சுக்கிரனுடன் லக்னாதிபதி புதன் வக்கிரகதியில் சேர்க்கை.

ராசியைக் கொண்டு கவனித்தால் ஜாதகரின் கும்ப ராசிக்கு 2 ஆமிடத்தில் ராசி மற்றும் விரைய ஸ்தானங்களுக்கு அதிபதியான சனி பகவான் வக்கிர கதியில் ராகுவுடன் சேர்க்கையில் உள்ளார். ஆனால் ராசிக்கு இரண்டாம் பாவத்திற்கு உரிய குரு தனது பாவத்திற்கு 6 ல் செவ்வாயுடன் மறைந்துவிட்டார். ராசிக்கு 7 ஆமதிபதி சூரியன் ராசிக்கு 8 ல் மறைந்துவிட்டார்.

ராசிக்கட்டத்தில் இந்த அமைப்பை வைத்து ஜாதகத்தை கணித்தால் என்ன தோன்றும்.

1.ராசியை குரு பார்ப்பதாலும் லக்னத்திற்கு 2 ல் சுக்கிரன் லக்னாதிபதியுடன் சேர்ந்து ஆட்சியில் உள்ளதாலும் ஜாதகருக்கு திருமணம் நடந்துவிடும் இல்லறத்திற்கு துணைவி வருவாள் என அனுமானிக்கலாம்.

உண்மையே. ஜாதகர் திருமணமானவர்.

2. ராசிக்கு 2 ஆமிடம் கெட்டு அந்த பாவாதிபதி தனது 2 ஆம் பாவத்திற்கு 6 ல் மறைந்ததால் குடும்பத்தில் பிரச்சினை இருக்க வேண்டும். இதை ராசிக்கு 7 ஆமதிபதி சூரியன் ராசிக்கு 8 ல் கேதுவுடன் சேர்ந்து கெட்டதிலிருந்து தெளிவுற அறியலாம்.

இதுவும் உண்மையே. **வாக்கு ஸ்தானமான ராசிக்கு 2 ல் கடும் பாவிகள் சனி, ராகு நின்றதால் ஜாதகருக்கு கடும் சொல் உதிர்க்கும் சுபாவம் ஏற்பட்டுவிட்டது**. அதனால் ஜாதகருக்கு மனைவியுடன் இணக்கமான உறவு இல்லை.

இப்போது கிரகங்களின் அடிப்படையில் ராசிக்கட்டத்தை ஆராய்வோம்.

**லக்னத்தில் அமரும் கிரகம் ஜாதகரின் வாழ்க்கைப் பயணத்தில் வாகன ஓட்டியாகச் செயல்படும்** என்பதை மறந்துவிடக்கூடாது. அதே சமயம் **விரயாதிபதி** சூரியன் **லக்னத்தில் அமர்ந்ததாலே வாழ்வில் கண்டிப்பாக ஏதாவது ஒன்றினை ஜாதகர் விரயமாக்கிவிட வேண்டும் என்பது விதி.**
லக்னாதிபதி புதன் தனம், வாக்கு, குடும்பம், வலது கண் போன்ற இன்னும் பலவற்றைக் குறிக்கும் 2 ஆம் இடத்தில் அதன் அதிபதியும் நண்பனுமான சுக்கிரனுடன் நின்றதால் ஜாதகருக்கு குடும்பம் அமைத்துத் தந்தார். வித்யா காரகனான புதன் பத்தாம் அதிபதியும் ஆகி 2 ல் நின்றதால் ஜாதகர் கல்லூரி ஒன்றில் ஆசிரியராகப் பணிபுரிகிறார். லக்னம்தான் சூரியனாலும் கேதுவாலும் கெட்டுவிட்டது புதனின் மற்றொரு வீடான 10 ஆமிடம் மிதுனம் எவ்வித தோஷமும் இன்றி அமைந்திருப்பதைப் பாருங்கள்.

இப்போது பாவச் சக்கரத்திற்கு வருவோம்.

ராசிக்கட்டத்தில் லக்னத்தில் இருந்த சூரியன் பாவக்கட்டத்தில் லக்னத்திற்கு 2 ல் நீசம். ராசிக்கட்டத்தில் ராசிக்கு 2 ல் மீனத்தில் வக்கிரகதியில் இருந்த சனி பாவச்சக்கரத்தில் மேஷத்திற்கு மாறிவிட்டார். இதன் அடிப்படையில் சூரியன் ஜாதகருக்கு எப்படி பலனளிப்பார் என ஆராய்வோம்.

விரயாதிபதி சூரியன் எப்படிப் பலனளிபார் என ஆராய சூரியனது பாவம் மற்றும் காரகத்தையும் கவனத்தில் கொள்ள வேண்டும். சூரியன் அரசு உத்தியோகத்திற்கு காரகத்துவம் பெற்ற கிரகம். அது ராசிக்கட்டத்தில் லக்னத்தில் அமர்ந்ததால் ஜாதகருக்கு அரசுக் கல்லூரிப் பணியை அமைத்துத் தந்து தனது அம்சத்தை நிலை நாட்டினார். அதே சூரியன் நேந்திரத்திற்கும் (கண்கள்) காரகத்துவம் பெற்றவர் என்பதைக் கவனிக்க வேண்டும். ஆனால் கண்களுக்கு ஒளி வழங்குவதில் சுக்கிரனுக்கும் முக்கியப் பங்கு உண்டு. **சுக்கிரனை உப நேந்திர காரகனாக ஜோதிடம் குறிப்பிடுகிறது**.சுக்கிரன் ஆட்சியில்தான் உள்ளது ஆனால் ராகுவின் நட்சத்திரமான சுவாதி நட்சத்திரத்தில் (3 ஆம் பாதத்தில்) உள்ளது. ராகு ராசிக்கு நேந்திர ஸ்தானமான (2 மிடம்) மீனத்தில் ராசிக்கு விரையாதிபதியான சனியுடன் சேர்க்கை. இதனால் ஜாதகர் மட்டுமல்ல எந்த உரியினமும் தனது வாழ்வில் இழக்ககூடாத கண் பார்வையை இழந்துவிட்டார். சனியும் ராகுவும் 2 ஆமிடத்தில் இருப்பது கண் பார்வையைப் பறிக்கும் அமைப்பு. **சூரியனும் சுக்கிரனும் கண்களுக்கு ஒளி வழங்கும் கிரகங்கள் என்றால் சனியும் சனி போன்று செயல்படும்**

ராகுவும் **கண்களை குருடாக்குவதற்கு காரகத்துவம் பெற்ற கிரகங்கள்** என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

லக்னத்தில் நின்ற சூரியன் தனது அம்சமாக ஜாதகர் இருக்க வேண்டும் என்பதால் ஜாதகருக்கு அரசுப் பணியை வழங்கியது. அதே சூரியன் பாவத்தில் நீசமானதால் தனது காரகத்தின் அடிப்படையில் கண்களை குருடாக்கிவிட்டது. மொத்தத்தில் சூரியன் ஜாதகத்தில் தான் அமைந்த அமைப்புக்குத் தக்கபடி தனது பணியை குறைவில்லாமல் நிறைவேற்றிவிட்டது.

கண்களைப் பறித்த சூரியன் அரசுப் பணி மூலம் ஜாதகரை கைதூக்கியும் விட்டுள்ளது.

ராகுவின் சதய நட்சத்திம் 4 ஆம் பாதத்தில் ராகு திசை சூரிய புக்தியில் பிறந்த ஜாதகர் ராகுவின் சாரத்தில் நின்ற சந்திரனின் புக்தியில் தனது இரண்டாவது வயதில் கண் பார்வையை இழந்தார்.

குழந்தை பிறந்தவுடன் படைத்தவன் ஜாதகரின் கண்களைப் பறித்துவிடுவான் என்பதை அறியாத அப்பாவிப் பெற்றோர் ஜாதகருக்கு கண்ணன் எனப் பெயரிட்டனர் என்பதை இறைவனின் திருவிளையாடல் என்று சொல்வதைத் தவிர வேறென்ன சொல்வது?

பின்வரும் இரண்டாவது ஜாதகத்தைக் கவனியுங்கள்.

| | | | |
|---|---|---|---|
| கே (பு) | சூ மா | சு | ல கு |
| | ராசி | | செ |
| | 22.04.1978 | | (சனி) |
| | | | ரா சந் |

| | | | |
|---|---|---|---|
| (பு) கே சூ | சு மா | கு | ல |
| | பாவம் | | (சனி) செ |
| | | | |
| | | | ரா சந் |

செவ்வாய் திசை இருப்பு : 5 வருஷம் 5 மாதம் 28 நாட்கள்.

ஜாதகர் இதுவரை மணமாகாத ஒரு ஆண்.

கால சர்ப்ப தோஷ ஜாதகம். லக்னத்திற்கு 2 ல் செவ்வாய் நீசம். ராசியும் ராசிக்கு 7 வீடும் பாவிகளால் கெட்டது. லக்னத்தில் நின்ற குரு ஜாதகரை எத்தகைய இடர்பாடுகளில் இருந்தும் காக்க வேண்டும். தாம்பத்திய சுகத்தைக் குறிக்கும் 12 ஆமிடத்தில் ஆட்சியில் உள்ள சுக்கிரன் தாம்பத்யத்திற்கு மனைவியை அளித்தருள வேண்டும். குருவும் சுக்கிரனும் ஜாதகருக்கு ஏற்படும் தோஷங்களிலிருந்து ஜாதகரை குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகு விடுவித்து ஜாதகருக்கு திருமணம் செய்துவைக்க வேண்டும்.

இந்த ஜாதகத்தின் பாவச்சக்கரத்தை இப்போது அலசுவோம்.

ராசிக்கட்டத்தில் சிம்மத்திலிருந்த சனி லக்னத்திற்கு இரண்டாமிடமான கடகத்திற்கு மாறியுள்ளார். கடகத்தில் நீச நிலையிலுள்ள செவ்வாயுடன் சேர்ந்ததால் 2 ஆமிடம் மேலும் கடும் தோஷத்திற்கு உள்ளானது.

ராசிக்கட்டத்தில் 8 லிருந்த சூரியன் 7 ஆமிடத்திற்கு மாறிவிட்டது. அதனால் 7 ஆமிட தோஷம் மேலும் கடுமையானது.

ஜாதகரைக் கடைதேற்றும் என ராசிக்கட்டத்தில் எதிர்பார்க்கப்பட்ட குரு லக்னத்திற்கு 12 ல் மறைந்துவிட்டார். 12ஆமிடத்தில் ஆட்சியில் நின்ற சுக்கிரன் 11 ஆமிடத்திற்கு மாறிவிட்டார். அதோடு அவர் அப்படி மாறி அமர்ந்த மேஷத்தின் அதிபதி செவ்வாய் ஏற்கனவே நீசமாகி கடும் தோஷத்தை தரவேண்டிய நிலையில் உள்ளது கவனிக்கத்தக்கது.

பாவத்தில் ஏற்பட்ட இத்தகைய கடும் பாதிப்புகள் 1978 ல் பிறந்த ஜாதகரின் திருமண வாழ்வை கேள்விக்குறியாக்கிவிட்டன. தற்போது குருவும் சனியும் உச்சமாகி ஏழரையாண்டுச் சனியும் விலக உள்ள சூழ்நிலையில் ஜாதகருக்கு ஓரளவு (**ஓரளவு மட்டுமே**) திருமணத்திற்கான காலம் கனிந்துள்ளது.

பின்வரும் மூன்றாவது ஜாதகத்திற்கு உரியவர் கடந்த இரண்டு வருடங்களுக்கு முன் 2012 மத்தியில் குரு ரிஷபத்தில் இருக்கும்போது என்னிடம் ஜோதிட ஆலோசனைக்கு வந்தார்.

| | | | |
|---|---|---|---|
| பு (சு) கு | | | செ |
| கே | ராசி | | |
| உ கு சனி சந் | 09.04.1961 | | ரா |
| மா | | | |

| | | | |
|---|---|---|---|
| பு (சு) கு | | | செ |
| கே | பாவம் | | |
| உ கு சனி | | | ரா |
| மா சந் | | | |

சூரிய திசை இருப்பு: 3 வருஷம் 10 மாதம் 16 நாட்கள்.

ஜாதகரின் மகர ராசிக்கு 5 ல் வரும் குரு அற்புதப் பலன்களைச் செய்வார் என்று தொலைகாட்சி ஜோதிடர்கள் கூறிக்கொண்டிருக்க தனக்கு குருப்பெயர்ச்சி ஆனதிலிருந்தே சோதனைதான். என்ன ஜோதிடப் பித்தலாட்டாம் என அங்கலாய்த்தார்.

ஜாதகரின் ராசி மகரமானாலும் பாவத்தின் அடிப்படையில் பார்த்தால் அவருக்கு தனுசு ராசிதான் வருகிறது. தனுசு ராசிக்கு 6 ஆவது ராசியான ரிஷபத்திற்கு வரும் குரு 6 ஆமிடப் பலன்களான கடன், வியாதி மற்றும் எதிர்ப்பு போன்றவைகளைத் தூண்டிவிடுவார். இந்த நுட்பங்களை ஜாதகருக்கு விளக்கியவுடன் ஜாதகரும் ஜோதிடம் பயில ஆர்வம் காட்டினார்.

பாவச் சக்கரத்தை இப்படி அலசினால் அது ராசிச் சக்கரம் சொல்லாத பல கேள்விகளுக்கு விடை சொல்வதை உணரலாம். எனவே ஜோதிடர்கள் ராசிச்சக்கரம் நவாம்சச்

சக்கரங்களை ஆராய்வதோடு நின்றுவிடாமல் குறைந்த பட்சம் பாவச் சக்கரத்தையும் ஒரு ஒப்பீட்டுக்கு எடுத்துக்கொள்வது பலன்களை துல்லியமாக அளவிட உதவும் எனக் கேட்டுக்கொள்கிறேன்.

*****************************************************************************************************

# மச்ச சாஸ்திரம் - அரிய தகவல்கள்

அறிவியல் அறிஞர்கள், இறந்து போன சிவப்பணுக்களின் வெளிப்பாடு என்று மச்சத்தைப் பற்றிச் சொல்கிறார்கள். ஆனால் ஜோதிடத்தைப் பொறுத்தவரை மச்சங்கள் முக்கிய இடம் வகிக்கின்றன. மேல் உதடு மற்றும் கீழ் உதடுகளில் இருக்கும் மச்சங்கள் சர்வ சாதாரணமாகப் பொய் பேச வைக்கும்.

மச்சங்களில் உள்ளங்கையில் இருக்கும் மச்சம் மிக முக்கியமானதாகும்.எல்லா நல்ல கெட்ட பலன்களையும் உடனடியாக அளிக்கக் கூடியது இந்தஉள்ளங்கை மச்சம். சில ஆபத்துக்களையும் உருவாக்கும்.

சுண்டு விரலில் புதன் மேட்டில் மச்சம் இருந்தால் கல்வித் தடைபடும். கூடாநட்பு உண்டாகும். கூட்டு சேர்வது சரியாக இருக்காது.

மோதிர விரலுக்கு கீழே இருக்கும் சூரிய மேட்டில் மச்சம் இருந்தால்அரசால் கண்டம் ஏற்படும். அதாவது ஜெயிலுக்குப் போவது போன்ற நிலைஉண்டாகும்.

நடு விரலில் மச்சம் இருந்தால் திடீர் மரணம், கடத்தப்படுதல், தீரா நோய்,கோர மரணம், ஊரை விட்டு ஒதுக்கப்படுவது, உண்ணா நோன்பு இருந்துஇறப்பது போன்றவை ஏற்படும்.

ஆட்காட்டி விரலுக்கு கீழே குரு மேட்டில் மச்சம் இருந்தால் சர்வசாதரணமாக நீதி நெறியை மீறுதல், குரு பத்னியை தொட்டுவிடுதல்போன்றவற்றில் ஈடுபடுவார்கள். மனசாட்சிக்கு அப்பார்பட்ட செயல்களைசெய்வார்கள்.

குரு மேட்டில் மச்சம் இருந்தால் பெரிய பதவிகளில் இருப்பார்கள், திடீரெனதூக்கி எறியப்படுவார்கள்.

சுண்டு விரலுக்குக் கீழே இருப்பது புதன் மேடு.
அதற்குக் கீழே இருப்பது செவ்வாய் மேடு. செவ்வாய் மேட்டில், உள்செவ்வாய் மேடு, வெளிச் செவ்வாய் மேடு என்று இரண்டு வகைப்படும்.

உள்செவ்வாய் மேட்டில் கரும்புள்ளி இருந்தால் திடீர் யோகம் உண்டாகும்.ஆனால் அதனை அனுபவிக்க துணைவியர் இல்லை என்று புலம்பவைக்கும்.

வெளிச் செவ்வாயில் கரும்புள்ளி இருந்தால் அரசு வழியிலோ அல்லது வழக்குகளிலோ நமது சொத்துகள் பறிபோகும்.அதாவது சாலை அமைக்க நிலத்தை அரசு எடுத்துக் கொள்ளுதல், வழக்கில் எதிராளிக்குச் சாதகமாக

தீர்ப்பு அமைந்து சொத்து கைவிட்டுப் போதல் போன்றவை ஏற்படும்.

கட்டை விரலுக்குக் கீழே இருக்கும் மேடு
சுக்கிரன் மேடு. ரொம்ப முக்கியமான மேடு. சுக்கிர மேட்டில் மெல்லியகோடுகள்
இருந்தால் ரொம்ப நன்றாக இருக்கும். புள்ளிகள் இல்லாமல் இருப்பதுதான்
நல்லது.

புள்ளி இருந்தால் அது ஒழுக்கக் கேடு. பலருடன்
செல்வது, பல பெண்களிடம் செல்வது போன்றவை ஏற்படும். உடலுறவில்பல்வேறு தவறான
உணர்ச்சிகளைக் கொண்டிருப்பார்கள்.

சுக்கிரன் மேட்டிற்கும், வெளிச் செவ்வாய்
மேட்டிற்கும் கீழே நடுவே இருப்பது சந்திரன் மேடு. அதாவதுஉள்ளங்கையின்
சுண்டு விரலுக்குக் கீழே கடைசியான மூலைப் பகுதிதான் சந்திரன் மேடு.

சந்திரன் மேட்டில் புள்ளிகள் இருந்தால் மனநலம் குன்றியக் குழந்தைகள்,நரம்புக் கோளாறு போன்ற
வை ஏற்படும்.

**கரும்புள்ளிகள் அவ்வப்போது ஏற்படுமா?**
ஆம். சிலருக்கு பிறக்கும்போதே மச்சங்கள் ஏற்படுவதில்லை. புள்ளிகள்இயற்கையின் விதிமுறைகள
ை முன்கூட்டியே எடுத்துக் கூறுவதாகும்.

இங்கு வந்தால் இது நடக்கும், இங்கு மச்சம் வந்தால் இந்த யோகம் கிட்டும்என்பதை நமக்கு உணர்த்து
கிறது.

சிலருக்கு பிறக்கும்போதே மச்சம் இருக்கும்.
சிலருக்கு ஒரு சில காலக்கட்டத்தில் மச்சம் தோன்றும். சனி, ராகு
சேர்ந்திருந்து, சனி திசையில் ராகு புத்தி வந்தால் கரும் புள்ளிகள்
தோன்றும்.

அதை நாம் தெரிந்து கொண்டு அதற்கேற்ற வகையில் சிலதை கூட்டி,சிலதைக் குறைத்துக் கொள்ள
வேண்டும்.

உடலின் பிறப்பகுதியைக் காட்டிலும்
உள்ளங்கையில் ஏற்படக் கூடிய கரும்புள்ளிகள் பொரும்பாலும்வாழ்க்கையில்
பெரிய பாதிப்புகளை ஏற்படுத்தி உள்ளது.

கருப்பு புள்ளிகள் முதலில் கருப்பாகத் தோன்றாது. பழுப்பு நிறுத்தில்தான்தோன்றும். அப்போது அது ந
ல்ல பலன்களைத் தரும்.

அதேப்போல உள்ளங்கையில் இருக்கும் வெண்
புள்ளிகள் அதிக பணப் புழக்கம், அறிவுக் கூர்மை, எதையும் திட்டமிட்டுச்
செய்யும் திறனைத் தெளிவுப்படுத்தும்.

பழுப்பு, வெண் புள்ளிகள் மற்றும் ஆரஞ்சு

நிறத்தில் தோன்றும் புள்ளிகள் நல்லது. ஆரஞ்சு புள்ளிகளால் திடீர் சொத்து
வாங்குவது போன்றவை ஏற்படும்.

சிவப்பாக இருப்பவர்களின் கைகளில்தான் ஆரஞ்சு
நிற புள்ளிகள் தெரியும். நமக்கு இருந்தாலும் அது பழுப்பு நிறத்திற்கும்
ஆரஞ்சுக்கும் வித்தியாசம் தெரியாததால் கண்டுபிடிக்க முடியாது.

**கை ரேகையில் பெண்களுக்கு இடது கை, ஆண்களுக்கு வலது கைஎன்பது போல மச்சங்களிலு
ம் உண்டா?**
ஆம்,
மச்சங்களுக்கும் இது பொருந்தும். பெண்களுக்கு இடது கையில் இருக்கும்
மச்சத்தினால் அதிக பாதிப்பும், ஆண்களுக்கு வலது கையில் இருக்கும்
மச்சத்தினால் அதிக பாதிப்பும் ஏற்படும்.

முகத்தில் பொதுவாக மச்சம் இல்லாமல் இருப்பது
நல்லது என்று மச்ச சாஸ்திரம் கூறுகிறது. பொதுவாக உதடு, கண், புருவம்,
இமைகளுக்கு மேலே மச்சம் இருக்கக் கூடாது என்று கூறுகிறது.

நெற்றிக்கு மேலே தலையில் எல்லாம் மச்சம் இருக்கலாம். ஆனால் முன்தலையில் இருப்பதை விட,
பின் தலையில் இருக்கலாம்.

சிலருக்கு கருப்பையும், பச்சையையும் கலந்த
மச்சங்கள் இருக்கும். அது பொதுவாக உடல் பகுதியில் உண்டாகும்.அதுபோன்ற
மச்சங்கள் உடலின் பின்பகுதியில் ஏற்படுவது நல்லது.

என் தாத்தா சில ஜாதகங்களைப் பார்த்ததும் இந்த
பெண்ணுக்கு நாக தோஷம் இருக்கிறது என்பார். அந்த பெற்றோர்கள்இல்லையே, எந்த
தோஷமும் இல்லை என்று சொன்னார்களே என்று கூறுவார்கள். அதற்கு,முட்டியில்
இருந்து தொடைக்கு இடைப்பட்ட பகுதியில் பச்சையும், கருப்பும் கலந்த
நிறத்தில் பாம்பு படம் எடுத்தது போன்ற ஒரு மச்சம் இருக்குமே என்று
சொல்வார்கள். அவர்களிடம் கேட்டால் அது உண்மையாக இருக்கும்.

லக்னாதிபதியுடன் ராகு சேர்ந்தாலோ சந்திரனுடன் ராகு சேர்ந்தாலோ, பூர்வபுண்ணியாதிபதியுடன் ரா
கு சேர்ந்தாலோ இதெல்லாம் ஏற்படும்.

பொதுவாக கிரகங்களில் பார்த்தால் ராகு,
கேதுதான் மச்சங்களை வெளிப்படுத்தும் கிரகங்கள். அடுத்ததாகசெவ்வாயை
சொல்லலாம். செவ்வாய் ரத்தத்தை வெளிப்படுத்தும் கிரகம்.

செவ்வாய் நீச்சமாகி, ராகு கேதுவுடன் சேர்ந்து
சனியின் பார்வை பெற்றாலே உடல் எங்கும் மச்சமாக - அகோரமாக காட்சி
அளிப்பார்கள் என்று ஜோதிட அலங்கார நூல் சொல்கிறது. ஒரு உயரியபதவியில்
வகிப்பவருக்கு அதுபோன்ற நிலை உள்ளது.

பெண், ஆண் உறுப்புகளில் மச்சங்கள் இல்லாமல்

இருப்பது நல்லது. அப்படி இருந்தால், விரும்பி விபச்சாரத்தில் ஈடுபடுவது, விபச்சார விடுதிகளுக்குச் செல்வது போன்ற குணங்கள் இருக்கும்.

வாழ வந்த பெண்ணிற்கு வலது பக்கம் மச்சம், ஏறு பிடிக்கிற மச்சானுக்குஇடது பக்கம் மச்சம் என்று ஒரு பழமொழி இருக்கிறது.

பொதுவாக ஆண்களுக்கு இடது பக்கம் மச்சம்
இருப்பது அதிர்ஷ்டத்தின் வெளிப்பாடு என்று நூல்கள் சொல்கின்றன.பெண்களுக்கு
வலது பக்கம் மச்சம் இருப்பதும் நல்லது.

அதேபோல நெஞ்சுப் பகுதியில் மச்சம் இருந்தால்
கொஞ்சம் சுகவாசியாக இருப்பார்கள் என்று சொல்லலாம். பொதுவாகபின்புறம்
இருக்கும் மச்சத்தால் திடீர் பணப்புழக்கம், அதிர்ஷ்மாகவும் இருப்பார்கள்
என்று சொல்வார்கள்.

பொதுவாக கால்களில் மச்சம் இருப்பவர்களுக்கு
காலில் சக்கரம் என்று சொல்வார்கள். ஒரு சிலர் உட்கார்ந்து கொண்டேகாலை
ஆட்டிக் கொண்டே இருப்பார்கள். அது உள்ளங்காலில் இருக்கும் மச்சத்தின்
காரணமாகத்தான் இருக்கும். ஏனெனில் உள்ளங்காலில் இருக்கும் மச்சம்ஒரு
அசைவைக் கொடுத்துக் கொண்டே இருக்கும். ஓடிக் கொண்டேஇருப்பார்கள்.

**மான் போன்று மச்சம், மீன் போன்று மச்சம் என்பதெல்லாம்உண்மையா?**

உண்மைதான். எந்த நட்சத்திரக் கூறில் ராகு,
கேது, செவ்வாய் எல்லாம் அமைந்திருக்கிறதோ அதன் அடிப்படையில்மச்சத்தின்
வடிவம் வேறுபடும். மச்சம் என்றால் மீன் என்றும் ஒரு அர்த்தம் உண்டு.

மீனைப் போன்று இருக்கும் மச்சம் எல்லாம் விசேஷம். உள்ளங்க¨யில் எல்லாம் மச்ச ரேகை கூட உருவாகும். மச்ச ரேகை உண்டானால் மன்னனாகக் கூட ஆவார்கள்.

மீனைப் போன்ற மச்சம் அதிர்ஷ்டத்தின் வெளிப்பாடு. இப்போதெல்லாம்அது அரிதாகிவிட்டது.

நெல்லிக்காய் போல, மாவடு போல எல்லாம் மச்சம் உண்டு. உலகத்தில்எங்கோ ஒருவர் இதுபோன்ற மச்சங்கள் கொண்டிருப்பர்.

**மச்ச சாஸ்திரம்** சாஸ்திர, சம்பிரதாயங்கள் என்பது நம்
பாரத நாட்டில் தொன்றுதொட்டு நடைமுறையில் இருக்கும் விஷயம். அன்றாடம்
செய்யும் ஒவ்வொரு செயலுக்கு ஒரு வழிமுறை வைத்திருக்கிறார்கள். இதை
இப்படித்தான் செய்ய வேண்டும் என்று தீர்மானித்து அதற்கு சாஸ்திர,
சம்பிரதாயம் என்று வைத்திருக்கின்றனர். ஆய கலைகள் 64&ல் ஜோதிட
சாஸ்திரம் முக்கியமானது. ஜோதிடக் கலை ஒரு மரம் போன்றது. அதில் இருந்து பல
சாஸ்திரங்கள் பல்வேறு கிளைகளாக பிரிந்துள்ளன. அதன் ஒரு கிளையாக
விளங்குவது அங்க லட்சண சாஸ்திரம்.

நம் அங்கம், அதாவது உடலில் மச்சங்கள் தோன்றும் இடங்களின் அடிப்படையில்

பலன்களை சொல்லி இருக்கிறார்கள். இது காலம்காலமாக நடைமுறையில் இருக்கும் சாஸ்திரம். பெரும்பாலான பலன்கள் ஒத்துப்போவதை நடைமுறையில் காண்கிறோம். சிலருக்கு திடீர் அதிர்ஷ்டம், பதவி, சொத்து சேர்க்கை, ஆடம்பர வாழ்க்கை வரும்போது 'அவன் மச்சக்காரன்' என்பார்கள். பிறக்கும்போதே மச்சம் இருக்கும். நடுவே தோன்றுவதும் உண்டு. ஆனால் இது அபூர்வமான அமைப்பாகும். பிறக்கும்போது தோன்றும் மச்சங்கள் சிறுபுள்ளி, கடுகளவு, மிளகளவு மற்றும் அதைவிட பெரிதாகக்கூட இருக்கும். இவை மறையாது என்பதால் அங்க அடையாளமாக குறிப்பிடப்படுகிறது. இந்த மச்சங்கள் சிலருக்கு ஆரம்ப காலத்தில் இருந்தே நற்பலன்களை கொடுக்கும். இந்த பலன்கள் ஆண், பெண் என்று தனித்தனியாக வெவ்வேறு யோகங்கள் தரவல்லது.

**ஆண்களுக்கான மச்ச பலன்**

· இரு புருவங்களுக்கு மத்தியில் மச்சம் இருந்தால் தீர்காயுள்.

· நெற்றியின் வலப்புறத்தில் மச்சம் இருந்தால் எதிர்பாராத தனப்பிராப்தி கிடைக்கும்.

· வலது புருவத்தில் மச்சம் இருந்தால் அதிர்ஷ்கரமான மனைவி அமைவார்.

· வலது பொட்டில் மச்சம் இருந்தால் திடீரென பெரும் செல்வமும் புகழும் கிடைக்கும்.

· வலது கண்ணில் மச்சம் இருந்தால் நண்பர்கள் உறவினர் மூலம் புகழ் கிடைக்கும்.

· வலது கண்ணுக்குள் வெண்படலத்தின் மேற்புறத்தில் மச்சம் இருந்தால் அவர் ஆன்மீக சிந்தனையுள்ளவராக புகழ் பெற்று விளங்குவார்.

· இரு கண்களில் ஏதெனும் ஒன்றில் வெண்படலத்தின் கீழ் புறத்தில் மச்சம் இருந்தால் அவர்களுக்கு பல பிரச்சனை சந்திப்பார்கள்.

· இரு கண்களில் ஏதேனும் ஒரு வெளிப்புற ஓரத்தில் மச்சம் இருந்தால் அவர் வாழ்க்கை சீராக இருக்கும். இருப்பினும் தனது வாழ்நாளில் அவர் ஏதேனும் ஒரு வன்முறை சம்பவத்தை சந்திப்பார்.

· இடது புருவத்தில் மச்சமிருந்தால் பணக்கஷ்டமான வாழ்க்கை அமையும்.

· இடது கண் வெண்படலத்தில் மச்சமிருந்தால் வறுமையான வாழ்க்கை அமையும் இருப்பினும் அதை சமாளிக்கும் பக்குவமும் இருக்கும்.

· இடது கண்ணின் வலப்புறத்தில் சொத்து விஷயங்களில் சங்கடங்களை சந்திப்பார்கள். இருப்பினும் ஓரளவுக்கு சொத்தை சேகரித்து விடுவார்கள்.

· இடது கண்ணின் இடப்புறத்தில் மச்சம் இருந்தால் உறவினர்களுடன் பிரச்சனை ஏற்பட்டு தனிநபர் ஆவார்கள். இருப்பினும் அவர்களது வாழ்நாளின் பிற்பகுதியில்
அதிர்ஷ்டத்தை அடைவார்கள்.

· மூக்கின் மேல் பகுதியில் மச்சம் இருந்தால் அவர்கள் எல்லா சௌகரியமும் பெற்றிடுவார்கள்.

· மூக்கின் வலதுபுறத்தில் மச்சம் இருந்தால் நினைத்ததை நடத்தி முடிக்கும் வல்லமை பெற்றிருப்பார்கள்.

· மூக்கின் இடது புறத்தில் மச்சம் இருந்தால் எதை நம்பாதவர்களாக இருப்பார்கள். தவறான பெண்ணின் நட்பு_சிநேகமும் இவர்களுக்கு இருக்கும்.

· மூக்கின் நுனியில் மச்சம் இருந்தால் அவர்கள் தயக்க குணம் உள்ளவர்களாக இருப்பார்கள், சற்றே கர்வமும், சற்றே பாதுகாப்பு உணர்வும் இவர்களிடம் மிகுந்திருக்கும்.

· மூக்கின் கீழே மச்சமுள்ளவர்கள் கேடான வழிகளில் பணத்தை செலவிடுபவர்களாக இருப்பார்கள்.

· நாசித்துவாரங்களுக்கு மேலே மச்சம் உள்ளவர்கள நவநாகரீக மோகமுள்ளவர்களாக இருப்பார்கள். வசதியான வாழ்க்கையை கொண்டிருப்பார்கள்.

· மேல் உதட்டிலோ அல்லது கீழ் உதட்டிலோ மச்சம் இருந்தால் அவர்கள் காதல் உணர்வு மிகுந்திருப்பார்கள்.

· மோவாயில் மச்சம் இருந்தால் செல்வாக்கு, புகழ் இவற்றோடு சமூகத்தில் நல்ல மதிப்பு பெற்றிருப்பார்கள்.

· மோவாயின் இடதுபுறத்தில் மச்சம் இருந்தால் அவர்கள் மேடு, பள்ளமான வாழ்க்கையை அனுபவிப்பார்கள், கல்வியறிவும் குறைவாக இருக்கும்.

· மோவாய்க்கு அடியில் மச்சம் இருந்தால் அவர்கள் இசையில் வல்லுநர்களாக இருப்பார்கள்.

· வலது கன்னத்தில் மச்சம் இருந்தால் அவருக்கு பிறரை வசீகரிக்கிற சக்தி இருக்கும்.

உறவினர்கள் அவரை மிகவும் நேசிப்பார்கள். எப்பொழுதும் சிரித்த முகத்துடன் மகிழ்ச்சியான வாழ்க்கை அமையும்.

· இடப்புறக் கன்னத்தில் மச்சம் இருந்தால் அவர் வறுமை, உயர்வு என இரண்டு விதமான வாழ்க்கையை மாறி, மாறி அனுபவிப்பார்.

· வலது காதில் மேல் நுனியில் மச்சம் இருந்தால் தண்ணீரில் கண்டம் இருக்கக்கூடும்.

· இடது காதின் மேல் நுனியில் மச்சம் இருந்தால் பெண்கள் சம்பந்தமான விஷயங்களில் எச்சரிக்கையாக நடந்து கொள்ளவேண்டும்.

· இரண்டு காதுகளிலும் மச்சம் இருந்தால் அவர் அதிர்ஷ்டக்காரரர். பேச்சுதிறன், பிறரை வசீகரிக்கும் ஆற்றல், செல்வம் எல்லாமும் அவரை வந்தடையும்.

· தொண்டையில் மச்சம் இருந்தால் திருமணத்தின் மூலம் அவர்களுக்குச் சொத்து கிடைக்கும்.

· கழுத்தின் வலதுபுறத்தில் மச்சம் இருந்தால் பங்காளிகளின் மூலம் பெயரும், புகழும், சொத்தும் கிடைக்கும்.

· கழுத்தின் இடது புறத்தில் மச்சம் இருந்தால் அவர் மிதமான நலன்களுடன் வாழ்வார்.

· இடது மார்ப்பில் மச்சம் இருந்தால் ஆண் குழந்தைகள் நிறைய பிறக்கும். பெண்களிடம் மிகுந்த பாசமாக பழகுவார்.

· வலது மார்பில் மச்சம் இருந்தால் அவர் வாழ்க்கை நடுத்தரமாக இருக்கும். பெண்கள் குழந்தைகள் நிறைய பெற்றிடுவார்.

· மார்பின் மேல் புறத்தில் மச்சம் இருந்தால் பிறர் விஷயங்களில் தேவையில்லாம தலையிடும் குணத்துடன் இருப்பார். அமைதியான சுபாவமும் கடுமையான உழைப்பாளியாகவும் இருப்பார்.

· வயிற்றின் மீது மச்சம் உள்ளவர்கள் பொதுவாக பெறாமை குணம் நிறைந்தவராக இருப்பார்கள்.

· வயிற்றின் இடப்புறத்தில் மச்சமிருந்தால் நல்ல குணங்களையும் உழைத்து வாழ விரும்பும் எண்ணம் கொண்டவர்களாக இருப்பார்கள்.

· வயிற்றில் கீழ்பக்கத்தில் மச்சம் இருந்தால் பலவீனமானவனாக இருப்பான்.

· தொப்புள் மீது மச்சம் இருந்தால் அவன் வசதியான வாழ்க்கைக்கு சொந்தக்காரனாக இருப்பான்.

· வலது தோளில் மச்சம் இருப்பவர் சின்ன சின்ன விஷயக்களுக்கு கூட மனதை அலட்டிக் கொள்வார்.

· வலது உள்ளங்கையில் மச்சம் இருந்தால் நல்ல நண்பர்களின் நட்பைப் பெற்றிருப்பார்கள்.

· இடது உள்ளங்கையில் மச்சம் உள்ளவர்கள் தேவையில்லாத பிரச்சனைகளை தன் பக்கம் இழுத்துக் கொண்டு கஷ்டப்படுவார்கள்

· முதுகில் மச்சம் இருப்பவர்கள் அதிர்ஷ்டசாலிகளாகவும், பக்திமான்களாகவும் இருப்பார்கள்.

· முதுகின் வலப்பக்கம் தோளுக்கு அருகே மச்சம் உள்ளவர் பயந்த சுபாவம் உள்ளவராக இருப்பார்.

· முதுகின்
இடப்பக்கம் தோளுக்கு அருகே மச்சம் உள்ளவர் சிறப்பான வாழ்க்கையை
பெற்றிருப்பார். தீவிரமாக ஆலோசித்து பிறகு எந்த காரியத்தையும் செய்யும்
மனநிலை அவருக்கு இருக்கும்.

புருவங்களுக்கு மத்தியில் & நீண்ட ஆயுள்

நெற்றியின் வலது புறம் & தனயோகம்

வலது புருவம் & மனைவியால் யோகம்

வலது பொட்டு (நெற்றி) & திடீர் அதிர்ஷ்டம்

வலது கண் & நண்பர்களால் உயர்வு

வலது கண் வெண்படலம் & புகழ், ஆன்மீக நாட்டம்

இடது புருவம் & ஏற்ற, இறக்கம், செலவாளி

மூக்கின் மேல் & சுகபோக வாழ்க்கை

மூக்கின் வலதுபுறம் & நினைத்ததை அடையும் அம்சம்

மூக்கின் இடதுபுறம் & கூடா நட்பு, பெண்களால் அவமானம்

மூக்கின் நுனி & ஆவணம், கர்வம், பொறாமை

மேல், கீழ் உதடுகள் & அலட்சியம், காதல் வயப்படுதல்

மேவாய் (உதடுகளுக்கு மேல்) & செல்வாக்கு, இசை, கலைத்துறையில் நாட்டம்

வலது கன்னம் & வசீகரம், தயாள குணம்

இடது கன்னம் & ஏற்றத்தாழ்வு

வலது காது நுனி & சில கண்டங்கள் வரலாம்

இடது காது நுனி & தகாத சேர்க்கை, அவமானம்

காதுகளின் உள்ளே & பேச்சாற்றல், திடீர் யோகம்

தொண்டை & திருமணத்துக்கு பிறகு யோகம்

கழுத்தின் வலதுபுறம் & சொத்து சேர்க்கை, ஆடம்பர வாழ்க்கை

இடது மார்பு & ஆண் குழந்தைகள் அதிகம், பெண்களால் விரும்பப்படுவார்

வலது மார்பு & பெண் குழந்தை அதிகம், அன்பு மிகுந்தவர்

வயிறு & பொறாமை குணம், தகுதிக்கு மீறிய ஆசை

அடிவயிறு & திடீர் அதிர்ஷ்டம், பெண்களால் யோகம், அதிகார, ஆடம்பர வாழ்க்கை

புட்டம் & அந்தஸ்து உயரும், செல்வச் செழிப்பு

**பெண்களுக்கான மச்ச பலன்**

**ஒரு பெண்ணின் நெற்றியில்**

குங்குமம் வைத்துக் கொள்கிற இடத்தில் மச்சம் இருந்தால் அவளுக்கு உயர் பதவியிலும் பெரிய அந்தஸ்திலும் உள்ள லட்சாதிபதியான கணவன் அமைவான். அவனுக்கு வாழ்க்கையில் எல்லா வசதி, வாய்ப்புகளும் கிடைக்கும்.

**நெற்றியின் வலது புறத்தில் சிவந்த மச்சம்**

இருந்தால் அப்பெண் அதிர்ஷ்டம் நிறைந்தவளாக இருப்பாள். தன்னம்பிக்கை மற்றும் தைரியம் மிக்கவளாக இருப்பாள். யார்க்கும், எதற்கும் அடங்கிப் போகாத குணம் இருக்கும்.

**நெற்றியின் இடது புறத்தில் சிவந்த மச்சம்**
இருந்தால் அப்பெண் ஒழுக்கத்தில் சிறந்தவளாக இருப்பாள். அதே மச்சம் கருப்பாக இருந்தால் அப்பெண் அற்பகுணம் உடையவளாகவும், வேண்டாத நபர்களின் சகவாசம் உள்ளவளாகவும் இருப்பாள்.

**மூக்கின் மீது எங்காவது மச்சம்** இருந்தால் அப்பெண் எடுத்த காரியங்களை செய்து முடிக்கும் ஆற்றல் மிகுந்தவளாக இருப்பாள்.

**மூக்கின் நுனிப்பகுதியில் மச்சம்** இருந்தால் அப்பெண்ணுக்கு அமையும் கணவர் மிகப்பெரிய செல்வந்தராக இருப்பார்.

**மேல் உதடு அல்லது கீழ் உதட்டில் மச்சம்** இருந்தால் அவள் அதிர்ஷ்டம் மிகுந்தவளாக, நல்லொழுக்கம் உடையவளாக, வாசனை பொ்ருட்களின் மீது பிரியம் உள்ளவளாக, சிறந்த கணவனை அடைந்தவளாக இருப்பாள்.

**மோவாயில் மச்சம்**
உள்ளவள் மிக உயர்ந்த எண்ணங்களைப் பெற்றிருப்பாள். பொறுமையும், அமைதியும் அவளின் உடன் பிறந்ததாக இருக்கும். குணத்திலும், தோற்றத்திலும் அழகான ஆணை கணவராக அடைந்திடுவாள்.

**இடது கன்னத்தில் மச்சம்** உள்ளவள் மற்றவர்களை வசீகரிக்கும் ஆற்றல் உள்ளவளாக இருப்பாள். அவள் விரும்பியதை செய்து முடிக்க பலர் காத்திருப்பார்கள்.

**வலது கன்னத்தில் மச்சம்** உள்ளவர்கள் கஷ்டங்கள் பலவற்றை சந்தித்து முன்னேற்றம் அடையும் திறனைப் பெற்றிருப்பாள். கஷ்டமும்_சந்தோஷமும் சமமாக அனுபவிப்பாள்.

**கழுத்தில் வலப்புறத்தில் மச்சம்** உள்ளவள் முதல் பிரசவத்தில் ஆண் குழந்தையை பெறுவாள். பிறந்த வீட்டுக்கும், புகுந்த வீட்டிற்கும் அதிர்ஷ்டத்தை தேடித் தருவாள்.

**தலையில் மச்சம்**
தலையில் எங்கு மச்சம்
இருந்தாலும் அந்தப் பெண்ணிடம் பேராசையும், பொறாமை குணமும் நிறைய இருக்கும். வாழ்க்கையில் சந்தோசமோ, மன நிறைவோ இருக்காது.

**ஆடம்பர வாழ்வு**
நெற்றியின் நடுவில்
மச்சம் இருந்தால் அவள் அதிகார பதவியில் அமர் வாள். ஆடம்பர வாழ்வு கிடைக்கும். செய்வது எல்லாம் வெற்றியாகும். இரு புருவத்துக்கிடையே மச்சம் இருந்தா லும் மேற்சொன்ன பலனே. நெற்றியில் வலது பக்கம் மச்சம் இருந்தால் வறுமை வாட்டும். ஆனாலும் நேர்மையுடன் வாழ்வாள்.

**கன்னத்தில் மச்சம்**
காதுக்கும்,
கண்ணுக்கும் இடையே உள்ள கன்னப் பகுதியில் இடது பக்கம் மச்சம் இருந்தால் வாழ்க்கை வசதிகர மாக இருக்கும். சந்தோசம் குடிகொண்டு இருக்கும். இதுவே வலதுபக்கம் என்றால் வறுமை வாட்டும்.

**இடது தாடையில் மச்சம்**
இருந்தால் ஆள் அழகாக இருப்பாள். ஆண்கள் இவளைத் துரத்தித் துரத்திக் காதலிக்கத் துடிப்பார்கள். நற்குணமுடையவள். வலது தாடையில் மச்சம் என்றால் பிறரால் வெறுக்கப்படுவாள்.

**கண்களில் மச்சம்** இருந்தால் வாழ்க்கை ஏற்றமும், இறக்கமும் நிறைந்ததாக இருக்கும்.
**அந்தஸ்து**
மூக்கு மீது மச்சம்
இருந்தால் மிகப் பெரிய அதிர்ஷடம். நினைத்ததெல்லாம் நடக்கும். ஆடம்பர வாழ்வு, அந்தஸ்து இருக்கும். சமூக மதிப்பு கிடைக்கும்.

**காதுகளில் மச்சம்**
இருந்தால் ஏகப்பட்ட செலவு செய்வார்கள். என்ன செலவு செய்தாலும் அதற்குத் தக்கபடி பணமும் வரும். சமுதாயத்தில் இவர்களுக்கு தனி மதிப்பு இருக்கும்.

**நாக்கில் மச்சம்** இருந்தால் அவள் கலைஞானம் கொண்டவளாக இருப்பாள். ரசனை அதிகம் இருக்கும்.

**கழுத்தில் எங்கு மச்சம்** இருந்தாலும் வாழ்க்கையில் 7 முறை அதிர்ஷடம் அடிக்கும்.

**இடதுபக்க தோளில் மச்சம்** கொண்டவள் ஏகப்பட்ட சொத்துகளுக்கு அதிபதியாவாள். பரந்த மனப்பான்மையுடன் பிறருக்கு தான தர்மம் செய்யும் குணம் இவளிடம் இருக்கும்.

**மார்பில் மச்சம்**
பெண்ணின் இடதுபக்க
மார்பகத்தில் வலது பக்கமாக மச்சம் இருந்தால் வாழ்வில் படிப்படியாக முன்னேறுவாள். அதுவே இடதுபுறமாக மச்சம் இருந்தால் உணர்ச்சிகள் அதிகம் இருக்குமாம். வலது பக்க மார்பில் எங்கு மச்சம் இருந்தாலும் வாழ்க்கையில் போராட்டம் இருக்கும்.

**நெஞ்சின் இடப்பகுதியில் மச்சம்** இருந்தால் அவளுக்கு காலாகாலத்தில் திருமணம் நடக்கும். நல்ல கணவன் அமைவான்.

**தொப்புளுக்கு மேலே, வயிற்றில் மச்சம்** காணப்பட்டால் அமைதியும், இன்பமும் கலந்த வாழ்க்கை அமையும். பிறரால் போற்றப்படுபவளாக இருப்பாள்.

**தொப்புளில் மச்சம்** இருந்தால் வசதியான வாழ்க்கை. தொப்புளுக்கு கீழே மச்சம் இருந்தால் வறுமையும், செல்வமும் மாறி மாறி வரும்.

**முதுகில் மச்சம்**
கண்களுக்குத்
தெரியாமல் முதுகில் எங்கு மச்சம் இருந்தாலும் துணிச்சலான காரியங்கள் அந்தப் பெண்ணிடத்தில் இருக்கும். வாழ்க்கை வசதிகரமானதாக இருக்கும். உடலில் ஆரோக்கியம் திகழும்.

உள்ளங்கை, முழங்கை,
மணிக்கட்டு ஆகியவற்றில் எங்கு மச்சம் இருந்தாலும் அவளது குடும்பம் இனிமையாக இருக்கும். கலாரசனை உடைய பெண் இவள். சிறந்த நிர்வாகியும்கூட.

**பிறப்புறுப்பில் மச்சம்** இருக்கும் பெண்ணைவிட வேறு ஒரு அதிர்ஷடசாலி பெண் இருக்க மாட்டாள். உயர்ந்த பதவிகள் தேடி வரும்.

**தொடை**
**இடதுதொடையில் மச்சம்**
இருந்தால் படிப்படியாக கஷடப்பட்டு வாழ்க்கையில் மிக உன்னத நிலைமை அடைவாள். வலது தொடையில் மச்சம் என்றால் தற்பெருமையும் அடங்காபிடாரித் தனமும் இருக்கும்.

**இடது முழங்காலில் மச்சம்**
இருக்கும் பெண், புத்தி கூர்மையானவளாகவும், தன்னம்பிக்கை உடையவளாகவும் இருப்பாள். அதுவே வலது முழங்காலில் என்றால் அவள் பிடிவாதக்காரி.

ஆதாரம்: சாமுத்ரிகா லட்சணம் நூல்.

நெற்றி நடுவே & புகழ், பதவி, அந்தஸ்து

நெற்றி வலதுபுறம் & தைரியம், பணிவு இல்லாத போக்கு

நெற்றி இடதுபுறம் & அற்ப குணம், டென்ஷன், முன்கோபி

மூக்கின் மேல் & செயல்திறன், பொறுமைசாலி

மூக்கின் இடதுபுறம் & கூடா நட்பு, பெண்களால் அவமானம்

மூக்கின் நுனி & வசதியான வாழக்கை, திடீர் ஏற்றங்கள்

மேல், கீழ் உதடுகள் & ஒழுக்கம், உயர்ந்த குணம்

மேல் வாய் பகுதி & அமைதி, அன்பான கணவர்

இடது கன்னம் & வசீகரம், விரும்பியதை அடையும் போக்கு

வலது கன்னம் & படபடப்பு, ஏற்ற, இறக்கமான நிலை

வலது கழுத்து & பிள்ளைகளால் யோகம்

நாக்கு & வாக்கு பலிதம், கலைஞானம்
கண்கள் & கஷ்ட நஷ்டம், ஏற்றம், இறக்கம்

இடது தோள் & சொத்து சேர்க்கை, தயாள குணம்

தலை & பேராசை, பொறாமை குணம்

தொப்புளுக்கு மேல் & யோகமான வாழ்க்கை

தொப்புளுக்கு கீழ் & மன அமைதியின்மை, பொருள் நஷ்டம்

தொப்புள் & ஆடம்பரம், படாடோபம்

வயிறு & நல்ல குணம், நிறைவான வாழ்க்கை

அடிவயிறு & ராஜயோக அம்சம், உயர்பதவிகள்

இடது தொடை & தடுமாற்றம், ஏற்ற இறக்கங்கள்

வலது தொடை & ஆணவம், எடுத்தெறிந்து பேசுதல், தற்பெருமை

புட்டங்கள் & சுகபோக வாழ்க்கை, எதையும் சாதிக்கும் வல்லமை

1. இரு புருவங்களுக்கு மத்தியில் மச்சம் இருந்தால் தீர்காயுள்.
2. நெற்றியின் வலப்புறத்தில் மச்சம் இருந்தால் எதிர்பாராத தனப்பிராப்தி கிடைக்கும்.
3. வலது புருவத்தில் மச்சம் இருந்தால் அதிர்ஷகரமான மனைவி அமைவார்.
4. வலது பொட்டில் மச்சம் இருந்தால் திடீரென பெரும் செல்வமும் புகழும் கிடைக்கும்.
5. வலது கண்ணில் மச்சம் இருந்தால் நண்பர்கள் உறவினர் மூலம் புகழ் கிடைக்கும்.
6. வலது கண்ணுக்குள் வெண்படலத்தின் மேற்புறத்தில் மச்சம் இருந்தால் அவர் ஆன்மீக சிந்தனையுள்ளவராக புகழ் பெற்று விளங்குவார்.
7. இரு கண்களில் ஏதெனும் ஒன்றில் வெண்படலத்தின் கீழ் புறத்தில் மச்சம் இருந்தால் அவர்களுக்கு பல பிரச்சனை சந்திப்பார்கள்.
8. இரு கண்களில் ஏதேனும் ஒரு வெளிப்புற ஓரத்தில் மச்சம் இருந்தால் அவர் வாழ்க்கை சீராக இருக்கும். இருப்பினும் தனது வாழ்நாளில் அவர் ஏதேனும் ஒரு வன்முறை சம்பவத்தை சந்திப்பார்.
9. இடது புருவத்தில் மச்சமிருந்தால் பணக்கஷ்டமான வாழ்க்கை அமையும்.
10. இடது கண் வெண்படலத்தில் மச்சமிருந்தால் வறுமையான வாழ்க்கை அமையும் இருப்பினும் அதை சமாளிக்கும் பக்குவமும் இருக்கும்.
11. இடது கண்ணின் வலப்புறத்தில் சொத்து விஷயங்களில் சங்கடங்களை சந்திப்பார்கள். இருப்பினும் ஓரளவுக்கு சொத்தை சேகரித்து விடுவார்கள்.

12. இடது கண்ணின் இடப்புறத்தில் மச்சம் இருந்தால் உறவினர்களுடன் பிரச்சனை ஏற்பட்டு தனிநபர் ஆவார்கள். இருப்பினும் அவர்களது வாழ்நாளின் பிற்பகுதியில் அதிர்ஷ்டத்தை அடைவார்கள்.

13. மூக்கின் மேல் பகுதியில் மச்சம் இருந்தால் அவர்கள் எல்லா சௌகரியமும் பெற்றிடுவார்கள்.

14. மூக்கின் வலதுபுறத்தில் மச்சம் இருந்தால் நினைத்ததை நடத்தி முடிக்கும் வல்லமை பெற்றிருப்பார்கள்.

15. மூக்கின் இடது புறத்தில் மச்சம் இருந்தால் எதை நம்பாதவர்களாக இருப்பார்கள். தவறான பெண்ணின் நட்பு_சிநேகமும் இவர்களுக்கு இருக்கும்.

16. மூக்கின் நுனியில் மச்சம் இருந்தால் அவர்கள் தயக்க குணம் உள்ளவர்களாக இருப்பார்கள், சற்றே கர்வமும், சற்றே பாதுகாப்பு உணர்வும் இவர்களிடம் மிகுந்திருக்கும்.

17. மூக்கின் கீழே மச்சமுள்ளவர்கள் கேடான வழிகளில் பணத்தை செலவிடுபவர்களாக இருப்பார்கள்.

18. நாசித்துவாரங்களுக்கு மேலே மச்சம் உள்ளவர்கள நவநாகரீக மோகமுள்ளவர்களாக இருப்பார்கள். வசதியான வாழ்க்கையை கொண்டிருப்பார்கள்.

19. மேல் உதட்டிலோ அல்லது கீழ் உதட்டிலோ மச்சம் இருந்தால் அவர்கள் காதல் உணர்வு மிகுந்திருப்பார்கள்.

20. மோவாயில் மச்சம் இருந்தால் செல்வாக்கு, புகழ் இவற்றோடு சமூகத்தில் நல்ல மதிப்பு பெற்றிருப்பார்கள்.

21. மோவாயின் இடதுபுறத்தில் மச்சம் இருந்தால் அவர்கள் மேடு, பள்ளமான வாழ்க்கையை அனுபவிப்பார்கள், கல்வியறிவும் குறைவாக இருக்கும்.

22. மோவாய்க்கு அடியில் மச்சம் இருந்தால் அவர்கள் இசையில் வல்லுநர்களாக இருப்பார்கள்.

23. வலது கன்னத்தில் மச்சம் இருந்தால் அவருக்கு பிறரை வசீகரிக்கிற சக்தி இருக்கும். உறவினர்கள் அவரை மிகவும் நேசிப்பார்கள். எப்பொழுதும் சிரித்த முகத்துடன் மகிழ்ச்சியான வாழ்க்கை அமையும்.

24. இடப்புறக் கன்னத்தில் மச்சம் இருந்தால் அவர் வறுமை, உயர்வு என இரண்டு விதமான வாழ்க்கையை மாறி, மாறி அனுபவிப்பார்.

*****************************************************************************************************

## வக்கிரமான கிரகங்கள் கொடுக்கும் பலன்கள்

-------------------------------------------------------------------------------------------

வக்கிரம் என்றால் பின்னோக்கும் நிலை ஆகும்

ராகு கேதுக்கள் எப்போதும் பின்னோக்கியே செல்லும்

சூரியன் ,சந்திரன் எப்போதும் முன்னோக்கியே செல்லும் ,

மற்ற கிரகமான செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி, வக்கிர நிலை அடையும், சூரியனை நோக்கி ஒரு குறிப்பிட்ட பாகை கலையில் நெருங்கும் பொது மேற்கண்ட கிரகங்கள் வக்கிர நிலை அடையும் , குறிப்பாக பூமியை நெருங்கும் சமயம் கிரகம் வக்கிர கதி அடைகிறது வக்கிர நிலை பெரும் கிரகம் உச்ச கிரக பலனை தரும்.

சூரியனை ஒட்டியே செல்லும் கிரகமான புதன் சுக்கிரன் ஒரு குறிப்பிட்ட தூரத்தை விட அதிகமாகச் சென்று விட்டால் வக்ரம் பெற்று சூரியனை நெருங்கும்போது வக்ர நிவர்த்தி அடைகின்றது.

அது போல சூரியனுக்கு 9ம் வீட்டில் குரு செவ்வாய் சனி வருகின்ற போது வக்ரம் பெற்று,

சூரியன் குரு செவ்வாய் சனிக்கு 9ம் வீட்டிற்கு வருகின்ற போது வக்ர நிவர்த்தியடைகிறது

. குறிப்பாக ஒரு கிரகம் வக்ரம் பெற்றால் என்ன பலனை உண்டாக்குகிறது என ஆராய்கின்ற போது பல்வேறு உண்மைகள் வெளிப்படுகின்றன.

குறிப்பாக உச்சம் பெற்ற கிரகம் வக்ரம் பெற்றால் நீச பலனை தருகிறது. அதுபோல நீசம் பெற்ற கிரகம் வக்ரம் பெற்றால் நீச பலனுக்கு பதில் நற்பலனை ஏற்படுத்துகிறது.

சரி, மற்ற ஸ்தானங்களில் இருக்கும்போது என்ன பலா பலன்களை ஏற்படுத்துகிறது என்று பார்க்கின்ற போது சொந்த வீட்டில் ஆட்சி பெற்ற கிரகம் வக்ரம் பெற்றால் ஒரு கிரகம் பலஹீனமடைந்தால் என்ன பலனை தருமோ, அதாவது நீசம் பெற்றால் என்ன பலனை தருமோ அதுபோல பலனை வழங்குகிறது.

ஆட்சி உச்ச ஸ்தானத்தை தவிர மற்ற ஸ்தானங்களில் வக்ரம் பெறுகின்ற கிரகங்கள் பலமாக இருந்தால்என்ன பலனை தருமோ அதுபோல நற்பலனை உண்டாக்கும்.

அதுவும் நட்பு வீட்டில் அமையப் பெற்ற கிரகம் வக்ரம் பெற்றிருந்தால் அக்கிரகம் ஆட்சி பெற்றால் என்ன பலனை தரும். அதற்கு சமமான நற்பலனை உண்டாக்கும். பொதுவாக கிரகங்கள் பரிவர்த்தனை பெற்று அமையப் பெற்றால் அக்கிரகங்கள் சொந்த வீட்டில் அமையப் பெற்றால் என்ன பலனை தருமோ அதுபோல பலனைத் தரும்.

கீழ்க்கண்ட கருத்துக்கள் வக்கிர கிரகங்களுடன் சேர்ந்த – பார்வையிட–வேதை நட்சத்திரத்தில் அமர்ந்த கிரகங்களினால் பலன்கள் – குறைவதோ - அதிகரிப்பதோ நடக்கும் ஆகையால் தெளிவாக கூர்ந்து கவனித்து பலன் உரைப்பது நல்லது.,

1. லக்னாதிபதி வக்ரம் அடைந்தால் என்ன பலன்
   வக்ரம் பெற்று தீமையான பலனை செய்தால் ஜாதகர் தனது வாழ்க்கையை தானே கெடுத்துகொள்ளும் நிலை ஏற்ப்படும் , நேர்மையான

வழியில் நடப்பதை விட்டு விட்டு குறுக்கு வழியை தானே தேர்ந்தெடுக்கும் சூழ்நிலைக்கு தள்ளப்படுவார் , தனிமையை விரும்பும் சூழ்நிலைக்கு வந்து விடுவார் , மனதில் உள்ளதை வெளியே சொல்லவும் தெரியாது , இதனால் மன அழுதத்திர்க்கு ஆளாகும் சூழ்நிலை வரும் . எதையும் போராடி பெரும் நிலை வரும் , வளரும் சூழ்நிலை சிறப்பாக இருக்காது , சிந்தனை செய்யாமல் செயல்களை செய்துவிட்டு பிறகு வருந்தும் தன்மை ஏற்ப்படும் , நல்ல நண்பர்கள் அமைய மாட்டார்கள் . வக்ரம் பெற்று நன்மையான பலனை செய்தால் ஜாதகுக்கு நிகர் ஜாதகர் மட்டுமே, ஜாதகரை பகைத்து கொள்பவர்களின் சொத்து இவருக்கு வந்து சேரும் , எந்த காரியத்தை தொட்டாலும் பொன்னாகும் , வெற்றி மேல் வெற்றி வந்து சேரும் , விரைவான முன்னேற்றம் , ரகசிய வழியில் பணம் வருவது , திடீர் அதிர்ஷ்டம் , போன்ற அமைப்புகள் ஜாதகருக்கு அமையும் , சொத்து சுக சேர்க்கை குறுகிய காலத்தில் அடைந்து விடும் தன்மை ஜாதகருக்கு ஏற்ப்படும் , ஒன்றுக்கு மேற்ப்பட்ட மனைவிகள் ஜாதகருக்கு அமையும் வாய்ப்பை பெறுவார் , உடல் நிலை மிகவும் சிறப்பாக இருக்கும் பல நல்ல பலன்களே ஜாதகருக்கு நடக்கும் .பொதுவாக லக்கினாதிபதி வக்கிரகம் பெற்றால் அந்த ஜாதகரின் மனது கல் மனது என்று தெளிவாக சொல்லிவிட முடியும் அது நன்மையாகவும் இருக்கலாம் , தீமையாகவும் இருக்கலாம் , சுய ஜாதக அமைப்பை கொண்டே நிர்ணயம் செய்ய இயலும் .

2. மேஷ ராசியில் வக்கிரமான செவ்வாய் – மணவாழ்க்கை இன்பத்தை பூர்த்தி செய்ய முடியாத சூழ்நிலையை எற்ப்படுத்துகிறார் .,

3. ரிஷப ராசியில் வக்கிரமான குரு ஜாதகரை மருத்துவத்துறையில் சிறந்தவராக ,ஞானமுள்ளவராக உருவாக்குகிறார் .,

4. மிதுன ராசியில் வக்கிரமான குரு ஜாதகரை தர்ம சாஸ்திரம் ,உலக ஞானம் கொண்ட விஷயாதியாக உருவாக்குகிறார்.,

5. கடக ராசியில் வக்கிரமான சுக்கிரன் மண வாழ்க்கையில் அதிருப்தியை உண்டாக்குகிறார் .

6. ரிஷப ராசியில் வக்கிரமான சனி நடக்க போவதை முன்னரே உணரும் சக்தியை கொடுக்கிறார்.மற்றும் மற்றவர்களின் குறைகளை முன்னின்று தீர்த்து மற்றவர்களுக்கு உதவி புரிபவராக அமைகிறார் .,

7. மிதுன ராசியில் வக்கிரமான சனி ஜாதகரை ஒரு சிறந்த எழுத்தாளராக ,தத்துவ ஞானியாக உருவாக்குகிறார் .,

8. மிதுன ராசியில் வக்கிரமான சுக்கிரன் தாயாருடன் கசப்பான உறவை உண்டாக்குகிறார் .,மற்றும் மணவாழ்க்கையில் விரிசலை உண்டாக்குகிறார்.,

9. ரிசப ராசியில் வக்கிரமான செவ்வாய் - ஜாதகருக்கு ,உடல்நல ,பொருளாதார குறைவுவையும் ஏற்படுத்துவார்.,

10. கடகத்தில் வக்கிரமான புதன் வாழ்க்கையில் ஏமாற்றங்களையும் ,பின்னடைவுகளையும் ஏற்படுத்துவார் .,

11. கன்னியில் வக்கிரமான புதன் கல்வியில் தடங்கல்களையும் ,தாய் வழி உறவினர்களுக்கு முன்னேற்றமின்மையும் ,ஏற்படுத்துவார் .,

12. கடகத்தில் வக்கிரமான குரு – கல்வியில் தடையும் ,பால வயதில் முன்னுக்கு வராமல் அதிகமான கஷ்டங்களை கொடுக்கிறார்.,

13. கன்னி ராசியில் வக்கிரமான குரு – தந்தை வழி உறவினருடன் மனக்கசப்பு ,சச்சரவுகளும் ,மனவருத்தம் உண்டாக்குவார்.,

14. கடக ராசியில் வக்கிரமான சுக்கிரன் –மணவாழ்க்கை அதிருப்தியை உண்டாக்குவார் .,

15. சிம்ம ராசியில் வக்கிரமான சுக்கிரன் – ஆண்மை குறைவையும் ,பால (சிறு) வயதில் தந்தையாரின் இழப்பு அல்லது பிரிவை ஏற்படுத்துவார்.

16. கடகத்தில் வக்கிரமான சனி - கூடாத மண வாழ்வுகளை ஏற்படுத்துகின்றார் .,

17. துலா ராசியில் வக்கிரமான சனி – மண வாழ்க்கையில் பிரிவையும் ,மண வருத்தங்களையும் ஏற்படுத்துகின்றார் .,

18. மிதுன ராசியில் வக்கிரமான செவ்வாய் – வாழ்க்கையில் புகழையும்,பெருமையையும் கெடுக்கின்றார் ,மற்றும் சண்டை சச்சரவுகளை ஏற்படுத்தி ,இ என் டி காது சம்பந்தமான அறுவை சிகிச்சை செய்ய வைக்கின்றார்.,

19. கடகத்தில் வக்கிரமான செவ்வாய் – ஜாதகரின் சிறு வயதில் பெற்றோர்களை பிரித்தும் அல்லது பெற்றோர்களால் முறையாக வளர்க்க படாத சூழ்நிலைகளை ஏற்படுத்துகின்றார்.,

20. சூன்ய ராசியிலோ ,சூன்ய கிரகங்களுடன் சேர்ந்த வக்கிர கிரகங்கள் – அபரிதமான பாவ பலன்களை கொடுக்கும் .,

21. கன்னியில் வக்கிரமான செவ்வாய் – அப்ரெண்டிஸ் என்கின்ற குடல்வால் நோயினை கொடுத்து அறுவை சிகிச்சை அல்லது வயிற்றின் இரணங்களை ஏற்படுத்துகின்றார் .,

22. மீனத்தில் வக்கிரமான புதன் – கூடப்பிறந்த சகோதர சகோதரிகளால் ஜாதகருக்கு மண வருத்தத்தையும் ,கஷ்டங்களையும் உண்டாக்குகிறார்.,

23. விருச்சிக ராசியில் வக்கிரமான செவ்வாய் – ஜாதகரை ஆன்மீக வாழ்வுக்கு வழி காட்டுகிறார் ,குரு பார்வை பெற்று இருப்பின் புகழ் எய்துகிறார் .,

24. கும்ப ராசியில் வக்கிரமான செவ்வாய் – நோய்களை உண்டாக்கி ஆஸ்பத்திரி வாசம் செய்ய வைக்கின்றார் .,

25. கும்ப ராசியில் வக்கிரமான குரு - மண வாழ்க்கையில் வெறுப்பை ஏற்படுத்தி ஆன்மீக வாழ்க்கையில் தெளிவான ஞானத்தை உண்டாக்குகிறார் .,

26. கன்னியில் நீச வக்கிரம் பெற்ற சுக்கிரன் – முறையற்ற தாம்பத்திய வாழ்க்கைக்கு வழி கோளுகிறார்.,

27. விருச்சிக ராசியில் வக்கிரமான சுக்கிரன் –ஜாதகருக்கு சிறு நீரக கோளாறுகளை ஏற்படுத்துகிறார்.,

28. சனியின் வீடுகளான மகர கும்ப ராசியில் வக்கிரமான சுக்கிரன் – தாம்பத்திய வாழ்க்கையில் வெறுப்பையும் – பிரிவையும் ஏற்படுத்துகின்றார்.,

29. விருச்சிக ராசியில் வக்கிரமான சனி பகவான் – தத்துவ வாழ்க்கையில் ஞானத்தை உண்டாக்கி தத்துவங்களை பிறருக்கு உபதேசிக்க வைக்கின்றார்.,

30. வக்ர குரு எட்டில் இருந்து அதுவும் ஸ்திர ராசியாக இருந்தால் ஜாதகர் டாக்டர் பட்டம் பெற்று ஆராய்ச்சியில் ஈடுபடுவார்.கண்டுபிடிப்புகளும் உண்டு.

31. மீனத்தில் வக்கிரமான சனி – ஏராளமான லாபங்களை ஜாதகருக்கு கொடுத்து கடைசியில் அதை பிடுங்கி விடுகின்றார் .

32. வக்கிரச் சனி, ஜாதகரைக் கடின மனமுடையவராக வும்,பிடிவாத குணமடையவராகவும்,பயனற்ற காரியங்களைச்செய்யக்கூடியவராகவும்,தற்பெருமையுடையவராகவும், தவறானவழிகளில் பணம் சம்பாதிக்கும் பேராசை உடையவராகவும், மத தத்துவங்களைப் பிரச்சாரஞ் செய்யத் தயங்காதவராகவும், ஆனால், அந்த தத்துவங்களைத் தன் வாழ்க்கையிற் கடைப்பிடிக்காதவராகவும் இருப்பர். இந்த நிலை, சனி 3,6,11 ம் இடங்ளைத் தவிர, மற்றயிடங்களில் இருக்கும் போது மட்டுமே ஏற்படுகிறது.

33. சுப கிரகம் வக்ரம் அடைந்தால் என்ன பலன்?
சுப கிரகம் வக்ரகம் அடைந்தால் , அமரும் இடத்திற்கு ஏற்றார் போல் நன்மையோ தீமையோ பலனை தடையில்லாமல் வாரி வழங்கும் , அந்த கிரகம் எந்த பாவத்திற்கு அதிபதியாக வருகிறதோ அதற்க்கு ஏற்றார் போல் நன்மை தீமை பலனை தரும் .

34. அசுப கிரகம் வக்ரம் அடைந்தால் என்ன பலன் .,
ஜாதகர் மனதளவில் வெகுவாக பாதிக்க படுவது , தீய பழக்க வழக்கங்களுக்கு அடிமை ஆவது , முரண் பட்ட வாழ்க்கை முறையை மேற்கொள்வது , எதையும் தாங்கும் மனநிலை , திருமண வாழ்க்கையில் திருப்தியின்மை , தொழில் சரியாக அமையாத நிலை , போராட்ட

வாழ்க்கை, போன்ற பலன்கள் சுய ஜாதகத்திற்கு உட்பட்டு நடக்கும் . மேலும் சரியான பலன்களை தெரிந்து கொள்ள சுய ஜாதகத்தை வைத்து சொல்வதே சரியாக இருக்கும் .

35. உபஜெய ஸ்தானங்களைத் தவிர மற்ற யிடங்களில் செவ்வாய் வக்கிரநிலை யடையும்போது, ஜாதகரை மிகவும் கோப முடையவராக்கி,தவறான புத்தியை அளித்து, தனது கஷ்டங்களைத்தீர்க்க எதிர் மறையான வழிகளில் செல்லவைக்கிறது, இவர்கள் எப்போதும் உண்மையையும், நேர்மையையுங் கண்டு அஞ்சக் கூடியவர்களாக இருப்பர். எனவே இவர்கள், தங்கள் நண்பர்ளையும் உறவினர்ளையும் கோபித்துக்கொண்டு வசைபாட ஆரம்பிப்பார்கள்.இவர்கள் தூக்கத்தில்,அச்சந் தரக்கூடிய, மாறாத கனவுளைக் காண்பார்கள். இவர்கள் தங்கள் நிலையைப் பிறரிடம் நிரூபிக்கு முன், தங்களது குறைகளையும், தவறுகளையும் வெளியிட வேண்டிய நிர்பந்தத்திற்கு ஆளாவர்.

36. புதன் ஜாதகத்தில் வக்கிரமடைந்தவர்களில் வேறு வகையினரும் இருக்கிறார்கள். அவர்கள் வித்தியாசமாக சிந்திக்கக் கூடியவர்களாக இருப்பார்கள். நல்ல சிந்தனைகள் மனதில் தோன்றும். ஆனால் அதை சரியான முறையில் எப்படி வெளிப்படுத்துவது என்பது தெரியாது. இடம், பொருள், ஏவல் அறிந்து பேச வேண்டும் என்ற எண்ணம் தோன்றாது அல்லது அப்படி பேசத் தெரியாது. தன்னை அதிபுத்திசாலி என்று நினைத்துக் கொள்வார்கள். தன் பேச்சாலேயே தனக்குத் தானே வீண் பிரச்சினைகளைத் தேடிக் கொள்பவர்களாக இருப்பார்கள்.

.

நன்று

# ஸ்தான அதிபதி நின்ற பலன்கள்

லக்கினாதிபதி 1ஆம் வீட்டில் அதாவது லக்கினத்தில் இருந்தால்:

ஜாதகன் சுதந்திர மனப்பான்மையுடன் தன்னிச்சையாக வாழ்பவனாக
இருப்பான். யார் சொன்னாலும், அவர்கள் பேச்சைக் கேட்கமாட்டான்
தன் எண்ணப்படி, நோக்கப்படி வாழ்பவனாக இருப்பான்.
ஜாதகன் தீர்க்க ஆயுளை உடையவனாக இருப்பான்.
சொத்துக்களை உடையவனாக இருப்பான்.
பெருமைகள், புகழை உடையவனாக வளர்வான்.
வாழ்க்கையில் ஜீவனம் நல்லமுறையில் நடைபெறும்.
மகிழ்ச்சி நிறைந்தவனாக இருப்பான்.
தெய்வ நம்பிக்கை, தெய்வ வழிபாடுகள் மிகுந்தவனாக இருப்பான்.
உறவினர்களுடன் பிரச்சினைகள் இன்றி ஒற்றுமையுடன் வாழ்வான்.
தனது ஊரில், அல்லது தனது மாவட்டத்தில் அல்லது தனது இனத்தில்
அல்லது தனது நாட்டில் செல்வாக்கும், புகழும் பெற்றவனாகத் திகழ்வான்.

மேற்கூறிய பலன்கள் எல்லாம் லக்கினமும், லக்கினாதிபதியும்
நன்றாக இருந்தால் மட்டுமே. இல்லையென்றால் அவற்றிற்கு நேர்
மாறான பலன்களே நடைபெறும்

---

லக்கினாதிபதி 2ஆம் வீட்டில் வலிமையுடன் இருந்தால்:

ஜாதகன் உயர்ந்த பண்புகள் உள்ள குடும்பத்தில் பிறந்தவனாக
இருப்பான். அவனுடைய குடும்ப வாழ்க்கை சிறப்பாக இருக்கும்.
வாக்கு வன்மை நிறந்தவனாக இருப்பான். அவன் சொற்கள்
எல்லா இடங்களிலும் எடுபடும்.
தனது குடும்பத்திற்காக பல தியாகங்களைச் செய்பவனாக இருப்பான்
தன் குடும்பத்திற்கான தன்னுடைய கடமைகளை நிறைவேற்றுபவனாக
இருப்பான்.
செல்வமும், செல்வாக்கும் மிகுந்தவனாக இருப்பான்.
மன அமைதியும், மகிழ்ச்சியும் நிறைந்தவனாக இருப்பான்,

---

லக்கினாதிபதி 3ஆம் வீட்டில் வலிமையுடன் இருந்தால்:

ஜாதகன் அதீத துணிச்சல் உள்ளவனாக இருப்பான்.
அதிர்ஷ்டமுள்ளவனாக இருப்பான்.
எல்லா நலன்களும் அவனைத் தேடி வரும்.

மரியதைக்குரியவனாகவும், புத்திசாலியாகவும் இருப்பான்
சிலருக்கு இரண்டு மனைவிகள் இருப்பார்கள்
ஜாதகன் சகோதரர்கள், சகோதரிகளின் அன்பைப் பெற்றவனாக இருப்பான், அவர்களுடன் ஒற்றுமையாக வாழ்வான்.
நுண்கலைகளில் தேர்ச்சி பெற்றவனாக இருப்பான்.
செல்வம், செல்வாக்கு, அந்தஸ்துடன் வாழ்பவனாக இருப்பான்.

---

லக்கினாதிபதி 4ஆம் வீட்டில் வலிமையுடன் இருந்தால்:

ஜாதகன் தன் பெற்றோர்களால் மிகுந்த மகிழ்ச்சிக்கு ஆளாகுவான்
அனேக உடன் பிறப்புக்கள் இருக்கும்.
அழகான தோற்றத்தை உடையவனாகவும், நற்பண்புகளை உடையவனாகவும் ஜாதகன் இருப்பான்
ஜாதகன் நிலபுன்கள், வீடு வாசல்களைப் பெற்றவனாக இருப்பான்.
நல்ல குடும்ப உறுப்பினர்களைப் பெற்றவனாக இருப்பான்.
ரோட்டி, கப்டா, மக்கான் என்னும் உண்ண உணவு, உடுக்க உடைகள், இருக்க இடம் என்னும் அடிப்படைத் தேவைகளுக்குக் குறைவில்லாத வாழ்க்கையைப் பெற்றவனாக இருப்பான்.
தாயின் அன்பையும், அரவணைப்பையும் பெற்றவனாக இருப்பான்.
தாய்வழி உறவினர்களின் அன்பைப் பெற்றவனாக இருப்பான்.
கல்வி கேள்விகளில் தேர்ச்சி பெற்றவனாக இருப்பான்
சுகவாசியாக இருப்பான்.
வண்டி, வாகனங்களை உடையவனாக இருப்பான்.
இத்துடன், ஜாதகத்தில் 4ஆம் வீட்டிற்கு உரிய கிரகமும் வலிமை பெற்றிருந்தால் மேற்கூரிய பலன்கள் இரட்டிப்பாகக் கிடைக்கும்.

---

லக்கினாதிபதி 5ஆம் வீட்டில் வலிமையுடன் இருந்தால்:

ஜாதகன் புத்திர பாக்கியங்களைப் பெற்றவனாக இருப்பான்.
அதாவது நிறைய மக்களைப் பெற்றவனாக இருப்பான். அதோடு தன்னுடைய குழந்தைகளின் அன்பையும், ஆதரவையும் பெற்றவனாக இருப்பான்.
ஜாதகன் பெருந்தன்மை உடையவனாகவும், சேவைமனப்பான்மை உடையவனாகவும் இருப்பான்.
மொத்தத்தில் வாழ்க்கை மகிழ்ச்சி நிறைந்ததாக இருக்கும்
சிலருக்கு அரசியல் செல்வாக்கும், ஆட்சியாளர்களின் ஆதரவும் இருக்கும்

---

லக்கினாதிபதி 6ஆம் வீட்டில் வலிமையுடன் இருந்தால்:

******** ஜாதகன் நோய் நொடிகள் நிறைந்து அவதிப்படுபவனாக இருப்பான்.
எதிரிகள் நிறைந்தவனாக இருப்பான்.
பல அவதூறுகளுக்கு ஆளாக நேரிடும்

பலவிதங்களில் கடன் ஏற்பட்டுப் படுத்தி எடுக்கும்.
மொத்தத்தில் மன அமைதி இல்லாத வாழ்க்கை வாழ நேரிடும்
லக்கினாதிபதியின் தசை அல்லது புத்திக் காலங்களில் கடன் மற்றும்
நோய்களுக்குத் தீர்வு கிடைக்கும்.
லக்கினாதிபதி வலுவாக உள்ளவர்கள் ராணுவத்தில் பணிபுரிந்து
சிறப்பைப் பெறுவார்கள்
சிலர் மருத்துவத்துறையில் பணிபுரிந்து பெருமையடைவார்கள்
----------------------------------------------------------------------------------------------------
லக்கினாதிபதி ஏழாம் வீட்டில் அமர்ந்தால் ஏற்படும் பலன்:

சிலருக்கு ஒன்றிற்கு மேற்பட்ட திருமணம் நடைபெறும்.
சிலர் வாழ்க்கையின் பின் பகுதியில் சந்நியாசியாகி விடுவார்கள்.
மற்ற கிரகங்களின் அமைப்பை வைத்து ஜாதகன் செல்வந்தனாக
இருப்பான் அல்லது ஏழையாக இருப்பான்.
ஜாதகன் 'தான்' என்னும் குணமுடையவனாக இருப்பான்.
மனைவியால் சொத்துக்கள் கிடைக்கும்.
சிலருக்கு மனைவியின் வருமானத்தால் சொத்துக்கள் கிடைக்கும்.
சிலர் பெண்ணாசை மிகுந்தவர்களாக இருப்பார்கள்.
எப்போதும் பெண்களின் நினைவாகவே இருப்பார்கள்
எந்தத் தொழிலிலும் அக்கறையில்லாமல் இருப்பார்கள்.

இந்த அமைப்பை சுபக்கிரகங்கள் பார்த்தால் ஜாதகன் வெளிநாடு
சென்று, பெரும்பொருள் ஈட்டி மகிழ்வுடன் வாழ்வான்.
=============================================
லக்கினாதிபதி எட்டாம் வீட்டில் அமர்ந்தால் ஏற்படும் பலன்:

ஜாதகன் கல்வியில் சிறந்தவனாக இருப்பான்.
சூதாட்ட மனப்பான்மை மிகுந்திருக்கும்.
ஒழுக்கக் குறைவு ஏற்படும்.
சிலருக்கு மரணம் - அது வரும் நேரத்தில் அமைதியானதாகவும்,
ஒரு நொடியில் ஏற்படுவதாகவும் அமையும்.
இந்த அமைப்பை சுபகிரகம் பார்த்தால், ஜாதகன் நீண்ட ஆயுளை
உடையவன். ஆனால் வாழ்க்கை சிரமத்துடன் நடக்கும்.
ஜாதகன் பலரின் மனக்கசப்பிற்கு ஆளாக நேரிடும்.
சிலருக்கு உடலில் அங்கக் குறைபாடுகள் இருக்கும்
சிலருக்கு குழந்தை பாக்கியம் இருக்காது. தத்துப் பிள்ளையை
எடுத்து வளர்க்க நேரிடும்.

இந்த அமைப்பை பாபக்கிரகம் பார்த்தால், ஜாதகன் மத்திம
ஆயுளை உடையவன்.
வாழ்க்கையில் வறுமை ஏற்பட்டுப் படுத்தி எடுக்கும்
சிலருக்குப் பலவிதங்களில் அவப்பெயர் உண்டாகும்.
===============================================

லக்கினாதிபதி ஒன்பதாம் வீட்டில் அமர்ந்தால் ஏற்படும் பலன்:

பொதுவாக இந்த அமைப்பு மிகவும் அதிர்ஷ்டகரமானதாகும்.
ஜாதகன் பலருக்கும் உதவுபவனாக இருப்பான்.
நல்ல மனைவி, குழந்தைகள் கிடைக்கும் அமைப்பு இது.
இது பாக்கியஸ்தானம் அதை மனதில் கொள்க!
ஜாதகனுக்கு எல்லா பாக்கியங்களும் கிடைக்கும்.
இந்த அமைப்பை சுபகிரகம் பார்த்தால், ஜாதகனுக்கு நல்ல தந்தை கிடைப்பார். அவரால் ஏற்படும் சகல பாக்கியங்களும் ஜாதகனுக்குக் கிடைக்கும். முன்னோர் சொத்துக்கள் கிடைக்கும்
ஜாதகன் பெரியவர்களை மதிக்கும் குணம் உடையவனாக இருப்பான்
சிறந்த பக்திமானாக விளங்குவான்.
தர்மத்தைக் கடைப்பிடிப்பவனாக இருப்பான்,
நேர்மையாளனாக இருப்பான்.
வாழ்க்கை மகிழ்ச்சி நிறைந்து இருக்கும்.

இந்த அமைப்பை பாபக்கிரகம் பார்த்தால், மேற்சொன்ன பலன்கள் எதுவும் இருக்காது.
=====================================================
லக்கினாதிபதி பத்தாம் வீட்டில் அமர்ந்தால் ஏற்படும் பலன்:

தொழிலில் அல்லது வேலையில் பல வெற்றிகளைப் பெறுவதற்கான அமைப்பு இது.
பத்தாம் அதிபதிக்கும், லக்கின அதிபதிக்கும் சம்பந்தப்பட்ட தொழிலைச் ஜாதகன் செய்து அதில் மேன்மையடைவான்.
இந்த அமைப்பை சுபகிரகம் பார்த்தால், ஜாதகனுக்கு நல்ல தொழில் அல்லது நல்ல வேலை அமையும். கை நிறையச் சம்பாதிப்பான்.
நற்பெயரையும், செல்வாக்கையும் உடையவனாக இருப்பான்.
தொழிலில் மேன்மை அடைவான்.
அதிகாரமும், பதவிகளும் தேடிவரும்.
அரசியல் செல்வாக்கு அல்லது அரசாங்க செல்வாக்கு இருக்கும்.
சிலர் தலைமைப் பதவிவரை உயர்வார்கள்.
நிலபுலன்கள், பெரிய வீடு, வண்டி, வாகன வசதிகளுடனான வாழ்க்கை ஏற்படும்.
======================================================
லக்கினாதிபதி பதினொன்றாம் வீட்டில் அமர்ந்தால் ஏற்படும் பலன்:

இந்த அமைப்பை சுபகிரகம் பார்த்தால், ஜாதகன் லாபகரமான தொழிலைச் செய்வான்.
நற்பெயரும், செல்வாக்கும் தேடிவரும்.
மூத்த சகோதர, சகோதரிகளின் ஆதரவு இருக்கும்.
இந்த அமைப்பை சுபக்கிரகங்கள் பார்த்தாலும், அல்லது இந்த பதினொன்றாம் இடத்து அதிபதி உச்சம் அல்லது ஆட்சி பெற்று

இருந்தாலும், ஜாதகனுக்கு நீண்ட ஆயுள்.

ஜாதகனுக்கு, அவனுடைய 2ஆம் வீட்டினால் ஏற்படும் பயன்களுடன்
இந்த அமைப்பும் சேர்ந்து மேலும் பலவிதமான நன்மைகளைச் செய்யும்
Gains; Gains: Gains - அவ்வளவுதான்.
ஜாதகனுக்குப் பணக்கஷ்டமே இல்லாத வாழ்க்கை அமையும்.

இந்த அமைப்பைப் பாபக்கிரகம் பார்த்தால், ஜாதகனுக்கு
மேற்கூறிய நன்மைகள் இருக்காது.
ஜாதகனுக்குப் பலவிதமான கஷ்டங்கள், நஷ்டங்கள் உண்டாகும்
===============================================
லக்கினாதிபதி பன்னிரெண்டாம் வீட்டில் அமர்ந்தால் ஏற்படும் பலன்:

எவ்வளவு பணம் இருந்தாலும், அல்லது வந்தாலும் அது கரைந்து
கொண்டே இருக்கும்.

எட்டாம் வீட்டினால் ஏற்படும் கஷ்டங்களுடன், இந்த அமைப்பின்
கஷ்டங்களும் சேர்ந்து கொண்டு படுத்தி எடுக்கும்.

வியாபாரம் செய்தால் லாபமே இருக்காது. நஷ்டம்தான் ஏற்படும்.
வாழ்க்கையில் நிறையப் பொருள் இழப்புக்களைச் சந்திக்க நேரிடும்.

இந்த அமைப்பே சரியில்லாதது. அதிலும் இந்த அமைப்பைத் தீய
கிரகங்கள் பார்த்தால், ஜாதகன் வேளா வேளைக்குச் சரிவர போஜனம்
செய்யாதவனாகவும், நித்திரை இல்லாதவனாகவும், மன அமைதி
இல்லாதவனாகவும் இருப்பான்.

அலைச்சல் இருக்கும். குடும்பத்தை அடிக்கடி இடம் மாற்றம்
அல்லது ஊர் மாற்றம் செய்ய நேரிடும்.
திறமையற்றவன், சோம்பேறி என்று அவப்பெயர் கிடைக்கும்
வம்புகளும், வழக்குகளும் ஏற்பட்டுப் படுத்தி எடுக்கும்

சிலர் பொது சேவைகளில் தங்களை ஈடுபடுத்திக் கொண்டு மன
நிறைவு, மன அமைதி பெறுவார்கள்
=================================================

முதல் வீடு

இதுவரை நாம் பொதுவானபலன்களை மட்டும் பார்த்தோம். இப்பொழுது ஜாதகத்தில் ஒவ்வொரு வீட்டையும் பார்க்கலாம். ஒவ்வொரு வீட்டுக்கும் என்ன என்ன குணங்கள் இருக்கின்றன என்று பார்ப்போம்.

முதலில் முதல் வீட்டுக்கு என்ன குணங்கள் என்று பார்ப்போம். முதல் வீட்டை எப்படி கண்டுபிடிப்பது. ஜாதகத்தில் ல என்று போட்டிருக்கும் அது தான் முதல் வீடு. அது தான் ஒருவரின் தலைபகுதி. அவர் முகம் எப்படி இருக்கும். குணம் எப்படி இருக்கும். உயரம்

எவ்வளவு. அவர் வாழ்க்கையில் எந்தளவு முன்னேறுவார் என்று காட்டும். இதை மட்டும் வைத்து பலன் சொல்லகூடாது.

லக்கினத்தின் மீது எந்த கிரகத்தின் பார்வை விழுகிறது. லக்கினம் சென்று அமர்ந்த இடம் எல்லாத்தையும் எடுத்துக்கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் பலன் சரியாக வரும்.

சிலபேருக்கு லக்கினம் கெட்டு இருந்தாலும் மற்ற வீட்டின் கிரகங்கள் மூலம் நல்ல வாழ்க்கை அமையும். அதனால் அனைத்து வீட்டின் தன்மைகளும் கணக்கில் கொண்டு பலன் சொல்ல வேண்டும். லக்கினத்தில் நல்ல கிரகங்கள் இருந்தால் நல்லது. கெட்ட கிரகங்கள் இருந்தால் பல துன்பங்களை அனுபவிக்கவேண்டும்.

இப்பொழுது லக்கினாதிபதி சென்று அமரும் பலன்களைப்பற்றி பார்க்கலாம். லக்கினாதிபதி முதல் வீட்டில் இருந்தால் ஆட்சியில் இருக்கிறார் என்று அர்த்தம். அதனால் நல்ல ஆயுள் இருக்கும் கஷ்டம் இல்லாத வாழ்க்கை அமையும். நல்ல மரியாதையுடன் வாழ்க்கை நடத்தபவராகவும் இருப்பார்.

லக்கினாதிபதி 2 ஆம் வீட்டில் இருந்தால் சுயசம்பளத்தில் குடும்பத்தை நடத்துபவராகவும் நல்ல குடும்ப வாழ்க்கையும் அமையும். 2 ஆம் வீடு குடும்பம் ஸ்தானம் ஆகையால் குடும்பம் மூலம் வருமானத்தை பெறலாம்.

லக்கினாதிபதி 3 ஆம் வீட்டில் இருந்தால் மூன்றாம் வீடு தைரியம் ஸ்தானம் அதனால் மிகுந்த தைரியசாலியாக இருப்பார்கள். தம்பி மூலம் வருமானம் இருக்கும். அடிக்கடி சிறு பயணங்கள் ஏற்படும்.

லக்கினாதிபதி 4 ஆம் வீட்டில் இருந்தால் தாய் நன்றாக இருப்பார் தாய் மூலம் வருமானம் இருக்கும். கல்வி நன்றாக வரும். கல்வி என்றால் பள்ளி படிப்பு நன்றாக இருக்கும். உயர்கல்விக்கு வேறு வீட்டை பார்க்க வேண்டும். நல்ல வீடு அமையும். தாய்வழியில் நன்றாக உதவி இருக்கும்.

லக்கினாதிபதி 5 ஆம் வீட்டில் இருந்தால் நல்ல குழந்தை பாக்கியம் அமையும். குழந்தை மூலம் நல்ல பெயர் கிடைக்கும். தெய்வ ஆற்றல் கிடைக்கும். மத வழிபாடு சத்சங்கம் செய்தல் ஆகியவை கிடைக்க பெறும். குலதெய்வம் அருள் கிடைக்கும்.

லக்கினாதிபதி 6 ஆம் வீட்டில் இருந்தால் உடல் நோய் உடையதாக இருக்கும் அல்லது அடிக்கடி மருத்துவச் செலவு வைக்கும். 6 ஆம் வீடு சத்துரு ஸ்தானம் அதனால் விரோதிகள் மூலம் தொந்தரவு இருந்துக்கொண்டே இருக்கும். பொதுவாக 6 ஆம் வீட்டில் லக்கினாதிபதி இருப்பது நல்லதல்ல.

லக்கினாதிபதி 7 ஆம் வீட்டில் இருந்தால் மனைவியும் மூலம் சொத்துக்கள் கிடைக்கப்பெறும். மனைவியின் சம்பாதியத்தில் வாழ்பவராகும் இருப்பர். அடிக்கடி வெளியில் சுற்றபவராகவும் இருப்பார்கள்.

லக்கினாதிபதி 8 ஆம் வீட்டில் இருந்தால் நீண்ட ஆயுள் இருப்பார் ஆனால் மிகுந்த

வறுமையுடன் குடும்பத்தை நடத்துபவராகவும் இருப்பார்கள். கடன் தொல்லை இருந்துகொண்டு இருக்கும். ஒரு சிலர்கள் உடல் நோய் இருக்கும்.

லக்கினாதிபதி 9 ஆம் வீட்டில் இருந்தால் தகப்பனாரின் ஆதரவை பெற்றவராவார். தந்தையார் நன்றாக இருப்பார் அதைபோல் முன்னோர்களின் ஆசி பெற்றவராவார். சிலர் வெளிநாடுகளில் சென்று வருவார்கள். தெய்வ அருள் கிடைக்கும்.

லக்கினாதிபதி 10 ஆம் வீட்டில் இருந்தால் நல்ல தொழில் அமையும். தொழில்துறையில் வளர்ச்சி இருக்கும். அரசாங்க உதவி கிடைக்க பெறுவார்கள். உறவினர்கள் மூலம் மதிக்கப்படுவார்கள்.

லக்கினாதிபதி 11 ஆம் வீட்டில் இருந்தால் வாழ்க்கை முழுவதும் நல்ல நிலையில் இருப்பார்கள் . நல்ல தொழில் அமையும். மூத்த சகோதரர்களின் ஆதரவு கிடைக்கும். நீண்ட ஆயுள் இருக்கும்.

லக்கினாதிபதி 12 ஆம் வீட்டில் இருந்தால் அவ்வளவு நல்லதல்ல எவ்வளவு வருமானம் கிடைத்தாலும் செலவு செய்துவிடுவார்கள். எந்த வேலையும் ஒழுங்காக செய்ய மாட்டார்கள். வேலையில் இருந்தால் ஒரு இடத்தில் நிரந்தரமாக இருக்கமாட்டார்கள். அடிக்கடி இடம் மாற்றல் ஆகும். சோம்பேறி என்று பெயர் எடுப்பார்கள்.

---

இரண்டாம் வீடு

இரண்டாம் வீடு என்பது குடும்ப ஸ்தானம்.தன ஸ்தானம். வாக்கு ஸ்தானம் எனப்படும். இரண்டாம் வீட்டை வைத்து என்ன பலன் கூறலாம் என்று பார்க்கலாம். முதலில் இரண்டாம் வீட்டு அதிபதி யார் அவர் எங்கு இருக்கிறார். இரண்டாம் வீட்டை எந்த கிரகங்களின் பார்வை இருக்கிறது என்று பார்க்க வேண்டும் அப்பொழுதுதான் பலன் சரியாக வரும். இரண்டாம் வீடு என்பது ஒருவரின் பணநிலமை. வங்கியில் இருக்கும் பணம் மற்றும் தங்க நகைகள் குறிக்கும். குடும்பம் எப்படி இருக்கும் குடும்பத்தில் அமைதி இருக்குமா அல்லது குடும்பத்தில் கலவரம் இருக்குமா ஒருவர் எப்படி பேசுவார் திக்கிதிக்கி பேசுவார அல்லது வேடிக்கையாக பேசுவார அல்லது பேசவே மாட்டாரா என்று கூறலாம். ஒருவருடைய கண்பார்வை எப்படி இருக்கும் என்பதும் பற்றியும் கூறலாம்.

ஒருவருக்கு குழந்தை பாக்கியத்தையும் இந்த வீட்டை வைத்து சொல்லலாம் ஒருவருக்கு குழந்தை பாக்கியத்ததை கொடுக்கும் வீடு 5 ஆம் வீடு ஆனால் குழந்தை பாக்கியம் என்றால் ஒரு நபர் குடும்பத்தில் கூடுகிறார் என்று அர்த்தம் குடும்பத்தின் நபர்களை குறிப்பது இரண்டாம் வீடு இரண்டாம் வீடு நன்றாக இருந்தால்தான் ஒருவருக்கு குழந்தை பாக்கியம் கிடைக்கும் இரண்டாம் வீடு கெட்டால் குழந்தை பாக்கியம் இருக்காது. இப்பொழுது புரிகிறதா இரண்டாம் வீட்டின் பயன் என்ன வென்று.

அதைப்போல் ஒருவருக்கு திருமணம் ஆகவில்லை என்றால் ஏன் என்று இரண்டாம் வீட்டை வைத்து பார்க்க வேண்டும். இரண்டாம் வீட்டின் அடுத்த பண்பு இளைய

சகோதரத்தின் விரையம். எப்படி இது சாத்தியம் இளைய சகோதரத்தைப் பற்றி கூறுவது மூன்றாம் வீடு மூன்றாம் வீட்டிற்க்கு 12 ஆம் வீடு இரண்டாம் வீடு அல்லவா அதனால் அது மூன்றாம் வீட்டிற்க்கு விரையம் ஆகிறது. இளைய சகோதரத்தின் விரையம் மரணம் ஆகியவற்றை காட்டும். அவர் எப்படி இறப்பார் எப்படி பணத்தை செலவு செய்வார் ஆகியவற்றை காட்டும் வீடு இரண்டாம் வீடு

இரண்டாம் வீட்டை வாக்கு ஸ்தானம் என்று கூறினேன் அல்லவா அதைப்பற்றி பார்ப்போம் இரண்டாம் வீட்டில் செவ்வாய் இருந்தால் கடினமாக பேசுவார் கேது இருந்தாலும் பேச்சு கடினம் இருக்கும். புதன் இருந்தால் நன்றாக பேசுவார். நல்ல கிரங்கள் இருந்தால் பேச்சு நன்றாக இருக்கும்.

அடுத்ததாக இரண்டாம் வீட்டை தன ஸ்தானம் என்றும் கூறுவது எப்படி என்று பார்ப்போம் நமக்கு வரும் வருமானம் அதாவது பொருளாதார வளர்சி எப்படி என்று காட்டுவது இரண்டாம் வீடு. இரண்டாம் வீட்டில் நல்ல கிரகங்கள் இருந்தால் பொருளாதார வளர்ச்சி நன்றாக இருக்கும் தீயகிரகங்கள் இருந்தால் பொருளாதார வளர்ச்சி மெதுவாக இருக்கும். பொருளாதார வளர்ச்சியை பார்க்கும் போது 10 ஆம் மற்றும் 11 வீட்டையும் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டும் அதனுடன் 6 ஆம் வீட்டையும் கணக்கில் எடுத்துக்கொள்ளவேண்டும் 6 ஆம் வீடு ஜாதகர் செய்வது சுயதொழிலா அல்லது அடிமைதொழிலா என்று தெரியவரும். இவற்றையேல்லாம் கணக்கில் கொண்டுதான் தன ஸ்தானத்தை முடிவு செய்யவேண்டும்.

இப்பொழுது 2 ம் வீட்டு அதிபதி எந்தெந்த வீட்டில் இருந்தால் என்ன பலன் என்று பார்ப்போம். முதல் வீட்டில் இருந்தால் நன்றான குடும்ப வாழ்க்கை அமையும் சுயமாக சம்பாதித்து முன்னுக்கு வருவார்.

இரண்டாம் வீட்டில் இருந்தால் குடும்ப வாழ்க்கை நன்றாக அமையும் பணப்புழக்கம் அதிகமாக இருக்கும் மொத்தத்தில் கொடுத்துவைத்தவர்.

மூன்றாம் வீட்டில் இருந்தால் சகோதர் மூலம் வருமானம் கிடைக்கும.

4 ஆம் வீட்டில் இருந்தால் வீடு வாகனம் மூலம் வருமானம் உண்டு.

இரண்டாம் வீட்டு அதிபர் 5 ல் இருந்தால் அவருக்கு திடிர் என்று பணவரவு இருக்கும் லாட்டரி அல்லது ரேஸ் மூலம் பணவரவு இருக்கும்.

இரண்டாம் வீட்டு அதிபர் 6 ல் இருந்தால் வேலையின் மூலம் பணவரவு இருக்கும்.

இரண்டாம் வீட்டு அதிபதி 7 ல் இருந்தால் அவரின் மனைவி அல்லது கணவன் மூலம் வருமானம் இருக்கும் சிலருக்கு அந்நிய நாட்டின் மூலமாக வருமானம் இருக்கும்.

இரண்டாம் வீட்டு அதிபர் 8 ல் இருந்தால் அவ்வளவு நல்லதல்ல ஏன் என்றால் 8 ஆம் வீடு மறைவு ஸ்தானம் ஆகும்.

இரண்டாம் வீட்டு அதிபர் 9 ல் இருந்தால் தந்தை வழியாக பணம் வரும் அல்லது

அந்நிய நாட்டின் மூலமாக பணவரவு இருக்கும்.

இரண்டாம் வீட்டு அதிபர் 10 ல் இருந்தால் தொழில் செய்து சம்பாதிப்பார்.

இரண்டாம் வீட்டு அதிபர் 11 ல் இருந்தால் நல்ல பணவரவு இருக்கும். அண்ணன் மூலமாகவும் பணவரவு உதவி இருக்கும்

இரண்டாம் வீட்டு அதிபர் 12 ல் இருந்தால் பணம் விரையமாகும்.

இரண்டாம் வீட்டில் பாவகிரகங்கள் இருந்தால் கண் பார்வையில் கோளாறு இருக்கும். அதைப்போல் 7 ம் வீட்டு மூலம் நன்றான மனைவி அமைந்தாலும் இரண்டாம் வீட்டில் பாவகிரகங்கள் இருந்தால் இருவரையும் தனித்தனியாக பிரித்து வைத்துவிடும். ஒருவருக்கு இரண்டாம் வீட்டு அதிபதியின் தசா புத்தியில் மரணம் ஏற்படும். மரணத்தைப் பற்றி எழுதும் போது முழுவதும் எழுதுகிறேன்.

இரண்டாம் வீட்டை வைத்து அண்ணனின் வீட்டைப்பற்றி கூறலாம். எப்படி என்றால் 11 ம் வீடு அண்ணனின் வீடு 11 ம் வீட்டில் இருந்து 4 ம் வீடு ஜாதகரின் இரண்டாம் வீடு அல்லவா அதனால் அண்ணனின் வீடு எப்படி இருக்கும் என்று கூறலாம். அதைப்போல் தாயின் வருமானத்தைப்பற்றியும் கூறலாம் எப்படி என்றால் 4 ம் வீடு தாய் ஸ்தானம் 4 ம் வீட்டிற்க்கு 11ம் வீடு ஜhதகரின் இரண்டாம் வீடு அல்லவா அதனால் தாயாரின் லாபம் எப்படி என்றும் கூறலாம். இதுவரை 2 ம் வீட்டின் காரதுவத்தைப்பற்றி பார்த்தோம் இனி அடுத்த வீடு இதுவரை பொறுமையாக படித்தற்க்கு மிக்க நன்றி.

---

16. If the second lord is associated with rahu or ketu, the native will be weak

17. இரண்டிற்கதிபதி ஆறாம் வீட்டில் அமர்ந்தால்(If the second lord is placed in the sixth house) அவனுடைய சொத்துக்களைப் பகைவர்கள் - அவனுடைய எதிரிகள் கைக்கொண்டு விடுவார்கள்.

18. அதற்கு நேர்மாறாக ஆறாம் அதிபதி இரண்டாம் வீட்டில் வந்து அமர்ந்திருந்தால், எதிரிகளுடைய சொத்துக்கள் இவனுக்கு வந்து சேரும்.

19. கடக லக்கினத்தில் பிறந்தவனுக்கு, சூரியனும், சந்திரனும், சுக்கிரனும் ஒன்றாகக்கூடி பாவ வீட்டில் இருந்தால் அவன் பிறவிக் குருடனாய் இருப்பான்.

20. இரண்டாம் வீட்டுக்காரன் சுக்கிரனாகி, அவன் லக்கினாதிபதியுடன் கூடி மூன்றில் இருந்தால் ஜாதகனுக்குக் கண் நோய் உண்டாகும்

21. இரண்டாம் அதிபனும், புதனும் கூடி ஆறாம் இடத்தில் வலுவாக அமர்ந்தால் ஜாதகன் ஊமையாக இருப்பான்.

22. இரண்டம் அதிபனும், புதனும் கூடி எட்டிலோ அல்லது பன்னி ரெண்டிலோ இருந்தாலும் ஜாதகன் ஊமையாகிவிடுவான்

23. இரண்டாம் அதிபதியும், குருவும், சுக்கிரனும் உச்சமடைந்திருந்தால் ஜாதகன் அதி புத்திசாலியாக இருப்பான்

24. இரண்டிற்குடையவனும், புதனும் உச்சம் பெற்றிருக்க, லக்கினத்தில் குருவும், எட்டில் சனியும் இருந்தால் ஜாதகன் பெரிய மேதையாக விளங்குவான்.

25. மூன்று, அறு, எட்டு, பதினொன்று ஆகிய வீடுகளில் பாவக் கிரகங்கள் நின்று அவை லக்கினத்தைப் பார்க்காமல் இருந்தாலே ஜாதகன் பெரிய செல்வந்தனாக இருப்பான்.

---

மூன்றாம் வீடு

மூன்றாம் வீட்டைப்பற்றி இப்பொழுது பார்க்கலாம். மூன்றாம் வீடு சகோதர ஸ்தானமாகும். ஜாதகன் குணங்கள் மனோவலிமை இளைய சகோதரம் எப்படி இருப்பார் . அவர் ஜாதகருக்கு நன்மை செய்வாரா தாயாரின் விரையம் தபால் போக்குவரத்து இப்பொழுது ஏது தபால் போக்குவரத்து email லை வைத்துக்கொள்ளலாம் பக்கத்துவீட்டு நபர்கள் எப்படி இருப்பார்கள் குறுகிய பயணம் எப்படி இருக்கும், காது சம்பந்தமான நோய், நீங்கள் இருக்கும் வீடு எப்பொழுது காலி செய்வது ஆகியவைகள் எல்லாம் மூன்றாம் வீடு மூலம் காணலாம்.

இப்பொழுது மூன்றாம் வீட்டின் அதிபதி ஒவ்வொரு வீட்டில் இருந்தால் என்ன பலன் என்று பார்க்கலாம்.

மூன்றாம் வீட்டு கிரகம் 1 வது வீடாகிய லக்கினத்தில் இருந்தால் இளைய சகோதரம் இருக்கும் பல வேலைகளை வைத்து வேலை வாங்கும்படியான அதிகாரம் கிடைக்கும். சங்கீதம் நாட்டியம் போன்றவற்றில் ஈடுபாடு அதிகம் ஏற்படும். உடல் பலம் போகங்களுடன் இருப்பார்கள் வைரம்.நகைகள பெறுவார்கள் சகோதர. சகோதரிகளின் ஆதரவை பெறுவார்கள்.

மூன்றாம் வீட்டு கிரகம் 2 ஆம் வீட்டில் இருந்தால் சகோதர.சகோதரிகளின் ஆதரவில் காலம் கழிப்பவனாகவும்.தைரியமில்லாதவனாகவும் உடலில் வியாதி உடையவனாகவும் இருப்பார்கள். மூன்றாம் வீட்டு அதிபதி கெட்ட கிரகங்கள் பார்வை இல்லை என்றால் சகோதர சகோதரிகளின் சொத்து கிடைக்கும்.

மூன்றாம் வீட்டு கிரகம் 3 ஆம் வீட்டில் இருந்தால் சகோதர சகோதரிகள் நல்ல அந்தஸ்த்தோடு இருப்பார்கள் அவர்களால் இவருக்கு எல்லாவிதத்திலும் ஆதரவு இருக்கும். கலைகளில் பிரியம் கொண்டவனாக இருப்பார்கள் . நல்ல பலசாலியாகவும் இருப்பார்கள். தங்கம்.வெள்ளி ஆடை மீது ஆசை இருக்கும் அதுபோல் கிடைக்கும். தெய்வ வழிபாடு கிடைக்கும்.

மூன்றாம் வீட்டு கிரகம் 4 ஆம் வீட்டில் இருந்தால் சுபபலமிருந்தால் குடும்பத்தில் ஒற்றுமை இருக்கும் சகோதர சகோதரிகள் நீண்ட ஆயுளுடனும் தாயார் தாய்வழி ஆதரவை பெற்றவர்களாகவும் குடும்பத்தில் செல்வமும் சுகமும் நிறைந்து விளங்கும்.

மூன்றாம் வீட்டு கிரகம் 5 ஆம் வீட்டில் இருந்தால் குழந்தை பாக்கியங்களை பெற்றவனாகவும். சகோதர சகோதரிகளின் ஆதரவை பெற்றவராகவும். குடும்பத்தில் மகிழ்ச்சி நிறைந்து விளங்கும் பெரிய மனிதர்களின் ஆதரவு கிடைக்கும். தெய்வீக வழிபாட்டில் உள்ளவர்களிடம் தொடர்பு கிடைக்கும்.

மூன்றாம் வீட்டு கிரகம் 6 ஆம் வீட்டில் இருந்தால் சகோதர சகோதரிகள் பரம எதிரிகளாக இருப்பார்கள் உடல் பலமில்லாமலும் இருப்பார்கள் அடிக்கடி நோய் வந்து தொந்தரவு தரும்.

மூன்றாம் வீட்டு கிரகம் 7 ஆம் வீட்டில் இருந்தால் பெண்களின் மீது ஈர்ப்புடன் இருப்பான். வேலை இல்லாமல் ஊர் சுற்றி திரிபவனாகவும் இருப்பான். தன்னுடைய சுகங்கள் மட்டும் பார்ப்பான். மனைவியின் சொத்துக்களை பெற முயல்வார்கள். நன்றாக சாப்பிடுவார்கள்.

மூன்றாம் வீட்டு கிரகம் 8 ஆம் வீட்டில் இருந்தால் சகோதர சகோதரிகள் உடன் சண்டை இருந்து கொண்டு இருக்கும். உடல் ஊனம் ஏற்படும். சிரமத்துடன் குடும்பம் நடத்த வேண்டும். சில பேர்க்கு கடன்கள் ஏற்படும். சிலருக்கு அவமானம் ஏற்படும்

மூன்றாம் வீட்டு கிரகம் 9 ஆம் வீட்டில் இருந்தால் நல்ல தைரியசாலியாகவும் பூர்வ புண்ணியத்தில் நல்ல வசதி பெற்றவராகவும் இருப்பார்கள். தெய்வபக்தியுடன் இருப்பார்கள்.

மூன்றாம் வீட்டு கிரகம் 10 ஆம் வீட்டில் இருந்தால் சகோதர சகோதரிகளின் மூலம் வேலை வாய்ப்பு கிடைக்கும். அதன் மூலம் குடும்பத்தை நடத்துபவர்களாக இருப்பார்கள்.

மூன்றாம் வீட்டு கிரகம் 11 ஆம் வீட்டில் இருந்தால் சகோதர சகோதரிகளின் அன்பை பெற்றவர்களாக இருப்பார்கள் அவர்களிடம் இருந்து லாபம் கிடைக்கும்

மூன்றாம் வீட்டு கிரகம் 12 ஆம் வீட்டில் இருந்தால் சகோதர சகோதரிகள் மூலம் விரையம் ஏற்படும். சொத்துகள் விரையத்தை ஏற்படுத்தலாம். அலைச்சலும் மன சஞ்சலம் ஏற்படும்.

இதுவரை பொறுமையாக படித்ததற்க்கு மிக்க நன்றி.

---

மூன்றாம் வீட்டதிபதி இருக்கும் இடங்களை வைத்துப் பலா பலன்கள்

1

மூன்றாம் வீட்டு அதிபதி (Lord of the 3rd House) லக்கினத்தில் இருந்தால்:

இந்த அமைப்பு 3ஆம் வீட்டிற்கு அதன் இடத்தில் இருந்து 11ஆம் இடமாகும்.

ஆகவே 3ஆம் அதிபதி இங்கே வந்து அமரும் போது பல நன்மைகளைச் செய்வார். ஜாதகன் உடல் ஆரோக்கியத்துடன் இருப்பான். யோகங்கள் நிறைந்து இருப்பான். சகோதரன், சகோதரிகளின் அதரவைப் பெற்றவனாக இருப்பான். செல்வம் செல்வாக்கு ஆகியவைகளைப் பெற்றவனாகவும் இருப்பான்.

ஜாதகன் தன் முனைப்பும், தன் நிறைவும் பெற்றவனாக இருப்பான்.
ஜாதகனின் அறிவும், புத்திசாலித்தனமும் பாராட்டும் வகையில் இருக்கும்.
அவனுடைய அறிவு கல்வித் தகுதியைச் சார்ந்ததாக இல்லாமல் சிறப்பாக இருக்கும். சட்டென்று கோபம் வரக்கூடியவனாக இருப்பான்.
அதை அடக்கும் திறமையை ஜாதகன் வளர்த்துக் கொள்ள வேண்டும்.
இல்லையென்றால் அந்தக் கோப உணர்வே அவனுடைய முதல் எதிரியாக மாறிவிடும்.

சிலர் தோற்றத்தில் கெச்சலாக இருப்பார்கள். ஆனால் தேவைப்படும் சந்தர்ப்பங்களில் தங்களுடைய சக்தியையும், வீரத்தையும் பயன்படுத்தி வெற்றி பெறுவார்கள்.
இந்த அமைப்புடையவர்கள், நடிப்பு, இசை, நடனம் என்று எல்லாவற்றிலும் ஆர்வம் உடையவர்களாக இருப்பார்கள். சிலர் நாடகம், திரைப்படம் என்று நடிக்கச் சென்று அதில் புகழ்பெறுவார்கள். இந்த அமைப்பிற்குச் ஜாதகத்தில் சுக்கிரனும் வலுவாக இருக்க வேண்டும்.
========================================================
2
மூன்றாம் வீட்டு அதிபதி (Lord of the 3rd House) இரண்டாம் வீட்டில் இருந்தால்:

இந்த இடம் மூன்றாம் வீட்டிற்குப் பன்னிரெண்டாம் வீடாகும். அதாவது மூன்றாம் இடத்திற்கு அதனிடத்திலிருந்து மறைவிடம். ஜாதகன் தைரியம் இல்லாதவனாக இருப்பான். லொக்' லொக்குப் பார்ட்டி. அதாவது ஆரோக்கியம் குறைந்தவன். சிலர் வயதான காலத்தில் மருந்து மாத்திரைகளிலேயே உயிர்வாழ நேரிடும். சகோதரன், சகோதரிகளின் ஆதரவினால் காலம் தள்ள நேறிடும்.

இந்த வீட்டு அதிபதி சுபக்கிரகமாக இருந்தாலும், தீய கிரகங்களின் பார்வை இல்லாமலும் இருந்தால், சகோதரன் அல்லது சகோதரியின் சொத்துக்கள் ஜாதகனுக்குக் கிடைக்கும் அல்லது வந்து சேரும்.

சொத்துக்களை யார் வேண்டாம் என்று சொல்வார்கள்? கடன் வந்து சேர்ந்தால் மட்டுமே மனிதன் வேண்டாம் என்று சொல்வான்

இந்த வீட்டு அதிபதி 2ல் இருக்கும் நிலைமையோடு, இந்த வீட்டின் மேல்
தீய கிரகங்களின் பார்வை விழுந்தால், ஜாதகன் மிகவும் சிரமமான தாழ்மையான வாழ்க்கை வாழ்வான். அப்படி இல்லையென்றால், செல்வமான, மகிழ்ச்சியான வாழ்க்கை வாழ்வான்.

சிலர் தங்கள் இள்வல்களை இழக்க நேரிடும். இழப்பது என்பது என்னவென்று சொல்லவும் வேண்டுமா?

If the 3rd lord is in the 2nd, The native may be lazy or lethargic
He/she do not take his/her undertakings seriously.
Their image may be spoiled by their headstrong behavior
They may not keep punctuality and they may not also keep up the decencies of debate.
They may not have good relations with the younger co-borns.
They may have hostile neighbors.
==========================================================

3.

மூன்றாம் வீட்டு அதிபதி (Lord of the 3rd House) மூன்றாம் வீட்டிலேயே (in his own house) இருந்தால்:

அப்படி இருக்கும் கிரகம், ஆட்சி அல்லது உட்ச பலத்துடன் இருந்தால், ஜாதகனுக்கு நல்ல சகோதரன் சகோதரிகள் இருப்பார்கள். அவர்கள் பெயர் சொல்லும்படி செல்வத்துடனும், புகழுடனும் இருப்பார்கள். அவர்களால் ஜாதகனுக்கு சகலவிதமான ஆதரவுகளும் கிடைக்கும். இந்த சகலவிதம் எனும் சொல்லில் எல்லாம் அடங்கி விட்டது.

ஜாதகனும் அவனளவிற்கு அந்தஸ்து அதிகாரம் என்று கௌரவமாக இருப்பான். பலசாலியாகவும், போக பாக்கியங்களைப் பெற்றவனாகவும் இருப்பான். போக பாக்கியங்கள் என்றால் என்னவென்று தெரியுமல்லவா? தெரியாதவர்கள் தனி மின்னஞ்சலில் கேளுங்கள்.

சிலர் ஆன்மிகம், தெய்வ வழிபாடு, பக்தி என்று ஒரு மார்க்கமாக இருப்பார்கள்.

பொதுவாக ஜாதகன் தைரியம் உடையவனாக இருப்பான்.

மூன்றாம் அதிபதி 3ஆம் வீடு 6ஆம் வீடு அல்லது 11ஆம் வீட்டில் இருந்தால் ஜாதகனுக்கு நிறைய சகோதரன், சகோதரிகள் இருப்பார்கள். மூன்றாம் அதிபதி செவ்வாயாக இருந்து 3ஆம் வீட்டிலேயே இருந்தால் ஜாதகன் தன் சகோதரர்களைப் பறி கொடுக்க நேரிடும். சனியாலும் அதே பலன்தான் கிடைக்கும்

If the 3rd lord is in the 3rd, the native will have the company of brothers & sisters.
They view everything philosophically.
They are confident that everything happens for the good.
They are not the type who cry over the things lost.
They do not bother about the past which is gone
==========================================================

4

மூன்றாம் வீட்டு அதிபதி (Lord of the 3rd House) நான்காம் வீட்டில் இருந்தால்:

ஜாதகனுடைய குடும்பத்தில் ஒற்றுமையும், மகிழ்ச்சியும் நிறைந்திருக்கும். ஜாதகனுடைய உடன்பிறப்புக்கள் நீண்ட ஆயுளையும், நிறைய குழந்தைகளைப் பெற்று கூட்டுக் குடும்ப வாழ்க்கைக்கு எடுத்துக்காட்டாக விளங்குவார்கள்.

இந்த இடம் மூன்றாம் வீட்டிற்கு இரண்டாம் இடம் அதை மனதில் கொள்க!

குடும்பத்தில் செல்வமும், மகிழ்ச்சியும் நிறைந்து விளங்கும்.

The life of the native will be happy on the whole

மூன்றாம் அதிபதி பலமின்றி இருந்தால் மேற்சொன்ன பலன்கள் குறைவாக இருக்கும் அல்லது இல்லாமல் போய்விடும்

==========================================================

5.

மூன்றாம் வீட்டு அதிபதி (Lord of the 3rd House) ஐந்தாம் வீட்டில் இருந்தால்:

ஜாதகன் நிறையக் குழந்தைகள் உடையவனாக இருப்பான்.

ஜாதகனுக்குப் பணப் பிரச்சினை இல்லாத அளவிற்குச் செல்வம் இருக்கும். ஆனால் அவனுடைய குழந்தைகளால் அவனுக்கு மகிழ்ச்சி இருக்காது. அதோடு குடும்ப வாழ்வில் உரசல்களும் விரிசல்களும் இருக்கும்.

ஐந்தில் வந்தமரும் மூன்றாம் அதிபதி வலுவாக இருந்தால், ஜாதகனுக்கு அவனுடைய உடன் பிறப்புக்களால் பல நன்மைகள் ஏற்படும்.

சிலருக்கு ஏராளமான விளைநிலங்கள் இருக்கும் அல்லது கிடைக்கும். சிலருக்கு சுவீகாரம் செல்லும் பாக்கியமும் அதனால் பெரும் சொத்துக்களும் கிடைக்கும். சிலருக்குப் பெரும் பதவிகள் கிடைக்கும்.

Since the 3rd lord is in the 5th, the native will be virtuous
Their brothers will definitely help them in their hour of need.
They are best suited to agriculture as they know when to sow and when to reap.
They may not have much happiness from their children.

==============================================================

6.

மூன்றாம் வீட்டு அதிபதி (Lord of the 3rd House) ஆறாம் வீட்டில் இருந்தால்:

ஜாதகனுக்கு உடன் பிறப்புக்களே எதிரிகளாக இருப்பார்கள் அல்லது எதிரிகளாக மாறிவிடுவார்கள். ஜாதகனின் ஆரோக்கியம் அடிக்கடி பாதிப்பிற்குள்ளாகும். வியாதிகள் வந்து கேள்விகள் கேட்டுவிட்டுப் போகும். வைத்தியச் செலவில் பணம் கரையும்.

சிலருக்கு எதிரிகள் அதிகம் இருப்பார்கள். அவர்களால் வேண்டிய அளவிற்குத் தொல்லைகள் இருக்கும். மனதில் நிம்மதி இருக்காது.

ஆறில் வந்தமரும் மூன்றாம் அதிபதி வலுவாக இருந்தால், ஜாதகனுக்கு நன்மையான பலன்கள் உண்டு. எதிரிகளை ஒரு கை பார்துவிடுவான். மேற்சொன்ன தீய பலன்கள் குறைந்துவிடும்.

மொத்தத்தில் ஜாதகன் உடன் பிறப்புக்களை வெறுப்பவனாக இருப்பான். அவர்களால் இவனுக்குத் தொல்லைகள் மட்டுமே பரிசாகக் கிடைக்கும்

Since the 3rd lord is in the 6th, it will be difficult for the native to
maintain good relationships with brothers and sisters
Their honesty and sincerity in financial dealings have got drawbacks.
Their mind will be troubled by enemies.

++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++

மூன்றாம் வீட்டு அதிபதி ஏழாம் வீட்டில் இருந்தால்:

ஜாதகன் பெண் பித்தனாக இருப்பான்.
யாருக்குத்தான் பெண் பித்து இல்லையென்கிறீர்களா?
சரி, வைத்துக் கொள்ளுங்கள்.
இந்த அமைப்பு உள்ளவன் அதிகமான அளவு பெண் பித்து உள்ளவனாக இருப்பான். தேவையான சுகங்களைத் தேடிப்பிடித்து அனுபவிப்பவனாக இருப்பான். அதற்கான துணிச்சல் இருக்கும்.

சிலருக்கு ஜொள்ளுப் பார்ட்டி எனும் விருது கிடைக்கும்.
பெண்களிடமிருந்து சொத்துக்களும் கிடைக்கும்.
இலை விருந்து, பெண் விருந்து என்று ஆசாமி எப்போதும் சாப்பாட்டு ராமனாக இருப்பான்.

சிலர் சட்டச் சிக்கல்களுக்கு ஆளாக நேரிடும்.

சிலர் எந்தவிதமான வேலையும் இன்றி சுகஜீவனத்துடன் இருப்பார்கள்.

If the 3rd lord is in the 7th, the native will be an employee than a businessman.
He will excel as subordinate than as a commanding officer.
He will forget a duty or debt when it falls due.
=========================================================
மூன்றாம் வீட்டு அதிபதி எட்டாம் வீட்டில் இருந்தால்:

சகோதர உறவுகள் சிலாக்கியமாக இருக்காது. தேக ஆரோக்கியம் முழுமையாக இருக்காது. சிலர் உடற் குறைபாடுகள் உள்ளவர்களாக இருப்பார்கள். வாக்கு வன்மை இருக்காது. குடும்ப நிர்வாகத்திற்கு வேண்டிய பணவரவு இன்றி, குடும்ப வாழ்க்கை தள்ளாடும்.

சிலர் கடன், அவமானம் என்று அவதிப்பட நேரிடும்.

இந்த அமைப்பு சுப பலத்துடன் இருந்தால், கஷ்டங்கள் ஏற்பட்டாலும் கஷ்ட நிவாரணமும் கிடைக்கும்

சிலருக்குத் திருமண வாழ்வு மகிழ்ச்சியாக இருக்காது. அதுபோல சிலருக்குச் செய்யும் தொழிலும் சிலாக்கியமாக இருக்காது. அதாவது பிடிதமாக இருக்காது

துரதிர்ஷ்டம் அவ்வப்போது ஓடிவந்து ஜாதகனின் தோள்கள் மீது ஏறிக்கொள்ளும்.

If the 3rd lord is in the 8th, the native will be driven by the desire
to take possession of things and take charge of situations without any
authority whatsoever.
The native will have the tendency to die for his/her love.
He will miss the company of his brother or sister.
=========================================
மூன்றாம் வீட்டு அதிபதி ஒன்பதாம் வீட்டில் இருந்தால்:

ஜாதகன் துணிவும், வீரப் பிரதாபங்களையும் உடையவன். வசதி படைத்தவனாக இருப்பான். தெய்வ பக்தி மிகுந்து இருக்கும். மற்றவர்களிடம் விசுவாசமாக இருப்பான்.

இந்த அமைப்பு தீய கிரகங்களின் பார்வையைப் பெற்றால் மேற்சொன்ன பலன்கள் இருக்காது

பெற்றோர்வழிச் சொத்துக்கள் கிடைப்பதில் சிக்கல்கள் இருக்கும்.
போராடிப் பெறவேண்டியதிருக்கும். உணர்ச்சி மிகுந்தவர்கள்.
அந்த உணர்ச்சியால் அடிக்கடி சிரமங்களுக்கு ஆளாக நேரிடும்.
சிலருக்குப் புரிதல் இன்மையால் தந்தையுடன் கூடிய உறவு பாதிக்கப்படும்

சிலருக்குத் திருமணத்திற்குப் பிறகு வாழ்க்கை மகிழ்ச்சிகரமாக இருக்கும்.

திடீர் மாற்றங்களும் திடீர் திருப்பங்களும் நிறைந்ததாக வாழ்க்கை இருக்கும்.
==========================================

மூன்றாம் வீட்டு அதிபதி பத்தாம் வீட்டில் இருந்தால்:

இந்த அமைப்பு சுபக்கிரகங்களின் பார்வையின்றி இருந்தால்,
உடன்பிறப்புக்களால் ஜாதகனுக்குப் பயன் இருக்காது.
அவர்களும் அந்தஸ்து இல்லாமல் இருப்பார்கள்.
ஆதரவான சூழ்நிலை இருக்காது.

சுபக்கிரகங்களின் பார்வை இருந்தால் மேற்சொன்ன பலன்களுக்கு எதிர்மாறான பலன்கள் இருக்கும். அதாவது நன்மையான பலன்கள் இருக்கும்

ஜாதகன் நற்பெயரோடும், ஓரளவு செல்வாக்கோடும் இருப்பான்.
பெருந்தன்மை உடையவனாக இருப்பான்.
உத்தியோக வளர்ச்சியினல் மட்டுமே அவனுடைய வாழ்க்கை மகிழ்ச்சி உடையதாக இருக்கும்

If the 3rd lord is in the 10th, the native will be selfsufficient!
He will have pleasing personality and sincere approach
His profession may be connected by travelling
He will attain to a professional reputation
==========================================

மூன்றாம் வீட்டு அதிபதி பதினொன்றாம் வீட்டில் இருந்தால்:

நன்மைதரும் அமைப்பு அல்ல! ஜாதகன் தன் முயற்சியால் மட்டுமே வளர்ச்சியைக் காண முடியும்.

இங்கே வந்தமரும் மூன்றாம் வீட்டதிபன் சுபக்கிரகமாக இருந்தால்
உடன் பிறப்புக்களால் ஜாதகனுக்கு நன்மைகள், லாபங்கள் கிடைக்கும்.
உடன்பிறப்புக்களின் அன்பையும் ஆதரவையும் பெற்று மகிழ்வுடன் இருப்பான்

The native will get help from their sisters and brothers

He will have gains of a high order.
His desires will be fulfilled in time by his own efforts
==============================================

மூன்றாம் வீட்டு அதிபதி பன்னிரெண்டாம் வீட்டில் இருந்தால்:

ஜாதகனுக்கு உடன் பிறப்புக்களால் தொல்லைகள் ஏற்படும்.
சண்டை சச்சரவுகள் மிகுந்து இருக்கும். சொத்துக்கள்
கிடைப்பதில் காலதாமதம் ஏற்படும்.

வாழ்க்கை அலைச்சலாகவும், மன அமைதியின்றியும் இருக்கும்.
கஷ்டங்கள் அதிகமாக இருக்கும்.
சிலர் சயன சுகமற்றவர்களாக இருப்பார்கள்.

வாழ்க்கை ஏற்றங்களும், இறக்கங்களும் நிறைந்ததாக இருக்கும்

---

நான்காம் வீட்டு அதிபன் ஜாதகத்தில் சென்று அமர்ந்த இடத்தை வைத்துப்
பொதுப் பலன்கள்.

1ல் அதாவது லக்கினத்தில் இருந்தால்

ஜாதகன் வீடு, வாகனம், நிலபுலன்கள், மாடு கன்றுகள் உடையவனாக
இருப்பான்.

மாடு கன்றுகள் வேண்டாமா? அந்தக் காலத்தில் இருந்தவன்
அப்படித்தான் எழுதி வைத்து விட்டு போயிருக்கிறான்.
நீங்கள் அவற்றை மைனஸ் செய்து கொள்ளுங்கள்.
கிராமத்தில் இருப்பவன் டிராக்டர்கள் வைத்திருப்பான்.
நகரத்து ஆசாமி குவாலிஸ் வண்டி வைத்திருப்பான்.

வேளா வேளைக்கு விதம் விதமாய் சாப்பாடு கிடைக்கும் அல்லது
ஜாதகன் வேளாவேளைக்கு 'மேரி பிரவுன்' அல்லது 'சரவண பவன்'
டேஸ்ட்டில் சாப்பிட்டுக் கொண்டிருப்பான்.

மனையாள் சுகம் மிக்கவனாக இருப்பான். மனையாள் சுகம்
என்ன வென்று தெரியாதவர்கள் பதிவை விட்டு விலகவும்:-))))

பலராலும் போற்றப்படுபவனாகவும், விரும்பப்படுபவனாகவும் இருப்பான்.

தாய்வழிச் சொந்தங்கள் அவனைக் கொண்டாடி மகிழ்வார்கள்.

கல்வியில் மேம்பட்டவனாக இருப்பான்.

நான்காம் அதிபதி ஆட்சி அல்லது உச்சம் பெற்று இருந்தால், ஜாதகன்
அந்தஸ்து, பெரிய பதவிகள் என்று சிறப்பாக வாழ்வான்.

நான்காம் அதிபதி பகை வீட்டிலோ அல்லது நீசமாகவோ இருந்தால்,

மேலோ சொன்ன பலன்களை மறந்துவிட வேண்டியதுதான்.

அதற்கு எதிர்மாறான பலன்களையே ஜாதகன் அனுபவிக்க நேரிடும்

If the 4th lord is in the ascendant, the native will have all sorts
of domestic comforts, houses & conveyances.
They are outspoken, independent, clever and intelligent.
Their mother will be affectionate!
They will be appreciated in the field of education.
They will have the help of many friends and uncles.
-----------------------------------------------------------------------------------

2ல் அதாவது இரண்டாம் வீட்டில் இருந்தால்

தாயாருக்குப் பிடித்த மகனாக இருப்பான். தாயாரின் அன்பும் ஆதரவும் ஜாதகனுக்குப் பரிபூரணமாகக் கிடைக்கும்

அதைவிட முக்கியமமாக தாய் வழிச் சொத்துக்கள் கிடைக்கும். இன்றைய காலகட்டத்தில் நாம் சம்பாதிக்காமல் வரும் சொத்துக்கள் முக்கியம்தானே? குடும்ப வாழ்க்கை, ஏஆர் ரஹ்மான் இசை பின்னணியில் ஒலிக்க, மிகவும் ரம்மியமாக இருக்கும்.

If the 4th lord is in the 2nd the native will inherit much from their
mother or maternal relatives

நான்காம் அதிபதி பகை வீட்டிலோ அல்லது நீசமாகவோ இருந்தால், மேலே சொன்ன பலன்கள் இருக்காது.

அதற்கு எதிர்மாறான பலன்களையே ஜாதகன் அனுபவிக்க நேரிடும்
-------------------------------------------------------------------------------------

3ல் இருந்தால்

ஜாதகனின் உடன்பிறப்புக்கள் பெயர் சொல்லும்படியாக இருப்பார்கள். அதாவது நல்ல நிலைமையில் (position) இருப்பார்கள். ஜாதகனைவிட அவர்கள் சிறந்து விளங்குவார்கள்.

ஜாதகனின் தாயார் நோயால் அவதியுற நேரிடும்

கஷ்டங்களும் நஷ்டங்களும் அதிகமாகும்.

வருமானத்தைவிட செலவுகள் அதிகமாகி அதனால் வாழ்க்கை சுகப்படாமல் இருக்கும்

நான்காம் அதிபதி பகை வீட்டிலோ அல்லது நீசமாகவோ இருந்தால், மேற்கண்ட பலன்கள் இரட்டிப்பாகிவிடும்

தாய்வழி உறவுகள் பகையாக மாறிவிடும். வாழ்க்கை வசதிகள் நீங்கிவிடும் அல்லது இல்லாமல் போய்விடும்.

இது நான்காம் வீட்டிற்கு, அதிலிருந்து பன்னிரெண்டாம் வீடு. அதை மனதில் கொள்க!

------------------------------------------------------------------------------------------

4ல் இருந்தால்

நான்காம் வீட்டு அதிபதி நான்கிலேயே இருந்தால், ஜாதகன், வீடு, வாகனம் என்று வசதியுடன் வாழ்வான். அதிகாரத்தில் உள்ளவர்களின் தொடர்பு கிடைக்கும்

மற்றவர்களுடைய தொடர்பை, தங்களுக்குச் சாதகமாக மாற்றும் வல்லமை பெற்றிருப்பர்கள். கறையில்லாத பெயரைப் பெற்றிருப்பார்கள்.

ஆன்மிகத்திலும், தத்துவ விசாரங்களிலும் ஈடுபாடுகொண்டிருப்பார்கள்.

அன்பு என்பது கொடுத்துப் பெறவேண்டியது என்பதை உணர்ந்தவர்களாக இருப்பார்கள்.

கல்வியில் மேன்மை பெற்றிருப்பார்கள். உறவினர்கள் பலரும் ஜாதகனிடம் விசுவாசமாக இருப்பார்கள்.

பணியாட்கள், உதவியாளர்கள் என்று அரசனுக்குச் சமமான வாழ்க்கை ஜாதகனுக்கு அமையும்.

பெண்சுகம் திளைக்கும்படியாகக் கிடைக்கும். அத்துடன் பெண் வழிச் சொத்துக்களும் கிடைக்கும் (ஆகா, இதல்லவா டபுள் அதிர்ஷ்டம்:-)))

------------------------------------------------------------------------------------

5ல் இருந்தால்

நான்கிற்கு உரியவன் ஐந்தில் இருந்தால், ஜாதகனுக்கு அவனுடைய குழந்தைகளால் மகிழ்ச்சியும், மதிப்பும் உண்டாகும்.

ஐந்திற்கும், பதினொன்றாம் இடமான லாப ஸ்தானத்திற்கும் தொடர்பு இருப்பதால் ஜாதகன், வரவு மிகுந்தவனாக இருப்பான்.

வீடு, வண்டி வாகனம் என்று வசதிகள் மிகுந்தவனாக இருப்பான்.

தனது வீட்டிலும், சுற்றியுள்ள சமூகத்திலும் செல்வாக்கு உடையவனாக இருப்பான்.

சிலர் பங்கு வணிகத்தில் ஈடுபட்டு அதிக அளவில் பொருள் ஈட்டுவார்கள்

நான்காம் அதிபதி பகை வீட்டிலோ அல்லது நீசமாகவோ இருந்தால், மேலோ சொன்ன பலன்களை மறந்துவிட வேண்டியதுதான்.

அதற்கு எதிர்மாறான பலன்களையே ஜாதகன் அனுபவிக்க நேரிடும்

--------------------------------------------------------------------------------------

6ல் இருந்தால்

நான்காம் அதிபதி லக்கினத்திற்கு ஆறில் இருந்தால், ஜாதகனுக்கு எந்த சுகமும் இருக்காது. மாறாக அவஸ்தை நிரம்பி இருக்கும். தாயுடன் நல்ல பரிவு இருக்காது. தாய்வழி உறவுகளுடன் சண்டை, சச்சரவுகள் விரோதங்கள் இருக்கும். தாய் வழிச் சொத்துக்கள் சிக்கலில் மாட்டிக் கொள்ளும். அவ்வப்போது நோய், நொடிகள் வேறு வந்து நின்று வாட்டியெடுக்கும். நான்காம் அதிபதி வந்து நிற்கும் ஆறாம் வீட்டை சுபக்கிரகங்கள் பார்த்தால் மேற்சொன்ன பலன்கள் நீங்கும் அல்லது குறையும்

They may not get much happiness from mother & conveyances
They are basically careless and indifferent.
Their mother's health may be affected.
They are short tempered. Some of their friends may turn enemies.
Uncles and aunts also turn enemies. ------------------------------------------------------------------------------------------------
---

7ல் இருந்தால்

ஜாதகன் கல்வித்துறையில் இருந்தால், தன் துறையில் புகழ் பெறுவான். சிறந்த கல்விமானாக இருப்பான். அதிகம் படித்தவனாக இருப்பான். நான்காம் வீடு கல்விக்கும் உரிய வீடு, அதன் அதிபதி ஏழில் இருந்து லக்கினத்தைப் பார்ப்பதால் இந்தப் பலன்கள். அதை மனதில் வையுங்கள்.

ஜாதகனுக்கு நல்ல தாய் கிடைப்பாள். வாழ்க்கை சொத்துக்கள், சுகங்கள் மிகுந்திருக்கும். சிலர் நிறைய வீட்டு மனைகளை வளைத்துப் போடுவார்கள். நிறைய வீடுகளைக் கட்டுவார்கள். எல்லோரிடமும் இன்முகத்துடன் பழகுவார்கள். நிறைய நண்பர்கள் கிடைப்பார்கள்.

மொத்தத்தில் உதாரண மனிதர்களாகத் திகழ்வார்கள்.

இந்த இடம், திருமணத்திற்கு உரிய இடம் (7th House, house of marriage)
வந்திருக்கும் கிரகம் தாய் வீட்டைச் சேர்ந்தது.

ஆகவே இந்த அமைப்புள்ளவர் களுக்கு தாய்வழி உறவில் இருந்து மனைவி கிடைப்பாள்.

சிலர் மனைவி சொல்லே மந்திரம் என்று இருப்பார்கள்.

அதுபோல சிலர் மனைவியைத் தவிர மற்ற அனைத்தையும் மாற்றிக் கொண்டிருப்பார்கள். அதாவது வீடு வாகனங்களை அடிக்கடி மாற்றுவார்கள்.

நான்காம் அதிபதி பகை வீட்டிலோ அல்லது நீசமாகவோ இருந்தால், மேலே சொன்ன பலன்கள் இருக்காது. அதற்காக வருத்தப் பட வேண்டாம். அதற்கு நஷ்ட ஈடு ஜாதகத்தில் வேறு வழியில் கொடுக்கப்பட்டிருக்கும்! ------------------------------
-------------------------------------------------------------

8ல் இருந்தால்.

எட்டாம் வீடு என்பது ஆயுள் ஸ்தானம் மட்டுமல்ல, வாழ்க்கையில்

சந்திக்கப்போகும் சிரமங்கள் மற்றும் அவஸ்தைகளுக்கான வீடும் அதுதான்.

It is also house of difficulties.

சிறு வயதில் ஜாதகன் படிப்பதற்கு மிகவும் சிரமப்பட்டிருப்பான். அவனை ஒழுங்காக பள்ளிக்கு அனுப்பும் சூழ்நிலை இருந்திருக்காது. தாயன்பு கிடைத்திருக்காது. தாயார், வறுமையான சூழ்நிலையில் பிறந்து வளர்ந்தவளாக இருப்பாள்.

சில தாய்களுக்கு அந்த வறுமையான சூழல் தொடரும். அதனால அவள் ஆசைப்பட்டாலும் தன் குழந்தைகளுக்கு அவளால் உரிய கல்வியைத் தரமுடியாது.

ஜாதகன் வறுமைக்கும், அவமானத்திற்கும் ஆளாகி வளர்ந்திருப்பான். வீடு, வாகனங்கள், சொத்துக்கள் என்று எதுவும் சொல்லும்படியாகக் கிடைக்காது.

உறவுகளும் நண்பர்களும் பொய்யாகிப் போகும் அல்லது போவார்கள். இந்த நிலைமை கொடுமையானது. அதாவது இந்தப் பொய்யாகிப் போகும் நிலைமை! என்ன செய்வது? விதி என்று நொந்து கொள்ளலாம் அவ்வளவுதான்.

நம்மால் வேறு என்ன செய்ய முடியும்?

இந்த அமைப்பை சுபக்கிரகங்கள் பார்த்தால் மேற்சொன்ன பலன்கள் நீங்கும் அல்லது குறையும் ==============================================

9ல் இருந்தால்

ஒன்பதாம் வீடு பாக்கியஸ்தானம். அங்கே நான்காம் அதிபதி வந்து அமர்ந்தால் கேட்கவா வேண்டும்? பழம் நழுவித் தேனில் விழுந்து அது நழுவி வாயில் விழுந்தது போல இருக்கும் அற்புதமான அமைப்பு இது.

ஒரு கேந்திர அதிபதி திரிகோணத்தில் வந்து அமர்வது அற்புதம் இல்லையா?

சரி, ரெம்பவும் நெகிழ்ந்து, கதை விடாமல் பலனைச் சொல்லுங்கள்.

இதோ பலன்கள்:

The native will be blessed by a loving and compassionate mother
அதோடு நல்ல அன்பான தந்தை கிடைப்பார்.

ஜாதகன் அவருடைய முழு அன்பையும் பெற்றவனாக இருப்பான். நிலபுலன்கள், வீடுவாசல்கள், வண்டிவாகனங்கள், சுகங்கள்,

சௌகரியங்கள் என்று அனைத்தும் ஜாதகனுக்குக் கிடைக்கும்.

ஜாதகன் பெரியவர்களை மதிப்பவனாகவும், தெய்வபக்தி மிகுந்தவனாகவும் இருப்பான்.

ஜாதகனுக்கு ஆழ்ந்த ஆறிவு, நல்ல சிந்தனைகள், நகைச்சுவை உணர்வு மிகுந்து இருக்கும்

நல்ல தந்தைக்கும், தந்தை வழிச் சொத்துக்களுக்கும் இது ஒரு உன்னத அமைப்பாகும்.

நான்காம் அதிபதி பகை வீட்டிலோ அல்லது நீசமாகவோ இருந்தால், மேலே சொன்ன பலன்கள் கிடைக்காது.

அதற்கு எதிர்மாறான பலன்களையே ஜாதகன் அனுபவிக்க நேரிடும் -----------------------------------------------------------------------------------------------

10ல் இருந்தால்

ஒரு கேந்திர அதிபதி இன்னொரு கேந்திரத்தில் அமரும் அமைப்பு இது. நன்மைதரும் அமைப்பு!

ஜாதகனுக்கு தொழில் அல்லது வேலையில் அபரிதமான முன்னேற்றம் கிடைக்கும்.

தன்னுடைய வேலையில் அனைத்து நுட்பங்களையும் அறிந்தவனாக இருப்பான். சிலருக்கு அரசியல் தொடர்பு கிடைக்கும்.

அதில் வெற்றியும் கிடைக்கும். சிலர் ரியல் எஸ்டேட் தொழில் செய்து பெரும்பொருள் ஈட்டுவார்கள்

ஜாதகன் எந்த சூழ்நிலையையும் சமாளிக்கும் திறமை பெற்றிருப்பான். எந்த இடத்திலும் அவனுடைய வரவை அல்லது இருப்பைப் பலரும் உணரும்படி செய்யக்கூடியவன்.

வீடு, வாகனம் என்று என்று எல்லா சௌகரியங்களும் உடையவனாக இருப்பான். நல்ல நண்பர்களைப் பெற்றிருப்பான். அவர்களும் அவனுக்கு உதவுபவர்களாக இருப்பார்கள்

நான்காம் அதிபதி பகை வீட்டிலோ அல்லது நீசமாகவோ இருந்தால், மேலே சொன்ன பலன்களை மறந்துவிட வேண்டியதுதான்.
அதற்கு எதிர்மாறான பலன்களையே ஜாதகன் அனுபவிக்க நேரிடும் -----------------------------------------------------------------------------------------------

11ல் இருந்தால்

இந்த அமைப்பால் ஜாதகன் செளகரியங்கள், சுகங்கள் நிறைந்தவனாக
இருப்பான். தொழிலில் ஈடுபட்டுப் பெரும் பொருளை லாபமாகப் பெறுவான்.

சிலர் சிறு வயதிலேயே தங்கள் தாயாரை இழக்க நேரிடும்.

இந்த வீடு நான்காம் வீட்டிற்கு அதிலிருந்து எட்டாம் வீடு.
அதை மனதில் கொள்க!
If the 4th lord is in the 11th the native will be wealthy.
The native will have a lot of good friends.
They will have lots of gains as 11th house rules gains and
the fulfillment of all desires.
A good house and conveyances are guaranteed.
He will have lot of mental tensions also as 11th is 8th to the fourth.
Lack of mental peace and bliss can result. ----------------------------------------------------------------------------
12ல் இருந்தால்
நன்மை எதுவும் இல்லாத அமைப்பு.
சுகங்கள், செளகரியங்கள் குறைந்து இருக்கும்.
நண்பர்கள் உறவினர்களின் ஆதரவு இருக்காது.
வாழ்க்கை வறுமையும், கஷ்டங்களும், நஷ்டங்களும்,
வேதனைகளும் நிறைந்ததாக இருக்கும்.
பூர்வீக சொத்துக்கள் இருந்தால் அனைத்தும் விரையமாகிக்
காணாமல் போய்விடும்.
மொத்தத்தில் சிரமமோ சிரமம்.

The native will have to face many ills & unhappy situations in life.
The lord of 4th house in this house of loss shows loss of comforts.
Regarding house they may have to face many problems.
They may have to encounter litigation and problems regarding house.
They may not be happy with regard to mother.
Uncles and aunts will become enemies
Some friends also go against them.
They will be beset by many problems and difficulties.
Expenditure rises and they may have to spend much money on house
and conveyances.
They may have to face losses in speculation.

சுபக் கிரகங்களின் பார்வை இந்த அமைப்பின் மேல் பட்டால் அவை
குறையும் அல்லது நீங்கும். இல்லாவிட்டால் நோ சான்ஸ்!
------------------------------------------------------------
நான்காம் வீடு

இப்பொழுது நாம் நான்காம் வீட்டைப்பற்றி பார்க்கலாம். நான்காம் வீடு தாயார் ஸ்தானம் என அழைக்கப்படுகிறது. தாய்,தாய்மாமன்,வாகனம்,உறவினர், இன்பங்கள், மூதாதையர்கள் சொத்து,பயிர்,நிலம்,வீடு வாசல் பள்ளிக்கல்வி ஆகியவற்றை நான்காம் வீட்டின் மூலம் காணலாம்.

இப்பொழுது நான்காம் வீட்டு அதிபதி ஒவ்வொரு வீட்டில் இருந்தால் என்ன பலன் என்று பார்க்கலாம்.

நான்காம் வீட்டு அதிபதி 1 ஆம் வீட்டில் இருந்தால் பங்களா போன்ற வீடுகள், நிலபுலங்கள், வண்டி வாகனங்கள், மாடு கன்று, பால் பாக்கியம் ஆகியவற்றுடன் நன்றாக வாழ்வான். தாய் வழி பாட்டி மாமன் முதலானோர் ஆதரவு நிரம்பி இருக்கும். கல்வியில் திறமையுடன் இருப்பார்கள் அதைப்போல் உயர்ந்த பதவியில் அமருவான். 4 ஆம் வீட்டு அதிபதி கெட்ட சேர்க்கை ஏற்பட்டால் கெடுதிபலன் நடைபெறும்.

நான்காம் வீட்டு அதிபதி 2 ஆம் வீட்டில் இருந்தால் தாய்வழி ஆதரவையும் சொத்துக்களையும் பெறுவார்கள் குடும்பத்தில் சுகம் நிறைந்து காணப்படும்.

நான்காம் வீட்டு அதிபதி 3 ஆம் வீட்டில் இருந்தால் அந்த ஜாதகனிட விட அவன் சகோதரன் சிறந்த விளங்குவான். ஜாதகனின் தாயார் நோய்வாய்ப்படுவார்கள். குடும்பத்தில் கஷ்டங்களும் நஷ்டங்களும் ஏற்படும். வருமானத்தைவிட செலவு அதிகமாகும்.

நான்காம் வீட்டு அதிபதி 4 ஆம் வீட்டில் இருந்தால் நிலபுலங்கள் வீடு வாசல் மாடு கன்றுகள் பால்பாக்கியம்இ கல்வியில் திறமை கீர்த்தி வண்டி வாகனங்கள் முதலியவற்றுடன் வாழ்வான். எல்லாரும் மரியாதையுடன் இவர்களிடம் பழகுவார்கள். நண்பர்கள் இவரின் புகழ் பேசுவார்கள். பெண் சுகம் நிரம்ப பெற்றும். பெண்களின் சொத்துக்களை பெற்றும் விளங்குவார்கள். இவர்களில் நல்ல சுகபோகங்களுடன், செல்வாக்குடன் விளங்குவார்கள்.

நான்காம் வீட்டு அதிபதி 5 ஆம் வீட்டில் இருந்தால் நல்ல புத்திரங்களை உடையவனகாவும் வண்டி வாகனங்கள் பெற்றவனாகவும் லாபங்களை உடையவனகாவும் சமூகத்தில் நல்ல அந்தஸ்தோடு வாழ்வார்கள்.

நான்காம் வீட்டு அதிபதி 6 ஆம் வீட்டில் இருந்தால் சுக சௌகர்யங்களை இழந்தவனாகவும்,தாயிடமும் தாயார் வழிகளிலும் விரோதங்களை கொண்டவனாகவும், பூர்வீக சொத்துக்களை இலந்தவனாகவும்,சண்டை சச்சரவுகளில் செலவு செய்பவனாவும் வியாதி உடையவனாகவும் இருப்பார்கள்.

நான்காம் வீட்டு அதிபதி 7 ஆம் வீட்டில் இருந்தால் நல்ல பலமாக இருந்தால் தாயார் மாமன் வழியில் மனைவி வருவாள். வருமானமும் செலவும் சரிசமாக இருந்து வரும். வீடு மாறி மாறி குடி இருக்கும் படி இருக்கும் வாகனங்கள் அடிக்கடி மாற்ற வேண்டும் மனைவியின் போக்கின் படி ஜாதகர் நடப்பர்.

நான்காம் வீட்டு அதிபதி 8 ஆம் வீட்டில் இருந்தால் தாயார் ஏழை வீட்டில் பிறந்தவராக இருப்பார். தாய்வழி ஆதரவு குறைந்து இருக்கும் வறுமையும் அவமானங்களும் நிறைந்து காணப்படும்.

நான்காம் வீட்டு அதிபதி 9 ஆம் வீட்டில் இருந்தால் நிலபுலங்கள் வீடு வாகனங்கள் பால் பாக்கியம் நிறைந்து இருக்கும். தகனப்பாரின் அன்பை பெற்றவராக இருப்பார்கள். தெய்வ வழிபாடு நிறைந்து காணப்படும்.

நான்காம் வீட்டு அதிபதி 10 ஆம் வீட்டில் இருந்தால் பூமி சம்பந்தமான பொருள்களால் லாபத்தை பெறுவார்கள். தொழில் பலம் நிறைந்து காணப்படும். பெரிய அந்தஷ்து உள்ளவர்களிடம் தொடர்பு ஏற்படும். செல்வம், செல்வாக்கு, கீர்த்தி பெற்று விளங்குவான்.

நான்காம் வீட்டு அதிபதி 11 ஆம் வீட்டில் இருந்தால் சுகங்கள் நிறைந்தவனாகவும் பூமி வியாபாரங்கள் மூலம் நல்ல லாபம் ஏற்படும் தாயாருக்கு உடலில் நோய் ஏற்படும்.

நான்காம் வீட்டு அதிபதி 12 ஆம் வீட்டில் இருந்தால் சுகங்கள் அற்றவனாகவும் சொந்தங்கள் ஆதரவு இல்லாமாலும் இருப்பான். வறுமை மிகுந்து காணப்படும். சொந்த நிலம்கள் விரையம் ஏற்படும். மொத்தத்தில் சிரம வாழ்க்கை நடத்தும்படி இருக்கும்.

இத்துடன் நான்காம் வீட்டின் காரத்துவம் முடிந்தது.

---

ஐந்தாம் இடத்தின் அதிபதி சென்று அமரும் இடத்தின் பலன்:

5th lord 1ல் இருந்தால்:

மிகவும் நல்லது. அதோடு நல்ல சேர்க்கையும், பார்வையும் பெற்றிருந்தால் தலைமைப் பதவி தேடிவரும். நிறைய வேலை ஆட்கள் இருப்பார்கள். அமைச்சராகக் கூட ஆகலாம், நீதிபதியாகவும் ஆகலாம். (அது பத்தாம் இடத்துடனும் சம்பந்தப்பட்ட தாகையால், நான் ஆணிபிடுங்கும் கம்பெனியில் டீம் லீடராக இருக்கிறேன். எனக்கு எப்படி நீதிபதி பதவி தேடி வரும் என்று யாரும் பின்னூட்டத்தில் கேட்க வேண்டாம். அந்த டீம் லீடர் பதவி கூட தலைமைப் பதவிதானே!)

அதே நேரத்தில் 5th lord ஒன்றில் அமர்ந்தும், தீய கிரகங்களின் பார்வை, அல்லது சேர்க்கை பெற்றிருந்தால் மேலே கூறியவற்றிற்கு எதிரான பலன்களே நடைபெறும்

சராசரி சேர்க்கை என்றால் மிக்சட் ரிசல்ட்!

---------------------------------------------------------------------------

5th lord 2ல் இருந்தால்:

If favourably disposed as said in the earlier paragraph:
அழகான மனனவியும், அன்பான குழந்தைகளும் கிடைப்பார்கள்.படித்தவராக இருப்பார். அரச மரியாதை கிடைக்கும்.

If not favourably disposed:
தரித்திரம் தாண்டவமாடும், தன் குடும்பத்தை வழி நடத்தவே சிரமப் படுவார். மற்றவர்களின் எரிச்சலுக்கும், அவமரியாதைகளுக்கும் ஆளாக நேரிடும்.

---------------------------------------------------------------------------

5th lord 3ல் இருந்தால்:

If favourably disposed: நல்ல குழந்தைகளும், நல்ல சகோதரன்,நல்ல சகோதரிகள் கிடைப்பார்கள். இங்கே நல்ல என்ற வார்த்தையில் எல்லாம் அடக்கம்!

If not favourably disposed: Loss of chidren, misunderstanding with brothers and sisters, troubles in work or in business.

---------------------------------------------------------------------------------------------

5th lord 4ல் இருந்தால்:

If favourably disposed: நல்ல, நீண்ட நாட்கள் உயிர் வாழும் தாய் கிடைப்பார். அரசுக்கு (வருமானவரி) ஆலோசகராக இருப்பவர். அல்லது அது சம்பந்தப்பட்ட தொழில் செய்பவர்.

If not favourably disposed: பெண் குழந்தைகள் மட்டும் உடையவராக இருப்பார்.

---------------------------------------------------------------------------------------------

5th lord 5ல் இருந்தால்:

If favourably disposed: அதிகமாக ஆண் குழந்தைகளை உடையவர். அவருடைய செயல்களில் தொழிலில் மேன்மை அடைபவராக இருப்பார்.பல சாஸ்திரங்களில் ஈடுபாடு உடையவர்.எல்லோரிடமும் நட்பாக இருப்பவர். கணக்கில் கெட்டிக்காரர்.

If not favourably disposed: எதிர்பார்த்தது எதுவும் நடக்காமல் அவதியுறுவார். குழந்தைகள் இறக்கும் அபாயம் உண்டு. வார்த்தைகள் தவறுபவர். சலன மனம் உடையவர்.

---------------------------------------------------------------------------------------------

5th lord 6ல் இருந்தால்:

பெற்ற பிள்ளைகளுடனேயே விரோதம் உண்டாகும். குழந்தை பாக்கியம் குறைவு. தத்துப் பிள்ளை எடுத்து வளர்க்க வேண்டியவர்.

---------------------------------------------------------------------------------------------

5th lord 7ல் இருந்தால்:

If favourably disposed: நல்ல குழந்தைகளை உடையவர்.அதிகமான குழந்தைகளை உடையவர். அவர்களால் பொன்னும், பொருளும் , செல்வமும் பெறக்கூடியவர். செழிப்பான வாழ்க்கை அமையும். குருபக்தி மிக்கவர்.வசீகரத்தோற்றமுடையவர்.

If not favourably disposed: குழந்தைகளைப் பறிகொடுக்க நேரிடும். பெயரும், புகழும் பெற்ருத்திகழும் குழந்தைகளைக்கூட பறி கொடுக்க நேரிடும்

---------------------------------------------------------------------

5th lord 8ல் இருந்தால்:

மூதாதையர் சொத்துக்கள் கிடைக்காது.அப்படியே கிடைத்தாலும் அவற்றைக் கடனுக்காக இழக்க நேரிடும். Lungs Problem உண்டாகும். மகிழ்ச்சி இல்லாதவர் Unhappy man but not poor!

---------------------------------------------------------------------------------------------

5th lord 9ல் இருந்தால்:

If favourably disposed: கோவில், குளம் என்று திருப்பணிகள் செயக்கூடியவர். சொற்பொழிவாளர், பெரிய கவிஞர் அல்லது எழுத்தாளர், பேராசான்.

If not favourably disposed: அதிர்ஷ்டமில்லாதவர். முயற்சிகள் எல்லாம் தட்டிக்கொண்டு போய்விடும். நடக்காது போய்விடும்

---

5th lord 10ல் இருந்தால்:

If favourably disposed: ராஜயோகம்.ஏராளமான சொத்துக்கள் (Landed properties) சேரும். அரச மரியாதை கிடைக்கும். அவருடைய குடும்ப உறவுகளில் அவருக்குத்தான் முதல் மரியாதை கிடைக்கும்.

If not favourably disposed: மேலே கூறியவற்றிற்கு எதிர்மறையான பலன்கள்.

---

5th lord 11ல் இருந்தால்:

எடுக்கும் காரியம் எல்லாவற்றிலும் வெற்றியும், நன்மையும் கிடைக்கும். செல்வந்தராகி விடுவார். மற்றவர்களுக்கு உதவிகள் செய்வார். அதிகமான குழந்தைகள் இருக்கும்!

---

5th lord 12ல் இருந்தால்:

எதிலும் பற்றின்மை உண்டாகும், வேதாந்தியாகிவிடுவார். பல இடங்களிலும் அலைந்து திரிபவர். பிடிப்பு இல்லாதவர்

---

ஐந்தாம் வீடு

இப்பொழுது நாம் ஐந்தாம் வீட்டைப்பற்றி பார்க்கலாம் ஐந்தாம் வீடு புத்திர ஸ்தானம் எனப்படுகிறது.
ஐந்தாம் வீட்டு மூலம் குழந்தை பிறப்பு, பூர்வ புண்ணிய பலன்கள், வித்தை, எண்ணங்கள், கல்வியில் திறமை, மஹான்களின் சந்திப்பு, பதவி உயர்வு, குலதெய்வம் வழிபாடு ஆகியவற்றை காணமுடியும்.
இப்பொழுது ஐந்தாம் வீட்டு அதிபதி ஒவ்வொரு வீட்டில் இருந்தால் என்ன பலன் என்று பார்க்கலாம்.

ஐந்தாம் வீட்டு அதிபதி 1 ஆம் வீட்டில் இருந்தால் குழந்தை பாக்கியம் பெற்றவனாகவும் அந்த குழந்தைகள் நல்ல பெயர் பெற்று நலமுடன் வாழும். மஹான்களிடம் ஆசி பெறுவான் அரசாங்கத்திலும் மக்களிடம் நல்ல பெயர் பெற்று விளங்குவான்.

ஐந்தாம் வீட்டு அதிபதி 2 ஆம் வீட்டில் இருந்தால் பிள்ளைகளால் தனம் சந்தோஷம் நிறைந்து இருக்கும் பக்தி விசுவாசத்துடன் பிள்ளைகள் இருப்பார்கள் கல்வியில் தேர்ச்சி நல்ல அறிவுடன் இருப்பார்கள். பிள்ளைகளால் நல்ல வருமானம் குடும்பத்திற்க்கு கிடைக்கும்.

ஐந்தாம் வீட்டு அதிபதி 3 ஆம் வீட்டில் இருந்தால் புத்திரதோஷம் உண்டாகும். புராணங்கள்இ சாஸ்திரங்கள் மீது ஈடுபாடு இருக்கும். பிள்ளைகளால் ந்ன்மை ஏற்படாது.

ஐந்தாம் வீட்டு அதிபதி 4 ஆம் வீட்டில் இருந்தால் புத்திரதோஷம் ஏற்படும் வண்டி வாகனம்இ நிலபுலங்கள் கிடைக்கும். பெரிய மனிதர் தொடர்பு கிடைக்கும். குடும்பத்தை கௌருவத்துடன் நடத்துபவராக இருப்பார்.

ஐந்தாம் வீட்டு அதிபதி 5 ஆம் வீட்டில் இருந்தால் புத்திரர்கள் உயர் பதவிகளில் இருப்பார்கள் படித்த அறிவாளிகளின் சமூகத்திலும் சுற்றத்திலும் வாழ்க்கை நடத்துவார்கள் கல்வியில் நல்ல ஞானம் இருக்கும். அரசாங்கத்தில் உயர்பதவிகள் வசிப்பார்கள். ஐந்தாம் வீட்டில் சுபகிரங்கள் சேர்க்கை ஏற்பட்டால் ராஜயோகம் ஏற்படும்.

ஐந்தாம் வீட்டு அதிபதி 6 ஆம் வீட்டில் இருந்தால் புத்திரதோஷம் ஏற்படும். புத்திர பாக்கியம் ஏற்பட்டாலும் எதிரிகளாக மாறுவார்கள். புத்திரர்களால் நன்மையே லாபமே ஏற்படாது. இவர்களுக்கு ஞாபசக்தி குறைவு. பெரியவர்களிடம் விரோதம் ஏற்படும்.

ஐந்தாம் வீட்டு அதிபதி 7 ஆம் வீட்டில் இருந்தால் புத்திரதோஷம் ஏற்படும். திருமணவாழ்க்கை நன்றாக இருக்காது. மனைவியின் குடும்பத்தாரால் மனஅமைதி குழையும்.

ஐந்தாம் வீட்டு அதிபதி 8 ஆம் வீட்டில் இருந்தால் புத்திரதோஷம் ஏற்படும் சிரமமாக குடும்பத்தை நடத்துவார். நல்ல வருமானம் இருக்காது.

ஐந்தாம் வீட்டு அதிபதி 9 ஆம் வீட்டில் இருந்தால் புத்திர விருத்தி இருக்கும். புத்திரர்களால் சந்தோஷங்களும் சுகமும் ஏற்படும். கல்வியில் பிரகாசத்துடன் விளங்குவார்கள். தெய்வீக வழிபாடுகளில் பற்றுதலுடன் இருப்பார்கள் .

ஐந்தாம் வீட்டு அதிபதி 10 ஆம் வீட்டில் இருந்தால் நல்ல புத்திர பாக்கியம் ஏற்படும் அரசாங்கத்தில் உயர் பதவிகளில் இருப்பார்கள். மதங்களை பரப்புவதில் ஆர்வம் இருக்கும். புத்திரர்களால் நல்ல தொழில்கள் அமையும்.

ஐந்தாம் வீட்டு அதிபதி 11 ஆம் வீட்டில் இருந்தால் நல்ல புத்திர பாக்கியம் ஏற்படும் குடும்பம் அமைதியும் சந்தோஷத்தையும் அடையும். பெரிய மனிதர்களின் அன்பும் ஆதரவும் கிடைக்கும். அரசாங்க ஆதரவு கிடைக்கும்.

ஐந்தாம் வீட்டு அதிபதி 12 ஆம் வீட்டில் இருந்தால் மனைவிக்கு அடிக்கடி கர்ப்ப சிதைவு ஏற்படும். நண்பர்கள் ஒற்றுமையுடன் இருக்கமாட்டார்கள். குடும்பம் அமைதி இல்லாமல் இருக்கும்.

---

ஆறாம் வீட்டு அதிபதி வெவ்வேறு வீடுகளில் அமர்ந்திருப்பதால் ஏற்படும் பொதுப் பலன்கள் (The results of Sixth Lord occupying different houses)

1.
முதல் வீட்டில் அமர்ந்திருந்தால்
(That is sixth lord occupying lagna in a horoscope)

நல்ல கிரகத்தின் பார்வை பெற்று அமர்ந்திருந்தால் நாட்டின் பாதுகாப்புத் துறையில் பணிபுரியும் வாய்ப்புக் கிடைக்கும். சாதாரண ராணுவ வீரராகவோ அல்லது காமாண்டராகவோ பணிபுரிவார். அல்லது காவல் துறையிலோ அல்லது சிறைத்துறையிலோ பணிபுரிவார். ஜாதகத்தின் மேன்மை அளவை வைத்து அதில் பெரிய பதவி வரைக்கும் சென்று அமரக்கூடியவராகவும் இருப்பார்.

இதே அமைப்பு நல்ல பார்வை பெறாமல், தீய பார்வைகள் பெற்றிருந்தால், ஜாதகன் திருட்டுத்தொழிலோ அல்லது ஒரு பெரிய மோசடிக் கூட்டத்திலோ பணியாற்ற நேரிடும்!

---------------------------------------------------------------------------------------------------

2

இரண்டாம் வீட்டில் அமர்ந்திருந்தால்

(That is sixth lord occupying second house in a horoscope)

இது நல்ல அமைப்பு அல்ல! இது குடும்ப வாழ்க்கைக்கும், நிதிநிலைக்கும், கண் பார்வைக்கும், பேச்சுத்திறமைக்கும் உரிய வீடாகும். இந்த வீட்டில் ஆறாம் அதிபதி வந்து அமர்ந்தால், ஜாதகனுக்குப் பார்வைக்கோளாறுகள், பற்சிதைவுகள் ஏற்படும். திக்குகின்ற பேச்சு நிலை ஏற்படும். குடும்ப வாழ்க்கை தொல்லைகளும் அல்லது துக்கங்களும் நிறைந்ததாக இருக்கும். எதிரிகளால் பண இழப்புக்கள் ஏற்படும்.

இதே அமைப்பு நல்ல பார்வை பெறாமல், தீய பார்வைகள் பெற்றிருந்தால், ஜாதகன் மனைவியைப் பறிகொடுக்க நேரிடும். அது அந்த தீய கிரகத்தின் தசா புத்தியில் ஏற்படும். அதே அமைப்போடு சுக்கிரனும் நீசமாகியிருந்தால் ஜாதகன் வறுமையில் உழல்வான். பசிக்கு உணவின்றி பட்டினி கிடக்க நேரிடும்.

---------------------------------------------------------------------------------------------------

3

மூன்றாம் வீட்டில் அமர்ந்திருந்தால்

(That is sixth lord occupying third house in a horoscope)

சகோதரர்கள் மற்றும் சகோதரிகளுடன் பகை ஏற்படும். அல்லது உடன் பிறப்புக்களுக்கு அடிக்கடி நோய் நொடிகளை ஏற்படுத்தும். அதன் பொருட்டு ஜாதகனுக்கு பண இழப்புக்கள் ஏற்படும்.

இதே அமைப்பு நல்ல பார்வை பெறாமல், தீய பார்வைகள் பெற்றிருந்தால், அல்லது இங்கே வந்து அமரும் ஆறாம் அதிபதி நீசமாகியிருந்தால் ஜாதகன் வீட்டின் கடைசி ஆண் குழந்தையாக இருப்பான். ஜாதகியாக இருந்தால் அவளுக்கு அடுத்து அவள் பெற்றோர்களுக்கு ஆண் குழந்தைகள் இருக்காது.

---------------------------------------------------------------------------------------------------

4

நான்காம் வீட்டில் அமர்ந்திருந்தால்

(That is sixth lord occupying fourth house in a horoscope)

ஜாதகன் ஒரு மோசமான வீட்டில் குடியிருப்பான் அல்லது மோசமான சூழலில் அவன் வீடு இருக்கும். கல்வி தடைப்பட்டுவிடும். ஜாதகன் தன் அன்னையைக்

கைவிட்டுவிடுவான். தாய் மாமாக்கள் பெரும்பாலும் விவசாயிகளாக இருப்பார்கள்

இதே அமைப்பு நல்ல பார்வை பெறாமல், தீய பார்வைகள் பெற்றிருந்தால்,
பெற்ற தாயுடனான உறவு தர்க்கங்களால், சண்டைகளால் சீர்கெட்டு இருக்கும்.
முன்னோர் சொத்துக்கள் கடனில் மூழ்கியிருக்கும். துக்கமான வாழ்க்கை நடத்திக்
கொண்டிருப்பான். குடும்ப வாழ்க்கையில் சுகம் இருக்காது.

---------------------------------------------------------------------------------------------------
5
ஐந்தாம் வீட்டில் அமர்ந்திருந்தால்
(That is sixth lord occupying fifth house in a horoscope)

நோயுற்ற சேய்களை உடையவனாக இருப்பான். தாயார் மூலம் மாமா வழிச்
சொத்துக்கள் கிடைக்கும்.
இதே அமைப்பு நல்ல பார்வை பெறாமல், தீய பார்வைகள் பெற்றிருந்தால்,
மனப் போராட்டம் உடையவனாக இருப்பான்.

---------------------------------------------------------------------------------------------------
6
ஆறாம் வீட்டிலேயே அமர்ந்திருந்தால்
(That is sixth lord occupying his own house in a horoscope)
தாய் வழியில் அல்லது தாய் உறவில் அதிகமான சகோதர பந்தங்களை
உடையவனாக இருப்பான். தாய் மாமா புகழ் பெற்றவராக இருப்பார்.

இந்த வீட்டில் ஆறாம் அதிபதியுடன் லக்கின நாதனும் வந்து அமர்ந்திருந்தால்
ஜாதகன் தீராத நோயொன்று ஏற்பட்டு அவதிப்பட நேரிடும். நெருங்கிய
உறவுகளுடன் பகை ஏற்படும்.

---------------------------------------------------------------------------------------------------
7
ஏழாம் வீட்டில் அமர்ந்திருந்தால்
(That is sixth lord occupying seventh house in a horoscope)
இந்த அமைப்புள்ள ஜாதகன் தாய்வழி மாமா மகளையோ அல்லது தந்தை
வழி அத்தை மகளையோ திருமணம் செய்துகொள்வான்.
இதே அமைப்பு நல்ல பார்வை பெறாமல், தீய பார்வைகள் பெற்றிருந்தால்,
ஜாதகன் விவாகரத்துப் பெற்றவனாக இருப்பான்.அல்லது மனைவி இளம்
வயதிலேயே இறந்து போயிருப்பாள். பெண்ணாக இருந்தாலும் இதே பலன்தான்

நவாம்சமும் கெட்டிருந்தால் (ஏழாம் வீடு)ஜாதகனின் மனைவி நோயுற்றவளாக
அழகிழந்தவளாக இருப்பாள். இதே வீட்டில் ஆறாம் அதிபதியுடன் லக்கின
அதிபதியும் கூட்டணி சேர்ந்தால், ஜாதகன் ஆண்மைக் குறைபாடுகள்
உடையவனாக இருப்பான். தீயபெண்களின் சகவாசத்தால் அடிக்கடி
தொல்லைகளுக்கு ஆளாகுபவனாக இருப்பான்.

------------------------------------------------------------------------------------------------------------
8
எட்டாம் வீட்டில் அமர்ந்திருந்தால்
(That is sixth lord occupying eigth house in a horoscope)

ஜாதகன் மத்திம ஆயுள் உடையவனாக இருப்பான்.

(He will die in the middle age). இது பொது விதி!
ஜாதகத்தின் வேறு அமைப்புக்களால் இதற்கு விதிவிலக்கும் உண்டு!

இதே அமைப்பு நல்ல பார்வை பெறாமல், தீய பார்வைகள் பெற்றிருந்தால், அளவற்ற கடன்களால் அல்லது தீராத மர்ம நோய்களால் அவதிப் படுபவனாக இருப்பான். பெண் வேட்டையில் ஈடுபடுபவனாக இருப்பான். மற்றவர்களை இம்சைப் படுத்தி மகிழ்பவனாக இருப்பான்.

---

9
ஒன்பதாம் வீட்டில் அமர்ந்திருந்தால்
(That is sixth lord occupying ninth house in a horoscope)

நல்ல கிரகத்தின் பார்வை பெற்று அமர்ந்திருந்தால், ஜாதகனின் தந்தை நீதித்துறை யில் பணியாற்றுபவராக இருப்பார். தாய் வழி உறவுகள் நல்ல நிலைமையில் இருப்பார்கள்.

இதே அமைப்பு நல்ல பார்வை பெறாமல், தீய பார்வைகள் பெற்றிருந்தால், தந்தையுடன் சச்சரவுகள் ஏற்பட்டு சுமூகமான உறவு இருக்காது.
வாழ்க்கை வறுமை மற்றும் பாவச் செயல்கள் நிறைந்ததாக இருக்கும்.
உறவினர்களால் தீமைகள் ஏற்படும். நன்றி கெட்ட செயல்களைச் செய்ய நேரிடும். அறவழிகளுக்கு எதிரான செயல்களைச் செய்ய நேரிடும்

---

10
பத்தாம் வீட்டில் அமர்ந்திருந்தால்
(That is sixth lord occupying tenth house in a horoscope)

பாவச் செயல்கள், தீய செயல்களைச் செய்ய நேரிடும் அல்லது தொழிலாகக் கொள்ள நேரிடும். இறையுணர்வாளர்கள் போல இருப்பார்கள். ஆனால் கேவலமான வேலைகளில் மறைமுகமாக ஈடுபடுவார்கள். சிலர் போலிச் சாமியார்களாக இருப்பார்கள்.

இதே அமைப்பு நல்ல பார்வை பெறாமல், தீய பார்வைகள் பெற்றிருந்தால், மற்றவர்களைப் பயப்படுத்தக்கூடிய வேலைகளைச் செய்வார்கள். தானும் பயப்படக்கூடிய விரோதிகளைப் பெற்றிருப்பார்கள்.கீழ்த்தரமான வேலைகளைச் செய்வார்கள். கீழான வாழ்க்கை வாழ நேரிடும்.

---

11
பதினொன்றாம் வீட்டில் அமர்ந்திருந்தால்
(That is sixth lord occupying eleventh house in a horoscope)

மூத்த சகோதரன் நீதித்துறையில் பணிபுரிவார். அல்லது அதற்கு ஈடான புகழுடன் வாழ்வார். அவரால் ஜாதகன் பல ஆதாயங்களைப் பெறுவார்.

இதே அமைப்பு நல்ல பார்வை பெறாமல், தீய பார்வைகள் பெற்றிருந்தால், ஏழ்மை தாண்டவம் ஆடும். மோசமான சூழலில் வாழ நேரிடும். அடிக்கடி சட்டச் சிக்கலில் மாட்டிக் கொண்டு தண்டனை பெறவும் நேரிடும்

---

12
பன்னிரெண்டாம் வீட்டில் அமர்ந்திருந்தால்
(That is sixth lord occupying twelth house in a horoscope)

வாழ்க்கை தொல்லைகளும் துயரங்களும் நிறைந்ததாக இருக்கும். ஜாதகனால் மற்றவர்களுக்கு இடைஞ்சல்கள் ஏற்படும்.

இதே அமைப்பு நல்ல பார்வை பெறாமல், தீய பார்வைகள் பெற்றிருந்தால், வாழ்க்கை அவலமாகவும், கடினமாகவும் இருக்கும்

---

ஆறாம் வீடு

இப்பொழுது நாம் ஆறாம் வீட்டை பற்றி பார்க்கலாம். ஆறாம் வீடு சத்ருஸ்தானம் ரோக ஸ்தானம் ஆகும். கடன், வியாதி பகைவர்களின் தொல்லை, சிறைபடுதல், விரோதங்கள், விஷபீடைகள், திருட்டுப்போதல் ஆகியவற்றைப் பற்றி ஆறாம் வீட்டின் மூலம் நாம் அறியலாம்.

இப்பொழுது ஆறாம் வீட்டு அதிபதி ஒவ்வொரு வீட்டில் இருந்தால் என்ன பலன் என்று பார்க்கலாம்.

ஆறாம் வீட்டு அதிபதி 1 ஆம் வீட்டில் இருந்தால் சதா வியாதிகளும் நோய் நொடிகளும் இருக்கும் தைரியமில்லாதவராகவும் எதிரிகளால் தொல்லை இருந்துகொண்டே இருக்கும்.

ஆறாம் வீட்டு அதிபதி 2 ஆம் வீட்டில் இருந்தால் வாக்குவன்மை இருக்காது நல்ல பேச்சு இருக்காது. அதிகமாக கடன்களை வாங்கி செலவு செய்வார்கள். கல்வி வராது. கண் கோளாறு இருக்கும்.

ஆறாம் வீட்டு அதிபதி 3 ஆம் வீட்டில் இருந்தால் சகோதர சகோதரிகள் விரோதிகளாக இருப்பார்கள். குடும்பத்தில் ஒற்றுமை இருக்காது.

ஆறாம் வீட்டு அதிபதி 4 ஆம் வீட்டில் இருந்தால் தாயாருடைய உடல் நலம் பாதிக்கப்படும் நிலம் வீடுகள் இருந்தாலும் வருமானம் இருக்காது. கடன்களால் அந்த சொத்துக்களை விற்க வேண்டிய நிலை ஏற்படும்.

ஆறாம் வீட்டு அதிபதி 5 ஆம் வீட்டில் இருந்தால் புத்திரதோஷம் ஏற்படும். கடன் தொல்லைகள் அதிகமாகும் எல்லோரும் சண்டை செய்பவராகவும் இருப்பார்கள் சிறைவாசம் வறுமை ஆகியவற்றை அனுபவகிக்க வேண்டும். பிறரை ஏமாற்றி பிழைப்பை நடத்துவார்கள்.

ஆறாம் வீட்டு அதிபதி 6 ஆம் வீட்டில் இருந்தால் கடன் தொல்லை படுத்தி எடுத்துவிடும். சுபகிரகங்கள் பார்வை ஏற்படின் எதிரி மூலம் சம்பாத்தியம் இருக்கும்.

ஆறாம் வீட்டு அதிபதி 7 ஆம் வீட்டில் இருந்தால் இல்லற வாழ்க்கை கசக்கும்.

இருவருக்கும் விவாகரத்துவரை கொண்டுவிடும். மனம் அமைதி இருக்காது.

ஆறாம் வீட்டு அதிபதி 8 ஆம் வீட்டில் இருந்தால் எட்டாம் வீட்டில் வறுமைகள் நிறைந்து காணப்படும். குடும்பத்தில் உள்ள பொருட்களை விற்று குடும்பம் நடத்தவேண்டி வரும்.

ஆறாம் வீட்டு அதிபதி 9 ஆம் வீட்டில் இருந்தால் தந்தை வழி சொத்து நாசமாகும். பிறர் ஏமாற்றி விடுவார்கள். பாபகாரியங்கள் செய்ய அஞ்சமாட்டார்கள். பெரியவர்களுடன் சண்டை ஏற்படும்.

ஆறாம் வீட்டு அதிபதி 10 ஆம் வீட்டில் இருந்தால் அவன் சம்பாதிக்கும் வழி திருட்டுதனமாக இருக்கும். பிறர் பொருளையே நம்பி இருப்பான். ஊர் சுற்றி திரிவான். மக்கள் மனதில் அயோக்கியன் என்று பெயர் எடுப்பான். சுபகிரகம் பார்வை ஏற்படின் அனைத்திலும் வெற்றி பெருவான்.

ஆறாம் வீட்டு அதிபதி 11 ஆம் வீட்டில் இருந்தால் மூத்த சகோதர்கள் வியாதியுடன் இருப்பார்கள் கடன் இருக்கும். சிலபேருக்கு விரோதிகள் மூலம் லாபம் இருக்கும்.

ஆறாம் வீட்டு அதிபதி 12 ஆம் வீட்டில் இருந்தால் எதிரிகளால் அடிக்கடி இடமாற்றம் ஏற்படும. அனாவசியமான செலவு இருக்கும. குறியில் நோய் ஏற்படும்.

---

ஏழாம் வீடு

ஏழாம் வீட்டைப்பற்றி இப்பொழுது பார்க்கலாம். ஏழாம் வீட்டின் கிரக குணங்களை கொண்டு எப்படி பட்ட கணவன் அல்லது மனைவி வருவாள் என்று கூறலாம். ஆசை சொத்துக்கள் சேர்க்கை , மரணம் ஆகியவற்றை கூறலாம்.

இப்பொழுது ஏழாம் வீட்டின் அதிபதி ஒவ்வொரு வீட்டின் இருந்தால் என்ன பலன் என்று பார்க்கலாம்.

ஏழாம் வீட்டு அதிபதி லக்கினத்தில் இருந்தால் அவன் கவர்ச்சி கொண்டவனாக இருப்பான். அவனிடம் பெண்கள் அன்பு வைத்து இருப்பார்கள் பாபகாரியகள் அறியாது காமகாரியங்கள் செய்வான். இவர்களுக்கு மனைவியின் மூலம் வருமானம் இருக்கும்.

ஏழாவது வீட்டின் கிரகம் இரண்டாம் வீட்டில் இருந்தால் மனைவியின் மூலம் சொத்துக்கள் வரும். மனைவியின் மூலம் சம்பாத்தியம் இருக்கும். மனைவியின் மூலமும் உறவினர்கள் மூலமும் உதவி இருக்கும்.

ஏழாம் வீட்டு கிரகம் மூன்றாம் வீட்டில் இருந்தால் களத்திரதோஷம் மனைவிக்கு மாரகம் ஏற்பட்டு மறு விவாகம் செய்துக்கொள்ளவும் கூடும். அதைப்போல் அதிகமாக காமமோ பற்று இருக்காது.

ஏழாம் வீட்டு கிரகம் நான்காம் வீட்டில் இருந்தால் அமர்ந்திருந்தால் எதிர்பார்க்கும் இன்பத்தை அடைவான். குடும்பத்தை நடத்தும் பொறுப்பையும் யோக்கியத்தை

அம்சங்களையும் அவனுக்கு வரும் மனைவி பெற்று இருப்பாள்.

ஏழாம் வீட்டு கிரகம் ஐந்தாம் வீட்டில் இருந்தால் அவருக்கு களத்திர தோஷம் பெற்றவனா இருப்பான் சினிமா போன்றவற்றில் ஈடுபாடு இருப்பான். காதல் மணம் முடிப்பான் ஆனால் திருமணவாழ்க்கை நன்றாக இருக்காது.

ஏழாம் வீட்டு கிரகம் ஆறாம் வீட்டில் இருந்தால் மனைவி வியாதிகள் கொண்டவளாக இருப்பாள். கணவனக்காக எதிராக கலகங்கள் விரோதங்கள் செய்வாள் மனைவியினால் ஆதரவு இருக்காது.

ஏழாம் வீட்டு கிரகம் ஏழாவது வீட்டில் இருந்தால் ஜhதகன் மனைவியின் வீட்டில் அடிமையாக இருப்பான் மனைவியின் செல்வாக்கு அதிகமாக இருக்கும்.

ஏழாம் வீட்டு கிரகம் எட்டாவது வீட்டில் இருந்தால் அவனக்கு வரும் மனைவியினால் அவன் கஷ்டங்களை வறுமைகளை அனுபவிப்பான். குடும்பத்தை ஒழுங்காக நடத்தும் பொறுப்பு அற்றவளாகவும் வீனான ஆசை கொண்டவளாகவும் வருமான குறைவுடனும் இருப்பாள்.

ஏழாம் வீட்டு கிரகம் ஒன்பதாம் வீட்டில் இருந்தால் பெரியவர்களின் அனுக்கிரக்தாலும் பூர்வ புண்ணியத்தாலும் சிறு வயதில் திருமணம் நடைபெறும். குடும்பம் ஒற்றுமையுடன் இருக்கும்.

ஏழாம் வீட்டு கிரகம் பத்தாவது வீட்டில் இருந்தால் வரும் மனைவியால் சம்பாத்தியம் இருக்கும். சொத்துக்களும் நகைகளும் சேரும்.

ஏழாம் வீட்டு கிரகம் பதினோராவது வீட்டில் இருந்தால் நல்ல செல்வத்துடன் சொத்துகளுடனும் மனைவி வருவாள். மனைவியினால் அந்தஸ்துடன் மனைவி வருவாள். மனைவியினால் கணவனின் அந்தஸ்து உயரும்.

ஏழாம் வீட்டு கிரகம் பன்னிரேண்டாம் வீட்டில் அமர்ந்தால் மனைவியினால் அதிகமான தன சேதங்கள் ஏற்படும். மனைவி இன்ப வாழ்க்கை வாழ ஆசைபடுவாழ். கடன்கள் வாங்கியும் சொத்துக்கள் விற்றும் குடும்பத்தை நடத்த வேண்டி இருக்கும்.

------------------------------------

எட்டாம் அதிபதி

1. எட்டாம் அதிபதி லக்கினத்தில் இருந்தால்: கடன், பணக்கஷ்டங்கள் நிறைந்த வாழ்க்கை அமையும். அதுவும் இங்கே வந்தமரும் கிரகத்துடன் லக்கினாதிபதியும் சேர்ந்திருந்தால். கடனிலேயே வாழ வேண்டும். ஜாதகனுக்கு வியாதிகள், கடன் தொல்லை, வறுமை கூடவே இருக்கும் எல்லா நிலைகளிலும் துரதிர்ஷ்டம் தொடர்ந்து வரும். எட்டாம் அதிபதி பலமின்றி இருந்தால் இந்த நிலை மாறும். உதாரணமாக எட்டாம் அதிபதி நவாம்ச லக்கினத்தில் 6, 8, 12ஆம் வீடுகளில் அமர்ந்திருப்பது போன்ற பலமில்லாத நிலைமை. நீசமாக இருக்கும் நிலைமை! உடல் உபாதைகள் இருக்கும். வீட்டிலும், வெளியிலும், வேலை பார்க்கும் இடங்களிலும் மற்றவர்களின் மதிப்பை, உரிய

மரியாதையைப் பெற முடியாது. இந்த இடத்தில் வந்தமரும் எட்டாம் அதிபதி சுபக்கிரகத்தின் பார்வை பெற்றால், ஜாதகனுக்குத் தீர்க்கமான ஆயுள் உண்டு. சிரமங்களும், கவலைகளும் கணிசமாகக் குறைந்துவிடும். இதற்கு நேர் மாறாக இந்த இடத்தில் வந்தமரும் எட்டாம் அதிபதி தீயகிரகத்தின் பார்வையைப் பெற்றால், ஜாதகன் வறுமையில் வாழ நேரிடும். வியாதிகள் கூடிக் கொல்லும். அடிக்கடி விழுந்து எழுந்திரிப்பான். விபத்துக்கள் நேரிடும்.

2. எட்டாம் அதிபதி லக்கினத்திற்கு இரண்டில் இருந்தால்: கண் மற்றும் பல் உபாதைகள் இருக்கும் இந்த இடத்தில் வந்தமரும் எட்டாம் அதிபதி இரண்டாம் வீட்டுக்காரனுடன் சேர்ந்திருந்தால், எல்லாவிதமான உபத்திரவங்களும் இருக்கும். சாப்பிடும் உணவுகளிலும் சுவை இருக்காது. கிடைத்ததை உண்ணும் வாழ்க்கை அமையும். ஜாதகனின் வாக்கில் நாணயம் இருக்காது. பேசுவது எல்லாம் பொய்யாகிப் போகும். எல்லோருடனும்/எதற்கெடுத்தாலும் தர்க்கம், வாதம் செய்பவனாக இருப்பான் அவனுடைய குடும்ப வாழ்க்கை ஏற்றமுடையதாக, சந்தோஷமுடையதாக இருக்காது. அவனைப் புரிந்து கொள்ளாத மனைவி அமைவாள். அவளுடன் தினமும் சண்டை, சச்சரவுகள் நிறைந்ததாக வாழ்க்கை அமையும் சிலருக்கு, மனைவியை பிரிந்து வாழும் வாழ்க்கை அமைந்துவிடும். சிலருக்கு ஆயுள் பூரணமாக இருந்தாலும், நோயும் பூரணமாகவே இருக்கும். செல்வந்தர் குடும்பத்தில் பிறந்தவனாக இருந்தாலும், தான்தோன்றித் தனமாக அத்தனை செல்வத்தையும் செலவு செய்து அழித்துவிடுவான். உடல் நலம் இருக்காது. மொத்தத்தில் பைத்தியக்காரனைப்போல வாழ்க்கையை நடத்துவான். இந்த இடத்தில் வந்தமரும் எட்டாம் அதிபதி சுபக்கிரகத்தின் பார்வை பெற்றால், மேற்சொன்ன கேடுகள் வெகுவாகக் குறைந்துவிடும்

3. எட்டாம் அதிபதி லக்கினத்திற்கு மூன்றில் இருந்தால்: உடன்பிறப்புக்களுடன் ஒற்றுமை இருக்காது. உடன் பிறப்புக்கள் என்றால் கட்சிக்காரர்கள் இல்லை. கூடப்பிறந்த சகோதரர்கள், சகோதரிகள் என்று பொருள் கொள்ளவும். மன தைரியம் இருக்காது. மனதில் ஒருவித பயம் இருந்துகொண்டே இருக்கும். சிலருக்கு கேட்கும் சக்தி குறைந்துவிடும். ஏன் சமயத்தில் காது கேட்காத சூழ்நிலைகூட உண்டாகும் முன்னோர்கள் கொடுத்துவிட்டுப்போன சொத்துக்கள் பலவழிகளில் நாசமாகும். இந்த இடத்தில் வந்தமரும் எட்டாம் அதிபதி மூன்றாம் வீட்டுக்காரனுடன் சேர்ந்திருந்தாலும், அல்லது தீய கிரகத்தின் பார்வையைப்பெற்றிருந்தாலும், மேலே குறிப்பிட்டுள்ள துயரங்கள், தாங்க முடியாத அளவிற்கு இருக்கும் இந்த இடத்தில் வந்தமரும் எட்டாம் அதிபதி சுபக்கிரகத்தின் பார்வை பெற்றால், மேற்சொன்ன கேடுகள் வெகுவாகக் குறைந்துவிடும்

4. எட்டாம் அதிபதி லக்கினத்திற்கு நான்கில் இருந்தால்: தாயுடனான உறவு சுமூகமாக இருக்காது. சிலருக்குத் தாய்ப்பாசம் கிடைக்காது. தாய்வழி உறவுகளின் மகிழ்ச்சியும் இருக்காது. குடும்ப வாழ்வில் சுகம் இருக்காது. தொல்லைகளே மிகுந்திருக்கும் சொத்துக்கள் கையை விட்டுப்போகும். சம்பாத்தியத்திலும் ஒன்றும் மிஞ்சி, சுகத்தைத் தராது. வாகனங்கள் விபத்தில் சிக்கி செலவையே அதிகமாகக் கொடுக்கும். நஷ்டங்களையே கொடுக்கும் மொத்தத்தில் சுகக்குறைவு. இந்த இடத்தில் வந்தமரும் எட்டாம் அதிபதி நான்காம் வீட்டுக்காரனுடன் சேர்ந்திருந்தால், பல சுகங்கள் சொல்லிக்கொள்ளாமல் போய்விடும். தாயின் உடல் சுகவீனமடைந்து, ஜாதகனின் மன அமைதியைக் கெடுக்கும். ஜாதகனின் வீடு, மற்றும் வாகனங்களினால் ஏற்படும் சுமைகள்,

தொல்லைகள் அதிகரிக்கும். சிலர் தங்கள் சொத்து, சுகங்களை, வீடு, வாகனங்களைப் பறி கொடுக்க நேரிடும். இந்த இடத்தில் வந்தமரும் எட்டாம் அதிபதி சுபக்கிரகத்தின் பார்வை பெற்றால், மேற்சொன்ன கேடுகள் வெகுவாகக் குறைந்துவிடும்.

5. எட்டாம் அதிபதி லக்கினத்திற்கு ஐந்தில் இருந்தால்: பெற்ற பிள்ளைகளால் மன அமைதி போய்விடும். மனதில் சஞ்சலங்கள் மிகுந்திருக்கும். சொந்தங்களுடன் விரோதப்போக்கு நிலவும். அலைச்சல் மிகுந்திருக்கும். மனதில் கலவரமும் அடிக்கடி தோன்றி மறையும் எண்ணப்படி எக்காரியத்தையும் நிறைவுடன் செய்து முடிக்க முடியாது. இந்த இடத்தில் வந்தமரும் எட்டாம் அதிபதி ஐந்தாம் வீட்டுக்காரனுடன் சேர்ந்திருந்தால், ஜாதகனால், ஜாதகனின் பிள்ளைகளுக்குக் கேடு உண்டாகும். அதே போல ஜாதகனின் குழந்தைகளும் தகாத செயல்களில் ஈடுபட்டு, ஜாதகனின் மதிப்பு, மரியாதைக்கு வேட்டு வைத்துவிடுவார்கள். அதாவது குண்டு வைத்துவிடுவார்கள். சிலருக்கு, தங்கள் தந்தையுடன், ஒற்றுமை இருக்காது. புரியாத சர்ச்சைகள் நிலவும். இந்த சேர்க்கை, தீய கிரகத்தின் அதீத பார்வையைப் பெற்றிருந்தால், சிலர் தங்கள் குழந்தைகளை, அது பிறந்த இரண்டொரு வருடங்களிலேயே பறி கொடுத்து விட்டுத் தவிக்க நேரிடும். இது மனதிற்கும் தொடர்புடைய இடமாதலால், சிலர் மனஅமைதியை இழந்து மன நோயாளியைப் போல திரிய நேரிடும். இந்த இடத்தில் வந்தமரும் எட்டாம் அதிபதி சுபக்கிரகத்தின் பார்வை பெற்றால், மேற்சொன்ன கேடுகள் வெகுவாகக் குறைந்துவிடும்

6. எட்டாம் அதிபதி லக்கினத்திற்கு ஆறில் இருந்தால்: அற்ப ஆயுள்-(sub-sub test onlty) உடல் ஸ்திரமாக இருக்காது. ஜாதகன் மெலிந்து இருப்பான். பலவிதமான நோய்கள் வந்து குடி கொள்ளும் தீய எண்ணங்கள் மிகுந்திருக்கும் ஒரே ஒரு ஆறுதல், ஜாதகன் பகைவர்களை வெல்லக்கூடியவனாக இருப்பான். சிலருக்குப் புத்திர பாக்கியம் அவுட்டாகி விடும். அதாவது இல்லாமல் போய்விடும். சிலர் தத்துப்புத்திரனுடன் வாழ நேரிடும். இந்த இடத்தில் வந்தமரும் எட்டாம் அதிபதி சுபக்கிரகத்தின் பார்வை பெற்றால், மேற்சொன்ன கேடுகள் வெகுவாகக் குறைந்துவிடும்

7. எட்டாம் அதிபதி லக்கினத்திற்கு ஏழில் இருந்தால்: பூரண ஆயுள் உண்டு. மனைவியின் மேல் பிரியம் இருக்காது. பெண்ணாக இருந்தால் கணவனின் மேல் பிரியமாக இருக்க மாட்டாள். இருவரின் உறவிலும் ஒரு ஈர்ப்பு இருக்காது. நெருக்கம் இருக்காது. சிலர் பெண் சகவாசத்தால் பொன், பொருளை இழக்க நேரிடும் சிலர் தகாத பெண்களின் சிநேகத்தால், அவமானப்பட நேரிடும் இந்த இடத்தில் வந்தமரும் எட்டாம் அதிபதி சுபக்கிரகத்தின் பார்வை பெற்றால், மேற்சொன்ன கேடுகள் வெகுவாகக் குறைந்துவிடும் இந்த இடத்தில் வந்தமரும் எட்டாம் அதிபதி ஏழாம் வீட்டுக்காரனுடன் சேர்ந்திருந்தால், ஜாதகனுக்கு ஆயுள் குறையும். ஜாதகனின் மனைவி நோய்களால் பாதிக்கப்பெற்று ஜாதகனைப் படுத்தி எடுப்பாள். மேலும் இந்த அமைப்பு தீய கிரகத்தின் பார்வை பெற்றால், ஜாதகனும் நோய் நொடிகளால் பாதிக்கப்படுவான். ஜாதகனுக்கு வெளிநாடு சென்று பணியாற்றும் வாய்ப்புக் கிடைக்கும். ஆனாலும், அதன் மூலம் அவன் பல பிரச்சினைகளை அங்கே சந்திக்க நேரிடும். இந்த அமைப்பு (8th & 7th lords association) ஒரு வலுவான சுபக்கிரகத்திப் பார்வையைப் பெற்றால், ஜாதகனுக்கு வெளி நாடுகளுக்குத் தூதரக அதிகாரியாகச் சென்று பணியாற்றும் வாய்ப்புக் கிடைக்கும்,. மதிப்பும், மரியாதையும் மிக்கவனாகத் திகழ்வான்.

8. எட்டாம் அதிபதி லக்கினத்திற்கு எட்டில் இருந்தால்: ஜாதகனுக்கு தீர்க்கமான ஆயுள்

உண்டு! வலுவாக இருந்தால், ஜாதகனுக்குத் தீர்க்கமான ஆயுள். மகிழ்ச்சியான வாழ்க்கை அமையும். இடம், வீடு, வாகனம் சொத்துக்கள் என்று எல்லாவகையான செல்வமும் சேரும். அதிகாரம், பட்டம், பதவிகள் என்று வாழ்க்கை அசத்தலாக இருக்கும் எட்டாம் அதிபதி எட்டில் இருக்கும்போது உள்ள நிலைப்பாடு: மேஷ லக்கினத்திற்கு எட்டாம் வீடு விருச்சிகம் அதன் அதிபதி செவ்வாய்க்கு இங்கே ஒரே நிலை ஆட்சி பலம் இருக்கும்.ஆனால் சேர்க்கை அல்லது பார்வையால் அவர் வலு இழக்கலாம். ரிஷப லக்கினத்திற்கு எட்டாம் வீடு தனுசு. அதன் அதிபதி குருவிற்கு இங்கே ஒரே நிலை ஆட்சி பலம் இருக்கும். ஆனால் சேர்க்கை அல்லது பார்வையால் அவர் வலு இழக்கலாம். மிதுன லக்கினத்திற்கு எட்டாம் வீடு மகரம். அதன் அதிபதி சனிக்கு இங்கே ஒரே நிலை ஆட்சி பலம் இருக்கும். ஆனால் சேர்க்கை அல்லது பார்வையால் அவர் வலு இழக்கலாம கடக லக்கினத்திற்கு எட்டாம் வீடு கும்பம். அதன் அதிபதி சனிக்கு இங்கே ஒரே நிலை ஆட்சி பலம் இருக்கும். ஆனால் சேர்க்கை அல்லது பார்வையால் அவர் வலு இழக்கலாம். சிம்ம லக்கினத்திற்கு எட்டாம் வீடு மீனம். அதன் அதிபதி குருவிற்கு இங்கே ஒரே நிலை ஆட்சி பலம் இருக்கும். ஆனால் சேர்க்கை அல்லது பார்வையால் அவர் வலு இழக்கலாம். கன்னி லக்கினத்திற்கு எட்டாம் வீடு மேஷம். அதன் அதிபதி செவ்வாய்க்கு இங்கே ஒரே நிலை ஆட்சி பலம் இருக்கும். ஆனால் சேர்க்கை அல்லது பார்வையால் அவர் வலு இழக்கலாம். துலா மிதுன லக்கினத்திற்கு எட்டாம் வீடு ரிஷபம். அதன் அதிபதி சுக்கிரன் இங்கே ஒரே நிலை ஆட்சி பலம் இருக்கும். ஆனால் சேர்க்கை அல்லது பார்வையால் அவர் வலு இழக்கலாம். விருச்சிக லக்கினத்திற்கு எட்டாம் வீடு மிதுனம். அதன் அதிபதி புதனுக்கு இங்கே ஒரே நிலை ஆட்சி பலம் இருக்கும். ஆனால் சேர்க்கை அல்லது பார்வையால் அவர் வலு இழக்கலாம். தனுசு லக்கினத்திற்கு எட்டாம் வீடு கடகம். அதன் அதிபதி சந்திரனுக்கு இங்கே ஒரே நிலை ஆட்சி பலம் இருக்கும். ஆனால் சேர்க்கை அல்லது பார்வையால் அவர் வலு இழக்கலாம். மகர லக்கினத்திற்கு எட்டாம் வீடு சிம்மம். அதன் அதிபதி சூரியனுக்கு இங்கே ஒரே நிலை ஆட்சி பலம் இருக்கும். ஆனால் சேர்க்கை அல்லது பார்வையால் அவர் வலு இழக்கலாம். கும்ப லக்கினத்திற்கு எட்டாம் வீடு கன்னி. அதன் அதிபதி புதனுக்கு இங்கே ஒரே நிலை உச்ச பலம் இருக்கும். ஆனால் சேர்க்கை அல்லது பார்வையால் அவர் வலு இழக்கலாம். மீன லக்கினத்திற்கு எட்டாம் வீடு துலாம். அதன் அதிபதி சுக்கிரனுக்கு இங்கே ஒரே நிலை ஆட்சி பலம் இருக்கும். ஆனால் சேர்க்கை அல்லது பார்வையால் அவர் வலு இழக்கலாம். எட்டாம் அதிபதி ஆட்சி பலத்துடன் இருந்தால், ஜாதகன் தான் நினைத்ததை, நினைத்த மாத்திரத்திலேயே செய்வான். அதனால், பல நஷ்டங்களை, தீமைகளை அவன் சந்திக்க நேரிடும். எட்டாம் அதிபதி (சேர்க்கை அல்லது பார்வையால்) கெட்டிருந்தால் மேற்சொன்னவற்றிற்கு எதிர்மாறான பலன்கள் கிடைக்கும் சிலரது தந்தை சிக்கலான சூழ்நிலையில் இறந்துவிடுவார். எட்டாம் அதிபதி கெட்டிருந்தால், ஜாதகன் எடுத்துச் செய்யும் முக்கிய செயல்கள் எல்லாம் தோல்வியில் முடியும். தவறான, ஒவ்வாத தொழில்களையே அவன் செய்வதற்குத் தூண்டப்படுவான். அதன்மூலம் கைப்பொருள் அனைத்தையும் இழப்பான். எட்டாம் அதிபதி சுபக்கிரகத்தின் பார்வை பெற்றால், மேற்சொன்ன கேடுகள்இருக்காது. நல்ல பலன்கள் அதிகமாகக் கிடைக்கும்

9. எட்டாம் அதிபதி லக்கினத்திற்கு ஒன்பதில் இருந்தால்: பூர்வீக சொத்துக்கள் கிடைக்காது. கிடைத்தாலும் நாசமாகிவிடும் பிள்ளைகளால் கடன் ஏற்படும். உறவினர்கள்

மற்றும் நண்பர்களுடன் அடிக்கடி கருத்து வேறுபாடுகள் ஏற்படும். அதன் மூலம் மோதல்கள், பிரிவுகள் உண்டாகும். என்னடா வாழ்க்கை என்னும் நிலை ஏற்படும். ஜாதகத்தில் சூரியன் பாதிக்கப்பெற்றிருந்தால் (உங்கள் மொழியில் சொன்னால் கெட்டிருந்தால்) ஜாதகனின் தந்தை ஒன்பதாம் அதிபதியின் தசா/புத்தியில் காலமாவார். இங்கே உள்ள எட்டாம் அதிபதி பலமின்றி இருந்தால், ஜாதகனுக்குத் தன் தந்தையுடன் சுமூக உறவு இருக்காது. ஒருவரை ஒருவர் புரிந்துகொள்ளாத தன்மை நிலவும். இங்கே உள்ள எட்டாம் அதிபதி ஆட்சி அல்லது பார்வை/சேர்க்கை பலத்துடன் இருந்தால், ஜாதகனுக்குப் பூர்வீக சொத்துக்கள் கிடைக்கும். தந்தைவழி உற்வுகளிடையே அவனுக்கு மதிப்பும் மரியாதையும் இருக்கும். இல்லை என்றால் இதற்கு நேர் மாறான பலன்களே கிடைக்கும்!

10. எட்டாம் அதிபதி லக்கினத்திற்கு பத்தில் இருந்தால்: ஜாதகன் ஒரே வேலையில் நிலைத்து இருக்கமாட்டான். அடிக்கடி தன் வேலையை அல்லது தொழிலை மாற்றிக்கொள்வான். சிலர் உறவினர்களிடமும், சக மனிதர்களிடமும், அரசாங்கத்துடனும் கெட்ட பெயரை உண்டாக்கும் வேலைகளைச் செய்துகொண்டிருப்பார்கள். எட்டாம் அதிபதி லக்கினத்திற்குப் பத்தில், அந்த வீட்டுக்காரனுடன் சேர்ந்து இருந்தால், அவனுடைய வேலையில் அல்லது தொழிலில் வேண்டிய அளவு முன்னேற்றம் இருக்காது. தடைகளும், தாமதங்களும் மிகுந்திருக்கும். அதுவும் இந்த அமைப்பு, தீய கிரகத்தின் பார்வை பெற்றிருந்தால், அடிக்கடி வேலை மாற்றம் ஏற்படும். வேலை பார்க்கும் இடங்களிலும் உரிய மரியாதை இருக்காது. அதனால் சிலர் அதர்மவழியில் பொருள் ஈட்ட நேரிடும். அவர்களுடைய எண்ணங்களும் தவறானதாக இருக்கும். செயல்களும் சட்ட திட்டங்களுக்கு எதிரானதாக இருக்கும். சிலர் வருமானம் குறைந்து வறுமையில் உழல நேரிடும். இரண்டாம் வீட்டுக்காரன் பலமின்றி இருப்பதோடு, எட்டாம் வீட்டுக்காரனுடன் கைகோர்த்துப் பத்தில் இருந்தால், ஜாதகனுக்கு அவன் தலைமுடிக்கு மேல் கடன்கள் ஏற்படுவதோடு, கடனைத் திருப்பிக்கொடுக்கமுடியாமல் அவதிப்பட நேரிடும். அவமானப்பட நேரிடும். எட்டாம் வீட்டுக்காரன் பத்தில் இருந்து சுபக்கிரகத்தின் பார்வை பெற்றால், வாழ்க்கை சுகமாக இருக்கும். ஜீவனுமும் ஏற்றமுடையதாக இருக்கும். தீர்க்கமான ஆயுள் இருக்கும். அத்துடன் ஜாதகனுக்கு, திடீர் பொருள் வரவுகள் உண்டாகும். சிலருக்கு அவனுடைய உறவுகள் மரணமடைந்து, அவர்களுடைய செல்வங்கள், சொத்துக்கள் இவனுக்கு வந்து சேரும்.

11. எட்டாம் அதிபதி லக்கினத்திற்கு பதினொன்றில் இருந்தால்: மூத்த சகோதரர்கள், சகோதரிகளை இழக்க நேரிடும். நேர்மையான வழியில் இல்லாது, பலவழிகளிலும் ஜாதகன் பொருள் ஈட்டுவான். எட்டாம் அதிபதி லக்கினத்திற்கு பதினொன்றில் பதினொன்றாம் வீட்டுக்காரனுடன் இருந்தால், செய்யும் தொழில்கள் நஷ்டமடையும். பொருளை இழக்க நேரிடும். கடைசியில் கடனாளியாக நேரிடும் இங்கே வந்தமரும் எட்டாம் வீட்டுக்காரன், சுபக்கிரகத்தின் பார்வையைப் பெற்றால், மேற்கூறிய கெடுதல்கள் இருக்காது. உடன் இருப்பவர்கள் கைகொடுப்பார்கள். உதவுவார்கள்.

12. எட்டாம் அதிபதி லக்கினத்திற்கு பன்னிரெண்டில் இருந்தால்: தகாத வழிகளில் சுகபோகங்களை அனுபவிப்பதோடு, செல்வத்தை இழந்து, வாழ்க்கையைக் கழிப்பார்கள். ஊர்சுற்றும் குணம் இருக்கும். மன அமைதி இருக்காது இங்கே வந்தமரும் எட்டாம் அதிபதி தீய கிரகங்களின் பார்வை பெற்றிருந்தால், ஜாதகனுக்கு எதிர்பாராத துன்பங்கள் தொல்லைகள் வந்து சேரும். நண்பர்களைப் பிரிய நேரிடும். எதிர்பாராத செலவுகள்

ஏற்பட்டுக் கைப்பொருள்களை இழக்க நேரிடும். சொத்துக்கள் கரையும். சிலர் தவறான நடவடிக்கைகளில் ஏடுபட்டுப் பிறகு மாட்டிக்கொண்டு துன்பப்படுவார்கள். தவறான நடவடிக்கைகள் என்பது, கடத்தல், பிறரை ஏமாற்றுதல், பெண்ணிடம் வன்புணர்ச்சி செய்தல், கள்ள நோட்டுப் பரிவர்த்தனை போன்ற செயல்கள் என்று பொருள் கொள்க எட்டாம் அதிபதி இங்கே வந்து அதாவது பன்னிரேண்டில் அமர்ந்து, பன்னிரெண்டாம் வீட்டுக்காரன் திரிகோண வாழ்வு பெற்றால், ஜாதகன் ஆன்மிக வழியில் சென்று, பெரும் செல்வம் மற்றும் புகழை ஏற்படுத்திக்கொள்வான். எட்டாம் அதிபதி பன்னிரெண்டாம் வீட்டில் பன்னிரெண்டாம் வீட்டுக்காரனுடன் இருந்தால், இருவரும் சேர்ந்து ஜாதகனுக்கு ராஜயோகத்தைக் கொடுப்பார்கள். ஜாதகன் அரசனைப்போல வாழ்வான்

---

எட்டாம் வீடு

எட்டாவது வீட்டைக்கொண்டு ஆயுளை நிர்ணயிக்க வேண்டும். எட்டாவது வீடு மறைவு ஸ்தானம் என்று அழைக்கப்படுகிறது. ஒருவருக்கு மரணம் இயற்கையானதாக வருமா அல்லது துர்மரணமா என்று பார்பதற்க்கும் எட்டாம் வீட்டை வைத்துதான் பார்க்கவேண்டும். ஒருவரின் துன்பங்கள் தடைகள் தோல்விகள் வாழ்க்கையில் படபோகிற கஷ்டங்கள் ஆகியவற்றையும் எட்டாம் வீட்டை வைத்து சொல்லலாம்.மூதாயர்களின் சொத்து உயில்கள் இன்ஷீரன்ஸ். பிராவிடண்ட் பண்டு ஆகியவற்றையும் எட்டாம் வீட்டைக்கொண்டே பார்க்க வேண்டும். பெண்களுக்கு எட்டாம் வீடு மிகவும் முக்கியம் அவர்களின் மாங்கல்ய பாக்கியம் எட்டாம் வீட்டை கொண்டே கணிக்க முடியும்.

இப்பொழுது எட்டாம் வீட்டின் அதிபதி ஒவ்வொரு வீட்டிலும் இருந்தால் என்ன பலன் என்று பார்க்கலாம்.

எட்டாம் அதிபதி லக்னத்தில் இருந்தால் அதாவது முதல் வீட்டில் இருந்தால் கடன் வறுமை வியாதிகளுடன் இருப்பான்.

எட்டாம் வீட்டு கிரகம் இரண்டாம் வீட்டில் இருந்தால் வாக்கில் நாணயம் இருக்காது. துர்வார்த்தை உபயோகிப்பார்கள் குடும்பத்தில் சந்தோஷம் இருக்காது. உடல் பலம் குறைந்து காணப்படும். பைத்தியம் பிடித்தவன் போல் இருப்பார்கள்.

எட்டாம் வீட்டு கிரகம் 3ம் வீட்டில் இருந்தால் சகோதரர்கள் ஒற்றுமை இருக்காது. தைர்யம் குறைந்து காணப்படும். மனதில் ஒரு வித பயம் இருந்து கொண்டே இருக்கும். பெரியவர்களால் சேர்த்துவைக்கப்பட்ட சொத்துக்கள் பலவிதங்களில் நாசமாகும்.

எட்டாம் வீட்டு கிரகம் 4ம் வீட்டில் இருந்தால் தாயாரும் தாய்வழிமாமன் முதலானவர்களின் ஆதரவு இருக்காது. குடும்பத்தில் சதா சச்சரவுகள் தோன்றும். சிரமாக குடும்பத்தை நடத்தவேண்டி வரும். முன்னோர்களின் சொத்துக்கள் அழியும்.

எட்டாம் வீட்டு கிரகம் 5ம் வீட்டில் இருந்தால் புத்திரர்களால் மன அமைதி இல்லாமலும் சதா பிரச்சினைகளுமாக இருக்கும். உடல் நோய் இருந்து வரும். பிள்ளைகளுடன் விரோதம் இருந்துவரும்.

எட்டாம் வீட்டு கிரகம் 6ம் வீட்டில் இருந்தால் உடல் நலிந்து கெட்ட எண்ணங்கள் கொண்டவனாகவும் தந்திரவானகவும் பகைவர்களை வெல்ல கூடியவனாகவும் இருப்பான்.

எட்டாம் வீட்டு கிரகம் 7ம் வீட்டில் இருந்தால் மனைவியை சதா சண்டை போட்டுக்கொண்டும் மனைவியால் கலகம். மனைவி அற்ப ஆயுள் உள்ளவராகவும் இருப்பார்கள்.

எட்டாம் வீட்டு கிரகம் 8ம் வீட்டில் இருந்தால் கஷ்டப்பட்டு வாழ்க்கையை நடத்துவான் நன்மை தீமை அறியாது நினைத்த மாத்திரத்தில் ஏதாவது செய்துவிட்டு அவமானத்தையும் அலைச்சல்களை அடைவான்.

எட்டாம் வீட்டு கிரகம் 9ம் வீட்டில் இருந்தால் தந்தை சொத்துக்கள் நாசமாகும் பிள்ளைகளால் கடன் ஏற்படும். நண்பர்களிடம் விரோதம் ஏற்படும்.

எட்டாம் வீட்டு கிரகம் 10ம் வீட்டில் இருந்தால் வேலையில் ஒழுங்காக இருக்கமாட்டார்கள். அடிக்கடி வேலையை மாற்றிக்கொண்டே இருப்பார்கள். அரசாங்கத்தில் கெட்ட பெயர் எடுப்பார்கள்.

எட்டாம் வீட்டு கிரகம் 11ம் வீட்டில் இருந்தால் மூத்த சகோதர்கள் சகோதரிகளுக்கு கண்டம் குழந்தைகளால் வருமானம் ஏற்படும்.

எட்டாம் வீட்டு கிரகம் 12ம் வீட்டில் எப்பொழுதும் ஊர் சுற்றும் குணம் ஏற்படும். வண்பு வழக்குகள் ஏற்படும். இன்பசுகம் ஏற்பட்டு கையில் உள்ள பணத்தை இழப்பார்கள்.

---

ஒன்பதாம் அதிபதி ஒன்றாம் வீட்டில் இருந்தால் நன்றாக இருந்தால் நட்பு வீடாக இருந்து நல்ல கிரகங்களின் சேர்க்கை அல்லது பார்வை கிடைத்தால்: நல்ல தந்தை அமைந்திருப்பார். பூர்வீகச் சொத்துக்கள் கிடைக்கும். ஜாதகன் தான தருமங்கள் செய்வான். சாஸ்திரங்கள், புராணங்களில் ஈடுபாடு இருக்கும். சமூகத்தில் பெரிய பதவி அல்லது அந்தஸ்து கிடைக்கும்! தெய்வபக்தி உள்ளவனாக இருப்பான். இறைவனின் அருள் முழுமையாக இருக்கும் தன் தந்தை, பெரியவர்கள், குரு ஆகியோரின் மேல் விசுவாசமுள்ளவனாக இருப்பான். கடந்து வந்த பாதையை ஒரு நாளும் மறக்க மாட்டான். மொத்தத்தில் எப்போதும் எந்தச் சூழ்நிலையிலும் சந்தோஷமாக இருப்பான். உதாரண மனிதனாக இருப்பான். பெண்ணாக இருந்தால் உதாரண மனுஷியாக இருப்பாள். தங்கள் வேலைகளைத் தாங்களே முடிக்கும் வல்லமை பெற்றவர்களாக இருப்பார்கள். ஒன்பதாம் வீட்டுக்காரனும், லக்கினாதிபதியும் இணைந்து, லக்கினத்திலோ அல்லது வேறு நல்ல இடங்களிலோ அமர்ந்திருந்தால் ஜாதகன் மிகுந்த அதிர்ஷ்டசாலியாக இருப்பான். செல்வாக்கும் அந்தஸ்தும் உள்ளவனாக இருப்பான். நன்றாக இல்லாவிட்டால்மேலே சொன்னவற்றிற்கு எதிரான பலன்கள் நடைபெறும் அல்லது கிடைக்கும்.

53. ஒன்பதாம் அதிபதி இரண்டாம் வீட்டில் இருந்தால் நன்றாக இருந்தால் ஜாதகனின்

தந்தை செல்வந்தராகவும், செல்வாக்கு மிகுந்தவராகவும் இருப்பார். தந்தையின் சொத்துக்கள் அப்படியே ஜாதகனுக்குக் கிடைக்கும். அவனும் தன் தந்தையைப்போலவே வசதிகள் உடையவனாகவும் சமுதாயத்தில் செல்வாக்கு உடையவனாகவும் இருப்பான். அவர்கள் குடும்பம் உயர்வான நிலமையில் இருக்கும். நன்றாக இல்லாவிட்டால் பூர்வீகச் சொத்துக்களை இழக்க நேரிடும். அல்லது அழிக்க நேரிடும். அவனுடைய குடும்பம் பல இன்னல்களைச் சந்திக்க நேரிடும்.

54. ஒன்பதாம் அதிபதி மூன்றாம் வீட்டில் இருந்தால் நன்றாக இருந்தால் நன்றாக எழுதக்கூடியவன். நன்றாக மேடைகளில் பேசக்கூடியவன். எழுத்தால் பெரும் பொருளை ஈட்டக்கூடியவன். பேசப்படுபவானக உயர்வான். பூர்வீகச் சொத்துக்கள் கிடைக்காது. அவனே நிறைய சம்பாதிப்பான். சகோதரன், சகோதரிகளின் அன்பும், ஆதரவும் உள்ளவனாக இருப்பான். நன்றாக இல்லாவிட்டால் ஜாதகத்தில் கிரகங்கள் எந்த அளவிற்குக் கெட்டிருக்கிறதோ அந்த அளவிற்குச் சிக்கல்கள் ஏற்படும். வம்பு, வழக்கு, நீதிமன்ற விசாரணைகள் என்று அலைந்து சொத்துக்களை விற்றுக் கடைசியில் ஒன்றும் இல்லாத நிலைக்குத் தள்ளப்படுவான்.

55. ஒன்பதாம் அதிபதி நான்காம் வீட்டில் இருந்தால் நன்றாக பெற்றோர்களின் முழு அன்பையும், ஆதரவையும் பெற்றவனாக இருப்பான். நிலம், வீடு, வண்டி, வாகனம், வேலையாட்கள் என்று அரச வாழ்க்கை வாழ்வான். உறவினர்களின் ஏகோபித்த ஆதரவு இருக்கும் நிலம், பூமி ஆகியவை பிறப்பில் இல்லாவிட்டாலும், ஜாதகன் தன் முயற்சியால் அதாவது ரியல் எஸ்டேட் பிஸினெஸ் செய்து, அவற்றை ஈட்டுவான் அல்லது தேடிப் பிடித்துவிடுவான். மகிழ்ச்சியாக இருப்பான். வாழ்வான். நன்றாக இல்லாவிட்டால் வீட்டு வாழ்க்கை நன்றாக இருக்காது. பல பிரச்சினைகள் தலைவிரித்தாடும். இறுகிய மனம் படைத்த அல்லது அன்பில்லாத தந்தையால் சிறு வயதில் பல இன்னல்களுக்கு ஆளாகியிருப்பான். அல்லது கருத்து வேற்றுமை மிக்க பெற்றோர்களால் சிறு வயது வாழ்க்கை அவலமாக இருந்திருக்கும். ஒன்பதாம் வீட்டுக்காரன், நான்காம் அதிபதி ஆகியோருடன் ராகுவும் வந்து ஒட்டிக்கொண்டிருந்தால், அல்லது அவர்கள் இருவரும் ராகுவின் பார்வை பெற்றிருந்தால், ஜாதகனின் தாய் கணவனைப் பிரிந்து வாழ்பவளாக இருப்பாள் அல்லது விவாகரத்து பெற்றவளாக இருப்பாள்.

56. ஒன்பதாம் அதிபதி ஐந்தாம் வீட்டில் இருந்தால் நன்றாக ஜாதகனின் குழந்தைகள் அம்சமாக இருப்பார்கள். திறமைசாலிகளாகவும், நுண்ணறிவுடையவர்களாகவும் இருந்து ஜாதகனுக்கு நல்ல பெயரை வாங்கிக்கொடுப்பார்கள். ஜாதகன் அரசுப் பணிகளில் இருந்தால், பல உயர்வுகளைப் பெற்றுப் பிரபலமாக வலம் வருவான். எல்லாச் செல்வங்களும் கிடைக்கும். குடும்பம் சிறந்து விளங்கும். ஜாதகனின் தந்தையும் புகழ் பெற்றவராக, செல்வாக்கு உடையவராக இருப்பார். மொத்தத்தில் ஜாதகன் அதிர்ஷ்டகரமான, வெற்றிகளை உடைய, மதிப்புடைய வாழ்க்கை வாழ்வான்.

57. ஒன்பதாம் அதிபதி ஆறாம் வீட்டில் இருந்தால் நன்றாக இருந்தால் ஜாதகன் போராடி, வழக்குத் தொடுத்துதான் தன் தந்தையாரின் சொத்துக்களை அடையமுடியும். நன்றாக இல்லாவிட்டால் தந்தாயின் சொத்துக்களை அடையமுடியாது. அல்லது கிடைக்காது. மேற்கொண்டு தந்தையார் நிலுவையில் வைத்துவிட்டுப்போன கடன்களைத் தன் கைக்காசைக் கொண்டு தீர்க்க வேண்டியதாயிருக்கும். பொதுவாக இந்த இடம் ஒன்பதாம் வீட்டு அதிபதி அமர்வதற்கு ஏற்ற இடமல்ல! எது எப்படி இருந்தாலும் பொது அமைப்பில்

ஜாதகனுடைய தந்தை நோய்களை உடையவாரகவும், பிரச்சினைகளை உடையவராகவும் இருப்பார். அப்படியே சொத்துக்கள் கிடைத்தாலும், பல வழிகளிலும் அவற்றை இழக்க நேரிடும். ஜாதகனுக்கு வயதான காலத்தில் உடல் உபாதைகள் ஏற்படும்!

58. ஒன்பதாம் அதிபதி ஏழாம் வீட்டில் இருந்தால் நன்றாக இருந்தால் அடக்கம், அமைதி, அழகு என்று எல்லாம் அமைந்த மனைவி ஜாதகனுக்குக் கிடைப்பாள். குடும்ப வாழ்க்கை மகிழ்ச்சிகரமாக இருக்கும். தந்தையின் சொத்துக்களாலும், பிற்காலத்தில் தன் பிள்ளைகளின் சம்பாத்தியத்தாலும் ஜாதகனின் வாழ்க்கை மகிழ்ச்சி உள்ளதாக இருக்கும். ஜாதகன் வெளிநாடு சென்று, பெரும் பொருள் ஈட்டுவான். சிலர் அங்கேயேவாழ்வார்கள். நன்றாக இல்லாவிட்டால் ஜாதகனுக்கு வெளி நாட்டு வேலையும், அங்கேயே தங்கும் வாய்ப்பும் கிடைக்கும். ஆனால் மனதில் மகிழ்ச்சி இருக்காது.

59. ஒன்பதாம் அதிபதி எட்டாம் வீட்டில் இருந்தால் நன்றாக இருந்தால் ஜாதகன் தன் தந்தையைச் சிறு வயதிலேயே இழந்திருப்பான். தந்தையின் சொத்துக்களை மற்றவர்கள் அபகரித்திருப்பார்கள். விதிவிலக்காகச் சிலருக்கு மட்டும் போரட்டத்திற்குப் பிறகு தந்தையின் சொத்துக்கள் கிடைக்கும். நன்றாக இல்லாவிட்டால் ஜாதகன் வறுமையில் உழல்வான். அன்றாடம் காய்ச்சியாக வாழ நேரிடும். வாழ்க்கையின் நடைமுறைகளைக் காற்றில் பறக்க விட்டுவிடுவான். தன் முன்னோர்கள் சேர்த்துவைத்திருந்த நாணயம், நம்பிக்கை, நல்ல பெயர்கள் ஆகியவற்றை ஒழித்துக் கட்டிவிடுவான். தந்தையின் உடல் நிலை கெட்டிருக்கும். இவனுக்கும் புத்திர தோஷம் உண்டாகும்.

60. ஒன்பதாம் அதிபதி ஒன்பதாம் வீட்டில் இருந்தால் நன்றாக இருந்தால் ஒன்பதாம் வீட்டு அதிபதி தன் சொந்த வீட்டில் அதாவது ஒன்பதிலேயே, ஆட்சி பலத்துடன் இருந்தால், ஜாதகனின் தந்தை தீர்க்க ஆயுள் உடையவராக இருப்பார். தான, தர்மங்கள் நிறைந்த குடும்பம் அமையும். தந்தையின் சொத்துக்கள் தானாக வந்து சேரும். சமூகத்தில் மதிப்பும், மரியாதையும் பெற்று உன்னத நிலையில் வாழ்வான். அனைவரின் ஆதரவும் கிடைக்கும். மகிழ்ச்சியாக இருப்பான். அடிக்கடி வெளி நாடுகளுக்குச் செல்வான். பெரும்பொருள் ஈட்டுவான். பலர் அங்கேயே சென்று தங்கி விடுவார்கள். பெரும் பொருள் ஈட்டி உன்னத நிலையில் வாழ்வார்கள். நன்றாக இல்லாவிட்டால் ஒன்பதாம் அதிபதி கெட்டிருந்தால் அல்லது 6, 8, 12 ஆம் வீடுகளில் அமர்ந்திருந்தால் ஜாதகன் தன்னுடைய சின்ன வயதிலேயே தந்தையை இழக்க நேரிடும்.

61. ஒன்பதாம் அதிபதி பத்தாம் வீட்டில் இருந்தால் நன்றாக இருந்தால் ஜாதகன் பெரும் புகழையும், வலிமைகளையும் பெற்றுத் திகழ்வான். அதீதமான பொருள் ஈட்டுவான். வசதியான ராஜ வாழ்க்கை வாழ்வான். தர்ம சிந்தனைகளையுடைய வாழ்க்கை அமையும்.சட்டத்திற்குக் கட்டுப்பட்ட குடிமகனாகத் திகழ்வான். செல்வாக்கு உள்ள குடும்பமாக இருக்கும். ஒன்பதாம் அதிபதியும் பத்தாம் அதிபதியும் சேர்ந்து நல்ல கிரகங்களின் பார்வை பெற்றிருந்தால், ஜாதகனுக்கு அரசில் உயர் பதவிகள் கிடைக்கும். சிலர் அமைச்சராகக்கூட ஆவதுண்டு! தந்தையின் சொத்துக்கள் விருத்தியடையும். தான தர்மம், தெய்வ வழிபாடு மிகுந்தவர்களாக இருப்பார்கள். உறவினர்கள், நண்பர்கள், பெரிய மனிதர்களின் தொடர்பு என்று ஜாதகன் சிறப்பான வாழ்க்கை வாழ்வான்.

62. ஒன்பதாம் அதிபதி பதினொன்றாம் வீட்டில் இருந்தால் நன்றாக இருந்தால் ஜாதகன் அதீத செல்வமுடையவனாக இருப்பான். செல்வாக்கும், அதிகாரமுமுள்ள பல நண்பர்களை உடையவனாக இருப்பான். அவனுடைய தந்தையும் அப்படியே இருப்பார் நன்றாக இல்லாவிட்டால் நன்றி, விசுவாசமில்லாத நட்புக்களாலும், உறவினர்களாலும்,

சொத்து சுகங்களை இழக்க நேரிடும். மோசடிகளையும், துரோகங்களையும் சந்திக்க நேரிடும். அதனாலும் சொத்துக்களை இழக்க நேறிடும். ஜாதகனுடைய தந்தையார் ஆரம்ப காலங்களில் செல்வாக்கு உடையவராக இருந்தாலும், பின்னாட்களில் தாழ்வான நிலையை அடைவார். அவருடைய சொத்துக்களும் நில்லாது போய்விடும்

63. ஒன்பதாம் அதிபதி பன்னிரெண்டாம் வீட்டில் இருந்தால் நன்றாக இருந்தால் (If well placed): பூர்வீகச் சொத்துக்கள் நிலைக்காது. வம்பு வழக்குகளில் அனைத்தையும் இழக்க நேறிடும். சிற்றின்ப வேட்டைகளில் ஈடுபட்டு, அதன் மூலமும் சொத்துக்களை இழக்க நேரிடும். நன்றாக இல்லாவிட்டால் ஏழ்மையான சூழல் நிலவும். வாழ்க்கையே போராட்டமாக இருக்கும். கடினமாக உழைக்க வேண்டும். பல சிரமங்களை எதிர்கொள்ள நேரிடும். சில அமைப்பு உள்ளவர்களுக்குத் தந்தை சிறுவயதிலேயே இறந்திருப்பார். ஜாதகனுக்கு ஒரு பைசாக் கூட பணம் இல்லாத நிலைக்கு ஆளாக்கிவிட்டுச் சென்றிருப்பார். எது எப்படியோ இந்த ஒன்பதாம் அதிபதி என்று மட்டுமில்லை - எந்த வீட்டு அதிபதியும் லக்கினத்திற்குப் பன்னிரெண்டாம் வீட்டில் அமர்வது உசிதமல்ல! பிரச்சினைதான். அது அங்கே வந்து அமரும் கிரகத்திற்கு உரிய வீட்டை முற்றிலும் பாதிக்கும்.

---

ஒன்பதாம் வீடு

ஒன்பதாவது வீட்டின் பலன் பிதுருக்கள் தகப்பனார் உயர்கல்வி முன்பின் தெரியாதவர்கள், தெய்வதரிசனம் போன ஜென்மத்து அதிர்ஷ்டம்,ஒருவர் செய்யும் தர்மம், நீண்ட தூர பயணம் அதாவது வெளிநாடு ஆகியவற்றை பற்றி தெரிவிப்பது இந்த வீடுதான்.

ஒன்பதாவது வீட்டுக்கிரகம் லக்கினத்தில் இருந்தால் அதாவது முதல் வீட்டில் இருந்தால் பெரியவர்களிடம் பிதா, குரு, தெய்வம் ஆகியவற்றுகளிடம் பிரியத்தை கொண்டவர்களாகவும் தான தர்மங்கள் செய்வர்களாகவும் இருப்பார்கள். பிதுர் சொத்துக்கள் கிடைக்கும்.

ஒன்பதாவது வீட்டு அதிபதி 2 ம் வீட்டில் இருந்தால் செல்வாக்குடன் முன்னோர்கள் சொத்துக்களை பெற்றவராகவும் இருப்பார்கள். அயல்நாட்டு மூலம் பணவரவு இருக்கும்.

ஒன்பதாவது வீட்டு அதிபதி 3 ம் வீட்டில் இருந்தால் இளைய சகோதர சகோதரிகளின் ஆதரவு இருக்கும். பிதுர் தோஷம் பெற்றவனாக இருப்பான்.

ஒன்பதாவது வீட்டு அதிபதி 4 ம் வீட்டில் இருந்தால் தாயின் ஆதரவு இருக்கும். வண்டி வாகனம் சொத்துக்கள் கிடைக்கும்.

ஒன்பதாவது வீட்டு அதிபதி 5 ம் வீட்டில் இருந்தால் புத்திரர்கள் சகல பாக்கியத்துடன் இருப்பார்கள் அரசாங்கத்தில் பெரியபதவி கிடைக்கும். தெய்வீக வழிபாடுகள் நிறைந்து காணப்படும்.

ஒன்பதாவது வீட்டு அதிபதி 6ம் வீட்டில் இருந்தால் வெளிநாட்டு பயணம் கிட்டும். தந்தையின் உடல்நிலை பாதிக்கும் . முன்னோர்களின் சொத்துக்கள் கடன்களிலால் அழியும்.

ஒன்பதாவது வீட்டு அதிபதி 7ம் வீட்டில் இருந்தால் நல்ல தெய்வபக்தியுள்ள பெண்கிடைக்கும் அந்நிய பெண் கிடைக்கும். வெளிநாடு செல்ல வாய்ப்பு வரும். தந்தையின் சொத்துக்களால் பயன் பெறுவார்கள்.

ஒன்பதாவது வீட்டு அதிபதி 8ம் வீட்டில் இருந்தால் தந்தையாரின் உடல் நிலை பாதிக்ககூடும். தந்தையார் இறந்து போக வாய்ப்பு உண்டு. புத்திர தோஷம் ஏற்படும்.

ஒன்பதாவது வீட்டு அதிபதி 9ம் வீட்டில் இருந்தால் தகப்பனார் நீண்ட ஆயுள் உடன் இருப்பார். தகப்பனாரின் சொத்துகள் கிடைக்கும். தான தர்மங்கள் குடும்பத்தில் நிறைந்து விளங்கும்.

ஒன்பதாவது வீட்டு அதிபதி 10ம் வீட்டில் இருந்தால் அரசாங்கத்தில் உயர் பதவியில் இருப்பார். தந்தையாரின் சொத்துக்கள் விருத்தி ஆகும். பெரியவர்களிடத்தில் மரியாதையாக இருப்பார்கள்.

ஒன்பதாவது வீட்டு அதிபதி 11ம் வீட்டில் இருந்தால் தெய்வகாரியங்கள் வீட்டில் நடைபெறும். தந்தையால் லாபம் இருக்கும் அயல்நாட்டு தொடர்பு மூலம் வருமானம் கிடைக்கும்.

ஒன்பதாவது வீட்டு அதிபதி 12ம் வீட்டில் இருந்தால் தந்தையாருக்கு கெடுதல் உண்டாகும். வெளிநாட்டு பயணம் கிடைக்கும். தந்தையாரின் சொத்துகள் நிலைக்காது.

ஒன்பதாவது வீட்டில் பாவக்கிரகங்கள் இருந்தால் பித்ரு தோஷம் ஏற்படும்.

பரிகாரம்

இராமேஸ்வரத்தில் திலா ஹோமம் செய்ய வேண்டும். மாத அமாவாசை விரதம் இருக்க வேண்டும். அமாவாசை அன்று பசு மாட்டிற்க்கு அகத்திகீரை கொடுக்கவேண்டும். வாழ்வில் ஒருமுறையாவது இராமேஸ்வரம், காசி சென்றுவரவேண்டும்.

---

வீடுகளை வைத்து வேலைகள்:
Careers by house (if the 10th lord is placed in the following houses)
1
First:
self-employment, politics or the public at large, work concered with the body (example. health club)

2.
Second:
banking, investments, accountants, restaurants, teaching, consultants, psychologists,

3
Third:
communication, arts, sales, advertising, computing, writing, publishing

4.
Fourth:
agriculture, building trades, real estate, vehicles, water, geology and mining

5.
Fifth:
politics, stockbrokers, religious rituals, entertainment, authorship

6
Sixth:
lawyers, military, police, labour, health related professions, food, waiters.

7.
Seventh:
business, trade, merchant, foreign business.

8.
Eighth:
insurance, research, death-related, metaphysics (e.g. astrology), sex industry.

9.
Ninth:
law, university teaching, travel, religious professions, work in foreign countries.

10
Tenth:
government jobs, dealing with public and the masses, managers, politics.

11
Eleventh:
trade and business, accountants, financial institutions, group work. sports

12
Twelfth:
foreign, jobs requiring secrecy, travels, hospitals, prisons, charities, advocacy.
+++++++++++++++++++++++++++++++++++++++++++++

பத்தாவது வீடு Rajesh subbu

பத்தாவது வீடு ஜீவனஸ்தானம் மற்றும் கர்மஸ்தானம் எனப்படும். ஒருவருக்கு எப்படி பட்ட தொழில் அமையும் என்று பார்ப்பதற்க்கு இந்த வீட்டை வைத்துதான் முடிவு செய்யபடவேண்டும். சோதிடம் எழுதப்பட்ட காலத்தில் குறைந்த தொழில்கள்தான் இருந்தன அதனால் தொழில்களை சிறிய முயற்சியில் கண்டுபிடித்துவிடலாம். ஆனால் இன்று நிறைய தொழில்கள் வந்துவிட்டன. அதனால் கண்டுபிடிப்பது கடினம்

பத்தாவது வீட்டு ஒவ்வொரு வீட்டிலும் இருந்தால் என்ன பலன் என்று இப்பொழுது பார்க்கலாம்.

பத்தாவது வீட்டு அதிபதி லக்கினத்தில் இருந்தால் அதாவது 1 ம் வீட்டில் இருந்தால் சுயமுயற்சியால் முன்னேற்றம் காண்பார். செல்வம் சொத்துக்கள் கல்வி தான தருமங்களுடன் அரசாங்கத்தில் உயர்பதவிகளில் இருப்பார். நல்ல நண்பர்கள் கிடைப்பார்கள்.

பத்தாவது வீட்டு அதிபதி 2 ம் வீட்டில் இருந்தால் நல்ல அழகுடனும் வாக்குவன்மை திறம்பட பேசும் சக்தி செல்வ செழிப்புடனும் இருப்பார்கள். சொத்துகள் கிடைக்கும் நல்ல நண்பர்கள் அமைவார்கள்.

பத்தாவது வீட்டு அதிபதி 3 ம் வீட்டில் இருந்தால் சகோதர தோஷம் ஏற்படும். சகோதரர்கள் இருந்தாலும் செல்வாக்குடன் இருக்கமாட்டார்கள்.

பத்தாவது வீட்டு அதிபதி 4 ம் வீட்டில் இருந்தால் அழகான வீடு, செல்வ செழிப்பான வாழ்க்கை தாய் வழி ஆதரவு முதலியன உண்டாகும். வண்டி வாகனம் அமையும். பூமியிலிருந்து புதையில் போன்றவை கிடைக்கும்.

பத்தாவது வீட்டு அதிபதி 5 ம் வீட்டில் இருந்தால் புத்திரபாக்கியம் அமையும் சந்தோஷ செல்வாக்குடன் கூடின வாழ்க்கை அமையும். பெரியமனிதர்களின் நட்பை பெறுவார்கள் அரசாங்கத்தில் உயர் பதவிகளில் இருப்பார்கள்.

பத்தாவது வீட்டு அதிபதி 6 ம் வீட்டில் இருந்தால் பிறர் பொருளை அபகரிக்கும் குணம் இருக்கும். உடம்பு மெலிந்தாக இருக்கும்.

பத்தாவது வீட்டு அதிபதி 7 ம் வீட்டில் இருந்தால் களத்திர தோஷம் ஏற்படும் மனைவி ஒற்றுமையுடன் இருக்கமாட்டாள். மனைவி மூலம் பொருள் சேரும்.

பத்தாவது வீட்டு அதிபதி 8 ம் வீட்டில் இருந்தால் நல்ல ஆயுள் உண்டு. புத்திர தோஷம் ஏற்படும். மனைவியுடன் திருப்தியான சந்தோஷங்களில் ஈடுபட முடியாது.

பத்தாவது வீட்டு அதிபதி 9 ம் வீட்டில் இருந்தால் தகப்பனாரின் சொத்துக்கள் விரயம் ஆகும். புத்திரவிருத்தி இருக்காது. சிரம வாழ்க்கைகளை அனுபவிக்கும்படி இருக்கும். தானதருமங்களிலும் ஈடுபாடு அதிகம் இருக்கும்.

பத்தாவது வீட்டு அதிபதி 10 ம் வீட்டில் இருந்தால் பெரிய மனிதர்களின் ஆதரவு இருக்கும். உறவினர்களின் ஆதரவு இருக்கும். உலக விசயங்களில் நல்ல அறிவு இருக்கும்.

பத்தாவது வீட்டு அதிபதி 11 ம் வீட்டில் இருந்தால் செய்யும் காரியங்களில் ஒவ்வொன்றிலும் லாபத்தை பெறுவார்கள். மூத்த சகோதர சகோதரிகள் கஷ்டத்தை அனுபவிப்பார்கள்.

பத்தாவது வீட்டு அதிபதி 12 ம் வீட்டில் இருந்தால் பொருள் நஷ்டம் ஏற்படும். புத்திரர்களால் கஷ்டங்கள் ஏற்படும். அனாவசியமான செலவுகள் இருக்கும். சொத்துக்கள் அழியும்

---

பத்தாம் வீட்டு அதிபதி வலுவாக இருந்தால் ஜாதகன் தான் ஈடுபடும் தொலில் வெற்றிமேல் வெற்றியைக் காண்பான். பத்தாம் வீட்டு அதிபதி நீசம் பெற்றிருந்தாலோ அல்லது தீய வீடுகளில் (6,8,12ஆம் வீடுகளில்) அமர்ந்திருந்தாலோ சிரமப்படுவான்.

போராட்டங்கள் நிறைந்ததாக இருக்கும். மூன்றடி ஏறினால் நான்கடி சறுக்கும்!
+++++++++++++++++++++++++++++++++++++++++++++
1.
Tenth lord placed in the lagna or 1st house
லக்கினத்தில் அமர்ந்திருந்தால்:
தீவிரமாக தொழில் செய்வான். கடின உழைப்பாளி. தன் முயற்சியால் மேன்மை அடைவான். சுய தொழில் செய்வான். தன்னிச்சையாகச் செய்யக்கூடிய வேலையில் இருப்பான்.தன்னுடைய திறமைகளை வளர்த்துக் கொள்வான். மற்றவர்களால் போற்றப்படுவான். மெதுவாக, நிதானமாக, தன்முனைப்புடன் முன்னேற்றம் காண்பான். இது அரசியலுக்கு ஏற்ற அமைப்பு. அரசியலில் நுழைந்தால், சக்தி வாய்ந்த பலரின் தொடர்பு அவனுக்குக் கிடைக்கும். அவனும் அதில் வெற்றி பெற்றுச் சிறப்பான்.
+++++++++++++++++++++++++++++++++++++++++++++
2.
Tenth lord placed in the 2nd house
இரண்டாம் வீட்டில் அமர்ந்திருந்தால்:
ஜாதகன் அவனுடைய வேலையைப் பொறுத்தவரை மிகவும் அதிர்ஷ்டமானவன். இரண்டாம் வீடு என்பது 10ஆம் வீட்டிற்கு ஐந்தாம் வீடு. தொட்டதெல்லாம் துலங்கும் கை நிறையப் பொருள் ஈட்டுவான்.
தன்னுடைய குடும்பத் தொழிலையே பெரிய அளவில் செய்யும் வாய்ப்புக் கிடைக்கும். குறுக்கிடும் தடைகளைத் தாண்டி வெற்றிப் படிக்கட்டில் ஏறி ஒரு உச்ச நிலையை ஜாதகன் அடைவான். உணவு விடுதி, பெரிய ரெஸ்டாரண்ட் போன்றவற்றை நடத்தும் தொழிலும் சிலர் ஈடுபடுவார்கள்.
பத்தாம் வீடு கெட்டிருந்து, பத்தாம் அதிபதி மட்டும் இங்கே வந்து அமர்ந்திருந்தால் ஜாதகன் பெரும் நஷடங்களைச் சந்திப்பதோடு, தனது குடும்பத் தொழிலையும் தொடர்ந்து செய்ய முடியாத நிலைக்கு ஆளாகித் தவிப்பான்.
+++++++++++++++++++++++++++++++++++++++++++++
3.
Tenth lord placed in the 3rd house
மூன்றாம் வீட்டில் அமர்ந்திருந்தால்:
ஜாதகனின் பகுதி நேர வாழ்க்கை பயணங்களில் கழியும்.அப்படிப்பட்ட வேலை அமையும். பேச்சாளனாகவோ, எழுத்தாளனாகவோ இருந்தால் அந்தத்துறையில் பிரகாசிப்பார்கள். புகழடைவார்கள். தொழிலில் உடன்பிறப்புக்களின் பங்கும் இருக்கும் அதாவது அவர்களின் உதவிகள் தாராளமாகக் கிடைக்கும். எல்லோராலும் விரும்பப்படும் நிலை கிடைக்கும். அதனால் வேலைபார்க்கும் இடங்களில் கூடுதல் மதிப்பு இருக்கும். 3ஆம் வீடு பத்தாம் வீட்டிலிருந்து ஆறாவது வீடாக அமைவதால் இந்த அமைப்பினருக்கு இயற்கையிலேயே எந்தப் பிரச்சினையையும் சமாளிக்கும் அல்லது தீர்க்கும் திறமை இருக்கும்
++++++++++++++++++++++++++++++++++++++++++++++
4.
Tenth lord placed in the 4th house
நான்காம் வீட்டில் அமர்ந்திருந்தால்:
ஜாதகர் ஒரு உதாரண மனிதராக இருப்பார். எல்லா விஷயங்களிலும் அறிவுடை யவராக இருப்பார்.(person with knowledge in various subjects) இந்த அறிவாற்றலால் பலராலும் மதிக்கப்படுபவராக இருப்பார். இடம் வாங்கி விற்கும் அல்லது கட்டடங் களைக் கட்டிவிற்கும் தொழிலை மேற்கொண்டால் அதில் முதன்மை நிலைக்கு

உயர்வார். அரசியல் அதிகாரமுடையவர்களுடன் தொடர்புடையவராக இருப்பார். தூதுவராக இருப்பதற்கும் வாய்ப்பு உண்டாகும். வசதியான வீட்டையும், வாகனங் களையும் உடையவராக இருப்பார். தலைமை ஏற்கும் சிறப்புடையவர்களாக இந்த அமைப்புக்காரர்கள் விளங்குவதால் இவர்களுக்குப் பல சீடர்களும், உதவியாளர் களும் கிடைப்பார்கள். பொது வாழ்க்கைக்கு இந்த அமைப்பு சக்தி வாய்ந்ததாகவும், பயனுள்ளதாகவும் இருக்கும்.

++++++++++++++++++++++++++++++++++++++++++++++++

5

Tenth lord in the 5th House

ஐந்தாம் வீட்டில் இருந்தால்

வாழ்க்கையின் எல்லா சௌகரியங்களும் உடையவர்களாக இருப்பார்கள். இந்த அமைப்பை ஆசீர்வதிக்கப்பெற்ற அமைப்பு எனச் சொல்லலாம். தொட்டதெல்லாம் துலங்கும். மண்ணும் பொன்னாகும். பங்கு வணிகத்தில் ஈடுபட்டால் பணம் கொழிக்கும். இறைவழிபாடு, தியானம் என்று எளிமையாகவும் இருப்பார்கள். அதிகாரத்தில் உள்ள பலர் இவர்களுக்கு நண்பர்களாகக் கிடைப்பார்கள்.அதோடு ஐந்தாம் வீடு, பத்தாம் வீட்டிற்கு எட்டாம் வீடாக இருப்பதனால், இவர்களுக்கு மறைமுக எதிரிகளும் இருப்பார்கள். இவர்களுடைய முன்னேற்றத்திற்கு அவர்கள் தடைகள் ஏற்படுத்த முயல்வார்கள்.

+++++++++++++++++++++++++++++++++++++++++++++++++

6

Tenth lord in the 6th House

ஆறாம் வீட்டில் இருந்தால்:

நீதித்துறை, மருத்துவத்துறை, சிறைத்துறை ஆகிய துறைகள் சார்ந்த வேலையில் இருந்தால், அதில் பிரகாசிப்பார்கள். அடுத்தடுத்துப் பதவி உயர்வு பெற்று மேன்மை அடைவர்கள். பொறுப்பான பதவிகள் வந்து சேரும். நடுநிலையாளர் என்று பெயர் பெறுவதுடன், பலரின் மதிப்பையும் பெறுவார்கள்.

அடிக்கடி இடம் மாற்றம், ஊர் மாற்றங்கள் ஏற்படும். எதிரிகள் இருப்பார்கள். ஆறாம்வீடு பத்தாம் வீட்டிற்கு ஒன்பதாம் வீடு ஆகையால், அதிர்ஷ்டம் இவர்கள் செல்லும் இடங்களில் எல்லாம் கூடவே வரும்.இவர்கள் வேலையில் உயர்வதற்கு அதுவும் ஒரு காரணமாக இருக்கும்.

++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++

7

Tenth lord in the 7th House

ஏழாம் வீட்டில் இருந்தால்:

பாத்தாம் அதிபதி இந்த இடத்தில் இருந்தால் ஜாதகரின் தொழில் அல்லது வேலை மிகவும் சக்தி வாய்ந்ததாக அமையும். அவர்களுடைய அறிவு சராசரிக்கும் அதிகமானதாக இருக்கும். பலவற்றைத் தெரிந்து கொள்ளவும், தெரிந்து கொண்டதை அற்புதமாக வெளிப்படுத்தும் திறமையுடன் இருப்பார்கள். தொழிலில் சிறந்த பங்குதாரர் அல்லது கூட்டாளி கிடைப்பார்.அதுவே அவருடைய வளர்ச்சிக்குப் பெரும் உதவியாக அமையும். தொழில் நிமித்தமாக அடிக்கடி தூர தேசங்களுக்குச் சென்றுவரும் வாய்ப்புக் கிடைக்கும். நிர்வாகத்திறமைகள் உடையவராக இருப்பார். தங்களுடன் வேலைப்பார்ப்பவர்களை நம்புவார்கள், அதோடு நம்பிக்கைக்கு உரியவர்களாக இருப்பார்கள். அதனால் அவர்கள் கையில் எடுத்துச் செய்யும் எல்லாச் செயல்களுமே வெற்றி பெறும். பலனைத்தரும்.

இந்த இடம் 10ஆம் வீட்டிற்குப் பத்தாம் இடமாகும். அதனால் அவர்களுடைய வெற்றி எல்லைகளைக் கடந்து நிற்கும். கடந்து செல்லும்.
+++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++
8
Tenth lord in the 8th House
எட்டாம் வீட்டில் இருந்தால்:
இந்த வீட்டில் இருந்தால் ஜாதகருக்கு அவருடைய தொழிலில் அல்லது வேலையில் பல இடைஞ்சல்களும், இடமாற்றங்களும் உண்டாகும். திறமைசாலி களாக இருந்தாலும் பலரால் புரிந்து கொள்ள முடியாதவர்களாக இருப்பார்கள். தங்கள் வழியில்தான் செல்வார்கள். நீண்ட ஆயுளை உடையவராக இருப்பார்கள். பெருந்தன்மை உடையவர்களாகவும், உயர்ந்த கொள்கைகளை உடையவர்களாகவும் இருப்பார்கள். தங்களுடன் வேலை செய்பவர்களால் பாராட்டப் படுபவர்களாகவும், விரும்பப்படுபவர்களாகவும் இருப்பார்கள். இந்த 8ஆம் இடம் பத்தாம் வீட்டிற்குப் 11ஆம் இடம் ஆதலால், நல்ல லாபம் கிடைக்கும் தொழில் அல்லது நல்ல சம்பளம் கிடைக்கும் வேலைகள் அமையும்.
++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++
9
Tenth lord in the 9th House
ஒன்பதாம் வீட்டில் இருந்தால்:
துறவு மனப்பான்மை, ஏகாந்த உணர்வு கொண்டவராக ஜாதகர் இருப்பார். பரம்பரைத் தொழிலில் நாட்டம் உடையவராக இருப்பார். போதகர். ஆசிரியர் என்பதுபோன்றவேலைகளை விரும்பிச் செய்வார்.ஆன்மீக வாழ்வில் ஈடுபடுபவர் களுக்கு வழிகாட்டியாக இருப்பார். அதிர்ஷ்டமுடையவராகவும். வசதி உடைய வராகவும் இருப்பார். இவர்களுக்கு இவர்களது தந்தையின் உதவியும் வழிகாட்டு தலும் நிறைந்திருக்கும். தர்மசிந்தனை உடையவர்களாக இருப்பார்கள். மனவள மேம்பாட்டுத்துறையில் (psychological counseling) நுழைந்தால் சிறப்பானதொரு இடத்தைப் பிடித்து மேன்மை பெறுவார்கள். தங்களுடைய திறமையால் பலரது போற்றுதலுக்கும் உரியவர்களாகத் திகழ்வார்கள்
+++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++
10
Tenth lord in the Tenth House
பத்தம் வீட்டு அதிபதி 10ல் இருந்தால்
தங்கள் தொழிலில் அல்லது வேலையில் பிரகாசிப்பார்கள். இந்த அமைப்பு கெட்டிக்காரத்தனத்தை, புத்திசாலித்தனத்தை வெளிபடுத்தும் அமைப்பாகும். தங்களுக்கு மேலாளர்களை மதிக்கும் மனப்பக்குவம் உடையவர்களாக இருப்பார்கள். அதனால் மதிப்பும் பெறுவார்கள்.மற்றவர்களின் நம்பிக்கைக்கு உரியவர்களாக இருப்பார்கள். அரசியல் தொடர்பும், அரசுத் தொடர்பும் உடையவர்களாக இருப்பார்கள். இந்த வீடு நல்ல கிரகங்களின் சேர்க்கை, பார்வைகளளப் பெற்றிருந்தால் செய்யும் தொழிலில் அதீத மேன்மை பெறுவார்கள்
+++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++
11
Tenth lord in the 11th House
பத்தாம் அதிபதி 11ல் இருந்தால், ஜாதகருக்குப் பணத்துடன், மதிப்பும், மரியாதையும் சேரும். மகிழ்வுடன் இருப்பார்கள். பெரு நோக்குடையவர்களாக இருப்பார்கள். பொதுத்தொடர்புகள் உடையவராக இருப்பார்கள். மற்றவர்களுக்கு

வேலை கொடுக்கும் வாய்ப்பு உடையவர்களாக இருப்பார்கள். இதன் மூலமும் இவர்களுக்குப் பல தொடர்புகள் உண்டாகும். பலராலும் விரும்பப்படுவார்கள். இந்த வீடு பத்தாம் வீட்டிற்கு இரண்டாம் இடமாகும். இதனால், இவர்களுக்கு செல்வத்துடன், புகழும், மரியாதையும் சேர்ந்து கிடைக்கும். தொழில் மேன்மை உடையவர்களாக இருப்பார்கள்.

+++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++

12.

Tenth lord in the 12th House

பத்தாம் அதிபதி 12ல் இருந்தால்.

வேலையில் அல்லது தொழிலில் பல பிரச்சினைகளையும், தடைகளையும் சந்திக்க நேரிடும். சிலர் வெளி நாட்டிற்குச் சென்று அங்கு பல சிரமங்களைச் சந்திக்க நேரிடும். வருமானவரி, விற்பனை வரி போன்ற செயல்பாடுகளில் முறையற்று நடந்தால் பல சிக்கல்களைச் சந்திக்க நேரிடும். ஆகவே அந்த விஷயங்களில் இந்த அமைப்பினர் எச்சரிக்கையாக நடந்து கொள்ள வேண்டும். அரசியலிலோ அல்லது அரசியல்வாதிகளுடன் கூட்டணி சேர்ந்தால் பெரும் நஷ்டத்தை மட்டுமே சந்திக்க நேரிடும். எதிரிகள் பலர் ஏற்படக்கூடும் அவ்ற்றிற்கெல்லாம் அப்போதப்போதைக்கு தீர்வுகளை இவர்கள் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்

++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++

1. லக்கினாதிபதி பதினொன்றில் இருந்தாலும் அல்லது பதினொன்றாம் வீட்டு அதிபதி லக்கினத்தில் வந்து இருந்தாலும். நல்ல பலன் உண்டாகும். அதுதான் முதல் விதி.

அதற்குரிய பலன்: குறைந்த முயற்சி; நிறைந்த பலன் (Minimum efforts; Maximum Benefits) அதாவது 100 ரூபாய்க்கான உழைப்பு. ஐநூறு ரூபாய் வருமானம். நான்கு மணி நேரம் மட்டுமே வேலை. எட்டு மணி நேர வேலைக் குரிய சம்பளம். டேட்டா என்ட்ரி வேலை ஆனால் டீம் மானேஜரின் சம்பளம். வியாபாரம் என்றால் ஐந்து லட்சம் முதலீடு. செலவுபோக வருட லாபம் ஐந்து லட்சம். இப்படி எழுதிக்கொண்டே போகலாம்.

2. லக்கினத்திற்குப் பதினொன்றாம் வீட்டு அதிபதி லக்கினத்தில் வந்து இருந்தால் ஜாதகன் அதிகம் படித்தவனாகவும், சாதுர்யமாகப் பேசுபவனாகவும் இருப்பான். எந்தத் தொழில் செய்தாலும் அதீத லாபம் வரும். செல்வத்துடனும், செல்வாக்கு டனும் இருப்பான்.

3. பதினொன்றாம் அதிபன் லக்கினத்திற்கு இரண்டில் இருந்தால், ஜாதகன் வருமானம், கௌரவம், அதிகாரம் ஆகியவற்றுடன் பலரும் விரும்பும்படியாக வாழ்வான்.

4. பதினொன்றாம் அதிபன் லக்கினத்திற்கு மூன்றில் இருந்தால், ஜாதகனின் மூத்த சகோதரர்கள், மூத்த சகோதரிகள் நல்ல அந்தஸ்துடன் இருப்பார்கள் அவர்களின் ஆதரவு ஜாதகனுக்குக் கிடைக்கும்.

5. பதினொன்றாம் அதிபன் லக்கினத்திற்கு நான்கில் இருந்தால், ஜாதகனுக்கு இடங்கள், கட்டிடங்கள், வண்டி, வாகனங்கள் இருக்கும்.சந்தோஷத்துடன் வாழ்வான். தெய்வீக வழிபாடுகளைக் கொண்டவர்களாகவும், நேர் வழியில் செல்பவர்களாகவும் இருப்பார்கள்.

6. பதினொன்றாம் அதிபன் லக்கினத்திற்கு ஐந்தில் இருந்தால், ஜாதகனின் புத்திரர்களால் நல்ல செல்வாக்குடனும், புகழுடனும் அவனது குடும்பம் விளங்கும். தந்தையின் தொழிலையே அவனுடைய பிள்ளைகளும் செய்து பெரும்பொருள் ஈட்டுவார்கள்.

7. பதினொன்றாம் அதிபன் லக்கினத்திற்கு ஆறில் இருந்தால், வரும் லாபத்தையெல்லாம், கடன்காரர்களுக்கும், பங்குதாரர்களுக்கும் கொடுக்க நேரிடும். செய்தொழிலில் சத்துருக்கள் இருப்பார்கள். பல இடைஞ்சல்கள் உண்டாகும். லாபத்தைவிட, கடன் அதிகமாகும்!

8. பதினொன்றாம் அதிபன் லக்கினத்திற்கு ஏழில் இருந்தால், ஜாதகனுக்கு அவனது மனைவி மூலம் செல்வங்கள், லாபங்கள் வந்து சேரும். திருமணம் ஆன நாள் முதலாய் யோகத்துடன் விளங்குவான்.பதவிகளிலும் சிறப்புப் பெற்று விளங்குவான்.

9. பதினொன்றாம் அதிபன் லக்கினத்திற்கு எட்டில் இருந்தால், ஜாதகன் சஞ்சலம் உடையவன். பலவிதமான தொழில்களைச் செய்ய முயல்வான். செய்வான். கையில் இருக்கும் செல்வத்தை இழந்து, சஞ்சலத்துடனேயே காலத்தைக் கழிக்கும்படியாகிவிடும்.

10. பதினொன்றாம் அதிபன் லக்கினத்திற்கு ஒன்பதில் இருந்தால், ஜாதகன் தன்னுடைய தந்தையின் தொழிலை, அவரைவிடச் சிறப்பாகச் செய்து பெரும்பொருள் ஈட்டுவான். பலவிதமான பொருள் லாபங்களை அடைவான். வாழ்க்கை எல்லா விதத்திலும் சிறப்பாக இருக்கும்.

11. பதினொன்றாம் அதிபன் லக்கினத்திற்கு பத்தில் இருந்தால், ஜாதகன் கௌரவமான உத்தியோகத்தில் அமர்ந்து, கைநிறையச் சம்பாதிப்பான். ஆடம்பரமின்றி அமைதியான குடும்ப வாழ்க்கை அமையும்.

12. பதினொன்றாம் அதிபன் லக்கினத்திற்கு பதினொன்றிலேயே இருந்தால், ஜாதகனுக்குப் பெரிய லாபங்கள் கிடைக்காது. மிதமான பலனே ஏற்படும். வயதான காலத்தில் தனவந்தராக இருப்பார்கள்.

13. பதினொன்றாம் அதிபன் லக்கினத்திற்கு பன்னிரெண்டில் இருந்தால், ஜாதகனுக்குப் பொருள் விரையம் ஏற்படும். கடன் தொல்லைகள், வியாதிகள் ஏற்படும். போஜன வசதிகளும், நித்திரை சுகங்களும் இருக்கும். ஆனாலும் மன அமைதி இருக்காது.

---

12ஆம் வீட்டு அதிபதி லக்கினத்தில் இருந்தால்:

ஜாதகன் மெலிந்த தேகத்துடன் இருப்பான். மனதில் துணிவின்றி இருப்பான். ஆனாலும் அழகான தோற்றமுடையவனாக இருப்பான்.

12ஆம் அதிபதியுடன் ஆறாம் வீட்டு அதிபதியும் சேர்ந்து லக்கினத்தில் இருந்தால் ஜாதகன் நீண்ட ஆயுளைப் பெற்றவனாக இருப்பான். (உதாரணத்திற்கு சிம்ம லக்கின ஜாதகத்திற்குப் பன்னிரெண்டாம் அதிபதி சந்திரன். ஆறாம் வீட்டு அதிபதி சனி. சந்திரனும் சனியும் கூட்டாக சிம்ம லக்கினத்திலேயே வந்து அமர்ந்திருந்தால் என்பது போல இதற்குப் பொருள் கொள்ளவும்)

இதே அமைப்பில் எட்டாம் வீடு பாதிப்படைந்திருந்தால், ஜாதகன் அல்ப ஆயுளில் போய்விடுவான்.

பன்னிரெண்டாம் அதிபதியும், லக்கினாதிபதியும் பரிவர்த்தனையாகியிருந்தால் ஜாதகன் புத்திசாலித்தனமில்லாதவனாக இருப்பான். கருமியாக இருப்பான். பலராலும் வெறுக்கப் படுபவனாக இருப்பான்,
+++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++
12ஆம் வீட்டு அதிபதி இரண்டாம் வீட்டில் இருந்தால்:
ஜாதகன் பலமுறை பல இடங்களில் பண விரையம் ஏற்பட்டு அல்லல் படுவான். கடன் தொல்லைகள் ஏற்பட்டு அவதிப்படுவான். தேவையில்லாத சிக்கல்களில் மாட்டிக் கொள்வான். வேளா வேளைக்குச் சரியாகச் சாப்பிட முடியாது. கண் பார்வை மங்கிவிடும். குடும்பத்தில் மகிழ்ச்சி இருக்காது.

பன்னிரெண்டாம் அதிபதி சுபக் கிரகமாக இருந்து வலுவாகவும் இருந்து இதே இடத்தில் வந்து அமர்ந்திருந்தால் மேற்கூறிய குறைகள் குறைந்து, பணம் கையில் தங்கும் அமைப்புடன் இருப்பான். அதோடு எதையும் சமாளிக்கும் பேச்சுத் திறமை உள்ளவனாக இருப்பான்.

பன்னிரெண்டாம் அதிபதி இங்கே தீய பார்வைகளுடன் அமர்ந்திருந்தால் ஜாதகன் வாயைத் திறந்ததலே அது சண்டை, சச்சரவுகளில் போய் முடிவதாக இருக்கும்
++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++
12ஆம் வீட்டு அதிபதி மூன்றாம் வீட்டில் இருந்தால்:
ஜாதகன் கோழையாகவும், அதிகம் பயப்படுபவனாகவும் இருப்பான். அவன் தன்னுடைய சகோதரனை இழக்க நேரிடலாம். எப்பவும் அழுக்கான தோற்றத்துடன் திரிபவனாக இருப்பான்.தீயகிரகங்களின் பார்வை இங்கே வந்து அமரும் கிரகத்தின் மீது விழுந்தால் ஜாதகனுக்குக் காது சமபந்தப்பட்ட நோய்கள் உண்டாகும் (பார்க்கும் தீய கிரகத்தின் தசா புத்திகளில் உண்டாகும்)
ஜாதகன் தன் உடன்பிறப்புக்களுக்காக பணத்தை அதிகமாக செலவிட நேரிடும்
ஜாதகன் எழுத்தாளனனால், வெற்றி பெற்ற எழுத்தாளனாக முடியாது.
கூட்டத்தோடு கூட்டமாக வேலை செய்ய நேரிடும். அதிக வருமானமும் இருக்காது.

பன்னிரெண்டாம் அதிபதியும், இரண்டாம அதிபதியும் கூட்டாக மூன்றாம் இடத்தில் இருந்தால், ஜாதகனுக்கு இரண்டு தாரங்கள் அமையும்.
++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++
12ஆம் வீட்டு அதிபதி நான்காம் வீட்டில் இருந்தால்:
சிறுவயதிலெயே தாயை இழக்க நேரிடும். மனப் போராட்டங்கள் நிறைந்திருக்கும் தேவையில்லாத கவலைகள் வாட்டும். உறவினர்களில் சிலர் விரோதமாக இருப்பார்கள்.குடியிருக்கும் இடங்களில் வீட்டுக்காரனின் தொல்லை இருக்கும். நிம்மதி இருக்காது.சாதாரண பேட்டைகளில் குடியிருக்க நேரிடும்.
பன்னிரெண்டாம் இடத்து அதிபதி இங்கே வலுவாக இருந்தால், ஜாதகனுக்கு மேலே குறிப்பிட்டுள்ள பலன்கள் அதிகமாகி அனுதினமும் தொல்லை கொடுப்பதாக இருக்கும்.
ஜாதகனுக்கு ஜாதகத்தில் சுக்கிரன் வலுவாக இருந்தால், சொந்த வண்டி வாகனங்கள் இருக்கும் ஆனாலும் இந்த அமைப்பால் அதுவும் பிரச்சினை தருவதாகவே இருக்கும்.
+++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++
12ஆம் வீட்டு அதிபதி ஐந்தாம் வீட்டில் இருந்தால்:
ஜாதகனுக்குக் குழந்தை பிறப்பதில் பிரச்சினை இருக்கும் அல்லது குழந்தைகளால் பிரச்சினை இருக்கும். மகிழ்ச்சி இருக்காது.மிகுந்த இறைபக்தி உடையவனாக இருப்பான். நினைத்தால் கோவில், குளம் என்று கிளம்பிவிடுவான். துணிவில்லாத வனாக இருப்பான்.மனப்போராட்டங்கள் உடையவனாக இருப்பான்.
தான்தான் உலகத்திலேயே அதிகமாகத் துன்பப்படுபவனாக நினைத்துக் கொண்டு சதா சர்வ காலமும் வருத்தத்திலேயே மூழ்கி விடுவான்.
இந்த அமைப்புள்ளவன் விவசாயம் செய்தால், அவன் தோட்டத்துப் பயிர்களுக்கு அடிக்கடி, பூச்சிகளாலும், செடி நோய்களாலும் அழிவு வந்து, அதனால் அவதிப் படுவான்
+++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++
12ஆம் வீட்டு அதிபதி ஆறாம் வீட்டில் இருந்தால்:
ஜாதகன் எப்போதும் மிகுந்த மகிழ்ச்சி உடையவனாக இருப்பான்.செழிப்புள்ள வனாக இருப்பான். எல்லா வசதிகளும் நிறைந்தவனாக இருப்பான்.ஆரோக்கி யமாகவும், அழகான தோற்றமுடையவனனகவும் இருப்பான்,
எதிரிகள் இருக்காது. இருந்தாலும் அவர்களை எதிர்கொண்டு ஒன்றும் இல்லாத வர்களாக ஆக்கிவிடுவான்.
சிலசமயம் சட்டச் சிக்கல்களில் மாட்டிக் கொள்ள நேரிடும்.ஆனாலும் முடிவு அவனுக்குச் சாதகமாகவே அமையும்.

இதே அமைப்பில், இந்த இடம் தீய கிரகத்தின் பார்வை பெற்றால் (அதாவது வந்து அமரும் பன்னிரெண்டாம் அதிபதி, தீய கிரகத்தின் பார்வை பெற்றால்) பாவச் செயல்களைச் செய்வான்.சட்டென்று கோபப்படுபவனாகவும், சட்டென்று உணர்ச்சி வசப்படுபவனாகவும் இருப்பான். சிலருக்குத் தன் தாயையே வெறுக்கும் சூழ்நிலை உண்டாகும். பெண் பித்தனாக இருப்பான். அதனால் பல பிரச்சினை களைச் சந்திக்க நேரிடும்.
+++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++

12ஆம் வீட்டு அதிபதி ஏழாம் வீட்டில் இருந்தால்:
ஜாதகனுக்கு மிகவும் வறுமையில் வளர்ந்தவள் மனைவியாகக் கிடைப்பாள்.
திருமண வாழ்க்கை மகிழ்ச்சியற்றதாகிவிடும்.சிலருக்கு பிரிவில் முடிந்துவிடும்
அப்படி மனைவியைப் பிரிந்த ஜாதகன் சன்றியாசியாக மாறிவிடுவான். சிலர்
சிலர் உடல் உபாதைகளாலும், உணர்வுப் போராட்டங்களாளும்ச் சீக்காளியாகி
பிரச்சினைக்குரியவர்கள் ஆகிவிடுவார்கள்.
எதையும் கற்கும் ஆர்வம் இல்லாமல் போய்விடும்.அதே போல சொத்து
சுகங்களும் இல்லாமல் போய்விடும்.
++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++
12ஆம் வீட்டு அதிபதி எட்டாம் வீட்டில் இருந்தால்:
ஜாதகன் செல்வந்தனாக இருப்பான்.மக்களால் அறியப் பட்டவனாக இருப்பான்.
சொகுசான் வாழ்க்கை அமையும். பல வேலையாட்கள் வேலை செய்ய
செள்கரியமான வாழ்க்கை வாழ்வான். பிறர் மரணத்தால், இவனுக்கு சொத்துக்கள்
கிடைக்கும் அமைப்பு உண்டு. சித்தாந்தங்கள் வேதாந்தங்களில் ஆர்வமுடைய
வனாக இருப்பான்.தர்ம சிந்தனைகள் உடையவன்.புகழுடையவன். அன்புடையவனாக
நட்புடையவனாக இருப்பான்.நல்ல பண்புகளை உடையவனாக இருப்பான்.
அதன் மூலம் பலரையும் கவரக்கூடியவனாக இருப்பான்.
+++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++
12ஆம் வீட்டு அதிபதி ஒன்பதாம் வீட்டில் இருந்தால்:
வெளிநாட்டில் வாழ்கின்ற, அங்கே சொத்துக்கள் வாங்குகின்ற அமைப்புடையவான
ஜாத்கன் இருப்பான். அதிகமான சொத்துக்கள் சேரும். நேர்மையானவனாக
இருப்பான்,பெருந்தன்மை உடையவனாக இருப்பான்.

தந்தையை இளம் வயதிலே பறிகொடுக்க நேரிடும்.
++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++
12ஆம் வீட்டு அதிபதி பத்தாம் வீட்டில் இருந்தால்:
கடின உழைப்பாளி. வேலையின் பொருட்டு கடினமான பயணங்கள்
மேற்கொள்ள நேரிடும். சிலருக்குச் சிறைக் காவலர் வேலை கிடைக்கும்.
சிலருக்கு மருத்துவத் துறையில் வேலை கிடைக்கும். சிலர் மாயானங்களில்
பணி செய்ய நேரிடும்.

ஜாதகனுக்கு தன் குழந்தைகளால் எந்த செளகரியமும், மகிழ்ச்சியும்
கிடைக்காது
++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++
12ஆம் வீட்டு அதிபதி பதினொன்றாம் வீட்டில் இருந்தால்:
ஜாதகன் வேலைக்குச் செல்ல மனமில்லாமல், வணிகத்தில் ஈடுபடுவான்.
அதன் மூலம் அவனுக்குப் பெருத்த வருமானமும் இருக்காது.
குறைந்த நண்பர்களே இருப்பார்கள். எதிரிகள் அதிகமாக இருப்பார்கள்
சகோதரர்களால் தொல்லைகள் உண்டாகும். அதன் காரணமாகக்
கைப் பொருளை இழக்க நேரிடும்.
+++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++++
12ஆம் வீட்டு அதிபதி பன்னிரெண்டாம் வீட்டில் இருந்தால்:
பன்னிரெண்டாம் அதிபதி தன் சொந்த வீட்டிலேயே இருந்தால் ஜாதகன்

தர்மச் செலவுகளை அதிகமாகச் செய்பவனாக இருப்பான். நல்ல கண் பார்வை இருக்கும். அதீதமான படுக்கை சுகம் கிடைக்கும். சிலர் விவசாயடததில் ஈடுபடுவார்கள்

இந்த அமைப்பை ஒரு தீய கிரகம் பார்த்தால், ஜாதகன் ஓய்வு ஒழிச்சல் இல்லாதவனாகவும், எப்போதும் எங்கேயாவது சுற்றித் திரிந்து கொண்டிருப்பவனாகவும் இருப்பான்.

************************************************************************************************************

# விருட்ச சாஸ்திரம்

நக்ஷத்திர விருக்ஷங்கள் அந்தந்த நக்ஷத்திரங்களில் பிறந்தவர்களின் மீது தாக்கங்களை ஏற்படுத்துவது எவ்வளவு உண்மையோ அதைவிட அந்தந்த நக்ஷத்திரங்களின் பாதங்களில் பிறந்தவர்கள் மீது தெளிவான தாக்கங்களை ஏற்படுத்துவதும் முழு உண்மை.நக்ஷத்திரங்களின் வேறுபட்ட பாதங்களில் பிறந்தவர்களிடையே வேறுபட்ட குணாதிசயங்கள் அமைந்திருக்கும் . இதனை ஜாதகத்தில் அம்ச சக்கரத்தைக் கொண்டு தெளிவாக அறியலாம். ஆணுக்கும் பெண்ணுக்கும் பார்க்கப்படும் திருமண பொருத்தத்தில் பொருந்தக்கூடிய நக்ஷத்திரத்தின் ஒரு பாதம் மற்றொரு பாதமானால் பொருந்தாது என இந்தகைய குணாதிசய வேறுபாடுகளால்தான் தவிர்க்கும்படி அறிவுறுத்தப்படுகிறது.

எனவே இங்கு குறிப்படப்பட்டுள்ள இந்த விருக்ஷங்களில் அவரவர்களுக்குப் பொருந்தும் விருக்ஷங்களைத் தேர்ந்தெடுத்து நட்டுப் பராமரித்து உங்களது சிரமங்களிலிருந்து விடுபடு வேண்டுகிறேன். இந்தப் பூமி செழிக்க உங்களது பங்கையும் அளிக்கக் வேண்டுகிறேன்.

**<u>நக்ஷத்ர விருட்சங்கள்</u>**

அஸ்வினி - எட்டி
பரணி - நெல்லி
ரோகிணி - நாவல்
மிருகசீரிஷம் - கருங்காலி
திருவாதிரை - செங்கருங்காலி
புனர்பூசம் - மூங்கில்
பூசம் - அரசு
ஆயில்யம் - புன்னை
மகம் - ஆல்
பூரம் - பலாசம்
உத்திரம் - ஆத்தி
ஹஸ்தம் - அத்தி
சித்திரை - வில்வம்
சுவாதி - மருது
விசாகம் - விளா
அனுஷம் - மகிழ்
கேட்டை - பிராய்
மூலம் - மரா

பூராடம் - வஞ்சி

உத்திராடம் - பலா

திருவோணம் - எருக்கு

அவிட்டம் - வன்னி

சதயம் - கடம்பு

பூரட்டாதி -தேவா

உத்திரட்டாதி - வேம்பு

ரேவதி - இலுப்பை

**நக்ஷத்ர விருட்சங்கள் (பாத வாரியாக)**

அஸ்வினி

1 ம் பாதம் - எட்டி

2 ம் பாதம் - மகிழம்

3 ம் பாதம் - பாதாம்

4 ம் பாதம் – நண்டாஞ்சு

பரணி

1 ம் பாதம் - அத்தி

2 ம் பாதம் - மஞ்சக்கடம்பு

3 ம் பாதம் - விளா

4 ம் பாதம் - நந்தியாவட்டை

கார்த்திகை

1 ம் பாதம் - நெல்லி

2 ம் பாதம் - மணிபுங்கம்

3 ம் பாதம் - வெண் தேக்கு

4 ம் பாதம் - நிரிவேங்கை

ரோஹிணி

1 ம் பாதம் - நாவல்

2 ம் பாதம் - சிவப்பு மந்தாரை

3 ம் பாதம் - மந்தாரை

4 ம் பாதம் – நாகலிங்கம்

மிருகஷீரிஷம்

1 ம் பாதம் - கருங்காலி

2 ம் பாதம் - ஆச்சா

3 ம் பாதம் - வேம்பு

4 ம் பாதம் - நீர்க்கடம்பு

திருவாதிரை

1 ம் பாதம் - செங்கருங்காலி

2 ம் பாதம் - வெள்ளை

3 ம் பாதம் - வெள்ளெருக்கு

4 ம் பாதம் – வெள்ளெருக்கு

புனர்பூசம்

1 ம் பாதம் - மூங்கில்

2 ம் பாதம் - மலைவேம்பு

3 ம் பாதம் - அடப்பமரம்

4 ம் பாதம் – நெல்லி

பூசம்

1 ம் பாதம் - அரசு

2 ம் பாதம் - ஆச்சா

3 ம் பாதம் - இருள்

4 ம் பாதம் - நொச்சி

ஆயில்யம்

1 ம் பாதம் - புன்னை

2 ம் பாதம் - முசுக்கட்டை

3 ம் பாதம் - இலந்தை

4 ம் பாதம் – பலா

மகம்

1 ம் பாதம் - ஆலமரம்

2 ம் பாதம் - முத்திலா மரம்

3 ம் பாதம் - இலுப்பை

4 ம் பாதம் – பவளமல்லி

பூரம்

1 ம் பாதம் - பலா

2 ம் பாதம் - வாகை

3 ம் பாதம் - ருத்திராட்சம்

4 ம் பாதம் - பலா

உத்திரம்

1 ம் பாதம் - ஆலசி

2 ம் பாதம் - வாதநாராயணன்

3 ம் பாதம் - எட்டி

4 ம் பாதம் - புங்கமரம்

ஹஸ்தம்

1 ம் பாதம் - ஆத்தி

2 ம் பாதம் - தென்னை

3 ம் பாதம் - ஓதியன்

4 ம் பாதம் – புத்திரசீவி

சித்திரை

1 ம் பாதம் - வில்வம்

2 ம் பாதம் - புரசு

3 ம் பாதம் - கொடுக்காபுளி

4 ம் பாதம் - தங்க அரளி

சுவாதி

1 ம் பாதம் - மருது

2 ம் பாதம் - புளி

3 ம் பாதம் - மஞ்சள் கொன்றை

4 ம் பாதம் - கொழுக்கட்டை மந்தாரை

விசாகம்

1 ம் பாதம் - விளா

2 ம் பாதம் - சிம்சுபா

3 ம் பாதம் - பூவன்

4 ம் பாதம் – தூங்குமூஞ்சி

அனுஷம்

1 ம் பாதம் - மகிழம்

2 ம் பாதம் - பூமருது

3 ம் பாதம் - கொங்கு

4 ம் பாதம் – தேக்கு

கேட்டை

1 ம் பாதம் - பலா

2 ம் பாதம் - பூவரசு

3 ம் பாதம் - அரசு

4 ம் பாதம் – வேம்பு

மூலம்

1 ம் பாதம் - மராமரம்

2 ம் பாதம் - பெரு

3 ம் பாதம் - செண்பக மரம்

4 ம் பாதம் – ஆச்சா

பூராடம்

1 ம் பாதம் - வஞ்சி

2 ம் பாதம் - கடற்கொஞ்சி

3 ம் பாதம் - சந்தானம்

4 ம் பாதம் – எலுமிச்சை

உத்திராடம்

1 ம் பாதம் - பலா

2 ம் பாதம் - கடுக்காய்

3 ம் பாதம் - சாரப்பருப்பு

4 ம் பாதம் – தாளை

திருவோணம்

1 ம் பாதம் - வெள்ளெருக்கு

2 ம் பாதம் - கருங்காலி

3 ம் பாதம் - சிறுநாகப்பூ

4 ம் பாதம் – பாக்கு

அவிட்டம்

1 ம் பாதம் - வன்னி

2 ம் பாதம் - கருவேல்

3 ம் பாதம் - சீத்தா

4 ம் பாதம் – ஜாதிக்காய்

சதயம்

1 ம் பாதம் - கடம்பு

2 ம் பாதம் - பரம்பை

3 ம் பாதம் - ராம்சீதா

4 ம் பாதம் – திலகமரம்

பூரட்டாதி

1 ம் பாதம் - தேமா

2 ம் பாதம் - குங்கிலியம்

3 ம் பாதம் - சுந்தரவேம்பு

4 ம் பாதம் – கன்னிமந்தாரை

உத்திரட்டாதி

1 ம் பாதம் - வேம்பு

2 ம் பாதம் - குல்மோகர்

3 ம் பாதம் - சேராங்கொட்டை

4 ம் பாதம் – செம்மரம்

ரேவதி

1 ம் பாதம் - பனை

2 ம் பாதம் - தங்க அரளி

3 ம் பாதம் - செஞ்சந்தனம்

4 ம் பாதம் - மஞ்சபலா ரேவதி

றுபது ஆண்டுகளுக்கு ஒருமுறைதான் மேஷ ராசியில் சனியும் குருவும் சந்திப்பார்கள். அதனையடுத்து வரும் அறுபது ஆண்டுகளிலும் ஒவ்வொரு ஆண்டுகளிலும் இவ்விரு கிரகங்களின் சஞ்சார நிலைகளுக்கேற்பவே இந்த வருஷாதி விருக்ஷங்களை வகுத்தளித்துள்ளார்கள் நமது முன்னோர்கள். குரு மற்றும் சனியின் நிலையை ஒட்டியே ஒருவரின் ஜீவன, குடும்ப & பொருளாதாரச் சூழல் அமையும். எனவே குறிப்பிட்ட ஆண்டில் பிறந்தவர்கள் அவர்களுக்கான பிறந்த ஆண்டின் விருக்ஷங்களை நட்டு பராமரித்து வந்தால் அவர்களின் வாழ்க்கை சூழல் நன்கமையும்.

பின்வருவன வருஷாதி விருக்ஷங்கள்.

**வருஷாதி விருட்சங்கள்**

1.பிரபவ - கருங்காலி மரம்

2.விபவ - அக்ரூட்மரம்

3.சுக்ல - அசோக மரம்

4.பிரமோதூத -

5.பிரஜோர்பத்தி - பேயத்தி மரம்

6.ஆங்கீரஸ - அரசுமரம்

7.ஸ்ரீமுக - அரைநெல்லி

8.பவ - அலயாத்தி

9.யுவ - அழிஞ்சில் மரம்

10.தாது - ஆச்சாமரம்

11ஈஸ்வர - ஆலமரம்

12.வெகுதான்ய - இலந்தை மரம்

13.பிரமாதி - தாளைபனைமரம்

14.விக்ரம - இலுப்பை மரம்

15.விஷு - ருத்திராட்சம்

16.சித்ரபானு - எட்டி மரம்

17.சுபானு - ஒதியம்

18.தாரண - கடுக்காய் மரம்

19.பார்த்திப - கருங்காலி மரம்

20.விய - கருவேலமரம்

21.சர்வஜித் - பரம்பை மரம்

22.சர்வதாரி - குல்மோகூர்மரம்

23.விரோதி - கூந்தல் பனை

24.விக்ருதி - சரக்கொன்றை

25.கர - வாகை மரம்

26.நந்தன - செண்பகம்

27.விஜய - சந்தனம்

28.ஜய - சிறுநாகப்பூ

29.மன்மத - தூங்குமூஞ்சி மரம்

30.துர்முகி - நஞ்சுகண்டாமரம்

31.ஹேவிளம்பி - நந்தியாவட்டை

32.விளம்பி -

33.விகாரி - நாவல்

34.சார்வரி - நுணாமரம்

35.பிலவ - நெல்லி மரம்

36.சுபகிருது - பலா மரம்

37.சோபாகிருது - பவழமல்லி மரம்

38.குரோதி - புங்கம் மரம்

39.விசுவாவசு - புத்திரசீவிமரம்

40.பராபவ - புரசுமரம்

41.பிலவங்க - புளிய மரம்

42.கீலக - புன்னை மரம்

43.சௌமிய - பூவரசு மரம்

44.சாதாரண - மகிழமரம்

45.விரோதிகிருது - டம்பை

46.பரிதாபி - மராமரம்

47.பிரமாதீச - மருதமரம்

48.ஆனந்த - மலைவேம்பு

49.ராட்சஸ - மாமரம்

50.நள - முசுக்கொட்டை மரம்

51.பிங்கள - முந்திரி

52.காளயுக்தி - கொழுக்கட்டை மந்தாரை

53.ஸித்தார்த்தி - தேவதாரு

54.ரௌத்ரி - பனை மரம்

55.துன்மதி - ராமன்சீதா

56.துந்துபி - மஞ்சள் கொன்றை

57.ருத்ரோத்காரி- சிம்சுபா

58.ரத்தாக்ஷி

59.குரோதன - சிவப்புமந்தாரை

60.அட்சய - வெண்தேக்கு

****************************************************************************************************

# வாஸ்து சாஸ்திரம்

இந்த உலகத்தில் பஞ்ச பூதங்களின் ஆளுமையைப் பற்றி உங்களு க்கு சொல்லத் தேவையில்லை. அப்படிப்பட்ட இவைகள் நம் வீட்டி னுள்ளும் தன் ஆளுமையை நீட்டி கிறது. அதனால் தான் ஒருவனுக்கு தான் வசிக்கும் வீடு மிகவும் முக்கியமானதாக அமைகிறது. வீட்டில் அமைதி நிலவி செல்வம் பெருக நேர்மறை சக்திகள் குடியிருக்க வேண்டும்.

இன்றுள்ள சிக்கலான சூழ்நிலையில், உடல் ஆரோக்கியம், சொத்து மற்றும் சொந்த பந்தங்களுடன் ஏற்படும் பிரச்சனைகளுக்கான காரணிகளை ஆராயக் கூட நமக்கு நேரம் கிடைப்பதில்லை. பெரும்பாலான இந்த பிரச்சனைக்கு வாஸ்து சாஸ்திரம் மற்றும் ஃபெங்சூயிக்கும் (Feng Shui) சம்மந்தம் உள்ளது. ஆகவே சில கட்டளை களை பின்பற்றினால், வீட்டிலுள்ள நேர் மறை சக்திகூடும். மேலும் வாஸ்து மற்று ம் ஃபெங் சூயி வல்லுநர்களிடம் இருந்து பெறப்பட்ட சில டிப்ஸ் களை பயன்படுத்தினால், வாழ்க்கை இனிமை யாக அமையும். அத்தகைய டிப்ஸ்களை உங்களுக்காக கொடுத்து ள்ளோம்.

அதைப் படித்து பின்பற்றி பாருங்கள்...

வாஸ்து முறையில் பணக்காரராக சில இரகசியங்கள்

வாஸ்து முறையில் பணக்காரராக சில ரகசியங்கள் வாஸ்து என்பது மிகவும் அற்புதமான ஒரு சாஸ்திரம். இதை சரியான முறையில் பின்பற்றினால் நீங்கள் வாழ்வில் உயர்ந்து கொண்டே போகலாம். ஆனால், அதில் தவறு ஏற்பட்டால், நீங்கள் அதள பாதாளத்தில் விழுந்து விடுவீர்கள் என்பதையும் மறந்துவிடக்கூடாது.

உங்கள் கையில் அடிக்கடி பணம் வந்து கொண்டிருக்க வேண்டுமானால் நீங்கள் தூங்கும் போது மேற்குப் பக்கம் தலை வைத்துப் படுக்க வேண்டும். அதாவது, நீங்கள் தூங்கும் போது உங்கள் தலை மேற்குப் பக்கமாக இருக்க வேண்டும். சூரியன் உதிக்கும் பக்கத்திற்கு எதிர்ப்பக்கமாக இருப்பது மேற்கு பக்கம். இந்த பக்கம் தலை வைக்கும் விதத்தில் உங்கள் கட்டிலை திருப்பி வைத்துக்கொள்ளுங்கள். எவ்வளவுதான் கஸ்டப்பட்டு வேலை செய்தாலும் அதற்கு ஏற்ற விதத்தில் பணம் கிடைக்காமல் வேதனைப்பட்டுக் கொண்டிருப்பவர்களுக்கு இந்த முறை நிறையவே பயன்தரும். எக்காரணம் கொண்டும் வடக்குப் பக்கம் தலை வைத்துப்படுக்காதீர்கள். இப்படி செய்வதன் மூலம் நீங்கள் சோம்பேறிகளாகி விடுவீர்கள்.

பணம் அதிகமாக கைமாறும் காரியம் ஒன்றில் நீங்கள் கலந்துகொள்ளச் செல்லும் போது, காணி விற்றல், வீடு கட்டல், சிகப்பு அல்லது இளம் சாம்பல் நிற உடைகளை அணிந்து செல்லுங்கள். உடைகள் இல்லையென்றால் இந்த நிறத்தில் கைக்குட்டை ஒன்றையாவது எடுத்துச் செல்லுங்கள். இதனால் சில அதிசயங்களும் நடப்பதற்கு வாய்ப்பு இருக்கிறது.

உங்கள் வீட்டில் உள்ள குழாய்களில் அடிக்கடி தண்ணீர் ஒழுகிக் கொண்டிருக்கிறதா என்பதில் கவனமாக இருங்கள் சில வீடுகளில் உள்ள பைப்புகளில் பார்த்தால் சொட்டுச் சொட்டாக தண்ணீர் ஒழுகிக் கொண்டே இருக்கும் இப்படி நடப்பதனால் அந்த வீட்டில் செலவு அதிகமாகவே இருக்கும். இதேபோல், வீட்டினுள் எந்தப் பகுதியிலும் ஈரத்தன்மை இல்லாமலும், பூசணம் பிடிக்காமலும் வைத்திருப்பதில் கவனமாக இருங்கள்.

உங்கள் வீட்டில் உள்ள கிழக்குப் பகுதியில் எந்த இடத்திலாவது சில்லறை காசுகள் போட்ட பானை ஒன்றை வையுங்கள். இதற்காக சிறுவர்கள் கூட்டாஞ்சோறு ஆக்கும் பானை ஒன்றை நீங்கள் பயன்படுத்துவதுதான் சிறப்பு. இந்த பானை நிறைய மாற்றப்பட்ட சில்லறைக் காசுகளைப் போட்டு அதன் வாயை மூடாமல் கிழக்கு பக்கத்தின் ஒரு பகுதியில் வையுங்கள். முக்கியமான ஒரு விஷயம் என்னவென்றால், இப்படி ஒரு பானை அந்தப் பகுதியில் இருப்பது எவருக்கும் தெரியக்கூடாது. அதாவது, யாருடைய பார்வையிலும் படாத ஓர் இடத்தில் தான் இந்தப் பானையை வைக்க வேண்டும். சாதாரண அறைகளில் குடியிருப்பவர்கள் கிழக்கு பக்கத்தில் உள்ள ஓர் இடத்தில் இந்தப் பானையை வைக்கலாம். இப்படி செய்வதன் மூலம் உங்களுக்கு மேலதிகமாக பணம் வந்து சேருவதை நீங்கள் அனுபவ ரீதியாக பார்த்துக் கொள்ளலாம்.

உங்களது சாப்பாட்டு அறையில் பிரேம் போட்ட வட்ட வடிவமான கண்ணாடி ஒன்றை மாட்டி வையுங்கள். இதிலும் முக்கியமான ஒரு விஷயத்தை நீங்கள் கவனிக்க வேண்டும். அதாவது, சாப்பாட்டு அறை சுவற்றில் மாட்டப்படும் அந்தக் கண்ணாடியில் மேசைமீதுள்ள உணவுவகைகள் தெரிய வேண்டும். இப்படி செய்வதன் மூலம், உங்களுக்குக் கிடைக்கும் பணம் இரண்டு மடங்காக அதிகரிக்கும் வாய்ப்பு ஏற்படும்.

உங்கள் வீட்டுக்குள் தென்கிழக்குப் பகுதி எது என்பதைக் கண்டுபிடித்து அந்தப் பகுதியில் ஒன்பது மீன்கள் கொண்ட மீன் தொட்டி ஒன்றை வையுங்கள். இதிலும் முக்கியமான ஒரு விஷயத்தில் கவனம் செலுத்த வேண்டும். அதாவது தொட்டியில் இருக்கும் மீன்களின் எண்ணிக்கை ஒன்பதாகத்தான் இருக்க வேண்டும். அதில் எட்டு மீன்கள் கோல்பிஷ் என்று சொல்லப்படும் மீன்களும் (சிவப்பு அல்லது பொன்நிறம்) ஒரு மீன் கருப்பு நிறத்திலும் இருக்க வேண்டும். இப்படிச் செய்வதன் மூலம் பணமும் அதிர்ஸ்டமும் உங்களை நோக்கி பாசக்கரம் நீட்டும்

வாஸ்து பொதுவான - குறிப்புகள்




கிழக்கு - குடிநீர் ஆதாரம்
தென் கிழக்கு .. சமையலறை
தெற்கு ... இரண்டாவது சந்ததியர் புழங்கும் படிப்பறை மற்றும் படுக்கையறை
மேற்கு .. சந்தததியர் படுக்கை அறை
வடமேற்கு .. டாய்லெட் மற்றும் கழிவு நீர் குறித்த நன்மை
வடக்கு ... குபேரனது திசை என்பதால் சுத்தமாக வைத்துக் கொள்ளும் படியாக அமைக்கவும்.
வடகிழக்கு.. இது நேரடியான குடிநீர் ஆதாரம் தருவதாகும்.

மேற்குறிப்பிட்ட விளக்கங்களுடன், மனையில் உள்ள அறைகள் கீழ்க்கண்டவாறு உள்கூடு அளவுகள் அமைத்து (நீள அகலங்கள்) சிறப்பாக செயல்பட வேண்யுள்ளது. கடவுள் அருள் கிடைக்கும் வீட்டில் சுபிட்சம் பொங்கும். செல்வமும், போகமும் தேடி வரும். குடும்பத்தில் மகிழ்ச்சியும் உற்சாகமும், நிறைந்திருக்கும்

6 அடி பலன்- நன்மை ஏற்படும்

7 அடி பலன்- தரித்திரம் பிடுங்கி தின்னும்
8 அடி பலன்
வாழ்க்கையில் படிப்படியாக முன்னேற்றங்கள் உண்டாகும். உயர்ந்த பதவிகள் கிட்டும். பொருளாதார நிலை மிக வேகமாக உயர்ந்துவிடும். தெய்வ அருள் உண்டு.

9 அடி பலன்- துன்பம் துயரம்

10 அடி. பலன் பொருளாதார நிலையில் சரிவு என்பதே ஏற்படாது. செல்வநிலை மேலும்,

மேலும் உயர்ந்து கொண்டே போகும். எதிர்பாராத வகையில் பொருள் வரவு ஏற்படும். திடீர் யோகம் உண்டு.

11 அடி பலன்எந்த காரியத்திலும் தோல்வி என்பதே ஏற்படாது. வெற்றிக்கு மேல் வெற்றியாகக் குவியும். குடம்பத்தில் குதூகலம் நிலவும் செல்வ நிலை உயரும்.

12 அடி பலன்- துயரம் புத்திரசோகம்

13 அடி பலன்- துன்பம் நோயினால் அவதி

14 அடி பலன்- பொருள் இழப்பு, கவலை

15 அடி பலன்- துன்பம் துயரம்

16 அடி பலன் சமுதாயத்தில் தனிப்பட்ட செல்வாக்கு உண்டாகும். பொருளாதார நிலை மிக வேகமாக உயரும் பலவகையான பொருள்கள் சேரும். குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவும்.

17 அடி பலன் தொழில் அல்லது வியாபாரத்தில் நிறைந்த வருமானம் கிடைக்கும். எதிரிகளை எளிதாக வீழ்த்த முடியும். எந்த காரியத்திலும் வெற்றி காணலாம்.
18 அடி பலன்- கைப்பொருள் இழப்பு, வீடு அழியும்

19 அடி பலன்- புத்திர பாக்கியம் கிடையாது, வறுமை உண்டு

20 அடி பலன் பண்ணைத் தொழிலில் சிறப்பான லாபம் ிகடைக்கும். பல கைகளிலும் வருமானம் பெருகும். உ்லாசமான வாழ்க்கை அமையும். மனதில் மகிழ்ச்சி நிறைந்திருக்கும்.

21 அடி பலன் வாழ்க்கையில் தோல்வி என்பதே ஏற்படாது. எல்லா முயற்சிகளிலும் வெற்றியே கிடைக்கும். பொரளாதார நிலை மிகச் சிறப்பாக இருக்கும். பொன்னும பொருளும் சேரும்.

22 அடி பலன் மனதில் தைரிய உணர்வு மேலோங்கி யிருக்கும். எதிரிகளின் சதித் திட்டங்களை எளிதாக முறியடிக்க முடியும், வீண் பழிகள் வேகமாக அகலும்.

23 அடி பலன்- கெடுதி ஏற்படும்

24 அடி பலன்- வரவும் செலவும் சமம்

25 அடி பலன்- மனைவிக்கு கண்டம்

26 அடி பலன்
உற்சாகமும், உல்லாசமும் நிறைந்த வாழ்க்கை அமையும். போகமும் யோகமும் தேடிவரும். பொருளாதர நிலை செழித்தோங்க, பொன்னும் பொருளும் சேரும்.

27 அடி பலன்
பொது வாழ்க்கையில் புகழும் செல்வாக்கும கிட்டும். பலரும் வலிய வந்து, உதவி செய்வார்கள். அதிகாரம் செய்யக் கூடிய பதவிகள் தேடிவரும்.

28 அடி பலன்
கடவுள் அருள் உண்டு. வேதனைகளும், துன்பங்களும். விலகி ஓடும். இன்பமாக வாழக்கை அமைக்க எல்லா முயற்சிகளிலும எளிதாக வெற்றி கிட்டும்.

29 அடி பலன்
பண்ணைத் தொழிலில் பால் வியாபாரம் ஆகியவற்றில் நிறைந்த லாபம் கிட்டும். வாழ்க்கயைில் சிறந்த முன்னேற்றங்களைக் காணலாம். மனதில் மகிழ்ச்சி நிறைந்திருக்கும்.

30 அடி பலன்
புத்திர பாக்கியம் தாராளமாக இரக்கும். எதிர்பாராத சொத்துக்கள் கிட்டும். திடீர் யோகம் உண்டு. பொருளாதார நிலை மகவும சிறப்பாக இருக்கும்.

31 அடி பலன்
நல்லவர்கள் நாடிவந்து உதவி செய்வார்கள். தீயவர்கள் விலகியோடுவார்கள். பொன்னும் புகழும் கிட்டும். வாழ்க்கையில் உயர்வான நிலை உண்டாகும் காரியசித்தி உண்டு.

32 அடி பலன் - செல்வ அபிவிருத்தி, வெளிநாடு பயணம்
33 அடி பலன்- வாழ்க்கையின் நிலை உயரும்
34 அடி பலன்- இடமாற்றம் ஏற்படும்
35 அடி பலன்- திருமகள் அருள்
36 அடி பலன்- சுகபோக வாழ்க்கை ஏற்படும்
37 அடி பலன்- செய்தொழில் முன்னேற்றம்
38 அடி பலன்- வறுமை, துன்பம்
39 அடி பலன்- நல்ல வாழ்வு
40 அடி பலன்- விரோதிகள் வலிமை பெறுவர்
41 அடி பலன்- செல்வம் பெருகும்
42 அடி பலன்- அஷ்டலட்சுமி வாசம்
43 அடி பலன்- நன்மை ஏற்படாது
44 அடி பலன்- பெரிய இழப்பு உண்டாகும்
45 அடி பலன்- மக்கள் செல்வம் அதிகரிக்கும்

46 அடி பலன்- வறுமை, நோய்
47 அடி பலன்- பொருள் இழப்பு
48 அடி பலன்- தீயினால் ஆபத்து
49 அடி பலன்- தவறுகள், இழப்புகள்
50 அடி பலன்- நன்மை உண்டாகாது
51 அடி பலன்- வீண் தொல்லைகள்
52 அடி பலன்- பொருள் அபிவிருத்தி
53 அடி பலன்- பெண்களால் பொருள் நட்டம்
54 அடி பலன்- அரசின் சீற்றம்
55 அடி பலன்- உறவினர் விரோதம்
56 அடி பலன்- குடும்ப விருத்தி
57 அடி பலன்- சந்ததி நாசம்
58 அடி பலன்- கண்டம் ஏற்படும்
59 அடி பலன்- கவலைகள் வறுமை
60 அடி பலன்- செய்தொழில் அபிவிருத்தி

பொதுவாக வீடு கட்டும் தாய், தந்தை மூத்த சகோதரர், ஆசிரியர், மூத்த உறவினர்கள் வாழும் பகுதிக்கு வடக்கு திசையிலும், கிழக்குத் திசையிலும், தான் மனை வாங்க வேண்டும்.. என்பது சாஸ்திரங்கள் கூறும் கருத்தாகும்.

**வீட்டின் பகுதிகள்**

அலுவலக அறை வடமேற்கு திசை
புத்தக அறை தென்மேற்குத் திசை
சமையல் அறை தென் கிழக்குத் திசை
உணவு புசிக்கும் அறை தெற்குத் திசை
படுக்கை அறை மேற்கு, வடகிழக்குத் திசைகள்
பூஜை அறை மேற்கு, வடகிழக்குத் திசைகள்
குளியல் அறை கிழக்கு திசை
சேமிப்பு அறை வடக்கு திசை.
கழிவறை வட மேற்கு திசை.

வாஸ்து முறையுடன் அமைந்த வீட்டில் அமைதியும், அன்பும்,செல்வமும் பொங்கி வழியும். இங்கு முக்கியமான மூலைகளான ஈசான மூலை, அக்னி மூலை, குபேர

மூலை, நிருதி ஆகிய மூலைகளில் இருக்கவேண்டிய, இருக்கக்கூடாத பொருட்களைப்பற்றிப் பார்ப்போம்.




எப்போதும் வீட்டின் நடுவே நின்று திசைக்காட்டியின் உதவி யோடு திசை களை அறிந்துக்கொள்ளுங்கள். வீட்டின் முதன்மை வாசல் கதவு வழியாகத் தான் நேர்மறை சக்தி வீட்டிற்குள் நுழையும். ஆகவே வாங்கும் புது மனையின் வாசற்கதவு, தென்மேற்கு திசையை நோக்கி இருக்காத படி பார்த்துக் கொள்ளுங்கள். ஏனென்றால் இந்த திசை தான் தீய சக்திகளின் நுழை வாயில். அது நமக்கு கஷ்டங்களை யும் துரதிஷ்டத்தையும் தரும். ஏற்கனவே வீட்டின் கதவு இந்த திசை யில் இருந்தால், இரண்டு அனுமான் கடவுளின் படம் இருக்கும் டைல் கல்லை வாசலுக்கு வெளியில் பதித்து விடுங்கள். அப்புறம் பாருங்கள் மாற்றத்தை.

கோவில் அல்லது பீடம் தான் அனைத்து வாஸ்து சாஸ்திரங்களுக்கும் சக்கரவர்த்தி. அதனால் பூஜை அறையை வடகிழக்கு திசையில் அமைத்திடுங்கள்; அனைத்து நன்மைகளும் வந்து சேரும். மேலும் வணங்கும் போது கிழக்கு திசையை நோக்கி வணங்க வேண்டும்.

**ஈசான மூலை**

ஈசான மூலை (வடகிழக்கு) வழியேயே சகலசௌபாக்கியங்களும் வீட்டிற்குள் வருகின்றது, எனவே இம்மூலையை சுத்தமாக வைக்க வேண்டும். ஈசான மூலையில் பூஜையறை, குழந்தைகள் படிப்பறை,படுக்கையறை, வயதுமுதிர்ந்தவர்களின் படுக்கையறைகளை அமைக்கலாம். ஈசான மூலையை அடைப்பதுபோல் நிலைப்பேழை வைக்கக்கூடாது. அம்மி, ஆட்டுக்கல், விறகு சுமை, தேவையற்ற பழைய பொருட்களையும் அடைத்து வைக்கலாகாது. வீட்டின் பிரதான ஈசான மூலையில் கழிப்பறை, குளியலறை, செப்டிக்டேங்க்,துணிதுவைக்கும் கல் போன்றவைகள் இருக்கக்கூடாது. பரணில் ஈசான மூலையில் பொருட்களை வைக்கக்கூடாது. வீட்டின் ஈசான மூலை கீழ்நிலைத் தொட்டி, கிணறு போன்றவை அமைக்க வேண்டிய இடம்,ஈசான மூலையில் நீரோட்டம் இல்லாத போது, தென்மேற்கு,தென்கிழக்கு தவிர்த்து கிணறு தோண்டவும், பிறகு ஈசான மூலையில் கீழ்நிலைத் தொட்டி அமைக்கவும். வடகிழக்கு

மற்றும் வடக்கு திசைகளில் கனமான பொருட்களான பீரோவை வைக்கக் கூடாது. அது நம் பண விரயத்துக்கு தடை போதும்.
பூஜை பொருட்களை அல்லது கடவுள் படங்களை ஏதாவது உத்திரம் அல்லது நிலை அடுக்கின் கீழ் வைக்க கூடாது. அப்படி வைத்தால் அது மன அழுத்தத்தை தரும்.

**அக்னி மூலை**

அக்னி மூலை- தென்கிழக்கு மூலை. இங்கு சமையற்கூடம் இருக்க வேண்டும்.
பெண்களின் மன, உடல் நலத்தின்மீது ஆதிக்கம் செலுத்தும் மூலை ஆதலால் பழுதில்லாமல் அமைக்க வேண்டும். வீட்டின் பிரதான அக்னி மூலையில் சமையற்கூடம் அமைக்க இயலா விடினும் சமையற்கட்டின் அக்னி மூலையில் அடுப்பு (மண்ணெண்ணை,எரிவாயு,போன்றவை) இருக்கும் படி பார்த்துக்கொள்ளவும்.
விதிவிலக்காக வாயு (வடமேற்கு) மூலையில் சமையற்கூடமும், அடுப்பும் அமைக்கலாம். அக்னி மூலையில்
குடிநீர்,நிலைப்பேழை, கழிப்பறை, குளியலறை, இருக்கக்கூடாது. வீட்டின் பிரதான அக்னி மூலையில் கிணறு,கழிப்பறை, குளியலறை, கழிவுத் தொட்டி,(செப்டிக்டேங்க்) துணிதுவைக்கும் கல் போன்றவைகள் இருக்கக்கூடாது. வீட்டின் அக்னி மூலையில் மின்சாதனங்களை வைக்கலாம்.

சமையலறை என்பது வளமையை குறிக்கும் இடமாகும். அதனால் இந்த இடம் தென்கிழக்கு திசையில் இருக்க வேண்டும். வடகிழக்கு திசையில் சமையலறை அமைந்தால், வீட்டில் பணம் மற்றும் உடல்நல பிரச்சனைகள் ஏற்படும். ஒரு வேளை வடகிழக்கு திசையில் இது இருந்தால், மூன்று வெண்கல பாத்திரத்தை தலைகீழாக உட்கூரையில் தொங்க விடுங்கள்; ஆனால் அது அடுப்பை நோக்கி தொங்கக் கூடாது.

**குபேர (வடக்கு)மூலை**

செல்வம் தங்கவும், பணவிருத்திக்கும் குபேர (வடக்கு)மூலை,

**நிருதி (தென்மேற்கு) மூலை**

நிருதி (தென்மேற்கு) மூலையில் பணப்பெட்டி, நிலைப்பேழை வைக்கவும், சுவற்றில் பணப்பெட்டியை பதிப்பதாயின் நிருதியில் பதிக்கவும்.

.வீதியைப்பார்த்துத் தான் வாயிற்படியை அமைக்க முடியும், எனவே,தெற்கு, மேற்கு வாயிற்படிகள் தவிர்க்க முடியாதவைகளே, தெற்கு,மேற்கு திசையில் தலைவாயில் அமைக்கும்படி நேரினும், ஈசானமூலை, அக்னிமூலையை சரியாக அமைத்துக் கொண்டால் போதும். தெற்கு, மேற்கு தலைவாயில் அமைந்த வீட்டின் கொல்லைப்புறமாக ஈசான,
அக்னி மூலைகள் அமைவதை கவனிக்கவும்.

**வாயு மூலை**

கழிப்பறை,குளியல் அறைகளை வடமேற்கு (வாயு) மூலையில் அமைக்கவும். சில இடங்களில் விதிவிலக்காக இந்திரன் (கிழக்கில்) மூலையில் கழிப்பறை அமைக்கலாம்.

குளியலறை மற்றும் கழிப்பறையில் நரகத்தின் சக்தி இருப்பதால், இந்த அறை வடமேற்கு அல்லது கிழக்கு திசையில் இருக்க வேண்டும். கண்டிப்பாக வடக்கு அல்லது வடகிழக்கு திசையில் இருக்கக் கூடாது. அப்படி இருந்தால் வீட்டில் பணம், உடல்நிலை மற்றும் கல்வியில் பிரச்சனைகள் இருக்கும்.

நிருதியில் (தென்மேற்கில்) படுக்கையறையில் அட்டாச்டு பாத்ரூம் வேண்டின் அந்த அறையின் தென்மேற்கு மூலையில் அமைக்கவும்,முதன்மை படுக்கை அறை தான் உறுதிப்பாடு என்ற கதவுக்கு சாவி. அது தென்மேற்கு திசையில் இருக்க வேண்டும். மேலும் தூங்கும் போது தலை தெற்கு அல்லது மேற்கு திசை நோக்கி இருக்க வேண்டும். ஆனால் கண்டிப் பாக வட கிழக்கு திசையில் தூங்கக் கூடாது. படுக்கை அறையில் தையல் மெஷின்களை வைத்திருந்தால் கணவன் மனைவிக்கும் இடையே அடிக்கடி சண்டை வரும் .தண்ணீர் அல்லது நீரூற்றின் படங்களை படுக்கையறையில் மாட்டக்கூடாது. இது உங்களை வெகுவாக பாதிப்புக்குள்ளாக்கும்.

**மையப் பகுதி**

வீட்டின் மையப் பகுதி வீட்டின் மூக்கைப் போன்றது. இங்கே தான் நம் வீடு மூச்சு விடுகிறது. அது திறந்த வெளியாகவும், குப்பையாக வும் இருக்கக் கூடாது. இங்கே சுவரிருந்தால் வயிற்று பிரச்சனை மற்றும் பணப்பிரச்சனை வரக்கூடும். அதனால் ஒரு ஜீரோ வாட்ஸ் நீல பல்பை24 மணி நேரமும் எரிய விடுவது நல்லது.

வீட்டில் எந்த திசையிலாவது வெட்டு அல்லது வளைவுகள் இருந் தால், அது வீட்டை பாதிக்கும். முக்கியமாக தென் மேற்கு, வடக்கு, வட கிழக்கு, தென் கிழக்கு திசைகளில் இருந்தால், பெரிய பிரச்சனைகள் ஏற்படும். இதன் பின்னணியில் பல ரகசியங்கள் அடங்கியிருக்கிறது.

மிகவும் அடர்த்தியான வண்ணங்களை கொண்டு சுவற்றில் வர்ணங்களை பூச கூடாது. முக்கியமாக சிவப்பு மற்றும் செந்நீலம் நிறங்கள். இது நோயை உண்டாகும் சக்தியை தூண்டும். போன்சாய் மரங்களை வீட்டினுள் வளர்க்காதீர்கள். அது நீங்கள் இருக்கும் துறையில், வளர்ச்சிக்கு தடை போடும்.

வீட்டு தரையை வாரம் இரண்டு முறை, உப்புள்ள கடல் தண்ணீரால் துடைத்தால், வீட்டில் இருக்கும் எதிர்மறையான சக்திகள் ஓடியே போகும்.

வாக்குவாதங்கள் வீட்டை ஆக்கிரமித்து இருக்கிறதா? அப்படியானால் நல்ல பாடல்களை, தினமும் நான்கு அல்லது ஐந்து முறை ஒலிக்க விட்டால், வீட்டில் அமைதி நிலவும்.

**வாயிற்படி, அறைகளின் அளவு**

வாயிற்படி. வீட்டின் தலைவாயிற்படி முக்கியமாக கவனிக்கத்தக்க அம்சமாகும், பொதுவாக கிழக்கு,வடக்கு திசைகளில் தலைவாசல் இருப்பின்

நலம், தெற்கு, மேற்குவாசல் படி இருப்பின். கொல்லைப்புறம் வடகிழக்கு, தென்கிழக்காக அமைந்து ஈசானமூலையும், அக்னி மூலையும் பலம் இழக்க பழுதுபட நேரிடும்,

மனையடிப்படி, அறைகளின் அறைகளின் உட்கூடுஅளவுகளில்7,9,12,13,14,15, கண்டிப்பாகத் தவிர்க்கப்படவேண்டும். முழுமையான அளவுகளில் உட்கூடு அமைவுது அவசியம், இடம் வீணாகக்கூடது என8.5,7.5,10.5 போன்ற அளவுகளைத்தவிரக்கவும். மாடிப்படிகளுக்கு அடியில் இடத்தைப்பொருத்து சாமான் வைப்பறை வைக்கலாம். மாடிப்படிக்கட்டுக்கள் வடக்கு, வடகிழக்கு,தென்கிழக்கு, கிழக்கு பக்கங்களை அடைக்கும் படிக்கட்டக்கூடாது. தெர்கிலிருந்து வடக்காகவும், மேற்கிலிருந்து கிழக்கு நோக்கியும் செல்லும்படி மாடிப்படிக்கட்டுக்களை அமைத்தல் நலம்.

**தொழில் வாஸ்து**

தொழில் நிறுவனங்கள், கடைக்களுக்கும் வாஸ்து பார்க்க வேண்டுமா என்ற கேள்வி இயல்பானது,தொழிற்சாலைகள் முதல் ஒரு சிறிய கடை வரை வாஸ்துபடி அமையின் அதன் வளர்ச்சி அபரிமிதமாக இருப்பதை அனுபவப்பூர்வமாக கண்டுஉள்ளோம், அலுவலகத்தில் எந்த தைசையில் இருந்து வரும் வாடிக்கையாளர்களை எதிர் நோக்க வேண்டும், நாம் எந்த திசையில் அமர வேண்டும் என்று பார்ப்போம்.

வாடிக்கையாளர்கள் உள்நூழையும் போது அவர்களுக்கு முதுகைக்காட்டியபடி அமரக்கூடாது, அடுத்து அவர்கள் வடக்கில் அமர்ந்து நாம் தெற்கே அமரக்கூடாது,

தென்மேற்கில் அமர்ந்து கிழக்கு நோக்கி இருக்கலாம், வடக்கில் இருந்து கிழக்கிலிருந்து வரும் வாடிக்கையாளர்களை, தெற்கிலிருந்து வரும் வாடிக்கையாளர்களை வரவேற்கலாம். நமக்குப்பின் நம் முன்னோர்களின் படங்களை வைக்கலாமா என்ற சந்தேகம் சிலருக்கு உண்டு தாராளமாக வைக்கலாம். நமக்குப்பின்னே அழகிய இயற்கைக்காட்சிகள், மலைகள், ஓடும் குதிரை படங்களை வைக்கலாம், நம் அலவலகத்தின் வடகிழக்கு முலையில் தண்ணீர்விட்டு அதில் மலர்களைப்போட்டு வைக்கலாம், மணிக்கொடி போன்ற நிழலில் வளரும் செடிகளை வைக்கலாம். பணப்பெட்டி அல்லது பீரோ தென்மேற்கில் இருப்பது மிக நல்லது. கல்லாப்பெட்டியை கைக்குலாவகமாக வைத்துக்கொண்டு தென்மேற்கில் பீரோவைத்து பயன் படுத்தலாம், தெந்கிழக்கு,வடகிழக்கு, வடமேற்கில் பீரோ வைப்பதை கண்டிப்பாக தவிர்க்கவும்.

**வாஸ்து குறைகளைப்போக்கும் சிறுபரிகாரங்கள்.**

ஈசான மூலையில் ( வடகிழக்கு) சிறிய பாத்திரத்தில் தண்ணீர் விட்டு வைத்தல். வண்ண மீன்தொட்டி வைத்தல். பசுமையான செடிகளை வளர்த்தல் (மணிக்கொடி போன்றவை)
மஞ்சள் குழைத்து வீட்டுக்கதவு சன்னலில் சுவஸ்திக், ஓம், சூலம் போன்ற குறிகளை இடல்,

மாவிலைத்தோரணம் கட்டல். அவ்வப்போது பஞ்சகவ்யத்தை
(பசுவின்பால், தயிர், நெய், சாணம் ,கோமயம் ஆகியவற்றின் கலவை)
வீட்டைச்சுற்றியும், உள்ளேயும் தெளித்து விடல்.
இனிமையாக ஒலிக்கும் "வின்ட்செம்"களை வீட்டினுள் கட்டிவிடுதல். பிரமிடுகளை
வைத்தல். பகுவாகண்ணாடியை வீட்டின் தலைவாயிற்படியின் மேல் மாட்டிவிடல்.
தகுந்த மூலைகளில் தக்க பொருட்களை மட்டும் வைத்தல்

**நவக்கிரகங்களும் திசைகளும்**

சுக்கிரனின் ஒளியானது கிழக்கே இந்திர மூலையிலும்,
செவ்வாயின் ஒளியானது தென் கிழக்கே அக்னி மூலையிலும்,
கேதுவின் ஒளியானது தெற்கே ஏமன் மூலையிலும்,
புதனின் ஒளியானது தென் மேற்கே நிருதி மூலையிலும்,
சந்திரனின் ஒளியினாது மேற்கே வருண மூலையிலும்,
ராகுவின் ஒளியானது வடமேற்கே வாயு மூலையிலும்,
குருவின் ஒளியானது வடக்கே குபேர மூலையிலும்,
சனியின் ஒளியானது வடகிழக்கே ஈசான்ய மூலையிலும் பதிகின்றன.
சூரியனின் ஒளியாகப்பட்டது, அண்டம் முழுவதும் பரவியிருக்ககூடியது. இந்த
கிரகங்களின் ஒளியை தான் நாம் கிரக பார்வை ஏன கூறுகின்றோம்.

****************************************************************************************************************

# ஜோதிட கேள்வி பதில்

1 கடன் தொல்லை தீர என்ன வழி?

கடன் ஏற்பட காரணம் பொதுவாக ஜாதக கட்டத்தில் கிரக சேர்க்கை காரணமாக கடன் ஏற்படும். தனகாரகன் குரு, தனஸ்தான கிரகம் பலம் குறைந்து நீச்சம் பெற்று 6, 8, 12ல் மறைந்தால் பொருளாதார பிரச்னைகள் இருக்கும். ஆனாலும் அந்தந்த காலகட்டங்களில் வரும் திசா புக்திகள்தான் கடன் சுமை பிரச்னை அதிகமாவதற்கு காரணம். ஆறாம் அதிபதியுடன் சேரும் கிரகங்கள் மூலம் கடன் பிரச்னைகள் ஏற்படும். ஆறாம் அதிபதியுடன் இரண்டாம் அதிபதி சம்பந்தப்பட்டால் குடும்ப செலவு, சுப விஷயத்துக்காக கடன் வாங்க நேரிடும். மூன்றாம் அதிபதி சம்பந்தப்பட்டால் சகோதரர்களால் பணவிரயம் ஏற்படும். நான்காம் அதிபதி சம்பந்தப்பட்டால் நிலம், விவசாயம், உடல்நலக் குறைவு, தாய் மூலம் பணம் செலவாகும். ஐந்தாம் அதிபதி சம்பந்தப்பட்டால் கல்யாணம், கல்வி வகையில் கடன் ஏற்படும். ஏழாம் அதிபதி சம்பந்தப்பட்டால், மனைவி, நண்பர்கள் மூலம் செலவுகள் இருக்கும். எட்டாம் அதிபதி சம்பந்தப்பட்டால் வீண் செலவுகள் வரலாம். அதே நேரத்தில் திடீர் யோகத்துக்கும் இடமுண்டு. ஒன்பதாம் அதிபதி சம்பந்தப்பட்டால் பூர்வீகச் சொத்துக்களை விற்க நேரிடும். தந்தையால் செலவுகள் இருக்கும். பத்தாம் அதிபதி சம்பந்தப்பட்டால் தொழில், வியாபாரம் மூலம் கடன் ஏற்படும்.

கடன் தீர பரிகாரம்

கடன் தீர சாஸ்திரத்தில் சில பரிகாரங்கள் சொல்லப்பட்டுள்ளது. அஸ்வினி அல்லது அனுஷம் நட்சத்திரம் உள்ள நாளில் அசல் தொகையில் ஒரு பகுதியை கொடுத்தால் கடன் சுமை படிப்படியாக குறையும். செவ்வாய்க்கிழமை செவ்வாய் ஓரையில் கடனை திருப்பித் தரலாம். ஞாயிற்றுக்கிழமையுடன் கூடிய சதுர்த்தி திதியிலும், சனிக்கிழமையுடன் கூடிய சதுர்த்தி திதியிலும், செவ்வாய்க்கிழமையுடன் கூடிய நவமி திதியிலும் குளிகை நேரத்தில் அசல் தொகையில் ஒரு பகுதியை கொடுத்தால் கடன் அடைபடும். தினசரி பக்தியுடனும் நம்பிக்கையுடனும் கந்த சஷ்டி கவசம் படித்து வந்தால் பணப்பிரச்னைகள் காற்றில் பறக்கும். சஷ்டி திதியன்று முருகன் ஸ்தலங்களில் தொடர்ந்து கவசம் படிக்க கடன், வியாதி, சத்ரு பயம் விலகி ஓடும். தினசரி சரவணபவ என்று 108 முறை எழுதி வரலாம். ஓம்ஸ்ரீம் கம்ஸௌம்யாய கணபதியே வரவரத சர்வ ஜனம்மே வசமானய் ஸ்வாஹா.. ஹிருதயாதி ந்யாஸ நிக்விமோக... இந்த மந்திரத்தை தினசரி 108 முறையோ அல்லது அதற்கு மேலோ நம்பிக்கை, சிரத்தையுடன் மனதுக்குள் ஜெபித்து வந்தால் ருணதோஷம் நீங்கும்.

## 2 அரசு உத்தியோகம் பெறும் ஜாதக அமைப்புகள் எப்படி இருக்கும்?

ஜோதிடத்தைப் பொறுத்தவரை 10ஆம் இடம் உத்தியோக ஸ்தானமாக பார்க்கப்படுகிறது. அந்த வகையில் 10ஆம் இடத்தின் அதிபதி 10இல் இருந்தால் அரசு வேலை கிடைக்கும் என ஜோதிட நூல்கள் கூறுகின்றன.
அதேபோல் 10 இடத்து அதிபதி சூரியனுடன் சேர்க்கை பெற்றிருந்தாலும், சூரியனின் நட்சத்திரத்தில் அமர்ந்திருந்தாலும் அரசு உத்யோகம் பெறலாம். அதற்கடுத்தபடியாக 10ஆம் இடத்தில் குரு இருந்தால், மரியாதை தரும் அரசு பதவிகள் கிடைக்கும்.
ஆனால் முக்கியமாக லக்னாதிபதி நன்றாக அமைந்தால்தான், அரசு உத்தியோகம் கூட தடையின்றி அமையும் வாய்ப்பு கிடைக்கும். இதேபோல் லக்னாதிபதியை விட 3ஆம் இடத்து அதிபதி நன்றாக அமைந்திருந்தால் அவர் சொந்தத் தொழிலில் கொடிகட்டிப் பறப்பார்.
மேலும், 3ஆம் இடத்து அதிபதியும், 10ஆம் இடத்து அதிபதியும் சேர்ந்திருந்தால் அந்த ஜாதகர் சிறிது காலம் அரசு பணியில் இருந்து விட்டு, அதன் பின்னர் அதிலிருந்து விலகி அரசு சம்பந்தமான தொழில்களை (கான்ட்ராக்ட்) நடத்தி பொருள் ஈட்டுவார்.
ஒரு சிலருக்கு மேற்கூறிய பலன்கள் அவர்களின் ஜாதகத்தில் காணப்பட்டாலும், அவருக்கு அரசு உத்தியோகம் கிடைக்காது. இதற்கு காரணம் சூரியனுக்கு எதிரான கிரகங்களின் தசா புக்தியே அவருக்கு நடந்து கொண்டிருக்கும்.
மேலும் சில ஜாதகங்களில் செவ்வாயின் கிரக நிலையும் அரசுப் பணியை நிர்ணயிக்கும் சக்தி வாய்ந்ததாக அமையும். எனவே மேற்கூறிய அனைத்து அம்சங்களையும் முழுமையாக அலசி ஆராய்ந்த பிறகே ஒருவருக்கு அரசு உத்தியோகம் கிடைக்குமா என்பதைப் பற்றிக் கூற முடியும்.

## 3 கணினி துறையில் சாதிக்கும் ஜாதக அமைப்பு யாருக்கெல்லாம் உண்டு?

கணினி துறைக்கு உரிய கிரகம் சனி. அந்த வகையில் ஒருவரது ஜாதகத்தில் சனி பகவான் சிறப்பாக இருந்தால் அவர் கணினித் துறையில் சாதிப்பார் என்று கொள்ளலாம். அதற்கடுத்தபடியாக சனியின் நட்பு கிரகங்களான சுக்கிரனும், புதனும் வலுவடைந்து இருந்தால் கணினித் துறையில் சிறப்பான முன்னேற்றத்தை பார்க்கலாம். குறிப்பாக 10ஆம் இடம் (உத்யோக ஸ்தானம்); 3வது இடத்தில் (முயற்சி ஸ்தானம்) ஆகியவற்றில் சனி, சுக்கிரன், புதன் இருந்தால் அல்லது 10ஆம் வீட்டிற்கு உரிய கிரகத்துடன் சுக்கிரன், சனி, புதன் நல்ல விதத்தில் தொடர்பு பெற்றிருந்தாலோ அவர்கள் கணினித் துறையில் சாதனை படைப்பர்.
இத்துடன், மின்னணு துறைக்கு உரிய கிரகமான ராகுவும் அவரது ஜாதகத்தில் சுபத்தன்மை பெற்றிருந்தால் கணினித் துறையில் அவர் நம்பர்-1 ஆக விளங்குவார்.

## 4 எதிர்காலத்தை அறியும் சக்தி படைத்தவர்களின் கைரேகை பற்றிக் கூறுங்கள்?

சில குறிப்பிட்ட கைரேகை அமைப்பைப் பெற்றவர்கள் எதிர்காலத்தை கணிக்கும் சக்தி

படைத்தவர்களாகத் திகழ்வார்கள் என சில கைரேகை தொடர்பான நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. அது பற்றி விளக்குங்கள்?
பதில்: எதிர்காலத்தை அறியக் கூடியவர்களின் கையில் சாலமன் ரேகை (அல்லது) சக்தி ரேகை இருக்கும் என கைரேகை அறிஞர்கள் கூறியுள்ளனர். ஆள் காட்டி விரல் குரு பகவானுக்கு உரியது. அந்த விரலுக்கு கீழ் உள்ள மேடு "குரு மேடு" என்று அழைக்கப்படுகிறது.
குரு மேட்டில் நேர் ரேகைகள் (ஒன்றுக்கு மேற்பட்ட) இருந்தாலோ, முக்கோணக் குறியீடு இருந்தாலோ, நட்சத்திரக் குறியீடு இருந்தாலோ அவர்கள் முக்காலத்தையும் உணரக் கூடிய ஆற்றல் பெற்றவர்களாக இருப்பார்கள் என கைரேகை சாஸ்திரம் கூறுகிறது.

## 5 தரமான கல்வி கிடைப்பதற்கும், ஜாதக அமைப்பிற்கும் தொடர்புள்ளதா?

ஒரு சிலர் ஏழைக் குடும்பத்தில் பிறந்தாலும், மிகவும் கஷ்டப்பட்டு மேற்படிப்பை முடித்து விடுகின்றனர். ஆனால் செல்வந்தர் குடும்பத்தில் பிறந்தாலும் சிலர் 5ஆம் வகுப்பைக் கூட தாண்டாமல் பள்ளியை விட்டு வெளியேறி விடுகின்றனர். தரமான கல்வி கிடைப்பதற்கு ஏதாவது ஒரு வகையில் ஜாதக அமைப்பு காரணமாகிறதா?
பதில்: ஒருவரது ஜாதகத்தில் வாக்கு ஸ்தானம் (2ஆம் இடம்) நன்றாக இருந்தால் ஏழ்மை நிலையிலும் அவருக்கு தரமான கல்வி கிடைக்கும். இதனை அனுபவ ரீதியாக பலர் தங்கள் வாழ்க்கையில் பார்த்திருக்க முடியும். உதாரணமாக, ஏழ்மை நிலையில் உள்ள மாணவனின் கல்வி தடைபடாமல் தொடர, அவனது வகுப்பு ஆசிரியரே கல்விக்கான செலவுகளை ஏற்றுக் கொள்வார்.
ஜோதிடத்தைப் பொறுத்தவரை 2ஆம் இடம் வாக்கு ஸ்தானத்தை மட்டுமின்றி ஆரம்பக் கல்வியையும் குறிக்கிறது. அதற்கு அடுத்தபடியாக 4ஆம் இடம் உயர் கல்வியையும், 9ஆம் இடம் மேல்நிலைக் கல்வியையும் (கல்லூரி, பல்கலைக்கழகம்) குறிக்கிறது. இதுமட்டுமின்றி 5ஆம் இடம்தான் மனதைக் குறிக்கிறது. படிக்கும் பாடங்களை ஒருவர் நன்றாக மனதில் பதியவைத்துக் கொள்வதற்கு உதவுவது இந்த 5ஆம் இடம்.
ஒருவருக்கு 5ஆம் இடம் சிறப்பாக இருந்தால்தான் கல்வியில் ஈடுபாடு அதிகரிக்கும். நினைவாற்றல் நன்றாக இருக்கும். தேர்விலும் அதிக மதிப்பெண் பெற முடியும்.
படிக்கும் காலத்தில் ராகு தசை, ஏழரைச் சனி, அஷ்டமச் சனி வந்தால் அந்த மாணவர், மாணவியின் வாழ்வில் சூறாவளி வீசத் துவங்கிவிடும். எனவே, பெற்றோர் தங்களின் வாரிசுக்கு ராகு தசை நடக்கும் காலத்தில் அவர்கள் மீது படிப்பைத் திணிக்காமல், அவர்களின் பிரச்சனைகளை, இடையூறுகளைப் புரிந்து கொண்டு கல்வி புகட்ட வேண்டும். சில மாணவ, மாணவிகளுக்கு பாலியல் சித்ரவதைகள் கூட ஏற்படலாம்.
ஒருவருக்கு தரமான கல்வி கிடைப்பதை சாதாரண விடயமாக கருதக் கூடாது. அதற்கு கிரகங்களின் ஒத்துழைப்பு மிக மிக அவசியம். பிறக்கும் போது உள்ள கிரக அமைப்பு, தற்கால் கிரக நிலைகள் ஆகிய இரண்டும் சிறப்பாக இருந்தால் மாநிலத்தில் முதல் மதிப்பெண் பெறும் மாணவராகத் திகழ முடியும்.

## 6 மாணவர்களின் கல்வி கற்கும் அணுகுமுறையில் கிரகங்களின் தாக்கம் இருக்கிறதா?

சிறு வயது முதலே கற்பூரம் போன்ற புத்தியுடன் காணப்படும் மாணவர்கள் தேர்வில் அதிக மதிப்பெண்கள் பெறுகின்றனர். ஆனால், ஒரு சில மாணவர்கள் சிறுவயதில் நன்றாக படிக்காத போதும், குறிப்பிட்ட வயதிற்குப் பின்னர் புரிந்து கொண்டு பயிலும் ஆற்றலைப் பெற்று மேற்படிப்பு, ஆராய்ச்சிப் படிப்பில் முத்திரை பதிக்கின்றனர். இந்த இரு தரப்பு மாணவர்களையும் ஜோதிட ரீதியாக அணுகுவது எப்படி?

பதில்: புகழ்பெற்ற கல்லூரியில் துறைத் தலைவராகப் பணியாற்றும் பெண்மணி சமீபத்தில் என்னைப் பார்க்க வந்திருந்தார். அவருக்கு 2 மகன்கள். அதில் மூத்த மகனின் ஜாதகத்தைப் பார்த்ததில் அவர் புத்தகப் புழுவாக இருப்பார் என்பது தெரியவந்தது. இளைய மகனின் ஜாதகத்தைப் பார்த்ததில் (மோசமான தசா புக்தி நடந்து கொண்டிருந்தது) அவர் தேர்வுத் தேதி அறிவித்த பின்னரே புத்தகத்தை கையில் எடுக்கும் ரகம் எனத் தெரிந்து கொண்டேன்.

பின்னர் அந்தப் பெண்மணியிடம் பேசிய நான், உங்கள் இளைய மகனைக் காட்டிலும், மூத்த மகன் சற்று அதிகம் படிப்பது போல் தோன்றினாலும், இளைய மகனுக்கு உள்ள அறிவாற்றல் (ஐ.கியூ) மூத்த மகனுக்கு இருக்காது என்றேன். ஆனால் அதனை ஏற்றுக்கொள்ள அவர் மறுத்து விட்டார். இளைய மகனை விட மூத்த மகன் தேர்வில் அதிக மதிப்பெண் பெறுகிறார் என்பதே அவர் கூறிய காரணம்.

அறிவாற்றலையும், கல்வி பயிலுவதையும் ஒன்றாகப் பார்க்கும் மனோபாவத்தை பெற்றோர் தவிர்க்க வேண்டும். உளவியலாளர்கள், கல்வியாளர்களைப் பொறுத்தவரை, மீத்திரக் குழந்தைகள் (Gifted Childrens) என்று ஒரு சில குழந்தைகளைக் குறிப்பிடுகின்றனர்.

ஆசிரியர், புத்தகம், கைடு ஆகியவற்றின் துணையுடன் பாடத்தை புரிந்து கொள்ளும் தன்மை உள்ளவர்களே மீத்திரக் குழந்தைகள். ஆனால் இவர்கள் எல்லோருக்கும் அறிவாற்றல் அளவு அதிகமாக இருக்காது. ஒரு சிலருக்கு வேண்டுமானால் இருக்கலாம். பொதுவாக ஐ.கியூ அதிகமுள்ள குழந்தைகள் பாடத்தில் முழுமையாக கவனம் செலுத்த மாட்டார்கள். ஆசிரியர்கள் சொல்வதை அப்படியே ஏற்றுக்கொள்ளாமல், பதில் கேள்வி எழுப்புவர்.

லக்னாதிபதி லக்னத்தில் இருந்து, வாக்கு அதிபதி வாக்கு ஸ்தானத்தில் இருப்பது போன்ற அமைப்பைப் பெற்ற குழந்தைகளுக்கு, நல்ல தசாபுக்தி நடைபெறும் போது நூற்றுக்கு நூறு மதிப்பெண்களை எளிதாகப் பெறுவார்கள். தடைகள் ஏற்படாது.

நல்ல மதிப்பெண் பெற்றதால் புகழ்பெற்ற கல்லூரியில் மேற்படிப்பு. அங்கிருந்து சிறந்த நிறுவனத்தில் நல்ல சம்பளத்திற்கு பணியில் சேரும் இவர்கள், தங்களின் வாழ்க்கையை சுருக்கிக் கொள்கின்றனர். இவர்களில் சிலருக்கு வாழ்வில் ஏதாவது ஒரு சிறிய பிரச்சனை ஏற்படும் போது அதனை தீர்க்க முடியாமல் அவதிப்படுகின்றனர். சிலருக்கு வாழ்க்கையே சின்னாபின்னமாகி விடுகிறது.

ஐ.கியூ. அதிகமுள்ள மாணவர்கள் படிப்பில் சுமாராக இருந்தாலும், குறிப்பிட்ட பாடத்தில் நூற்றுக்கு நூறு மதிப்பெண் எடுப்பார்கள். அதற்கு காரணம் சம்பந்தப்பட்ட பாடத்தை நடத்தும் ஆசிரியர் பயிற்றுவிக்கும் முறை வித்தியாசமானதாக, அந்த மாணவருக்கு பிடித்தமான முறையில் இருக்கும்.

கல்வியில் கூட தங்கள் வாழ்க்கைக்குத் தேவையான விடயங்களில் மட்டுமே அதிக கவனம் செலுத்துவர். எனவே ஐ.கியூ அதிகமுள்ள மாணவர்கள் தங்கள் வாழ்வில் கஷ்டங்கள் ஏற்பட்டாலும் அதனை சமாளிக்கும் மனப்பக்குவத்தைப் பெற்றவர்களாக

இருக்கிறார்கள்.
கல்வி என்பது மனம் தொடர்பானது. எனவே, மாணவர்களை கல்வி கற்கும் சூழலுக்கு ஆசிரியர்கள் முதலில் ஊக்கப்படுத்தி தயார்படுத்த வேண்டும். எனினும் ஒவ்வொரு மாணவனின் ராசி, நட்சத்திரம், தசா புக்தி என்ன என்பதை தெரிந்து கொள்ள முடியாது. பெற்றோர்தான் தங்களது மகன், மகளுக்கு என்ன தசாபுக்தி நடக்கிறது என்று கருத்தில் கொண்டு அவர்களுக்கு தேவையான சூழலை ஏற்படுத்தித் தர வேண்டும்

## 7 புத்திசாலித்தனம், வீரம், அன்பு ஆகியவை ஒருவருக்கு ஒருவர் மாறுபடுவது ஏன்?

ஒரு கரு உருவாகும் போது அதில் டி.என்.ஏ., ஆர்.என்.ஏ போன்ற அடிப்படை மூலக் கூறுகளை பெற்றோரின் மரப்புக்கூறில் இருந்து கருவுக்கு கடத்துவது 5ஆம் இடம் மற்றும் அதற்கு உரிய கிரகமாகும். எனவே, ஒருவர் ஜாதகத்தில் 5ஆம் இடம் நன்றாக இருக்க வேண்டும்.
ஐந்தாம் அதிபதி நன்றாக இருந்தால் முன்னோர்கள் சேர்த்து வைத்த சொத்து, கௌரவம், பாரம்பரியத்தை அந்த ஜாதகர் காப்பாற்றுபவராகவும், முன்னோர்களின் சொத்தை வைத்து முன்னுக்கு வருபவராகவும் இருப்பார்.
ஒருவரின் ஜாதகத்தில் 5ஆம் இடம் பலவீனமாக இருந்தாலும், லக்னாதிபதி நன்றாக இருந்தால் தனது முயற்சியால் வாழ்க்கையில் அவர் முன்னேறுவார். ஆனால் ஒருமுறை முயன்றால் இவர்களுக்கு வெற்றி கிடைக்காது. பலமுறை முயற்சிக்க வேண்டும்.
லக்னாதிபதி நன்றாக இருந்து (ஆட்சி, உச்சம் பெறுதல்), நீச்சம் பெறாமல் பரிவர்த்தனை யோகம் பெற்றிருந்தால் அவருக்கு வீரம், விவேகம் ஒருசேர இருக்கும்.
ஜோதிடத்தைப் பொறுத்தவரை சண்டை, சச்சரவுகளை உருவாக்கக் கூடியது 6ஆம் இடமாகும். ஒருவர் ஜாதகத்தில் 6க்கு உரியவன் பலவீனம்/மறைந்து இருந்தால், அவர் சண்டை, சச்சரவில் ஈடுபட மாட்டார்.
ஆறுக்கு உரியவர் 6இல் (வலுவாக) இருந்தால் அந்த ஜாதகர் எப்போதும் சண்டையிட்டுக் கொண்டிருப்பார். ஏதாவது ஒரு பிரச்சனையைக் கிளப்புவார். நேரடியாக சண்டையில் இறங்காவிட்டாலும், மற்றவர்களை தூண்டிவிட்டு கலகம் ஏற்படுத்துவர். கடன் தொல்லையும் ஏற்படும்.

## 8 மனிதனின் கடைசிப் பிறவியில் வாழ்க்கை நிலை எப்படி இருக்கும்?

ஜோதிடத்தைப் பொறுத்தவரை ஒரு மனிதன் எத்தனை பிறவி எடுப்பார் என்பதை கணிப்பது பற்றி முந்தைய பதில்களில் கூறியிருந்தீர்கள். ஒருவர் தனது கடைசிப் பிறவியை எடுக்கும் போது அவரது வாழ்க்கை நிலை எப்படி இருக்கும்.
அதாவது ஆசைகளுக்கு அடிபணியாமல், திருமணம் செய்து கொள்ளாமல் துறவறம் பூண்டு பிற உயிர்களின் நன்மைக்காகவே அவர் வாழ்க்கை நடத்துவாரா?
பதில்: ஜோதிடத்தில் தற்போது 9 கிரகங்கள் (நவகிரகங்கள்) உள்ளன. ஆனால் முற்காலத்தில் 7 கிரகங்கள் மட்டுமே இருந்ததாக சங்க கால நூல்கள் கூறுகின்றன.

அதன் பின்னர் கேது, ராகு ஆகிய 2 நிழல்/சாயா கிரகங்கள் ஜோதிடத்தில் இடம்பெற்றதாக வரலாறு கூறுகிறது. அறிவியல் ஆய்வாளர்கள் இதனை சூரிய கரும்புள்ளி (கேது), சந்திரக் கரும்புள்ளி (ராகு) என்று கூறுகின்றனர்.
ஒருவர் ராகுவின் ஆதிக்கத்தில் தனது கடைசிப் பிறவியை முடித்துக் கொள்கிறாரா? அல்லது கேதுவின் ஆதிக்கத்தில் முடித்துக் கொள்கிறாரா? என்பதை முதலில் ஜோதிட ரீதியாக கணிக்க வேண்டும்.
ராகுவின் ஆதிக்கத்தில் அல்லது ராகுவின் நட்பு கிரகங்களான சுக்கிரன், சனி ஆகியவை யோக நிலையில் இருந்து மோட்ச ஸ்தானமும் வலுவாக அமைந்து இறுதிப் பிறவியை அவர் முடித்துக் கொள்பவராக இருந்தால், அவருக்கு அனைத்து சுகபோகங்களையும் அனுபவிக்கும் வாய்ப்பு கிடைக்கும். உணவு, உடை, வாகனம், மனைவி, குழந்தை, வசதி வாய்ப்பு ஆகியவற்றை அனுபவித்த பின்னரே அவர் முக்தி அடைவார்.
ஆனால் கேதுவின் ஆதிக்கத்தில் முக்தி அடைபவரின் வாழ்க்கை நிலை இதற்கு நேர்மாறாக இருக்கும். அதாவது, சிறுவயதில் இருந்தே துறவறம் எய்துதல், பள்ளிப் பருவத்திலேயே காவி உடை அணிவது போன்றவை அவருக்கு நிகழும். திருமணம் செய்து கொண்டாலும் குழந்தை பாக்கியம் கிடைக்காமல் போகலாம். குழந்தை பிறந்தாலும், அவர்களால் அவஸ்தைப்பட்டு அதன் பின்னர் முக்தி அடைய நேரிடும். எனவே, ஒருவரின் ஜாதகத்தை முழுமையாக கணித்த பின்னரே அவரின் இறுதிப்பிறவி எப்படி இருக்கும் எனக் கூற முடியும்.

## 9 சிரித்த முகம்; சிடுமூஞ்சி - இதற்கும் ஜோதிடத்திற்கும் தொடர்பு உண்டா?

பொதுவாக சனி/செவ்வாய்/ராகு/கேது ஆகியவற்றில் ஏதாவது ஒன்று லக்னத்தில் இருந்தால் அவரது முகத்தில் சிடுசிடுப்பு காணப்படும். குறிப்பாக செவ்வாய் லக்னத்தில் இருந்தால் மூக்கிற்கு மேல் கோபப்படுபவராக இருப்பார்.
லக்னத்தில் சூரியன் இருந்தாலும் அவரது கோபம் சுட்டெரிக்கும் வகையில் இருக்கும். ஆனால் நியாயமான விடயத்திற்கு மட்டுமே கோபம் வரும். லக்னத்தில் சனி இருந்தால் அவருக்கு அசட்டுத்தனமான கோபம் இருக்கும். ஆனால் அவரது மனதில் என்ன நினைக்கிறார்கள் என்பதை முக பாவனையில் இருந்து அறிய முடியாது.
லக்னத்தில் சுக்கிரன், குரு, புதன், வளர்பிறை சந்திரன் அமர்ந்திருந்தால் அவர்கள் எப்போதும் சிரித்த முகத்துடன் காணப்படுவார்கள். சிலருக்கு லக்னத்தில் சனி இருந்தாலும், நல்ல நிலையில் உள்ள குரு (வக்ரம், நீச்சமடையாத, பாவிகள் சேர்க்கை பெறாத) அந்த சனியைப் பார்த்தால் அவர்கள் எப்போதும் சிரித்துக் கொண்டே இருப்பார்கள். எதிரில் இருப்பவர் பைத்தியம் என்று நினைக்கும் அளவுக்கு சிரிப்பார்கள். மேலும் 5, 9வது இடத்திற்கு உரிய கிரகங்கள் லக்னத்தில் இருந்தாலும் அந்த ஜாதகர் சிரித்த முகத்துடன் இருப்பார். ஏனென்றால் 5ஆம் இடம் ஒருவரின் மனப்பான்மையை குறிக்கும். ஒருவரின் ஜாதகத்தில் 5க்கு உரியவர் லக்னத்தில் இருந்தால் அவர் பலவற்றையும் அலசி ஆராய்ந்து தெளிவான முடிவெடுப்பவராகவும், கோபத்தை எளிதில் வெளிப்படுத்தாதவராகவும், எப்போதும் மலர்ந்த முகத்துடன் இருப்பார்.
சிரித்த முகம், சிடுமூஞ்சி ஆகியவற்றைப் பற்றி மட்டுமல்லாமல், உடலமைப்பு, குணம் ஆகியவற்றைப் பற்றியும் சங்க கால ஜோதிட நூல்களில் கூறப்பட்டுள்ளது.

## 10 சிலருக்கு ஒன்றுக்கும் மேற்பட்ட மனைவிகள் இருந்தாலும், பிற பெண்களுடன் தொடர்பு ஏற்படுவது ஏன்?

Tamil Astrology:

ஜோதிடத்தில் ஏக தார (ஒரே மனைவி) ஜாதகங்கள், பல தார (பல மனைவிகள்) ஜாதகங்கள் உண்டு. ஒரு சிலர் முதல் திருமணம் முடித்தவுடன் அடுத்த ஆண்டே மீண்டும் ஒரு திருமணம் செய்து கொள்வர். இவர்களுக்கு ஒரு திருமணத்தால் மனத்திருப்தி ஏற்படாது.
சமீபத்தில் என்னிடம் இதுபோன்றதொரு ஜாதகம் (பல மனைவிகள் உடையவர்) வந்தது. அவருக்கு மேஷ லக்னம், மேஷ ராசி, அஸ்வினி நட்சத்திரம். அவருக்கு லக்னத்திலேயே ஆண் கிரகங்களான குரு, செவ்வாய் வலுவாக இருந்தது. சந்திரனும் சேர்க்கை பெற்றிருந்தார். அவருக்கு செவ்வாய் லக்னாதிபதி. அது லக்னத்திலேயே இருப்பதாலும், குருவும் லக்னத்தில் உள்ளதாலும் அவர் ஒழுக்கத்தில் சிறந்து விளங்க வேண்டும். மேலும், 4ஆம் அதிபதியான சந்திரனும் லக்னத்திலேயே 2 யோக கிரகங்களின் சேர்க்கை பெற்றுள்ளதால் அவர் ஒழுக்க சீலராக விளங்க வேண்டும்.
மேலோட்டமாகப் பார்த்தால் இவருடையது மிக சிறப்பான ஜாதகம். மிகவும் ஏழ்மையான நிலையில் இருந்து முன்னேறி செல்வாக்கான நிலையை அவர் எட்டியிருந்ததால் தற்போது அவருக்கு காசு, பணத்தில் குறையில்லை.
ஆனால் லக்னத்தில் உள்ள செவ்வாய், குரு, சந்திரனின் சேர்க்கையை, 11ஆம் இடத்தில் உள்ள சனி (பாதகாதிபதி) பார்த்ததால், அவருக்கு காம இச்சை அதிகரித்துவிட்டது. இதனால் அவருக்கு ஒன்றுக்கும் மேற்பட்ட மனைவிகள் உருவாகினர். இன்றைய தேதியில் அவருக்கு 3 மனைவிகளும், 6 குழந்தைகளும் உள்ளனர். இதுமட்டுமின்றி வேறு சில பெண்களிடமும் அவருக்கு தொடர்பு ஏற்பட்டுள்ளதை அவரே ஒப்புக்கொண்டார். அவரது ஜாதகத்தில் போகஸ்தானத்திற்கு உரிய கிரகமான புதன், தனக்கு 12இல் மறைந்து சூரியனுடன் சேர்ந்துவிட்டார். இதனால் இவருக்கு போகம் தொடர்ந்து கிடைக்கும் நிலை ஏற்பட்டுள்ளது. அதுமட்டுமின்றி சுக்கிரனுடன், ராகு இருந்ததால் (3வது வீட்டில்) நீண்ட நேரம் கலவி புரியும் ஆற்றலும் அவருக்கு இருந்ததை ஒப்புக்கொண்டார். மேலும், தன்னை விரும்பி ஏற்றுக்கொள்ளும் பெண்களுடன் மட்டுமே தாம் தொடர்பு வைத்துக் கொள்வதாகவும், தாமாக யாரையும் பலவந்தப்படுத்துவதில்லை என்றும் தனது தரப்பு நியாயத்தைக் கூறினார்.
அவர் காமத்தில் மிகுந்த நாட்டம் உள்ளவராக இருந்தாலும், லக்னத்தில் சுபகிரகங்கள் இருப்பதால், விருப்பமில்லாத பெண்களுக்கு அவர் பாதிப்பு ஏற்படுத்துவதில்லை. இப்படி ஒருபுறம் நல்ல மனிதராகவும், மறுபுறம் பல பெண்களுடன் தொடர்புள்ளவராகவும் அவர் வாழ்க்கை நடத்தி வந்துள்ளார்.
தற்போது 45 வயதைக் கடந்து விட்ட அவருக்கு இனி வரும் காலங்கள் சிறப்பாக இல்லை என்பதையும், பெண்கள் விடயத்தில் அவர் இனியும் கவனமாக

இல்லாவிட்டால், பெண் பிரச்சனையால் நீதிமன்றத்தில் வழக்குகளைச் சந்தித்து அவமானப்படுவதுடன், தனது சொத்துக்களையும் இழக்க நேரிடும் என ஆலோசனை கூறி அனுப்பினேன்

## 11 அடுத்த ஜென்மத்தை சிறப்பாக அமைத்துக் கொள்ளும் தகுதி மனிதர்களுக்கு உண்டா?

தற்போதைய வாழ்க்கையில் நல்ல காரியங்களை செய்து, பாவங்களை தவிர்த்தால், அடுத்த ஜென்மத்தில் சிறப்பான வாழ்க்கை அமையும் என்று சிலர் கூறுகின்றனர். இதனை ஜோதிடம் எப்படிப் பார்க்கிறது?

பூர்வ ஜென்மம், தற்போதைய ஜென்மம், அடுத்த ஜென்மம் ஆகியவற்றை உணர்த்துவதே ஜாதகம்/ஜோதிடத்தின் பிரதான கொள்கை. நவகிரகங்களும் இதைத்தான் உணர்த்துகின்றன.

ஊழ்வினை பற்றி வள்ளுவரை குறிப்பிட்டுள்ளார். ஜோதிடத்தைப் பொறுத்த வரை சனிதான் ஊழ்வினைக் கோள். அது எந்தவீட்டில் இருக்கிறது, எந்த கிரகத்துடன் சேர்ந்துள்ளது, எந்த நட்சத்திரத்தில் அமர்ந்துள்ளது என்பதைப் பொறுத்தே அந்த ஜாதகர் தன் வாழ்வில் கிடைக்கும் யோகங்களை தடையில்லாமல் அனுபவிப்பாரா? என்பதைக் கூற முடியும்.

ஊழ்வினைக் கோளை வைத்துதான் முற்பிறவி, தற்போதைய ஜென்மம், மறுஜென்மம் ஆகியவற்றைக் கணிக்க முடியும். ஒரு சிலர் 4 பங்களா வைத்திருந்தாலும், அதனை அனுபவிக்க முடியாமல் வாடகை வீட்டில் வசிப்பார்கள். இது ஊழ்வினைப் (முன் ஜென்மத்தில் செய்த பாவம்) பயன்.

பெரும்பாலான பெண்கள்/ஆண்களின் திருமணத்தில் பெரும் தடையாக செவ்வாய் தோஷம் கருதப்படுகிறது. ஆனால் இந்த தோஷம் எப்படி ஏற்படுகிறது என்று நம்மில் பலருக்கு ஜோதிட ரீதியாக தெரிவதில்லை.

செவ்வாய் தோஷம் குறித்து ஒரு கூட்டத்தில் என்னைப் பேசும்படி அழைத்திருந்தார்கள். அதில் பேசிய நான், சகோதரத்துவத்திற்கும், பூமிக்காரகனாகவும் செவ்வாய் விளங்குகிறார். எனவே, முற்பிறவில் சகோதர/சகோதரிகளுக்கு துரோகம் செய்தவர்கள், அடுத்தவர் சொத்துக்களை அபகரித்தவர்களுக்கு இந்த ஜென்மத்தில் செவ்வாய் தோஷம் இருக்கும்.

மற்றவர்களின் உழைப்பில் (ரத்தம்) குளிர் காய்ந்தவர்களுக்கும் கடுமையான செவ்வாய் தோஷம் ஏற்படும். குறிப்பிட்டுக் கூற வேண்டுமென்றால் 7, 8வது இடத்தில் செவ்வாய் அமர்வதால் திருமணம் தள்ளிப்போகும். இளமை முடியும் தருவாயில், காலம் கடந்த நிலையில் திருமணம் கைகூடும். இதுதான் செவ்வாய் தோஷம் என்று கூறினேன்.

எனவே, அடுத்த பிறவியில் செவ்வாய் தோஷம் ஏற்படக் கூடாது என்று விரும்புபவர்கள், இந்த ஜென்மத்தில் தன்னுடைய சகோதர/சகோதரிகளுக்கு தீமை செய்யாமல், சொத்துக்களை ஏமாற்றிப் பறித்துக் கொள்ளாமல் இருந்தாலே போதும். முடிந்த வரை அவர்களின் முன்னேற்றத்திற்காகப் பாடுபடுங்கள்; இல்லாவிட்டால் ஒதுங்கி நில்லுங்கள்; கெடுதல் செய்யக் கூடாது என்றும் அறிவுறுத்தினேன்.

இந்தப் பிறவியில் நல்ல காரியங்களை செய்து, தியாகங்கள் மூலமாக அடுத்து வரும்

பிறவி, அடுத்து வரும் சந்ததி ஆகியவற்றை சிறப்பாக உருவாக்க நம்மிடமும் வாய்ப்புகள் உள்ளது. ஆனால் அதற்கும் ஜாதகத்தில் இடம் இருக்க வேண்டும் என்பது குறிப்பிடத்தக்கது.
ஒரு சில ஜாதகர்கள் நல்ல காரியம் செய்ய நினைத்தாலும், அவர்களுக்கு நடக்கும் மோசமான தசா புக்தி அதனைச் செய்ய விடாமல் தடுத்து விடுவதையும் பார்க்கிறோம். இதைத்தான் “அவன் சும்மா இருந்தாலும் அவன் சுழி சும்மா இருக்க விடாது” என்று பெரியவர்கள் கூறுவர்.

## 12 காமத்தை அடக்க என்ன செய்ய வேண்டும்?

ஒருவரது ஜாதகத்தில் 3ஆம் இடம் இச்சைக்குரியதாக கொள்ளப்படுகிறது. இதில் இச்சை என்ற வார்த்தைக்கு காமம் என்று மட்டும் பொருள் கொள்ளக் கூடாது. ஒரு சிலருக்கு பணத்தின் மீது இச்சை இருக்கும். மற்றொருவருக்கு உணவுப் பண்டங்களின் மீது இச்சை இருக்கும். சிலருக்கு தங்கள் தொழில் மீது இச்சை இருக்கும். உடல் இச்சையும் இதில் அடங்கும்.
பொதுவாக 3வது வீட்டில் நல்ல கிரகங்கள் இருப்பது சிறப்பான பலனைத் தரும். ஆனால் 6வது, 8வது, 12வது வீட்டிற்கு உரிய கிரகங்கள் 3இல் அமர்ந்திருந்தால் தினசரி உடலுறவு கொள்ளக் கூடிய நிலை அல்லது ஒரே நாளில் பலமுறை உறவு கொள்ளும் எண்ணத்தை அது ஏற்படுத்தும். இவர்களுக்கு லக்னாதிபதி சரியாக இருந்து விட்டால் இந்த எண்ணங்களை ஒழுக்க நெறிகள் மூலம் அவர்கள் கட்டுப்படுத்துவர்.
எனவே, 3வது வீட்டில் ஒருவருக்கு என்ன கிரகம் உள்ளது என்பதைப் பார்ப்பதுடன், லக்னாதிபதி யாருடன், எந்த வீட்டில் இருக்கிறார் என்பதையும் பார்க்க வேண்டும். ஏனென்றால் உடல், அழகு, எண்ண ஓட்டங்கள் ஆகியவற்றை நிர்ணயிப்பது லக்னாதிபதி.
காம இச்சை அதிகம் உடையவர்கள் இந்தக் கோயில் வழிபாடு அல்லது பரிகாரங்களை மேற்கொண்டால் பலன் கிடைக்கும் என்று பொதுவாகக் கூறிவிட முடியாது. அவரவர் ஜாதகத்தில் உள்ள கிரக அமைப்புகளைக் கொண்டு தனிப்பட்ட முறையில் பரிகாரங்களை வகுக்க வேண்டும்.
லக்னாதிபதி பலவீனமாக, மறைந்து பாவ கிரகங்களுடன் சேர்ந்திருந்தால் முரண்பாடான இச்சைகள் மனதில் தோன்றும். உடலுறவில் திருப்தியற்ற நிலை ஏற்படும்.
மனைவியைப் பொறுத்த வரை கணவருக்கு போதுமான இன்பம் கொடுத்திருப்பார். ஆனால் கணவருக்கு அதனால் மனத்திருப்தி ஏற்படாமல் போகலாம். இதனால் சபலம் ஏற்பட வாய்ப்புள்ளது.

## காம உணர்வும் யோகமும்!

புகைப் பிடித்தல், மது அருந்துதல் தவிர்த்து இன்னுமோர் அபாயமிருக்கிறது, அது காம விருப்பு சம்பந்தமானது. யோகம் தனது தூய்மையாக்கும் வேலையைச் செய்யும் போது உன்னிடம் பதுங்கிக் கிடக்கும் வேகங்களையும் ஆசைகளையும் மேலுக்கு எறிகின்றது. நீ விஷயங்களை ஒளிக்காமலும், ஒதுக்கிவைக்காமலும் இருக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். நீ அவைகளைச் சந்தித்து, வென்று, அவைகளுக்குப் புது உருவம்

தரவேண்டும்.

யோகத்தின் முதற்பயன் என்னவெனில் மனத்தின் ஆதிக்கம் தளர்ந்துவிடுகிறது. உள்ளே உறங்கிக் கிடக்கும் வேட்கைகள் திடீரென விடுதலையடைந்து குப்பென்று கிளம்பி ஆதாரத்தை ஆக்கிரமிக்கின்றன. மனத்தின் ஆதிக்கம் இருந்த இடத்தில் இறைவனின் ஆட்சி ஸ்தாபிக்கப்படாத வரையில் ஓர் இடைநிலை ஏற்படுகிறது. அதுசமயம் உனது நேர்மையும் சரணமும் சோதனைக்குட்படும்.

காம உணர்ச்சி போகன்ற வேகங்களின் பலமானது சாதாரணமாக ஜனங்கள் அவைகளின் மீது அதிகமாகக் கவனம் செலுத்துவதிலிருந்தே வருகின்றது. அவர்கள் அவைகளை மிக அழுத்தமாக மறுத்து பலவந்தமாகக் கட்டுப்படுத்தவும் உள்ளே அமுக்கிவிடவும் முயல்கின்றனர். ஆனால் ஒன்றை நினைத்துக்கொண்டே, "அது எனக்கு வேண்டாம், அது எனக்கு வேண்டாம்" என்று சொல்லிக்கொண்டு போனால் நீ அதற்குப் பந்தப்பட்டுப் போகிறாய். நீ செய்ய வேண்டியது என்னவெனில், அதை உன்னிடமிருநூது சிலக்கி, அதனுடைய உறவு வைத்துக்கொள்வதை நிறுத்தி, கூடுமானவரை அதைக் கவனிக்காமல் இருந்துவிட வேண்டும். நீ அதை நினைக்க நேரிட்டாலும் அசட்டையாயும் கவலையில்லாமலும் இருந்துவிட வேண்டும்.

யோகத்தின் நெருக்கத்தினால் மேலே கிளம்பிவரும் வேகங்களும் ஆசைகளும் உனக்கு அந்நியமாயும் புறஉலககைச் சேர்ந்தவையாயும் இருப்பவைபோலக் கருதி அவைகளைப் பற்றற்ற நோக்குடனும் அமைதியுடனும் நீ சந்திக்க வேண்டும். இறைவன் அவற்றை எடுத்துக்கொண்டு உருமாறுதல் செய்யும் பொருட்டு அவற்றை இறைவனுக்கே அர்ப்பணம் செய்துவிட வேண்டும்.
உன்னை ஒருதரம் இறைவனுக்குத் திறந்துவிட்டு, இறைவனது சக்தியும் உன்னுள்ளே இறங்கிவர ஆரம்பித்தபிறகு நீ பழைய சக்திகளோடு ஒட்டிக்கொண்டிருக்க முயன்றால், தொந்தரவுகளுக்கும், கஷ்டங்களுக்கும் அபாயங்களுக்கும் நீயே வழிதேடிக்கொள்வாய். நீ விழிப்புடனிருந்து, உனது ஆசைகளைத் திருப்தி செய்வதன் பொருட்டு இறைவனை ஒரு மறைப்பாக உபயோகித்துக் கொள்ளாதபடி பார்த்துக்கொள்ள வேண்டும்.

## 13 உதிக்கும் போது விதிக்கப்பட்டது என்ன?

ஒரு குழந்தை பூமியில் பிறக்கும் போது உள்ள கிரக அமைப்புகள், இவனுக்கு/இவளுக்கு இதுதான் என்று நிர்ணயித்து விடுகின்றன. படிப்பு இவ்வளவுதான், மனைவி இப்படித்தான், சாப்பாடு இவ்வளவுதான் என உதிக்கும் போதே விதிக்கப்பட்டு விடுகிறது. எனவே உதிக்கும் போது நமக்கு விதிக்கப்பட்டது என்ன என்பதை (வாழ்க்கை சூட்சுமம்) அறிந்து அதற்கு ஏற்றவாறு வாரிசுகளுக்கு வாழ்க்கைத் துணையை பெற்றோர் அமைத்துத் தர வேண்டும். நம்மிடம் 10 வீடு உள்ளது, 25 பேருந்து ஓடுகிறது என்ற வகையில் அந்தஸ்து பார்த்து திருமணம் செய்து வைத்தால் சிறப்பாக இருக்காது. ஏனென்றால் மகனின் ஜாதகத்தில் மனைவி ஸ்தானம் பலவீனமாக இருந்தால் ஏழைக்

குடும்பம், 10ஆம் வகுப்பு படித்த பெண்ணை மணமுடித்தால்தான் அவரது வாழ்க்கை இறுதிவரை சிறப்பாக இருக்கும்.
உதாரணமாக, சிலருக்கு ஈனப் பெண்ணுடன் (படிப்பு, அந்தஸ்து, வசதி குறைந்த) வாழ வேண்டும் என்ற கிரக அமைப்பு உள்ளவர்களும் இருக்கிறார்கள். மிகவும் உயர்ந்த அந்தஸ்தில் உள்ள குடும்பத்தைச் சேர்ந்த, சிவில் சர்வீஸ் தேர்வில் அதிக மதிப்பெண் எடுத்து வெற்றி பெற்ற ஒருவர், குறத்தி இனத்தைச் சேர்ந்த பெண்ணை திருமணம் செய்து கொண்டார்.
மேலும், அப்பெண் குறத்தி இனத்தைச் சேர்ந்தவராக இருந்தாலும், கஷ்டப்பட்டு படித்து அரசு உத்தியோகத்தில் உள்ளார். பல பெண்களைப் பார்த்தும் மனதில் திருமண ஆசை தோன்றாத சிவில் சர்வீஸ் அதிகாரிக்கு, குறத்தி இனத்தைச் சேர்ந்த அப்பெண்ணை கண்டதும் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என தோன்றியுள்ளது.
அவர் இதுகுறித்து என்னிடம் கேட்கும் முன்பாகவே அவரது ஜாதகத்தை நான் (சிவில் சர்வீஸ் தேர்வின் போது) பார்த்துள்ளேன். அப்போதே அவருக்கு தகுதி, அந்தஸ்து, படிப்பு குறைவான பெண்தான் மனைவியாக வருவார் என்று தெரியும்.
திருமணம் குறித்து அவர் பலமுறை கேள்வி எழுப்பியும், புன்சிரிப்பை மட்டுமே பதிலாக அளித்தேன். அவரும் முயன்றவரை முயற்சித்துப் பார்த்தார். இப்போது திருமணத்திற்கு என்ன அவசரம், முதலில் சிவில் சர்வீஸ் தேர்வை வெற்றிகரமாக முடியுங்கள் என்று சமாதானப்படுத்தி அனுப்பி வைத்தேன்.

## 14 உணவுப் பழக்கம் மூலம் காமத்தைக் கட்டுப்படுத்த முடியுமா? காம இச்சை அடக்க முடியாத நிலையில் உள்ளவர்களுக்கு, பொதுவான பரிகாரம் ஏதாவது உள்ளதா?

உணவுப் பழக்கம் என்பது பல்வேறு உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தக் கூடிய விடயமாக நமது நாட்டில் கருதப்படுகிறது. உதாரணமாக, துறவிகள், பூசாரிகள், சன்னியாசிகள் ஆகியோர் சாத்வீக (உப்பு, காரம் இல்லாத) உணவுகளை உட்கொள்கின்றனர். அந்த உணவின் மூலம் உடல் இயக்கத்திற்கு தேவையான சக்தி கிடைக்கும் என அவர்கள் கூறுகின்றனர்.

ஆனால், கடுமையான விரதப்போக்குடன் வாழக்கூடிய பூசாரிகள், சன்னியாசிகளில் ஒரு சிலர் காம லீலைகளில் ஈடுபட்டதாக சிக்கிக் கொள்கின்றனர். இது ஏன்?
பதில்: உடல் நலனை நிர்ணயிக்கும் முக்கிய காரணிகளில் ஒன்றாக உணவு திகழ்கிறது. ஆனால் உணவின் மூலமாக மட்டுமே ஒருவருக்கு காம எழுச்சி ஏற்படுவதில்லை. இந்த விடயத்தில் மனித மனத்தையும் கணக்கில் கொள்ள வேண்டும்.
ஒருவரின் ஜாதகத்தில் லக்னாதிபதி, ராசிநாதன் ஆகிய இரண்டின் நிலையையும் பார்க்க வேண்டும். லக்னாதிபதி, ராசிநாதன் ஆகிய இருவரும் நன்றாக இருக்க வேண்டும். அப்படி இல்லாவிட்டால் அந்த கிரகங்களின் தசை நடக்கும் போது அவர்கள் பாதை மாறி காம லீலைகளில் ஈடுபட நேரிடும். எனவே, உணவுப் பழக்கத்தால் மட்டுமே காம இச்சையை குறைத்து விட முடியும் என்று எண்ணக் கூடாது.
வெங்காயம், பூண்டு, அசைவ உணவுகள் ஆகியவற்றைத் தவிர்த்து பாதி உப்பு, பாதி காரத்தில் மட்டும் சாப்பிட்டால் காம இச்சை முற்றிலுமாக அடங்கிவிடாது. மனதைக் கட்டுப்படுத்துவதற்கும் சில பயிற்சிகளைச் செய்ய வேண்டும். அதற்கு மனோகாரகன்

(சந்திரன்) ஒருவரின் ஜாதகத்தில் நன்றாக இருக்க வேண்டும்.
ஜோதிடத்தில் சந்திரனை பலவீனப்படுத்தும் கிரகங்களும் உள்ளன. அதுபோன்ற கிரகங்களின் தசை நடக்கும் போது சம்பந்தப்பட்டவர் கூடுதல் கவனத்துடன் இருக்க வேண்டும்.
இதேபோல் 3, 6, 8, 12க்கு உரியவர்களின் தசை நடக்கும் போது பொதுவாகவே காம இச்சை அதிகரிக்கும். அதுபோன்ற காலத்தில் சம்பந்தப்பட்டவர் தன்னை கட்டுப்படுத்துவதற்கான முயற்சிகளை எடுக்க வேண்டும். அதை விடுத்து மனம் போன போக்கில் காம லீலைகளில் ஈடுபட்டால் சிறை தண்டனை, அவமானம் ஆகியவற்றை ஏற்க நேரிடும்.

இந்த விஷயத்தைப் பொறுத்தவரை பொதுவான பரிகாரம் என எதையும் கூற முடியாது. சம்பந்தப்பட்டவரின் ஜாதகத்தை முழுமையாகப் பார்த்த பின்னரே அவருக்கான பரிகாரத்தைக் கூற முடியும்.
உதாரணமாக, 3, 6, 8, 12க்கு உரியவர்களின் தசை நடக்கும் போது அவருக்கு ஏழரைச் சனி நடந்தால், அவர் எப்படி வாழ்ந்தாலும் காம இச்சைகள் தொடர்பான விவகாரங்களில் சிக்கிக் கொள்வார்.
ஒரு சிலர் சொந்த ஊரில் இருந்தால் தானே பிரச்சனை என்று மனதில் நினைத்துக் கொண்டு, அண்டை மாநிலத்திற்கும், அயல்நாடுகளுக்கும் சென்று தங்கள் இச்சைகளைத் தீர்த்துக் கொள்கிறார்கள். இதனால் அவர்கள் விதியிடம் இருந்து தப்பமுடியாது. மாறாக உடல்நலனைக் கெடுத்துக் கொள்கிறார்கள். இதுவும் ஒரு வகையில் அவர்களுக்கு தண்டனையாகவே கருதப்படும்.
எனவே, அதுபோன்ற மோசமான தசை நடக்கும் போது மனதை அடக்க தியானம் செய்வதே சிறந்தது என சில நூல்களில் கூறப்பட்டுள்ளது. ஆனால் இன்றைய நிலையில் தியானம் என்றால் என்னவென்றே பலருக்கு தெரியவில்லை.
அதுபோன்றவர்கள் கடுமையான உடற்பயிற்சி, பயணம் மேற்கொள்ளலாம்.
உடற்பயிற்சிக்காக தனியாக நேரம் ஒதுக்க முடியாதவர்கள் அன்றாடப் பணிகளின் மூலம் தனது வேலைப்பளுவை அதிகரித்துக் கொள்ளலாம். தோட்டம் அமைக்கலாம், உளவாரப் பணிகளை மேற்கொள்ளலாம். இதனால் அவர்களுடைய உடலில் ஏற்படும் இச்சைகளும், மனதில் ஏற்படும் மாசுகளும் குறையும்/மறையும்.
ஒரு சிலர் ஆலயத்திற்கு உள்ளேயே தவறான காரியங்களில் ஈடுபடுகிறார்களே? என்று பலர் கேட்கலாம். எந்த வகையான உடல் உழைப்பும் இன்றி விதவிதமான உணவு வகைகளை உட்கொள்வதால் அவர்களுக்கு காமஇச்சை அதிகரித்து வழிதவறி இருக்கிறார்கள்.
எனவே, உடலை வருத்தி உழைத்து, ஏழை, எளிய மக்களுக்கு பயன்படும் விதத்தில் சில பணிகளை மேற்கொண்டால் மனம் தெளிவுபெறும். அதுமட்டுமின்றி காமம் நிலையானது அல்ல என்பதை சம்பந்தப்பட்டவர்கள் மனதளவில் உணர வேண்டும்.
அதனை உணர முடியாதவர்கள் மருத்துவமனைக்கு சென்று நோயாளிகளுக்கு சில பணிவிடைகளைச் செய்வதுடன், அவர்கள் படும் அவஸ்தைகளை பார்த்தால் உடல் நிலையற்றது என்ற எண்ணம் அவர்கள் மனதில் ஆணித்தரமாக பதிவாகிவிடும்

## 15 முன்கூட்டியே அறியும் சக்தி உண்மையா?

Tamil Astrology: ஏதாவது ஒரு நல்லது, கெட்டது நடைபெறுவதற்கு முன்பு சிலருக்கு சில அறிகுறிகள் தெரியும் அல்லது சில நிகழ்வுகள் அவர்களுக்கு நடக்கும் என்று கூறுவது உண்மையா? அது எப்படி ஏற்படுகிறது?

ஒவ்வொரு ஜாதகத்திலும் லக்னத்திற்கு 5ஆம் இடம் பூர்வ புண்ணியம் என்று சொல்வார்கள். அந்த பூர்வ புண்ணியஸ்தானத்தில் சுப கிரகங்கள் அமர்ந்திருந்தால் ஒரு இன்டியூஷன் பவர் (உள்ளுணர்வு சக்தி) அவர்களுக்கு உண்டு. சங்க கால நூல்களில் பார்த்தீர்களானால் நிமித்தம், அசரீரி என்றெல்லாம் சொல்வார்கள்.

உதாரணத்திற்கு, அவர் வெளியில் வந்தார் உடனே காக்கை வடமிருந்து இடமாகப் போய்விட்டது. அதனால் அவர் திருப்தியில்லை என்று சொல்லிவிட்டார். அதனால் அந்த வேலையை அப்படியே விட்டுவிட்டார். சில நிமித்தங்களையும் நாம் பார்க்க வேண்டும். நிமித்தங்களைப் பார்த்துப் பார்த்து பழக்கப்பட்டாலேயே நமக்கு இன்டியூஷனெல்லாம் வர ஆரம்பிக்கும்.

## 16 வீடு, மனை வாங்க ஜோதிடம் அவசியமா?

சிலர் வீட்டு மனை வாங்குவதை, வீடு கட்டுவதை முதலீடாகவே செய்கிறார்கள். அப்படி வாங்கிவிட்ட பிறகு சட்டச் சிக்கல், இரண்டு பேர் பதிவு செய்துவிட்டார்கள், ரவுகளால் மிரட்டப்படுகிறார்கள் என்றெல்லாம் வருகிறது. இப்படி மக்கள் நிறைய கஷ்டப்படுகிறார்கள். இதுபோன்ற பிரச்சனைகளை, உங்களைப் போன்ற ஜோதிடர்களிடம் ஆலோசனை பெற்ற பின்னர் வாங்கினால் தவிர்க்க முடியுமா?

தினசரி ஒருத்தரையாவது இதுபோன்ற பிரச்சனையுடன் சந்திக்கிறோம். பூமிக்காரகன் செவ்வாய். இந்தச் செவ்வாய் நீச்சமாய் இருந்தாலோ, 8, 12ல் போய் மறைந்திருந்தாலோ அவர்கள் பெயரில் பூமி வாங்கக் கூடாது. அவருடைய மனைவிக்கு செவ்வாய் நன்றாக இருந்தால், அவர்கள் பெயரில் வாங்கிக் கொள்ளுங்கள். உங்க பெயரில் வாங்கிவிடாதீர்கள் என்று சொல்கிறோம்.

அப்படி வாங்குவதென்றால் ஃபிளாட்ஸ் ஏதாவது ஒன்றை வாங்கிக்கொள்ளுங்கள். ஏனென்றால் கட்டடக்காரகன் சுக்ரன். பூமியாக இருக்கும் போதுதான் செவ்வாய். பூமியை கட்டிவிட்டால் அது சுக்ரன் நிலைக்குப் போய்விடும். அப்பொழுது குடும்பத்தில் யாருக்கு செவ்வாய் நன்றாக இருக்கிறதோ, அதாவது பூமிக்காரகன் நன்றாக இருக்கிறதோ அவர்கள் பெயரில் பூமியை வாங்கிக்கொள்ளுங்கள் என்று சொல்கிறோம்.

ஒருத்தருக்கு மிதுன லக்னம். இந்த மிதுன லக்னத்தில் 4வது வீட்டில் கன்னியில் செவ்வாய். கன்னிச் செவ்வாய் கடல் நீரையும் வற்றச் செய்யும். 4வது வீட்டில் செவ்வாய் இருந்தால் ஒரு வகையில் பரவாயில்லை. ஆனால், அது கன்னியில்

இருப்பதால் உங்கள் பெயரில் பூமி எதையும் வாங்க வேண்டாம், அது சரியாக வராது என்று சொன்னேன்.

6க்கு உரியவர்களுடைய திசை, 8க்கு உரியவர்களுடைய திசை, செவ்வாய் ராகு, செவ்வாய் சனி சேர்ந்திருந்து செவ்வாய் திசை இதெல்லாம் நடந்தால் அவர்கள் வாங்கிய சொத்தை மற்றொருவர் அபகரிப்பார்கள், இல்லையென்றால் அது கையைவிட்டுப் போகும் அல்லது யாராவது ஆக்கிரமிப்பு செய்வார்கள் என்று இத்தனையையும் பார்த்துதான் சிலருக்கெல்லாம் பூமியை வாங்கலாம், பூமியை வாங்கக்கூடாது கட்டடமாக வாங்கிக் கொள்ளுங்கள், செவ்வாய் பலவீனமாக இருந்தால் கீழ்த்தளத்தில் குடியிருக்காதீர்கள், முதலாவது, 2வது மாடிக்கு மாறிக்கொள்ளுங்கள் என்றெல்லாம் சொல்கிறோம்.

அடுத்து, செவ்வாய் அவர்களுடைய ஜாதகத்தில் என்ன மாதிரி இருக்கிறது என்று பார்த்துவிட்டு கருமண் பூமி அல்லது செம்மமண் பூமியை வாங்குங்கள். செவ்வாய் சந்திரனுடன் இருந்தால் மணல் பகுதியை வாங்குங்கள். அதாவது நதியை ஒட்டி, கடலோரப் பகுதிகளில் உங்களுக்கு நன்றாக இருக்கும் என்று இவ்வளவு விஷயங்களையும் சொல்கிறோம்.

இதற்கேற்றார்போல் அவர்கள் பின்பற்றும் போது, இடர்பாடுகளோ, சொத்து வாங்கிய பின் ஏமாற்றங்களோ, இழப்புகளோ சந்திக்க வேண்டிய அவசியம் இருக்காது. திசைகளையெல்லாம் கூட சொல்கிறோம். என்ன தசா புத்தி நடக்கிறது என்பதை அடிப்படையாக வைத்து, இந்தக் கோள்களுக்கு இந்த திசை என்று சுக்ர திசை என்றால் தெற்கு, தென்கிழக்கு திசையில் வாங்குங்கள் என்றெல்லாம் சொல்கிறோம்.

இதுபோன்று கலந்தாலோசித்து வாங்கும் போது, தலைமுறை தலைமுறையாக அந்தச் சொத்து தங்கும். அதில் மாற்றம் இல்லை.